ஆன்சரிங் இஸ்லாம் - தமிழ்

கிறிஸ்தவனுக்கும் முஸ்லீமுக்கும் இடையே உரையாடல்

# அல்லாஹ் யார்?

# தேவன் யார்?

இவ்விருவரும் நேர் எதிர் துருவங்களா? அல்லது ஒரே நபரா?

**ஆன்சரிங் இஸ்லாம் தமிழ் தளத்தில் பதிக்கப்பட்ட ஆய்வு கட்டுரைகளின் தொகுப்பு**

# Contents

# 1. ஆதாமே, நீ எங்கே இருக்கிறாய்?

### Adam, where are you?

பைபிள் குறிப்பிடும் தேவனுக்கும் குர்ஆன் கூறும் அல்லாவுக்கும் இயல்பு மற்றும் பண்பில் காணப்படும் அடிப்படை வேறுபாடு என்ன?

பைபிளில் நம்மோடு நெருங்கிய உறவு வைத்துக் கொள்ளும் பொருட்டு தேவன் தம் நிலையிலிருந்து இறங்கி வந்து நம்மருகே நெருங்கி நம்மைத் தேடுகிறார். பைபிள் முழுவதுமே தேவன் மனிதனைத் தொடரும் வரலாறுதான்.

படைப்பு மற்றும் மனித குலத்தின் வீழ்ச்சி பற்றிய பைபிளின் முதலாவது அத்தியாயத்தில், ஆதாமும் ஏவாளும் தங்களின் கீழ்படியாமை மற்றும் பாவத்தின் நிமித்தம் தங்களது மனசாட்சியின் உறுத்தலினால் தேவனிடமிருந்து ஒளிந்து கொள்ள முயல்கிறார்கள் என வாசிக்கிறோம். தேவன் அத்தோட்டதிற்கு வந்து, "நீ எங்கே இருக்கிறாய்?" எனக் கூப்பிடுகிறார் (ஆதியாகமம் 3:9).

மனிதன் தான் செய்த பாவத்தின் பொருட்டு வெட்கப்பட்டு தேவனுக்கு முன்பாக ஓடிக் கொண்டிருக்கிறான். எனினும் தேவன் நம்மீது வைத்துள்ள பரஸ்பர அன்பினை மீண்டும் நிலை நிறுத்தும் வண்ணமாக நம்மைத் தொடர்கிறார். இதனை உருவாக்க தேவையான அனைத்து நடவடிக்கைகளையும் எடுப்பவர் தேவனே. பைபிளின் முதல் புத்தகம் தொடங்கி இறுதி அத்தியாயம் வரை சொல்லப்படும் செய்தி இதுவே. இதில் கடைசியாக நாம் புதிய வானம் மற்றும் புதிய பூமி பற்றியும் வாசிக்கிறோம். "இதோ, மனுஷர்களிடத்திலே தேவனுடைய வாசஸ்தலமிருக்கிறது, அவர்களிடத்திலே அவர் வாசமாயிருப்பார்; அவர்களும் அவருடைய ஜனங்களாயிருப்பார்கள், தேவன் தாமே அவர்களோடே கூட இருந்து அவர்களுடைய தேவனாயிருப்பார்" (வெளிப்படுத்துதல் 21:3).

இறுதியில் தேவனின் விருப்பம் நிறைவேறுகிறது. **வெளிப்படுத்துதல் 21ம்** அத்தியாயத்தை முழுவதையும் வாசியுங்கள். இது ஒரு அற்புதமான புஸ்தகம்.

உண்மையில் நமக்காக இறங்கி வந்து நம்மைத் தேடிப் பின் தொடர்ந்து நமக்கு அருகில் வாசம் செய்யும் தேவனே தேவன். அவர் தமது படைப்பாகிய நம்மீது தமது அன்பின் உறவினை புதுப்பிக்கும் இதய உணர்வினை வெளிப்படுத்துகின்றார். வெளிப்படுத்துதல் 21:3 ல் சொல்லப்பட்டிருக்கும் அவரின் ஜனங்களில் ஒருவராக நீங்கள் இருப்பீர்களா? நீங்கள் தேவனின் மனிதராக உருவாக தேவனை உஙகளுக்கு காண்பித்து உங்களுக்கு வெளிப்படுத்தப்படும் பைபிளின் செய்தி இது தான்.

இதற்கு நேர்மாறாக குர்ஆன் வெளிப்படுத்தும் கடவுள் வெகு தொலைவில் மனிதக் கற்பனைகளுக்கு எட்டாதவராக சித்தரிக்கப்படுகிறார். ஒரு இஸ்லாமிய வேத வல்லுனரின் கருத்துப்படி "கடவுள் தமது சித்தத்தை மட்டுமே வெளிப்படுத்துவார், தம்மையல்ல, மற்றும் தாம் எக்காலத்திலும் மறைந்தே இருப்பார்" என அறிகிறோம். குரானின் கூற்றுப்படி அவர் நமது கழுத்து நரம்பினைப் போன்று நம்மருகே இருந்தாலும் இது அறிவுபூர்வமான நெருக்கமேயன்றி, நமக்கு நமது கழுத்து நரம்பினைப் பற்றிய உணர்வு பெரும்பான்மையான நேரங்களில் இல்லாதது போல எப்பொழுதும் ஒரு தனிப்பட்ட நெருக்கமின்றி இருக்கிறோம். இது எதைக்காட்டுகிறது என்றால் நம்மைச்சுற்றி இருக்கும் காற்றினைப் போன்று கடவுள் எவ்விடத்திலும் (சமீபத்திலும் தூரத்திலும்) இருக்கிறார் என்பதனைப் போன்றதாகும். ஆனால் பைபிள் காட்டும் தேவன் தமது

சகலத்திலும் வியாபித்திருக்கக் கூடிய தெய்வீகத் தன்மையினால் நம்மருகே இருக்க விரும்பவில்லை. மாறாக, நாம் நேசிக்கும், நம்மீது மிகுந்த அன்புடைய ஒருவரைப்போன்றே நம்முடன் நெருங்கி இருக்க விரும்புகிறார்.

இஸ்லாம் என்பது, மனிதன் கடவுளின் சித்ததிற்கு அடிபணிவது பற்றியது ஆகும். ஆனால் பைபிள் சித்தரிக்கும் தேவன், தம் நிலையிலிருந்து இறங்கி வந்து முயன்று நம்மைத் தேடுபவராக இருக்கிறார். இந்த இயக்கம் எதிரெதிர் திசைகளில் உள்ளதை நாம் காணலாம்.

**இந்த தலைப்பைப் பற்றி மேலும் அறிய கீழ் கண்ட கட்டுரையை படிக்கவும்:**

"The Love of God in the Qur'an and in the Bible"

ஆங்கில மூலம்: **Adam, where are you?**

Source: http://www.answering-islam.org/tamil/whogod/lovesus.html

## 2. தேவன் ஏன் மனிதனாக வந்தார்?

கேள்வி

"தேவன் மரிக்க இயலுமா?" என்ற கேள்வியையும் பதிலையும் வாசித்தேன். இப்போது என் கேள்வி: தேவன் அனைத்தையும் படைத்தவராயின் ஏன் அவர் மனிதனாக அவதரிக்க வேண்டும்? அவர் எல்லாம் அறிந்தவராய் இருப்பின், இதற்கு அவசியம் என்ன?

**பீட்டர் பாலார்து பதிலளிக்கிறார்:**

தத்துவ ரீதியான பதில்:

1. தேவன் பாவங்களை வெறுக்கிறார். பாவநிவர்த்திக்கு ஒரு விலை கொடுக்கப்பட வேண்டும்.
2. மனிதர்களே அதை செலுத்த வேண்டும். ஏனென்றால் பாவம் அவர்கள் செய்ததே.
3. ஆனால் தேவன் மட்டுமே அந்த விலையைக் கொடுக்க முடியும். காரணம், மனிதர்கள் பரிபூரணமான பரிசுத்தவான்கள் அல்ல.
4. எனவே மனுக்குலத்தின் பாவங்கள் தீர தேவனே மனிதனாக வந்து பாவத்திற்கான விலையைத் தருவதே சரியான ஒரே வழியாகும்.

**இதோடு கூட, தேவன் மனிதனானதால்,**

(அ) நாம் எப்படி வாழ்வதென வழிகாட்டினார்
(ஆ) மனித வாழ்வின் துயர்களில் பங்கெடுத்தார்

மொத்தத்தில் தேவன் "**நான் சொல்வதைச் செய், நன் செய்வதை மட்டும் செய்யாதே**" என்று கூறுபவரில்லை. நாம் எப்படி வாழவேண்டும் என்று அவரே வாழ்ந்துக்காட்டிச் சென்றுள்ளார்.

ஆங்கில மூலம்: Why did God become human?

இதர கேள்வி பதில்களை படிக்கவும்

Source: http://www.answering-islam.org/tamil/qa-panel/human.html

# 3. அம்மாவின் நிர்வாகம், அல்லாஹ்வின் நிர்வாகம் – அடுத்த தலைவர் யார்?

ஒரு ஆடு தளபதியாக இருக்கும் சிங்கங்களின் இராணுவத்திற்கு நான் பயப்படமாட்டேன், ஆனால், ஒரு சிங்கம் தளபதியாக இருக்கும் ஆடுகளின் இராணுவத்திற்கு நான் பயப்படுகிறேன் என்று மகா அலேக்சாண்டர் கூறியதாகச் சொல்வார்கள். ஒரு சிறந்த தலைமைத்துவத்தின் முக்கியத்துவத்தை இந்த கூற்று எடுத்துக்காட்டுகின்றது.

டிசம்பர் 5ம் தேதி, 2016ம் ஆண்டு நம் மாண்புமிகு முதல்வர் ஜெயலலிதா அவர்கள் காலமானார்கள். ஒரு சிறந்த நிர்வாகி மற்றும் பல ஆண்டுகளாக அஇஅதிமுக கட்சியை கட்டிக்காத்துக்கொண்டு வந்திருக்கிறார்கள். இவருக்கு அடுத்தபடியாக இக்கட்சியை இவரைப்போலவே நிர்வாகம் செய்யும் அடுத்த தலைவர் தேவைப்படுகின்றார். இக்கட்சி அடுத்த 10 ஆண்டுகளில் எந்த நிலையில் இருக்கும் என்பதை, அடுத்த தலைவரின் நிர்வாகத் திறமை மீது சார்ந்துள்ளது. சிறந்த தலைவர்கள் தங்களுக்கு பிறகு தாங்கள் உருவாக்கிய ஸ்தாபனங்கள், கட்சிகள் அல்லது இயக்கங்களை செவ்வனே நடத்துவதற்கு ஏற்ற சிறந்த தலைவர்களை உருவாக்கவேண்டும், அவர்களுக்கு அதிகாரத்தைக் கொடுத்துவிடவேண்டும். திரு எம்ஜிஆர் அவர்கள் ஒரு சிறந்த தலைவியை தன் கட்சிக்கு கொடுத்துவிட்டுச் சென்றார். இதனால் இந்நாள்வரை அவரது கட்சி வாழ்ந்துவந்துள்ளது. இதே போல, மாண்புமிகு ஜெயலலிதா அவர்களும் தனக்கு பிறகு யார் அந்த கட்சியை நடத்துவார் என்ற முடிவை, கட்சியின் முக்கிய உறுப்பினர்களுக்கு அறிவித்து இருந்திருப்பார் என்று நாம் நம்பலாம். இதோடு தமிழ் நாட்டு அரசியல் பற்றி எழுதுவதை நிறுத்திக்கொள்கிறேன். எதிர்பாராத விதமாக மாண்புமிகு ஜெயலலிதா அவர்கள் காலமான செய்தி எனக்கு இஸ்லாமின் தலைசிறந்த தலைவர் முஹம்மதுவை ஞாபகப்படுத்தியது.

இன்றிலிருந்து 1400 ஆண்டுகளுக்கு முன்பு நடந்த சம்பவம் அது.

### சிறந்த தலைவன் யார்?

உலகத்தின் பல வெற்றிகரமான சாம்ராஜ்ஜியங்கள் சரித்திர ஏடுகளிலிருந்து காணாமல் போனதற்கு முக்கிய காரணம், சரியான நிர்வாகத் திறமையில்லாத தலைவர்கள் ஆட்சி செய்ததால் தான். எவன் ஒருவன் அடுத்த தலைமுறை தலைவர்களை உருவாக்குகின்றானோ, அவனே சிறந்த தலைவன் எனப்படுவான். தன் வாழ்நாள் முழுவதும் தொண்டர்களை தொண்டர்களாகவே வைத்திருப்பவன், தனக்கு பிறகு குழி தோண்டி தன் கட்சியை/இயக்கத்தை புதைப்பதற்கு சமமான காரியத்தை செய்பவன் ஆவான்.

இச்சிறிய கட்டுரையில், இஸ்லாமின் ஸ்தாபகரும், சிறந்த தலைவராகவும் திகழ்ந்த முஹம்மது அவர்கள் தனக்கு பிறகு தன் ஸ்தானத்தில் யார் தலைவர் பதவியில் உட்காரவேண்டும் என்ற முடிவை எடுத்தாரா இல்லையா? என்பதை ஆய்வு செய்யப்போகிறோம்.

## முஹம்மதுவின் திடீர் மரணம்

இஸ்லாம் என்ற நாணயத்திற்கு (காசைச் சொல்கிறேன்) இரண்டு பக்கங்கள் உள்ளன, ஒரு பக்கம் ஆன்மீகம், அடுத்த பக்கம் ஆட்சி அதிகாரம், ஒரு பக்கம் அவ்வுலகம், அடுத்த பக்கம் இவ்வுலகம். இஸ்லாமின் தலைவராக (கலிஃபாவாக) நியமிக்கப்படுபவர் ஆன்மீக தலைவராகவும், அதே நேரத்தில் நாட்டின் ஆட்சித் தலைவராகவும் செயல்படுவார். நாம் வாழும் இக்காலத்தில் அரசாங்கத்தை நடத்த வெறும் ஆட்சித்தலைவரை நியமித்தால் போதுமானது, ஆனால், இஸ்லாமைப் பொருத்தமட்டில், அதே நபர் ஆன்மீகத்தலைவராகவும் இருக்கவேண்டும், எனவே, இதில் தவறு நடந்தால், நாடு அழியும்.

இஸ்லாம் பற்றி சுருக்கமாகச் சொல்லவேண்டுமென்றால், முஹம்மதுவின் மூலமாக அல்லாஹ் இஸ்லாமிய ஆட்சியை ஸ்தாபித்தான், இதன் ஒரு பாகம் ஆன்மீகம் ஆகும். இருபத்தி மூன்று ஆண்டுகள் முஹம்மது ஒரு ஆன்மீக தலைவராகவும், (சில ஆண்டுகள்) நாட்டுத் தலைவராகவும் இஸ்லாமை கட்டிக்காத்தார். இதற்கு அல்லாஹ்வின் அருட்கொடையும், போர்கள் மூலமாக கிடைத்த பொருட்கொடையும் அளவில்லாமல் இருந்தது. இன்னும் பல ஆண்டுகள் வாழ்ந்து இருக்கவேண்டியவர், ஆனால், யாரும் எதிர்ப்பார்க்காத விதமாக, முஹம்மது சுகவீனமானார், ஒரு நாள் அவரது உயிரை அல்லாஹ் அபகரித்துக்கொண்டான்.

தனக்கு பிறகு யார் ஆன்மீகத்தலைவராகவும், நாட்டுத்தலைவராகவும் இருக்கவேண்டும் என்று முஹம்மது சொல்லியிருந்தாரா? தொண்டர்கள் அனைவருக்கும் அடுத்த தலைவர் யார் என்றுத் தெரியுமா? முஹம்மதுவின் மரணத்துக்கு முன்பே அதிகார பூர்வமாக தலைவர் பற்றிய அறிக்கையை முஹம்மது செய்திருந்திருந்தாரா?

## நாற்காலிக்காக சண்டைபோடும் ஆன்மீக பழுத்த பழங்கள்

ஒரு பக்கம் முஹம்மது மரித்த சோகம் மக்களின் உள்ளத்தில் சொல்லொன்னா வேதனையை உண்டாக்கியிருந்தது, இன்னொரு பக்கம், தலைவர்கள் நாற்காலிக்காக சண்டை போட ஆரம்பித்துவிட்டார்கள். இந்த நாற்காலிச்சண்டை அவர் மரித்த அதே நாள் நடந்தது என்பது வேதனைக்குரிய செய்தியாகும்.

அ) அன்சாரிகள் என்று அழைக்கப்பட்ட மதினாவாசிகள் தங்கள் இனத்திலிருந்து ஒரு தலைவரை நியமிக்க கூட்டம் கூடிவிட்டார்கள்.

ஆ) மக்காவாசிகளான குறைஷிகள் தங்கள் இனமக்கள் தான் இஸ்லாமுக்கு தலைமை தாங்கவேண்டும் என்று விரும்பினார்கள்.

இ) இவ்விரு கூட்டத்தினரும் ஒன்று கூடி பேசியும் பயனில்லை. மதினா தலைவர்கள் ஒரு ஆலோசனைச் சொன்னார்கள், இரண்டு தலைவர்களை நியமிப்போம், உங்களில் ஒருவர் எங்களில் ஒருவர். ஆனால், இதனை மக்காவினர் ஏற்றுக்கொள்ளவில்லை.

ஈ) அபூ பக்கர், மற்றும் உமர் என்பவர்கள் முஹம்மதுவிற்கு பெண் கொடுத்த மாமனார்கள் ஆவார்கள். உஸ்மான் மற்றும் அலி என்பவர்கள் முஹம்மதுவின் மகள்களை திருமணம் செய்திருந்த மருமகன்மார்கள். இவர்கள் அனைவரும் மக்காவினராவார்கள்.

உ) ஜுபைர் என்ற முஹம்மதுவின் தோழர், தன் வாளை உறுவி, அலிக்கு ஆதரவு கிடைக்கும் வரை இதை உறையில் போடமாட்டேன் என்றுச் சொன்னார். ஜுபைரை கல்லால் அடித்து வாளை பிடுங்கு என்று உமர் கூறினார். இவர்கள் அனைவரும் தற்கால முஸ்லிம்களின் படி, இஸ்லாமிய ஆன்மீகத்தில் பழுத்த பழங்கள்.

ஊ) அபூ சுஃப்யான் என்ற இன்னொரு முஸ்லிம், இங்கு தலைகள் உருளும் சூழல் உள்ளது என்றார், வாளை சுழற்றவேண்டிய சரியான வேளைக்காக காத்திருந்தார்.

எ) நிலைமை தலைக்கு மேலே போகிறது என்பதை உணர்ந்த உமர், புத்திசாலித்தனமாக மிகவும் தைரியமாக தன் ஆதரவு அபூ பக்கருக்கு என்று கூறினார். வேறு வழியின்றி ஒவ்வொருவரும் ஆதரவு அளித்தனர்.

ஏ) அலிக்கு தான் தலைவராகவேண்டுமென ஆசை இருந்தது, இரத்தம் சிந்த இது சமயமல்ல என உணர்ந்தவராக, தன் ஆதாரவையும் அபூ பக்கருக்கு கொடுத்தார். பாவன் இவர், இப்படிப்பட்ட ஆதரவை அவர் மூன்று முறை கொடுக்கவேண்டி இருந்தது. கடைசியாக நான்காவதாக இவர் தலைவரானார்.

ஐ) அபூ பக்கர் தலைவராக வருவதை அபூ சுஃப்யான், விரும்பவில்லை. குறைவான வம்சத்தில் வந்த அபூ பக்கரா எங்களுக்கு தலைவராவது? ஜாதிவெறி அவரை ஆட்டிப்படைத்தது. அலியிடம் பேசிப்பார்த்தார், ஒன்றும் நடக்கவில்லை.

ஒ) மதினாவினரும் விருப்பமில்லாமல் தங்கள் ஆதரவை கொடுத்தார்கள்.

இவைகள் எல்லாம், முஹம்மது மரித்த அதே நாள் அரங்கேரியது.

## இக்குழப்பத்திற்கு யார் காரணம்?

அல்லாஹ்வும் முஹம்மதுவும் தான் இந்த குழப்பத்திற்கெல்லாம் காரணம்.

பெண்களின் மாதவிடாய் முதற்கொண்டு, தேவையில்லாத அனைத்துவித கேள்விகளுக்கு பதில் கொடுத்த முஹம்மது, தனக்கு பிறகு யார் தலைவராக வரவேண்டும்? தலைவர்களை எப்படி நியமிக்கவேண்டும்? போன்ற விவரங்களைச் சொல்லிவிட்டுச் சென்று இருந்திருக்கலாம். ஆனால், இதைப் பற்றி முஹம்மது விளக்கமளிக்கவில்லை.

அற்பமான விஷயங்களுக்கெல்லாம் 'வெளிப்பாடுகளை, அதாவது குர்-ஆன் வசனங்களை இறக்கிய அல்லாஹ்' ஒரு தலைவனை எப்படி நியமிக்கவேண்டும் என்றுச் சொல்ல மறந்துவிட்டான்.

ஆராயிரத்துக்கும் அதிகமான வசனங்களையும் (6236), பல ஆயிர ஹதீஸ் விவரங்களையும் இறக்கிய அல்லாஹ்விற்கு முஹம்மதுவிற்கு அடுத்தபடியாக வரும் தலைவர்களை எப்படி நியமிக்கவேண்டும் என்பதை விளக்கும் 10 வசனங்களை இறக்கமுடியவில்லை.

முஹம்மது தனக்கு பிறகு தலைவர்களை எப்படி நியமிக்கவேண்டும் என்ற விவரங்களைச் சொல்லாமல் மரித்தபடியினால் உண்டான இழப்புக்களை இஸ்லாமின் ஆரம்பகால 50 ஆண்டுகால சரித்திரத்தில் காணலாம்.

அல்லாஹ்வும் முஹம்மதுவும் செய்த மிகப்பெரிய தவறினால், முஹம்மதுவின் பேரப்பிள்ளைகளும் குடும்பமும் பரிதாபமாக கொல்லப்பட்டார்கள். முஹம்மதுவின் மருமகனார் உஸ்மான் அவர்கள் முஸ்லிம்களால் கொல்லப்பட்டார், அதே முஸ்லிம்களால் இன்னொரு மருமகனார் அலி அவர்களும் கொல்லப்பட்டார்கள்.

## அல்லாஹ் இறைவனா?

"அல்லாஹ் தான் பைபிளின் தேவன்" என்று குர்-ஆன் சொல்கிறது. அடுத்த தலைமுறை தலைவர்களை நியமிக்கும் இந்த குணத்தை பார்க்கும் போது, நிச்சயமாக அல்லாஹ் பைபிளின் தேவனாக இருக்கமுடியாது என்று சொல்லமுடியும்.

மோசேயின் வாழ்வு எப்படி எப்போது முடிவடையும்? அடுத்தபடியாக, யார் தலைவராக வரவேண்டும்? போன்றவற்றை பைபிளின் தேவன் முடிவு செய்து, அதனை ஒரு அழகான முறையில் செயல்படுத்தினார். ஆனால், முஹம்மது எப்படி எப்போது மரிப்பார் என்று தெரியாதவராக அல்லாஹ் காணப்படுகிறார். இஸ்லாமின் சரித்திரத்தை கூர்ந்து ஆய்வு செய்தால், இந்த முடிவிற்குத் தான் வரமுடியும்.

1. மோசே மரிப்பது பற்றிய செய்தியை தேவன் மோசேக்கு அறிவிக்கிறார்.[1]
2. ஒரு சிறந்த தலைவனை தெரிவு செய்யுங்கள் என்று மோசே வேண்டுகிறார்.[2]
3. யோசுவாவை தெரிவு செய்யும்படி தேவன் கட்டளையிடுகிறார்.[3]
4. யோசுவாவை மக்களுக்கு முன்பாக கொண்டுச்சென்று, அவனுக்கு அதிகாரம் மற்றும் கனம் கொடு என்று தேவன் கட்டளையிட்டார்.[4]
5. யோசுவா ஒரு விஷயத்திற்காக எப்படி முடிவு எடுக்கவேண்டும் என்பதைப் பற்றிய கட்டளையை தேவன் கொடுக்கிறார்.[5]
6. இதர இடங்களில் மோசே யோசுவாவிற்கு அறிவுரைகள், கட்டளைகள் மற்றும் உற்சாக வார்த்தைகளை கொடுத்தார்.[6]
7. கடைசியாக, மோசே மரித்தபிறகு, தேவன் நேரடியாக யோசுவாவை வழி நடத்துகிறார், உற்சாகப்படுத்துகிறார், வெற்றியுள்ள தலைவனாக இருக்கவேண்டுமென்றால் என்ன செய்யவேண்டும் என்று அறிவுரை கூறுகின்றார். [7]

அடுத்தபடியாக, புதிய ஏற்பாட்டிலும், இயேசு தனக்கு பிறகு யார் தன் திருச்சபைக்கு தலைமை தாங்கவேண்டும் என்பதை தன் சீடர்களுக்கு விளக்கிவிட்டுச் சென்றார். இயேசுவின் உள்வட்ட சீடர்களில் பேதுரு, யோவான் போன்றவர்கள் தலைவர்களாக செயல்பட்டபோது, இதர சீடர்கள் அதனை ஆமோதித்தார்கள், முஹம்மதுவின் சீடர்களைப்போல, வாளை ஏந்தி இரத்தம் சிந்த துடிக்கவில்லை.

இதிலிருந்து அறிவது என்னவென்றால், அல்லாஹ் பைபிளின் இறைவனல்ல என்பதாகும். வீணான பயனில்லாத விஷயங்களுக்கெல்லாம் வசனங்களை இறக்கிய அல்லாஹ், தலைவர்களை எப்படி நியமிப்பது? அவர்களை ஆட்சியிலிருந்து எப்படி நீக்குவது போன்றவற்றையெல்லாம் சொல்லாமல், முஹம்மதுவை எடுத்துக்கொண்டது, அல்லாஹ்வின் தெய்வீகத்தன்மையை கேள்விக்குரியக்குகிறது.

## முடிவுரை:

ஆரம்பகால இஸ்லாமிய சரித்திரத்தைபோன்று, தமிழ்நாட்டின் அஇஅதிமுக கட்சி அல்லல்படக்கூடாது என்று விரும்புகிறேன். நல்ல நிர்வாகத்திறமையுள்ள தலைவர்கள் நாட்டுக்கும், வீட்டுக்கும் தேவை.

இஸ்லாமிய ஆரம்பக்காலத்தை, அதாவது முதல் நான்கு கலிஃபாக்களின் ஆட்சியை முஸ்லிம்கள் "இஸ்லாமின் பொற்காலம்" என்றுச் சொல்வார்கள், ஆனால் இது பச்சைப்பொய்யாகும். மூன்றாவது கலிஃபா உஸ்மான் அவர்கள் தன் தலைமையகத்தில், முஸ்லிம்களால் மிகவும் கொடுமையாக கொல்லப்படுவாரானால், அந்த காலக்கட்டத்தை "பொற்காலம்" என்று எப்படிச் சொல்லமுடியும்? வேண்டுமானால், அக்காலத்தை 'இஸ்லாமின் கற்காலம்' என்றுச் சொல்லலாம்.

முஹம்மதுவிற்கு பிறகு அடுத்த 50 ஆண்டுகள் என்ன நடந்தது என்பதை அறிய கீழ்கண்ட கட்டுரைகளை படிக்கவும்:

**இஸ்லாமின் அரச குடும்பத்தின் கனிகள் (நடத்தைகள்)**

1. **இஸ்லாமிய அரச குடும்பம் - பாகம் 1: முஹம்மதுவின் ஆஸ்தி**
2. **இஸ்லாமிய அரச குடும்பம் - பாகம் 2: புதிய அரசர்**
3. **இஸ்லாமிய அரச குடும்பம் - பாகம் 3: குர்ஆனில் தெரித்த இரத்தம் (உஸ்மானும் இஸ்லாமிய அரச குடும்பமும்)**

The Fruits of Islam's Royal Family

1. Muhammad's Wealth
2. The New King
3. Uthman's Murder
4. Ali and Aisha
5. Ali and Mu'awiya
6. Husayn and Yazid
7. The Fruit of Islam Judged

**அடிக்குறிப்புக்கள்**

**[1]** எண்ணாகமம் 27:13 நீ அதைப் பார்த்தபின்பு, உன் சகோதரனாகிய ஆரோன் சேர்க்கப்பட்டது போல, நீயும் உன் ஜனத்தாரிடத்தில் சேர்க்கப்படுவாய்;

**[2]** எண்ணாகமம் 27:15 அப்பொழுது மோசே கர்த்தரை நோக்கி: 27:16 கர்த்தருடைய சபை மேய்ப்பன் இல்லாத மந்தையைப்போல் இராதபடிக்கு, 27:17 அந்தச் சபைக்கு முன்பாகப் போக்கும் வரத்துமாய் இருக்கும்படிக்கும், அவர்களைப் போகவும் வரவும் பண்ணும்படிக்கும், மாம்சமான யாவருடைய ஆவிகளுக்கும் தேவனாகிய கர்த்தர் ஒரு புருஷனை அவர்கள்மேல் அதிகாரியாக ஏற்படுத்தவேண்டும் என்றான்.

**[3]** எண்ணாகமம் 27:18 கர்த்தர் மோசேயை நோக்கி: ஆவியைப் பெற்றிருக்கிற புருஷனாகிய யோசுவா என்னும் நூனின் குமாரனை நீ தெரிந்துகொண்டு, அவன்மேல் உன் கையை வைத்து,

**[4]** எண்ணாகமம் 27:19 அவனை ஆசாரியனாகிய எலெயாசாருக்கும் சபையனைத்திற்கும் முன்பாக நிறுத்தி, அவர்கள் கண்களுக்கு முன்பாக அவனுக்குக் கட்டளைகொடுத்து, 27:20 இஸ்ரவேல் புத்திரராகிய சபையார் எல்லாரும் அவனுக்குக் கீழ்ப்படியும்படிக்கு, உன் கனத்தில் கொஞ்சம் அவனுக்குக் கொடு.

**[5]** எண்ணாகமம் 27:21 அவன் ஆசாரியனாகிய எலெயாசாருக்கு முன்பாக நிற்கக்கடவன்; அவனிமித்தம் அந்த ஆசாரியன் கர்த்தருடைய சந்நிதானத்தில் வந்து, ஊரீம் என்னும் நியாயத்தினாலே ஆலோசனை கேட்கக்கடவன்; அவருடைய கட்டளையின்படியே, அவனும் அவனோடேகூட இஸ்ரவேல் புத்திரராகிய சபையார் எல்லாரும் போகவும் அவருடைய கட்டளையின்படியே வரவும் வேண்டியது என்றார். 27:22 மோசே தனக்குக் கர்த்தர் கட்டளையிட்டபடியே யோசுவாவை அழைத்துக்கொண்டுபோய், அவனை ஆசாரியனாகிய எலெயாசாருக்கும் சபையனைத்திற்கும் முன்பாக நிறுத்தி, 27:23 அவன்மேல் தன் கைகளை வைத்து, கர்த்தர் தனக்குச் சொன்னபடியே அவனுக்குக் கட்டளைகொடுத்தான்.

**[6]** உபாகமம் 3:28 நீ யோசுவாவுக்குக் கட்டளை கொடுத்து, அவனைத் திடப்படுத்திப் பலப்படுத்து; அவன் இந்த ஜனங்களுக்கு முன்பாகக் கடந்துபோய், அவனே நீ காணும் தேசத்தை அவர்களுக்குப் பங்கிட்டுக்கொடுப்பான் என்றார்.

உபாகமம் 31:7 பின்பு மோசே யோசுவாவை அழைத்து, இஸ்ரவேலர் எல்லாரும் பார்த்திருக்க, அவனை நோக்கி: பலங்கொண்டு திடமனதாயிரு; கர்த்தர் இவர்களுக்குக் கொடுப்பேன் என்று இவர்களுடைய பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்துக்கு நீ இந்த ஜனத்தை அழைத்துக்கொண்டு போய், அதை இவர்கள் சுதந்தரிக்கும்படி செய்வாய். 31:8 கர்த்தர்தாமே உனக்கு முன்பாகப் போகிறவர், அவர் உன்னோடே இருப்பார்; அவர் உன்னை விட்டு விலகுவதுமில்லை, உன்னைக் கைவிடுவதுமில்லை; நீ பயப்படவும் கலங்கவும் வேண்டாம் என்றான்.

**[7]** யோசுவா 1:1 கர்த்தருடைய தாசனாகிய மோசே மரித்தபின்பு, கர்த்தர் மோசேயின் ஊழியக்காரனான நூனின் குமாரன் யோசுவாவை நோக்கி:

1:2 என் தாசனாகிய மோசே மரித்துப் போனான்; இப்பொழுது நீயும் இந்த ஜனங்கள் எல்லாரும் எழுந்து, இந்த யோர்தானைக் கடந்து, இஸ்ரவேல் புத்திரருக்கு நான் கொடுக்கும் தேசத்துக்குப் போங்கள்.

1:3 நான் மோசேக்குச் சொன்னபடி உங்கள் காலடி மிதிக்கும் எவ்விடத்தையும் உங்களுக்குக் கொடுத்தேன்.

1:4 வனாந்தரமும் இந்த லீபனோனும் தொடங்கி ஐபிராத்து நதியான பெரிய நதிமட்டுமுள்ள ஏத்தியரின் தேசம் அனைத்தும், சூரியன் அஸ்தமிக்கிற திசையான பெரிய சமுத்திரம்வரைக்கும் உங்கள் எல்லையாயிருக்கும்.

1:5 நீ உயிரோடிருக்கும் நாளெல்லாம் ஒருவனும் உனக்கு முன்பாக எதிர்த்து நிற்பதில்லை; நான் மோசேயோடே இருந்ததுபோல, உன்னோடும் இருப்பேன்; நான் உன்னைவிட்டு விலகுவதுமில்லை, உன்னைக் கைவிடுவதுமில்லை.

1:6 பலங்கொண்டு திடமனதாயிரு; இந்த ஜனத்தின் பிதாக்களுக்கு நான் கொடுப்பேன் என்று ஆணையிட்ட தேசத்தை நீ இவர்களுக்குப் பங்கிடுவாய்.

1:7 என் தாசனாகிய மோசே உனக்குக் கற்பித்த நியாயப்பிரமாணத்தின்படியெல்லாம் செய்யக் கவனமாயிருக்கமாத்திரம் மிகவும் பலங்கொண்டு திடமனதாயிரு; நீ போகும் இடமெல்லாம் புத்திமானாய் நடந்துகொள்ளும்படிக்கு, அதை விட்டு வலது இடதுபுறம் விலகாதிருப்பாயாக.

1:8 இந்த நியாயப்பிரமாண புஸ்தகம் உன் வாயைவிட்டுப் பிரியாதிருப்பதாக; இதில் எழுதியிருக்கிறவைகளின்படியெல்லாம் நீ செய்யக் கவனமாயிருக்கும்படி, இரவும் பகலும் அதைத்

தியானித்துக் கொண்டிருப்பாயாக; அப்பொழுது நீ உன் வழியை வாய்க்கப்பண்ணுவாய், அப்பொழுது புத்திமானாயும் நடந்துகொள்ளுவாய்.

1:9 நான் உனக்குக் கட்டளையிடவில்லையா? பலங்கொண்டு திடமனதாயிரு; திகையாதே, கலங்காதே, நீ போகும் இடமெல்லாம் உன் தேவனாகிய கர்த்தர் உன்னோடே இருக்கிறார் என்றார்.

**தேதி:** 7, டிசம்பர் 2016

---

**உமரின் இதர கட்டுரைகள்**

**உமரின் கட்டுரைகள்/மறுப்புக்கள் பக்கம்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/general-topics/amma_allah.html

# 4. நியாயத்தீர்ப்பு நாளில் யார் "இறைவன்" என்று அழைக்கப்படுபவர்?

இயேசு தம்முடைய மலைப் பிரசங்கத்தில் கீழ்கண்டவாறு சொல்கிறார்: (மத்தேயு 7:21-23)

7:21 பரலோகத்திலிருக்கிற என் பிதாவின் சித்தத்தின்படி செய்கிறவனே பரலோகராஜ்யத்தில் பிரவேசிப்பானேயல்லாமல், என்னை நோக்கி: கர்த்தாவே! கர்த்தாவே! என்று சொல்லுகிறவன் அதில் பிரவேசிப்பதில்லை.

7:22 அந்நாளில் அநேகர் என்னை நோக்கி: கர்த்தாவே! கர்த்தாவே! உமது நாமத்தினாலே தீர்க்கதரிசனம் உரைத்தோம் அல்லவா? உமது நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்தினோம் அல்லவா? உமது நாமத்தினாலே அநேக அற்புதங்களைச் செய்தோம் அல்லவா? என்பார்கள்.

7:23 அப்பொழுது, நான் ஒருக்காலும் உங்களை அறியவில்லை; அக்கிரமச் செய்கைக்காரரே, என்னைவிட்டு அகன்றுபோங்கள் என்று அவர்களுக்குச் சொல்லுவேன்.

மேற்கண்ட 22ம் வசனத்தில் "**அந்நாளில்**" என்ற சொல் "நியாயத்தீர்ப்பு நாளை குறிக்கிறது". உலகமனைத்தையும் நியாயத்தீர்ப்பு செய்பவருக்கு முன்பாக அந்த நாளில் ஒவ்வொருவரும் தம்முடைய வாழ்க்கைப் பற்றிய கணக்கை ஒப்புவிக்கவேண்டும்.

இயேசு அந்த நியாயத்தீர்ப்பு நாளின் "**நியாயாதிபதி**" என்று இங்கு பறைச்சாற்றுகிறார்.

ஒரு நாள் வரும், அந்த நாளில் ஒவ்வொருவருக்கும் "**யார் இறைவன் (கர்த்தர்)**" என்று தெளிவாக தெரியவரும். இதைப் பற்றி எந்த ஒரு குழப்பமும் யாருக்கும் வராது [1].

அந்த நாளில் எல்லோரும் தம்மை “கர்த்தாவே / ஆண்டவரே” என்று அழைப்பார்கள் என்று இயேசு சொல்கிறார். இப்படி மக்கள் அழைக்கும் போது அவர் அதனை மறுக்கவில்லை. இப்படி அழைப்பவர்களைப் பார்த்து “ஏன் எனக்கு இப்படிப்பட்ட தெய்வீகத்தன்மையான பட்டத்தைக் கொடுத்து அழைக்கிறீர்கள்” என்றுச் சொல்லி, அவர்களை குற்றப்படுத்தமாட்டார், அதற்கு பதிலாக அவர்களின் கீழ்படியாமைப் பற்றி கேள்வி எழுப்புவார். கிறிஸ்துவே ஆண்டவர் என்று அறிக்கையிட்டவர்களையும், அவரது ஊழியம் செய்து, அவருடைய பெயரில் பல காரியங்களை செய்தவர்களையும் அவர் கேள்வி கேட்பார், அவர்களின் கீழ்படிதல் பற்றி குற்றம் சாட்டுவார் [2]. இப்படிப்பட்ட ஊழியம் செய்த இவர்கள் இயேசுவிற்கு முழு இருதயத்தோடும் கீழ்படிந்தார்களா? அவரோடு தனிப்பட்ட விதத்தில் உறவுமுறையை வைத்திருந்தார்களா? அல்லது மத சடங்காச்சாரங்களை மட்டும் பின்பற்றிக்கொண்டு, அவர் மீது சாராமல் வாழ்தார்களா என்று கேள்வி எழுப்புவார்.

அந்த நியாயத்தீர்ப்பு நாளில் இயேசு மட்டுமே நியாயாதிபதியாக இருப்பார், எனவே, இன்று அவரை ஆண்டவர் என்று அழைப்பதும் சரியான ஒன்று தான்.

நாமும் எச்சரிக்கையாக இருப்போம், இயேசுவை (உதட்டளவில்) பின்பற்றுகிறோம் என்றுச் சொல்லிக்கொண்டு, அவரை முழுமனதோடு நேசிக்காமல், கீழ்படியாமல் இருந்தால், நம்மிடமும் அந்த நாளில் கேள்விகள் கேட்கப்படும்.

மேற்கண்ட வசனங்களில் மக்களிடம் காணும் பிரச்சனை எதுவென்றால் “அவர்கள் இயேசுவை எப்படி கூப்பிட்டார்கள் என்பது பற்றியது அல்ல, அதற்கு பதிலாக, அவர்கள், அவருக்கு முழுமனதோடு கீழ்படிந்தார்களா?” என்பது தான்.

குர்-ஆனின் 5:116-118 வசனங்கள் சொல்வது போல, இயேசு அந்த நாளில் கேள்விகள் கேட்கப்படமாட்டார். அதற்கு பதிலாக, அந்த நாளில் நியாயாதிபதியாக அவரே இருப்பார். இவருக்கு முன்பாகத்தான், உலக மக்கள் அனைவரும் தங்கள் வாழ்க்கையில் புரிந்த செயல்களுக்கு கணக்கை ஒப்புவிக்கவேண்டும். இயேசுவை எப்படி இவர்கள் கண்டார்கள், என்னவென்று அழைத்தார்கள் என்பதும் கேட்கப்படும், கடைசியாக நியாயத்தீர்ப்பு அளிக்கப்படும்.

மத்தேயு 7:21-23ல் இயேசு கூறியவற்றோடு, முஹம்மது கூறியதாக புகாரி ஹதீஸில் வரும் விவரங்களை ஒப்பிட்டுப்பார்க்கவும் [3]

**அடிக்குறிப்புக்கள்**

[1] பார்க்க பிலிப்பியர் 2:5-11

[2] பார்க்க” The Easy Sinful Nature of Christianity”.

[3] புகாரி ஹதீஸ்கள்:

**6585. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'**

மறுமை நாளில் என் தோழர்களில் ஒரு குழுவினர் என்னிடம் வருவார்கள். அப்போது அவர்கள் (அல்கவ்ஸர்) தடாகத்தைவிட்டு ஒதுக்கப்படுவார்கள். உடனே நான் 'இறைவா! (இவர்கள்) என் தோழர்கள்' என்பேன்.

அதற்கு இறைவன் 'உங்களுக்குப் பின்னால் இவர்கள் (புதிது புதிதாக) உருவாக்கியது குறித்து உங்களுக்குத் தெரியாது. இவர்கள் திரும்பிப் பார்க்காமல் வந்த வழியே (தங்கள் பழைய மதத்திற்குத்) திரும்பிச் சென்றார்கள்' என்று சொல்வான். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். Volume :7 Book :81

**6586. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'**

மறுமைநாளில் என் தோழர்களில் சிலர் என்னிடம் ('அல்கவ்ஸர்') தடாகத்திற்கு வருவார்கள். அப்போது அவர்கள் (அல்கவ்ஸர்) தடாகத்தைவிட்டு விரட்டப்படுவார்கள். உடனே நான் 'இறைவா! (இவர்கள்) என் தோழர்கள்' என்பேன். அதற்கு இறைவன் 'உங்களுக்குப் பின்னால் இவர்கள் (புதிது புதிதாக) உருவாக்கியது குறித்து உங்களுக்குத் தெரியாது. இவர்கள் திரும்பிப் பார்க்காமல் வந்த வழியே (தங்கள் பழைய மதத்திற்குத்) திரும்பிச் சென்றார்கள்' என்று சொல்வான். இதை நபித்தோழர்கள் சிலரிடமிருந்து ஸயீத் இப்னு முசய்யப்(ரஹ்) அறிவித்தார். . . .Volume :7 Book :81

**6587. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'**

நான் உறங்கிக்கொண்டிருந்தேன். அபபோது (கனவில்) நான் (அல்கவ்ஸர் தடாகத்தினருகில்) நின்றுகொண்டிருக்கிறேன். அப்போது ஒரு குழுவினரை நான் அடையாளம் கண்டுகொள்கிறேன். எனக்கும் அவர்களுக்குமிடையே ஒரு(வான)வர் தோன்றி (அந்தக் குழுவினரை நோக்கி), 'வாருங்கள்' என்று அழைக்கிறார். உடனே நான் (அவரிடம் 'எங்கே (இவர்களை அழைக்கிறீர்கள்)?' என்றேன். அவர் 'அல்லாஹ்வின் மீதாணையாக! நரகத்திற்கு' என்றார். நான் 'இவர்கள் என்ன செய்தார்கள்?' என்றேன். அவர் 'உங்களுக்குப் பின்னால் இவர்கள் திரும்பிப் பார்க்காமல் வந்த வழியே மதம் மாறிச் சென்றார்கள்' என்றார். பிறகு மற்றொரு குழுவினரையும் நான் அடையாளம் கண்டு கொள்கிறேன். எனக்கும் அவர்களுக்குமிடையே ஒரு (வான)வர் தோன்றி, 'வாருங்கள்' என (அவர்களிடம்) கூறுகிறார். நான் '(இவர்களை) எங்கே (அழைக்கிறீர்கள்)?' என்றேன். அவர் 'அல்லாஹ்வின் மீதாணையாக! நரகத்திற்குத்தான்' என்றார். நான் 'இவர்கள் என்ன செய்தார்கள்?' என்று கேட்டேன். அவர் 'இவர்கள் உங்களுக்குப் பின்னால் திரும்பிப் பார்க்காமல் வந்த வழியே மதம் மாறிப் போய்விட்டார்கள்' என்று பதிலளித்தார். அவர்களில் காணாமல் போன ஒட்டகத்தைப் போன்று ஒரு சிலரைத் தவிர வேறெவரும் தப்பித்துக் கொள்வார்கள் என நான் கருதவில்லை. என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். Volume :7 Book :81

மூலம்: **http://www.answering-islam.org/BibleCom/mt07_21-23.html**

**இஸ்லாமியர்களுக்கான பைபிள் விரிவுரை**

Source: http://www.answering-islam.org/tamil/bible/biblecom/mt07_21_23.html

# 5. படைப்புகளும் படைத்தவரும் (குர்-ஆனின் இறைவனும், பைபிளின் இறைவனும்)

The Creator and the Creation

ஆசிரியர்: ராபர்ட் ஸீவர்ஸ்

என் **இணைய தளத்தின்** கட்டுரைகள், இஸ்லாம் மற்றும் கிறிஸ்தவத்திற்கு இடையே காணப்படும் இறையியல் வித்தியாசங்களை பட்டியலிடும் ஆய்வு கட்டுரைகளாக இருக்கும். இவைகளில் சில கட்டுரைகள் வெளிப்படையாக உண்மைகளை சொல்வதினால், சில முஸ்லிம்களுக்கு மன வருத்தத்தை உண்டாக்கும். சில கட்டுரைகள் வாசகர்களின் சிந்தனையைத் தூண்டி, மேற்கொண்டு ஆய்வு செய்ய அவர்களை உற்சாகப்படுத்தும். இவ்விரு மார்க்கங்களுக்கு இடையே பல வித்தியாசங்களை நாம் பட்டியலிட்டாலும், படைப்பு மற்றும் படைத்தவர் பற்றிய வித்தியாசம் மிகவும் சுவாரசியமானதாகும். எனவே இக்கட்டுரையில் 'படைப்பும் படைத்தவரும்' என்ற கருப்பொருளில் ஆய்வு செய்யப்போகிறோம்.

கிறிஸ்தவம் மற்றும் இஸ்லாம் என்ற இவ்விரு மார்க்கங்களை பின்பற்றுபவர்கள் சொல்லும் பொதுவான ஒரு விஷயம்," வானத்தையும் பூமியையும் படைத்த இறைவனை நாங்கள் தொழுதுக்கொள்கிறோம்" என்பதாகும். இது ஒரு அடிப்படை விஷயம் என்பதால், இதனை அதிகமாக விளக்கத்தேவையில்லை. பைபிள் தன் முதல் வசனத்தை தேவன் வானத்தையும் பூமியையும் படைத்த வர்ணனையோடு துவங்குகிறது (ஆதியாகமம் 1:1). இன்னும் பல இடங்களில் பைபிளின் இறைவன் தம்முடைய உருவாக்கும் வல்லமையை பறைசாற்றுவதை காணமுடியும் (பார்க்க ஏசாயா 44:24 & யோபு 38:4-6). இதே போல, குர்-ஆனிலும் அனேக இடங்களில் அல்லாஹ் வானத்தையும் பூமியையும் படைத்தவர் என்று சொல்லப்பட்டுள்ளது.

குர்-ஆன் 6:73. அவன் தான் வானங்களையும் பூமியையும் உண்மையாகவே படைத்தான்; அவன் "ஆகுக!" என்று சொல்லும் நாளில், அது (உடனே) ஆகிவிடும். அவனுடைய வாக்கு உண்மையானது; எக்காளம் (ஸூர்) ஊதப்படும் நாளில், ஆட்சி (அதிகாரம்) அவனுடையதாகவே இருக்கும்; அவன் மறைவானவற்றையும், பகிரங்கமானவற்றையும் அறிந்தவனாக இருக்கிறான்; அவனே பூரண ஞானமுடையோன்; (யாவற்றையும்) நன்கறிந்தோன். (டாக்டர் முஹம்மது ஜான் தமிழாக்கம்)

கிறிஸ்தவர்களும் முஸ்லிம்களும்" வானத்தையும் பூமியையும் படைத்தவரை" தொழுதுக் கொள்வதினால், இவ்விரு பிரிவினரும் ஒரே இறைவனைத் தான் தொழுதுக் கொள்கிறார்கள் என்று மக்கள் முடிவு செய்துவிடுகிறார்கள். அதாவது, கிறிஸ்தவர்கள் வணங்கும் இறைவனைத் தான் முஸ்லிம்களும் வணங்குகிறார்கள் என்று மக்கள் தவறாக எண்ணிவிடுகிறார்கள். ஆனால், பைபிளின் இறைவனும், குர்-ஆனின் அல்லாஹ்வும் தாம் படைத்தவைகளிடம் எப்படி தொடர்பு கொள்கிறார்கள் என்ற ஆய்வைச் செய்தால், இவ்விருவருக்கும் இடையே இருக்கும் வித்தியாசத்தை சரியாக புரிந்துக் கொள்ளமுடியும்.

இஸ்லாமின் படி, அல்லாஹ் என்பவர் தாம் படைத்தவைகளிலிருந்து மேலானவராக கருதப்படுகிறார். நாம் அல்லாஹ்வை பார்க்கமுடியாது என்றும், அவரது சத்தத்தை கேட்கமுடியாது என்றும் முஸ்லிம்கள் நம்புகிறார்கள். அதாவது, நம் ஐம்புலங்களிலிருந்து அல்லாஹ்வை அறியமுடியாது என்று முஸ்லிம்கள் நம்புகிறார்கள். இந்த விவரத்தை குர்-ஆன் தெளிவாக விளக்கவில்லை என்றாலும், குர்-ஆன் 29:6ம் வசனத்தை முஸ்லிம்கள், "அல்லாஹ் எல்லா படைப்பை விட மேலானவர்" என்று விளக்குகிறார்கள். அல்லாஹ் 'ஒரு

போதும் தன் படைப்பிற்குள் வரமாட்டார்" என்று விரிவுரை கொடுக்கிறார்கள். ஒரு இஸ்லாமிய அறிஞர் கீழ்கண்ட விதமாக கூறுகிறார்:

" அல்லாஹ் தான் படைத்த அனைத்து படைப்பைவிட மேலானவன். அவன் தன் படைப்பு போல, ஒரு காலத்திற்கு இடத்திற்கு உட்பட்டவன் அல்ல. ஒருவேளை அல்லாஹ் தன் படைப்பிற்குள் நுழைந்தால், அவனும் தன் படைப்பைப்போல குறையுள்ளவனாக கருதப்படவேண்டி வரும்" [1]

" ஒரு முக்கியமான விவரத்தை தெளிவுபடுத்தவேண்டியுள்ளது. அல்லாஹ் வானத்தில் இருக்கிறான் என்று சொல்லும் போது, "அவன் வானத்திற்குள் இருக்கிறான்" என்று அர்த்தமல்ல. இதன் உண்மை பொருள் "அல்லாஹ் வானத்திற்கு மேலே இருக்கிறான்" என்பதாகும். அவன் தன் படைப்பை விட மேலானவன், தன் படைப்போடு அவன் சம்மந்தம் கலக்கமாட்டான். அல்லாஹ்வின் ஆதிக்கம், மேன்மை மற்றும் வல்லமை என்பவைகள் அவனின் முக்கிய இலக்கணங்களாக இருக்கின்றன" [2]

"Allah Most High is transcendent above any quality of His creation, including existing within time or space, as that would entail being limited."

We would like to point out that, in saying that Allah is in the heavens, we do not mean that He is present within the heavens. What we mean is that Allah is above the heavens. He is High above His creation, not connected to them, and that His Ascendancy is that of Being, Position, Honor, and Force; indeed, it is one of His Essential Attributes. [ii]

மேற்கண்ட இஸ்லாமியர்களின் மேற்கோள்களின் சுருக்கம் இது தான், அதாவது "அல்லாஹ் வானம் மற்றும் பூமிக்கு அப்பாற்பட்டவன், அவைகளுக்குள் அவன் அடங்கமாட்டான், அவனை அவைகளுக்குள் அடக்கவும் முடியாது" என்பதாகும். அல்லாஹ் யார் என்பதை ஓரளவிற்கு இப்போது புரிந்துக்கொண்டு இருப்பீர்கள்.

**பைபிளின் இறைவன் பற்றி இப்போது சுருக்கமாக காண்போம்.**

பைபிளின் இறைவன் அனைத்தையும் படைத்தார். கிறிஸ்தவத்தில் இருக்கும் ஒரு விசேஷம் என்னவென்றால், வானம் பூமி மற்றும் எல்லாவற்றையும் படைத்த இறைவன், தன் படைப்பிற்குள் நுழையவும் அவருக்கு வல்லமை உண்டு என்பதாகும். அவர் ஆதாமுக்கு காணப்பட்டார் (ஆதியாகமம் 3:8), மோசேவோடு ஒரு மலையில் பேசினார் (யாத்திராகமம் 19:3), சாலொமோன் கட்டிய தேவாலயத்தின் பிரதிஷ்டை நாளன்று, அனைத்து இஸ்ரவேலர்களின் மத்தியில் தேவாலயத்தில் மகிமையாக இறங்கினார் (1 இராஜாக்கள் 8:11). இவைகள் அனைத்தையும் காட்டிலும், மனித இனத்தை இரட்சிக்கும் படியாக, அவர் மனிதனாக இவ்வுலகத்தில் வந்தது முத்துக்களால் பொறிக்கப்படவேண்டிய விஷயம். ஒரு வித்தியாசமான சூழ்நிலையில் அவர் உலகில் வந்தார் (மத்தேயு 1:18), இறைவனாக இருந்தும் ஒரு குழந்தையாக பிறந்தார், மேலும் மற்ற பிள்ளைகளைப் போலவே வளர்ந்தார்.

அல்லாஹ்வைப் பற்றி சொல்லும்போது, "நாம் அவரை நம் ஐம்புலங்களால் உணரமுடியாது" என்று பார்க்கிறோம். ஆனால், இயேசுவின் சீடர்கள் தங்கள் ஐம்புலங்களால் இறைவனை உணர்ந்தார்கள், சுவாசித்தார்கள், தொட்டார்கள், பேசினார்கள். இதனை அவர்கள் சாட்சியாக பகிர்ந்தார்கள். பைபிளின் இறைவன் தான் படைத்த படைப்பின் மத்தியிலேயே ஒரு மனிதனாக இறங்கிவந்தார். அவர் தம் சீடர்களுக்கு காணப்பட்டார், அவர்களோடு பேசினார், அவர்களின் காதுகள் இறைவனின் பேச்சை நேரடியாக கேட்டன. இப்படி பல வகையில் பைபிளின் இறைவன் இப்பூவுலகில் உலாவியதை சீடர்கள் கண்டு களித்தார்கள். ஒரு

சந்தர்ப்பத்தில், தோமா என்ற சீடர், இயேசுவின் காயங்களை தொட்டுப்பார்க்க விரும்பினார் (யோவான் 20:25).

இவ்விவரங்கள் 1 யோவான் 1:1-2ம் வசனங்களில் இரத்தினச் சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளது.

ஆதிமுதல் இருந்ததும், நாங்கள் கேட்டதும், எங்கள் கண்களினாலே கண்டதும், நாங்கள் நோக்கிப்பார்த்ததும், எங்கள் கைகளினாலே தொட்டதுமாயிருக்கிற ஜீவவார்த்தையைக்குறித்து உங்களுக்கு அறிவிக்கிறோம். அந்த ஜீவன் வெளிப்பட்டது; பிதாவினிடத்திலிருந்ததும், எங்களுக்கு வெளிப்பட்டதுமான நித்தியமாயிருக்கிற அந்த ஜீவனை நாங்கள் கண்டு, அதைக்குறித்துச் சாட்சிகொடுத்து, அதை உங்களுக்கு அறிவிக்கிறோம். (1 யோவான் 1:1-2)

அல்லாஹ் மிகவும் வல்லமை மிக்கவன், அவன் தான் படைத்த படைப்பிற்குள் வரமுடியாது என்று முஸ்லிம்கள் சொல்லக்கூடும். இப்படி முஸ்லிம்கள் சொல்வார்களானால், அல்லாஹ் பலவீனமானவன் என்று அர்த்தமாகிறது. அதாவது அல்லாஹ்வினால் தான் படைத்த படைப்பிற்குள்ளே வருவதற்கு முடியாத அளவிற்கு பலவீனமானவன் என்று சொல்லும் படி ஆகிவிடுகிறது. வேறுவகையில் சொல்வதானால், தன் படைப்பிற்குள் வருவதற்கு அல்லாஹ்வினால் முடியாது, அவ்வளவு பலவீனமானவனாக அல்லாஹ் இருக்கிறான் என்று முஸ்லிம்கள் ஒப்புக்கொள்வதாக ஆகிவிடுகிறது.

ஒரு வேலையை செய்யமுடியாத அளவிற்கு அல்லாஹ் பலமுள்ளவன் என்றுச் சொல்வது, அவன் பலவீனமானவன் என்று சொல்வதற்கு சமமாகும் (Being “too powerful” to accomplish something is equivalent to not being able to do it.).

இறைவன் சர்வ வல்லவர் ஆவார், எதுவும் அவரை பலவீனப்படுத்தாது. அவர் எவைகளை செய்ய விரும்பினாலும், அது தடைப்படாது. அவர் விரும்பினால் தன் வல்லமையை இழக்காமல் தன் படைப்பிற்குள் மனித உருவத்தில் நுழைய முடியும், இது அவருக்கு சுலபமான காரியமாகும். இதனை கிறிஸ்தவத்தில் காணலாம். இதைத்தான் இயேசுவும் செய்துக் காட்டினார்.

முடிவுரையாக, கிறிஸ்தவம் மற்றும் இஸ்லாமில் மற்றொரு வித்தியாசத்தை நாம் கண்டுள்ளோம். பைபிளின் இறைவனும், குர்-ஆனின் இறைவனும் நேர் எதிராக நடந்துக் கொண்டுள்ளார்கள். பைபிளின் தேவன் தாம் சர்வ வல்லவர் என்பதை தன் படைப்பில் (பூமியில்) ஒரு மனிதனாக வந்தும், தம் வல்லமையை இழக்காமல் தன் தெய்வீகத்தை நிருபித்தார். குர்-ஆனின் அல்லாஹ், தான் வல்லமையை இழக்கவேண்டி வருமோ என்று அஞ்சி, தன் படைப்பிற்குள் நுழைய மறுக்கிறார்.

**அடிக்குறிப்புக்கள்:**

[1] http://seekersguidance.org/ans-blog/2013/05/27/allahs-relationship-with-time-and-space/

[2] http://knowingallah.com/index.php/en/articles/article/5024

ஆங்கில மூலம்: http://unravelingislam.com/blog/?p=357

***ராபர்ட் ஸீவர்ஸ் அவர்களின் இதர கட்டுரைகள்***

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/robert/creator_creation.html

# 6. தேவன் மரித்தார் என்று கிறிஸ்தவர்கள் நம்புகிறார்களா?

**கேள்வி:**

கிறிஸ்தவர்கள், இயேசு தேவன் என்கிறார்கள். ஆனால், தேவன் அழிவற்றவர். எப்படி அவர் மரிக்க இயலும்? மேலும் மரித்தல் என்றால் உயிர் மற்றும் அனைத்து சக்திகளும் அற்றுப்போதல் என்று அவர்கள் உணரவேண்டும். எனவே இயேசு மரித்தால், வேறொருவர் அவரை உயிரோடு எழுப்ப வேண்டும். ஏனென்றால் அவருக்கு எந்த சக்தியும் மரித்த பிறகு கிடையாது. எனவே அவர் தேவன் இல்லை.

**என் பதில்**

எனக்கு தெரிந்தவரையில் பைபிளில் எந்த இடத்திலும் "தேவன் மரித்தார்" என்று சொல்லப்படவில்லை. அது முரண்பாடானது. தேவனே அனைத்து உயிர்களுக்கும் மூலம். அவரே ஜீவனும் கூட.

முஹம்மது மரித்தபோது அவருடைய ஆத்துமாவும், ஜீவனும் மரித்து, இல்லாமல் போனதாக நீங்கள் நம்புகிறீர்களா? இல்லை, அவரது உடல் மட்டும் மரித்து அவரது ஆத்துமா பரலோகத்தில் வாழ்ந்துக்கொண்டு இருப்பதாக நம்புகிறீர்களா?

தேவன் மரிக்கவில்லை. ஆனால், அவர் மனிதனாக வந்த சரீரம் மனிதனுக்கான மரணத்தை ஏற்றது. அதுவும் மிகவும் கொடிய வகை மரணம்.

இயேசு மெய்யான மனிதன். வானதூதர்கள் போல் சில காலம் தோன்றி மறையும் உருவம் அல்ல. இயேசு மனிதனாக கருவுற்று, மனிதனாகப் பிறந்து, மனிதனாக அவதரித்த மெய்யான மனிதன். ஒரு மனிதனாக அவர் சிலுவையில் துயரமும், வேதனையும் அடைந்தார். மேலும் உலகின் அனைத்து பாவங்களும், நரக வேதனையும் அவர் மீது அழுத்தி பிதாவாகிய தேவனால் கைவிடப்பட்ட உணர்வையும் தந்தது. ஆனால் இயேசு உண்மையில் கைவிடப்படவில்லை என்பது அவரது உயிர்த்தெழுதலில் தெரிகிறது. அவர் நம் பாவங்களை ஏற்று அதற்கான தண்டனையான "தேவனால் கைவிடப்படுவதை" தாங்கினார். அனைத்துலக பாவத்தையும் அதன் மூலம் வரும் வேதனையையும் ஒருவர் சுமப்பதை எந்த மனிதனும் கற்பனைகூட செய்ய இயலாது, அது அவ்வளவு பயங்கரமானது. ஆனால், தேவனின் இந்த பாவ நிவாரண பலியை விசுவாசிக்கும் ஒவ்வொரு மனிதனுக்கும் இரட்சிப்பு கிடைக்கும்

---

நான் ஒரு வழுவும் மனிதன் என்பதை மனதில் கொள்ளவும். என்னுடைய அறிவுக்கு எட்டியவரை நான் பதிலளிக்கிறேன். நான் சொல்வதனைத்தும் சரி என்று நான் கூறவில்லை. நான் திருத்தங்களையும், தெளிவுபடுத்தல்களையும் வரவேற்கிறேன்.

---

ஆங்கில மூலம்: Do Christians believe that God died?

இதர கேள்வி பதில்களை படிக்கவும்

Source: http://www.answering-islam.org/tamil/qa-panel/gd.html

# 7. பெருந்தன்மையோடு வழங்கும் இறைவன் யார்?

## (God the Most Generous)

ஆசிரியர் : ராபர்ட் ஸிவர்ஸ்

தமிழாக்கம்: தமிழ் கிறிஸ்தவர்கள்

இந்த தளத்தில் நான் எழுதும் கட்டுரைகளில், ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு பிறகு ஒரு சுவாரசியமான திரும்பு முனை வருவதை நீங்கள் காணமுடியும். இதே போல கடந்த காலங்களில் வாழ்ந்த இஸ்லாமியர்கள் மற்றும் கிறிஸ்தவர்களின் மத்தியில் நடைப்பெற்ற உரையாடல்களை படிப்பது மிகவும் சுவாரசியமாக இருக்கும். இஸ்லாமுக்கு அடுத்த சில ஆண்டுகளில் (இடைப்பட்ட காலங்களில்) நடைப்பெற்ற இவ்விதமான உரையாடல்கள் எழுத்துவடிவில் புத்தகங்களாக இருந்தது என்றாலும், அவைகளில் சில புத்தகங்களே நம்மிடம் இப்போது உள்ளது. இருந்தபோதிலும், நம்மிடம் இருக்கும் இந்த ஒரு சில புத்தகங்களில் மிகவும் சுவாரசியமான விஷயங்கள் பொதிந்துள்ளது.

கடந்த காலங்களில் வாழ்ந்த கிறிஸ்தவ அறிஞர்களில் (Christian Apologists) ஒருவர் யஹ்யா பி. அதி (Yahya b. 'Adi) என்பவராவார். இவர் பத்தாம் நூற்றாண்டில், அப்பாஸித் வம்சத்தார்கள் ஆட்சிபுரிந்த காலத்தில் இஸ்லாமிய ஆட்சியின் கீழ் வாழ்ந்தவராவார். இவரது காலத்துக்கு முன்பு இருந்த அரேபிய கிறிஸ்தவ எழுத்தாளர்களும், இவரது காலத்தில் வாழ்ந்த அரேபிய கிறிஸ்தவ எழுத்தாளர்களும் அதிகமாக குர்-ஆன் மற்றும் பைபிள் மேற்கோள்களை தங்கள் ஆக்கங்களில் பயன்படுத்தினார்கள். யஹ்யா என்ற இந்த எழுத்தாளரோ, சில நேரங்களில் இன்னும் ஒரு படி மேலே சென்று, இஸ்லாமை தத்துவ ரீதியாக அணுகுவதற்கு முக்கியத்துவம் காட்டினார். இவருடைய எழுத்துக்களில், என்னை அதிகமாக ஆட்கொண்ட விஷயம் "இறைவன் மனிதனாக வருவதைப் பற்றி" இவர் எழுதியவைகள் தான். இவர் குர்-ஆன் மற்றும் பைபிளை அதிகமாக பயன்படுத்தாமல், அதற்கு பதிலாக, "அல்லாஹ்வின் 99 பெயர்கள்" பற்றியே அதிகமாக ஆய்வு செய்தார். மேலும் அல்லாஹ்வின் ஒவ்வொரு பெயரின் முக்கியத்துவம், மேலும் அதன் மூலம் இஸ்லாமுக்கு வரும் தத்துவ ரீதியான பிரச்சனைகள்/கேள்விகள் போன்றவைகள் மீது அதிகம் ஆய்வு செய்தார்.

இப்போது அல்லாஹ்வின் 99 பெயர்களில் ஒன்றாகிய "அல்லாஹ் பெருந்தன்மையுள்ளவன் (Allah the Most Generous)" என்ற பெயர் பற்றி ஆய்வு செய்வோம் [1]. இறைவன் பற்றி இப்படியாக நாம் கருதுவோம், அதாவது" உலகத்திலேயே இறைவனைப் போல பெருந்தன்மையோடு வாரி வழங்குகின்றவன் வேறு யாருமில்லை" என்று கருதுவோம். அதாவது இறைவனைப் போல வாரி வழங்குபவர்கள் உலகில் இதுவரை யாரும் பிறந்ததில்லை, இனி பிறக்கப் போவதுமில்லை என்று கருதுவோம் [இது உண்மையும் கூட என்று

இஸ்லாமியர்கள் அங்கீகரிப்பார்கள்]. இப்படி நாம் கருதுவதினால் உண்டாகும் தத்துவ ரீதியான முடிவுகளை இப்போது பார்ப்போம்.

இந்த பெரிய உலகில் இறைவன் மட்டும் தான் பெருந்தன்மையோடு வாரி வழங்குபவர் என்று நாம் கருதினால், வாரி வழங்குவதற்கான சக்தி அவனுக்கு இருக்கிறது என்று நம்புவதோடு மட்டும் நின்றுவிடாமல், தான் படைத்த மக்களுக்கு மிகவும் சிறப்பானவற்றை கொடுக்க விருப்பமுடையவராக அவர் இருக்கிறார் என்பதையும் நாம் அங்கீகரிக்கவேண்டும். அதிகமாக பெருந்தன்மையுடையவர் என்று சொல்லவேண்டுமென்றால், அப்படி செய்ய அவரால் முடியும் என்று நம்புவதோடு மட்டும் நின்றுவிடாமல், உண்மையாகவே அந்த ஆசீர்வாதங்களை பொழிய அவர் விருப்பம் கொண்டு இருக்கவேண்டும். ஏனென்றால், ஒரு மிகப்பெரிய பணக்காரர் இருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம், அவருக்கு கொடுக்கக்கூடிய சக்தி உண்டு. ஆனால், அவர் ஒரு கஞ்சனாக இருந்தால் அவருக்கு அதிக செல்வம் இருந்தும் என்ன பயன்? கொடுக்கவேண்டும் என்ற விருப்பம் இல்லையே! ஆகவே, இறைவன் என்பவனுக்கு கொடுக்கக்கூடிய அளவிற்கு சக்தியும் இருக்கவேண்டும், அதன் பிறகு பெருந்தன்மையோடு கொடுக்கவேண்டும் என்ற விருப்பமும் அவருக்கு இருக்கவேண்டும், அப்போது தான் அவரை நாம் "பெருந்தன்மையுள்ள இறைவன்" என்று கூறுவோம்.

இறைவன் தன் படைப்பாகிய மனிதர்களுக்கு தன்னால் முடிந்த சிறப்பான பரிசுகளை அவர் தரவேண்டும். ஒரு இஸ்லாமிய தளம் இவ்விதமாக கூறுகிறது:

God would be "The One who is continually giving forth the grandest and most precious bounty".

" இறைவன் எப்போதும் மிகவும் சிறப்பான விலைமதிப்பற்றவற்றை கொடுத்துக்கொண்டே இருப்பான்" [2]

ஆகையால், இறைவனால் கொடுக்கப்படக்கூடிய சிறப்பான பரிசு எதுவாக இருக்கமுடியும்? உலகத்திலே மிகவும் சிறப்பான பரிசுகள் என்பது பணமோ பொருட்களோ அல்லது ஆன்மீக விதத்தில் சில ஆசீர்வாதங்களோ அல்ல. மனிதர்களுக்கு இந்த உலகத்திலே மிக மிக சிறப்பான பரிசு என்பது "அந்த இறைவன்" தான். இறைவனைத் தவிர வேறு எந்த பரிசும் இரண்டாம் நிலையில் தான் நிற்கும், இறைவன் மட்டுமே முதலாவதாக நிற்பான். படைத்தவன் தான் படைத்தவைகளைக் காட்டிலும் மேன்மையுள்ளவன், சிறப்பானவன். மேற்கண்ட அதே இஸ்லாமிய தளம் கீழ்கண்ட விதமாக கூறுகிறது:

God is "The One whose kind, noble and generous essence is most esteemed, valued and honored".

" இறைவனுடைய அன்பும், நற்குணமும் பெருந்தன்மையும் தான் மிகவும் விரும்பப்படத்தக்கதும் மதிக்கத்தக்கதுமாகும்."

இதுவரை கண்ட விவரங்களை, இப்போது வரிசைப்படுத்துவோம்:

1. இறைவன் மிகவும் பெருந்தன்மையுள்ளவன்

2. இறைவன் மிகவும் பெருந்தன்மையுள்ளவனாக இருந்தால், அவன் மிகவும் பெருந்தன்மையாக கொடுப்பான்.

3. உலகத்தில் இருக்கும் பரிசுகளிலேயே சிறந்த பரிசு "இறைவன் மட்டுமே"

4. எனவே, ஒரு பெருந்தன்மையுள்ள் இறைவன் எதையும் கொடுக்காமல் விடமாட்டான், அவன் பெருந்தன்மையாக" தன்னையே" பரிசாக கொடுத்துவிடுவான்

மனித வர்க்கத்திற்கு தன்னையே இறைவன் பெருந்தன்மையுடன் பரிசாக கொடுக்கிறான் என்றால் என்ன? இப்போது தான் நாம் இறைவன் மனிதனாக அவதரிப்பதைப் பற்றிய உண்மை நிலைக்கு வருகிறோம். நாம் மேலே கண்ட வரிசைப் படுத்தப்பட்ட விவரங்களின் வெளிப்பாடு "இறைவனின் மனித அவதாரமாகும் (Incarnation)" [3]. ஒருவேளை இறைவன் தன்னைக் கொடுக்காமல், இதர முக்கியமானவைகளை மனிதர்களுக்கு கொடுத்தால், உண்மையாக அவரை நாம் "உலகத்திலேயே மிகவும் பெருந்தன்மையுள்ளவன் இந்த இறைவன் தான்" என்று அழைக்கமுடியாது. இப்படி நாம் கூறும் போது, உடனே இஸ்லாமியர்கள் "இறைவன் மனிதனாகவே வரமுடியாது" என்றுக் கூறி புறக்கணிப்பார்கள். இப்படி அவர்கள் சொல்வார்களானால், நாம் இப்போது ஆய்வு செய்துக்கொண்டு இருக்கும் இதே விஷயம் வேறு பாதைக்கு கொண்டுச் செல்லும், மேலும் பிரச்சனை முஸ்லிம்களுக்கே அதிகமாகும். அதாவது, "இறைவன் மனிதனாக வரமுடியாது என்றுச் சொல்லும் போது, அது அந்த இறைவனின் குறைபாட்டை காட்டுகின்றதல்லவா?" அல்லது "மனிதனாக வருவதற்கு தேவையான சக்தி அந்த இறைவனுக்கு இல்லை" என்று சொல்வது போல் ஆகிவிடுகின்றதல்லவா? ஆனால், உண்மையில் இறைவன் "சர்வ வல்லவர்", அவரால் முடியாத காரியம் ஒன்றுமே இல்லை, எல்லாம் அவரால் கூடும்.

ஒருவேளை, "இறைவன் மனிதனாக வருவதற்கு அவரால் ஆகும், ஆனால், அப்படி வந்தால் "இறைவனுக்கு" அது(மனிதனாக வருவது) அவமானமாக கருதப்படுமல்லவா?" என்று கேட்கலாம். இப்படி நாம் கூறுவோமென்றால், நாம் இப்போது ஆய்வு செய்துக்கொண்டு இருக்கின்ற "இறைவன் மிகவும் பெருந்தன்மையுள்ளவன்" என்ற கோட்பாடு அடிபட்டுவிடும். அதாவது, இப்படி அவர் வரவில்லையானால், தன்னையே கொடுக்கவில்லையானால் "அவர் மிகவும் பெருந்தன்மையுள்ளவர் அல்ல" என்று நாம் ஒப்புக்கொள்ளவேண்டி வரும். இறைவன் ஒரு சில காரணங்கள் காட்டி, தன்னை கொடுக்காமல் புறக்கணித்தால், இதுவே அவர் "மிகவும் பெருந்தன்மையுள்ளவர்" அல்ல என்பதற்கு நிருபனமாகிவிடும். இறைவன் இப்படி மறுத்தால் அவன் உண்மையாகவே மற்றவர்களை விட "பெருந்தன்மையுள்ளவன்" என்ற பட்டத்திற்கு தகுதியானவன் அல்ல. ஏனென்றால், அவன் படைத்த படைப்பாகிய மனிதர்களே, தங்களை மற்றவர்களுக்காக தியாகம் செய்கிறார்கள், அவர்கள் காரணங்காட்டுவதில்லை. மனிதர்கள் மறுப்பதற்கு காரணங்கள் இருந்தாலும், அதையும் தாண்டி அவர்கள் மற்றவர்களுக்காக தங்களை தியாகமாக கொடுக்கிறார்கள். இப்படிப்பட்ட இறைவனோடு ஒப்பிடும் போது, இவர்களே (மனிதர்களில் தியாகம் செய்பவர்கள்), அவரை விட மிகவும் பெருந்தன்மையுள்ளவர்கள் என்று கருதப்படுவார்கள்.

நாம் மேலே கண்ட அணுகுமுறையானது, அக்காலத்தில் இதர அறிஞர்கள் கொண்டு இருந்த அணுகுமுறைகளை விட வித்தியாசமானதாக இருக்கிறது. இந்த அணுகு முறை தான் எல்லா அணுகுமுறைகளை விட சிறந்தது என்று நான் கருதவில்லை. இருந்த போதிலும், இதனை சரியான இடத்தில் சரியான முறையில் பயன்படுத்தினால், இது அதிக நன்மையைத் தரும். உங்களுக்கு ஒரு இஸ்லாமிய நண்பர் இருந்தால், அவரிடம் பேசுவதற்கு இந்த அணுகுமுறை ஒரு சுவாரசியாமான ஒன்றாக இருக்கும். கிறிஸ்துவிடம் நம்பிக்கை வைக்க மக்களை நாம் தனித்தனியாக அழைக்கும் போது, இந்த அணுகுமுறை சிறிது உதவியாக இருக்கும்.

**பின் குறிப்புக்கள்:**

[1] Arabic Al-Karim, although Yahya himself used the term Al-Jawwad.

[2] http://wahiduddin.net/words/99_pages/karim_42.htm

[3] Samir, Samir Khalil and Jorgan S Nielsen. Christian Arabic Apologetics During the Abbasid Period (750-1258). E.J. Brill: Leiden, The Netherlands, 1994, p74.

ஆங்கில மூலம்: God the Most Generous

ராபர்ட் ஸீவர்ஸ் அவர்களின் இதர கட்டுரைகள்

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/robert/generous.html

# 8. இறைவனின் சாயலில் உருவாக்கப்பட்டவனின் உருவத்தை குலைப்பது சரியோ?

(Created in the Image of God)

ஆசிரியர் : ராபர்ட் ஸீவர்ஸ்

சில நேரங்களில் இந்த தளத்தில் பதிக்கப்படும் கட்டுரைகள் கிறிஸ்தவம் மற்றும் இஸ்லாம் மார்க்கங்களில் காணப்படும் இறையியல் வித்தியாசத்தை ஒப்பிட்டு எழுதப்படுகின்றன. அவைகள் அவ்வப்போது மிகவும் வேடிக்கையாகவும் அமைந்துவிடுகின்றன. சில வித்தியாசங்களை நாம் நேரடியாக புரிந்துக்கொள்ளலாம். இந்த வித்தியாசங்கள் உரையாடுவதற்கு மிகவும் உபயோகமானவைகளாக இருக்கின்றன. இப்படிப்பட்ட ஒரு வித்தியாசங்களில் ஒன்று “மனிதன் இறைவனின் சாயலில் படைக்கப்பட்டு இருக்கின்றான்” என்பது பற்றியதாகும்.

ஆதியாகமம் 1:26ல், “மனிதனை இறைவன் தம் சாயலின் படி படைத்தார்” என்று இறைவன் கூறுகிறார். கிறிஸ்தவ அறிஞர்கள் மத்தியிலே, ”இறைவனின் சாயலில்” என்றால் என்ன அர்த்தம்? என்று மிகப்பெரிய விவாதம் நடந்துக்கொண்டு இருக்கிறது. ஒன்று மட்டும் தெளிவாக நமக்குத் தெரியும், அது என்னவென்றால், மனிதர்களாகிய நாம் ”ஆவியாக” இருக்கின்ற இறைவனோடு நம்மை நேரடியாக எப்போதும் ஒப்பிடமுடியாது என்பதாகும் (யோவான் 4:24). ஆனால், இறைவன் நம்மை வேறு ஒரு வகையில் படைத்தார், அந்த வகை மிகவும் சிறப்பானது, அது என்னவென்றால், ”அவரைப் போல (அ) அவரது சாயலில் நம்மை படைத்தார்” என்பதாகும் (சங்கிதம் 8:5; 139:14).

இப்போது சில கேள்விகள் நமக்கு எழுகின்றது: நாம் எந்த வகையில் இறைவனின் சாயலில் படைக்கப்பட்டு இருக்கிறோம்? இந்த விஷயத்திற்கும் இஸ்லாமுடைய அல்லாஹ்விற்கும் என்ன சம்மந்தம் உள்ளது? என்பதாகும். முதலாவதாக நாம் நித்திய காலம் வாழுபவர்களாக படைக்கப்பட்டு இருக்கிறோம் (eternal beings) என்பதை நாம் அறியவேண்டும். நாம் நித்திய காலம் வாழுபவர்கள் என்பதால், நமக்கு ஆரம்பமில்லை என்று அர்த்தம் செய்துக் கொள்ளக்கூடாது. நமக்கு முடிவு தான் இல்லையே தவிர, நமக்கு ஆரம்பம் உள்ளது (நாம் ஒரு குறிப்பிட்ட காலத்தில் உருவாக்கப்பட்டு உள்ளோம்). ஒன்று, நாம் இறைவனோடு சொர்க்கத்தில் நித்திய நித்தியமாக வாழ்வோம், அல்லது இறைவன் இல்லாமல் நரகத்தில் நித்திய காலமாக இருப்போம். இந்த இரண்டு இடங்களில் ஏதோ ஒரு இடத்தை நம்மில் ஒவ்வொருவரும் தெரிவு செய்யவேண்டும். இது கூட நாம் இறைவனைப் போல இருக்கிறோம் என்பதை வெளிக்காட்டுகின்றது. அதாவது நம்மில் ஒவ்வொருவருக்கும்

“சுயமாக தெரிவு செய்யும் அறிவு (Free Will) ” உள்ளது. நாம் சில நேரங்களில் வேண்டுமென்றே சில முடிவுகளை எடுக்கிறோம், அது நம்மைச் சுற்றியுள்ள உலகை பாதிக்கின்றது. வேறு வகையில் கூறவேண்டுமென்றால், நாம் இறைவனைப் போல இருக்கிறோம், அதாவது நமக்கும் மூன்று வகையான நிலைகள் உள்ளன. அதாவது நமக்கு ஆவீ, ஆத்துமா, சரீரம் என்று மூன்று நிலைகள் நமக்குள் உண்டு (1 தெச 5:23). நான் சொல்லும் இந்த உவமை திரித்துவத்திற்கு விளக்கமல்ல. ஆனால், எனக்குள் இருக்கும் இந்த மூன்றும் செயல்படும் விதம் எனக்கு ஆச்சரியத்தை உண்டாக்குகிறது, என்னால் அதனை புரிந்துக்கொள்ளவே முடிவதில்லை.

பைபிள் முழுவதும் நாம் படித்துப் பார்த்தால், தேவன் தான் படைத்த மனித இனம் பற்றி அதிகமாக அக்கரை கொள்கிறார், அவர்களை காக்கிறார், அவர்கள் பட்சத்தில் பொறுமையோடு இருக்கிறார் என்பதை அறிய முடியும் (சங்கீதம் 8:4, 2 பேதுரு 3:9). இதுமட்டுமல்ல, அவரை நாம் புறக்கணிப்பதற்கு கூட நமக்கு “சுயமாக முடிவு எடுக்கும் அறிவை” கொடுத்து இருக்கிறார். அதாவது தேவன் மீது நாம் நம்பிக்கை வைக்காமல் இருப்பதற்கும், நமக்கு சுயமாக முடிவு எடுக்கும் உரிமையை கொடுத்துள்ளார். இதைப் பற்றி சிந்தித்தால், இது மிகவும் ஆச்சரியமாக இருக்கும். அவர் நம்மை எவ்வளவு நேசிக்கிறார் என்று பார்த்தால், அவர் இலவசமாக கொடுக்கும் நித்திய ஜீவனையும், நாம் நம்முடைய சுய முடிவு மூலமாக புறக்கணிக்கவும், நம்முடைய சுதந்திரத்தை நாம் பயன்படுத்தவும் அவர் உரிமையை கொடுத்துள்ளார். ஆனால், அவரை நாம் புறக்கணித்தால், நித்திய காலமாக நாம் அவரைப் பிரிந்து இருக்கவேண்டிய நிலை வரும்.

இதுவரை நாம் பைபிளின் தேவன் எப்படி மனிதர்களை பார்க்கிறார் என்பதை கவனித்தோம். இப்போது அல்லாஹ் எப்படி மனிதவர்க்கத்தை பார்க்கிறார்? என்பதை கவனிப்போம். மேலோட்டமாக பார்த்தால், இஸ்லாமும் கிறிஸ்தவமும் ஒரே மாதிரியாகத் தான் கூறுகின்றன, அதாவது ஆதாமை இறைவன் தன் சாயலின் படியே படைத்தார் [1] என்பதாகும். ஆனால், மிகவும் ஆழமாக நாம் ஆய்வு செய்தால், அல்லாஹ் எப்படி தன் படைப்பாகிய மனிதர்களிடம் செயல்பட்டார் என்பதை கவனிக்கலாம். நேரம் காலம் குறிப்பிடப்படாத, பெயர் குறிப்பிடாத ஊரில் வசித்த அவநம்பிக்கையாளர்களிடம் அல்லாஹ் எப்படி நடந்துக்கொண்டார் என்பதை நாம் குர்-ஆனில் வாசிக்கலாம்.

உங்க(ள் முன்னோர்க)ளிலிருந்து சனிக் கிழமையன்று (மீன் பிடிக்கக் கூடாது என்ற) வரம்பை மீறியவர்களைப்பற்றி நீங்கள் உறுதியாக அறிவீர்கள். அதனால் அவர்களை நோக்கி “சிறுமையடைந்த குரங்குகளாகி விடுங்கள்” என்று கூறினோம். (குர்-ஆன் 2:65 – முஹம்மது ஜான் தமிழாக்கம்)

மற்றும்

“அல்லாஹ்விடமிருந்து இதைவிடக் கெட்ட பிரதிபலனை அடைந்தவர்களைப் பற்றி உங்களுக்கு அறிவிக்கட்டுமா? (அவர்கள் யாரெனில்) எவரை அல்லாஹ் சபித்து, இன்னும் அவர்கள் மீது கோபமுங்கொண்டு, அவர்களில் சிலரைக் குரங்குகளாகவும், பன்றிகளாகவும் ஆக்கினானோ அவர்களும், ஷைத்தானை வழிப்பட்டவர்களும் தான் - அவர்கள்தாம் மிகவும் தாழ்ந்த நிலையினர்; நேரான வழியிலிருந்தும் தவறியவர்கள்” என்று (நபியே!) நீர் கூறுவீராக. (குர்-ஆன் 5:60 முஹம்மது ஜான் தமிழாக்கம்)

குர்-ஆன் விரிவுரையாளர்கள் கொடுத்த விளக்கங்கள் (தஃப்ஸீர் [2]) இந்த வசனங்கள் பற்றி கூறும் போது, இந்த வசனங்களில் சொல்லப்பட்ட சாபங்கள் ஏதோ ஒரு உவமையாக கூறப்பட்டதல்ல, உண்மையாகவே அந்த மக்கள் குரங்குகளாகவும், பன்றிகளாகவும் மாறினார்கள் என்று சொல்கிறார்கள். இஸ்லாமிய விரிவுரையாளர் “மௌலான முஃப்டி முஹம்மத் ஹாஃபி” தம்முடைய தஃப்ஸீர் “மாஅரிஃபுல் குர்-ஆன்” என்ற விரிவுரையின் பின் குறிப்பில் கீழ்கண்டவாறு கூறியுள்ளார்:

"எழுத்தின் படி அல்லாமல், வேறு வகையாக (உவமேயமாக) பொருள் கொள்ளுதல் என்பது சமீபகாலத்து இஸ்லாமியர்களின் கைவேலையாகும்"

சில இஸ்லாமியர்கள் "இந்த வசனங்கள் சொல்வது நேரடி பொருளில் அர்த்தம் செய்யக்கூடாது" என்று கூறுகிறார்கள், அவர்கள் பற்றி இவர் சொல்லும் போது:

"இப்படியாக கூறுவது என்பது பரிசுத்த குர்-ஆன் நேரடியாக மற்றும் வெளிப்படையாக கூறும் வசனத்தை புறக்கணிப்பது ஆகும், இதனை எந்த ஒரு முஸ்லிமும் செய்யமாட்டார்"[3].

இஸ்லாமின் படி, அல்லாஹ் தாம் படைத்த மனித வர்க்கத்தை தாமே அழிவிற்கு உள்ளாக்கினார். இப்படிப்பட்ட காரியத்தை யெகோவா தேவன் செய்யமாட்டார். நாம் தேவனை புறக்கணிக்க அவரே நமக்கு உரிமை கொடுத்துள்ளார், இது உண்மை தான். இப்படிப்பட்ட உரிமையை தேவன் நமக்கு ஏன் கொடுத்தார்? என்று பார்த்தால், மனித வர்க்கத்துக்கு சுயமாக முடிவு எடுக்கும் சுதந்திரத்தைக் கொடுத்து, அவர் நம்மை கனப்படுத்தியுள்ளார். இஸ்லாமில், நரகத்திற்குச் சென்று தண்டனை அனுபவிப்பதற்கு முன்பு, அல்லாஹ் சிலரை குரங்குகளாக, பன்றிகளாக மாற்றி தண்டனை கொடுத்துள்ளார். நாம் அவரை மறுக்கும் போது வேதனை அடையும் இறைவன், நம்மை மிருகங்களாக மாற்றுவானா? மேலும் நாம் மரிப்பதற்கு முன்பாக அவரை மறுபடியும் அங்கீகரிக்கலாம் அல்லவா? இதனை சிந்திக்காமல் நமக்கு இருக்கும் சுயமாக முடிவு எடுக்கும் உரிமையை பறிப்பது எப்படி சரியானதாக இருக்கும்? ஆனால், நான் நம்பியிருக்கும் தேவன் இப்படிப்பட்டவன் அல்ல.

நான் அறிந்துள்ள என் இறைவன், என்னுடைய நன்மைக்காகவே தண்டிப்பார் (எபிரேயர் 12:10, 1 கொரிந்தியர் 11:32). நாம் பாவம் செய்வதினால் நமக்கு அதிக தீமை உண்டாகிறது என்பது உண்மையாகும். பாவம் செய்து தீய காரியங்களை நம் மீது நாமே கொண்டுவந்துவிடுகிறோம் (1 இராஜாக்கள் 8:32). இந்த காரியங்களும் நமக்கு இருக்கும் சுயமான முடிவு எடுக்கும் உரிமை மீதே ஆதாரப்பட்டுள்ளது. நம்முடைய சொந்த தீய முடிவுகள், நம்முடைய அழிவிற்கே காரணமாக இருக்கிறது. நாம் இப்படி நடந்துக்கொண்டாலும், தேவன் நம்மை சபிப்பதில்லை. அவர் தம்முடைய சாயலில் படைத்த படைப்பாகிய மனிதர்களை மிருகங்களாக மாற்றி தன் சாயலுக்கு தானே அவமானத்தை கொண்டு வருவதில்லை. ஆனால், இவை அனைத்தையும் அல்லாஹ் செய்கிறார்.

பைபிளின் யெகோவா தேவனுக்கும், குர்-ஆனின் அல்லாஹ்விற்கும் உள்ள வித்தியாசங்களில் இதுவும் ஒன்றாகும்.

**பின் குறிப்புக்கள்**:


[1] Sahih Bukhari, Volume 8, Book 74, Number 246. **www.sahih-bukhari.com/Pages/Bukhari_8_74.php**

[2] Ibn Kathir, downloaded from **www.quran4u.com/Tafsir%20Ibn%20Kathir/PDF/002%20Baqarah%20I.pdf**, p 199-200.

[3] **islamkashmir.org/radiant-reality/2007/01/lesson-quran**


ஆங்கில மூலம்: **Created in the Image of God**

**ராபர்ட் ஸீவர்ஸ் அவர்களின் இதர கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/robert/imageofgod.html

# 9. அல்லாஹ் ஜெபங்களுக்கு பதில் அளிக்கிறாரா?

ஆசிரியர்: முடே அல்ஃபதி

பல சமயங்களில் நமது இஸ்லாமிய நண்பர்கள் தங்களது அல்லாஹ்வைக் குறித்து உண்மைக்கு மாறாக மிகவும் நேர்த்தியான ஒரு தோற்றத்தைக் காட்ட முயற்சிக்கிறார்கள். அதாவது அல்லாஹ் பைபிளின் தேவனைப் போல , கருணையும் அன்பும் நிறைந்தவராக இஸ்லாமியர்களால் சித்தரிக்கப்படுகிறார்.

தீவிர இஸ்லாமிய நாடாகிய சவுதி அரேபியாவில் என்னுடைய சொந்த ஊரில் ஒரு பக்தி வைராக்கியமான வஹாபி முஸ்லீமாக வாழ்ந்து, கிறிஸ்தவர்களுடன் எவ்விதத் தொடர்புமின்றி வளர்ந்த நான், இப்போது என்னுடைய இஸ்லாமிய மக்கள், கிறிஸ்தவர்களிடம் அல்லாஹ்வைப் பற்றியும் இஸ்லாமைப் பற்றியும் பகிர்ந்துகொள்ளும் ஒரு சில விவாதங்களைக் குறித்து மிகவும் ஆச்சரியப்படுகிறேன். அவர்கள் அல்லாஹ்வைக் குறித்து, மசூதிகளில் நான் ஒருபோதும் கேள்விப்பட்டிராத வண்ணமாயும், குறிப்பாக மதப் பற்றான முஸ்லீம்களின் மத்தியில் சொல்லப்படாத வகையினில் அவரை ஒரு மாறுபட்ட விதமாகச் சித்தரிக்கின்றார்கள். மக்கள் அல்லாஹ்வை, கூப்பிடும் போதெல்லாம் ஜனங்களின் ஜெபங்களைக் கேட்டு அதற்கு பதிலளிக்கும் கடவுளாக அல்லாஹ்வை சித்தரிக்க முஸ்லீம்கள் அரும்பாடு படுகிறார்கள். இந்தக் காரணத்திற்காக அவர்கள் சில குர்ஆன் வசனங்களை நம் முன் வைக்கிறார்கள், ஆனால் அவைகளைச் சற்று ஆராய்வோமானால், அவர்களின் கூற்றுக்கு எதிரானவையாக அவ்வசனங்கள் இருப்பதைக் காணலாம். அதாவது, அவர்கள் காட்டும் கடவுள், சாதாரண மனிதர்களைப் போலவே அவர்கள் மீது உண்மையான அக்கரை கொண்டவராக அல்லாமல், மாறாக தமது நலனிலேயே குறியாக இருப்பவராகவே இவ்வசனங்கள் நமக்குக் காண்பிக்கின்றன .

நமது ஜெபங்களுக்குப் பதிலளிப்பதில் அல்லாஹ் விருப்பம் கொண்டவராகவோ அல்லது அவர் நமது விண்ணப்பங்களை நாம் இருக்கும் வண்ணமாகவே அவரிடம் சொல்ல சாத்தியமுள்ளவராகவோ நாங்கள் ஒருபோதும் கற்பிக்கப்பட்டதில்லை. ஆயினும், ஒரு மேற்கத்திய நாட்டில் வசிக்கும் நான், பைபிள் போதிக்கும் தேவனின் சாயலை இஸ்லாமியர்கள், அல்லாஹ்வுக்கு ஒப்பாக்கவும், அவர் பைபிளின் தேவன் போன்றே கருதப்படவும் வேண்டுமென்று முயற்சிக்கிறார்கள் எனக் காண்கிறேன். அதாவது, வேறு விதமாகச் சொல்வோமாயின், அல்லாஹ்வின் தோற்றத்தை அவர்கள் “கிறிஸ்துவ மயமாக்க” (Christianize Allah’s image) முயற்சிக்கிறார்கள் .

இச்சிறிய கட்டுரையில், மேற்கத்திய முஸ்லீம்கள் அல்லாஹ்வை எவ்விதம் சித்தரிக்கிறார்கள் என்பதற்கு ஒரு உதாரணத்தைக் காண்பிக்க விரும்புகிறேன். இதற்காக இஸ்லாமியர்கள் பொதுவாகக் குறிப்பிட்டுக் காட்டும் இரண்டு குர்ஆன் வசனங்களையும், அதற்கான இஸ்லாமிய அறிஞர்களின் அதிகார பூர்வமான விளக்கங்களையும் எடுத்துக் கொள்ளுவோம். அவைகளின் மூலம் நமது வாசகர்களும், குறிப்பாக இஸ்லாமின் ஆதரவாளர்களும், “அல்லாஹ்வின் கருணையும் நம் ஜெபங்களுக்கான அவரின் பதிலும்” சில இஸ்லாமிய நண்பர்களின் மனதில் உதித்த புதிய விருப்பத்தின் தோற்றமே தவிர வேறல்ல என்பதினைத் தாமே புரிந்துகொள்ளும் வகையில் ஒரு எளிதாக்கப்பட்ட விளக்கத்தினைக் கொடுக்க முற்படுகின்றேன்.

**நாம் ஆராயப்போகும் முதலாவது வசனம் சூரா: 2:186 ல் அடங்கியுள்ளது**

(நபியே!) என் அடியார்கள் என்னைப் பற்றி உம்மிடம் கேட்டால்; "நிச்சயமாக நான் சமீபமாகவே இருக்கிறேன், பிரார்த்தனை செய்பவரின் பிரார்த்தனைக்கு அவர் பிரார்த்தித்தால் விடையளிக்கிறேன்;, **அவர்கள் என்னிடமே (பிரார்த்தித்துக்) கேட்கட்டும்;, என்னை நம்பட்டும். அப்பொழுது அவர்கள் நேர்வழியை அடைவார்கள்"** என்று கூறுவீராக.

"And when My servants ask you concerning Me, then surely I am very near; I answer the prayer of the suppliant when he calls on Me, so **they should answer My call** and **believe in Me** that **they MAY walk in the right way**." – Q. 2:186 Shakir (emphasis ours)

இந்த வசனம் எடுத்த எடுப்பில், இஸ்லாமியரின் கடவுளாகிய அல்லாஹ், அவரைப் பின்பற்றுவோரின் ஜெபங்களைக் கேட்டு அவைகளுக்குப் பதிலளிப்பவராக தெரிந்தாலும், இவ்வசனத்தின் வரிகளுக்கு ஊடே இழையோடியிருக்கும் அர்த்தத்தைச் சிந்திப்போமானால், இவ்விதம் நடைபெறுவதற்குச் சில நிபந்தனைகள் இடப்பட்டிருப்பதினைக் காணலாம்.

1. அல்லாஹ்வை நோக்கிக் கூப்பிடும் நபரை இந்த வசனம் அல்லாஹ்வின் கட்டளைகளைக் கைக்கொள்ளும்படிச் சொல்கின்றது. அதாவது அந்த நபர் தனது கடமையைச் செய்தல் வேண்டும்; அநீதியானவற்றையோ அல்லது அல்லாஹ் வெறுக்கும் காரியங்களையோ செய்தல் கூடாது.

2. அந்த நபர் உண்மையிலேயே அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டிருக்க வேண்டும். குழப்பம் இங்குத் தான் உருவாகின்றது. இந்த வசனம் அல்லாஹ்வால் அவரது அடியார்க்கு (இஸ்லாமியர்கள்) கொடுக்கப்பட்டிருந்தால், அவர்கள் அல்லாஹ்வை நம்பும்படிக்கு மறுபடியும் கேட்டுக் கொண்டிருக்கப்படுவதின் அவசியம் என்ன? இது அல்லாஹ் அவர்களின் பக்தியினையும் அவர்களது உள்ளுணர்வினையும் குறித்துச் சந்தேகத்துடன் இருப்பதாகத் தோற்றமளிக்கிறது. உண்மையில், இவ்விதமான எதிர்பார்ப்பு, அல்லாஹ், அவரது அடியார்கள் அவரை நோக்கிக் கூப்பிடும்போதெல்லாம் அவர்களுக்கு பதிலளிக்கும்படியான உறுதியினை வழங்கும் தெய்வம் அல்ல என்பதனையே காட்டுகின்றது.

3. இந்த வசனம், அல்லாஹ்வை நோக்கிக் கூப்பிடும் ஒருவருக்கு, அவர் அல்லாஹ்வின் எல்லாக் கட்டளைகளுக்கும் கீழ்ப்படிந்து நல் வழியில் நடந்திருப்பினும் அவனின்/அவளின் ஜெபங்களுக்கு அவர் உண்மையிலேயே பதிலளிப்பார் என்கின்ற வகையில் எந்த விதமான உத்திரவாதத்தையும் கொடுக்கவில்லை.

அல்-குர்துபி (Al Qurtubi)[1], இந்த வசனத்தின் விளக்க உரையில், ஒரு முஸ்லீமின் வேண்டுதல் அல்லாஹ்வினால் பதிலளிக்கப்படுவதற்குச் சில நிபந்தனைகள் உள்ளன எனக் குறிப்பிடுகிறார்:

• அல்லாஹ்வை நோக்கி ஜெபித்து விண்ணப்பம் செய்யும் ஒருவர் அறிந்தோ அல்லது அறியாமலோ அல்லாஹ்விற்கு எதிரான பாவங்களைச் செய்து இருத்தலாகாது. இதற்கு ஆதாரமாக அவர் சூரா 7:55 ஐக் காட்டுகிறார்.

(ஆகவே, முஃமின்களே!) உங்களுடைய இறைவனிடம் பணிவாகவும், அந்தரங்கமாகவும் பிரார்த்தனை செய்யுங்கள் - **வரம்பு மீறியவர்களை** நிச்சயமாக அவன் நேசிப்பதில்லை.

**"வரம்பு மீறுதல்"** என்றால் என்ன?

அல்-குர்துபி சொல்வதின்படி இதன் அர்த்தம் என்னவென்றால்:

• தடை செய்யப்பட்ட எவற்றையும் கேளாதிருத்தல்

• உங்களுடைய வாழ்கையில், உங்கள் பணத்திற்கு வட்டி வாங்குதல், பிறர் பொருளை அபகரித்தல், பணப் பற்றுவரவில் நாணயமற்று இருத்தல் போன்ற பாவங்கள் செய்து கொண்டிருக்கும் போது அல்லாஹ்விடம் எதனையும் கேளாதிருத்தல்.

• தான் கேட்பதற்கு அல்லாஹ் பதிலளிப்பாரென்ற நம்பிக்கையின்றி ஒரே காரியத்தை தொடர்ந்து கேட்டுக்கொண்டேயிருத்தல்.

• அல்லாஹ்வை நோக்கிக் கூப்பிடும் ஒருவர் தெளிவான சிந்தையுடன் தூய மனதுடன் அவ்வாறு செய்ய வேண்டும். ஜெபிக்கும் போது மனதினை வேறு திசையில் அலைய விடக்கூடாது.

உண்மையில், இபின் அட்டாவின் (Ibn Atta) கூற்றுப்படி அல்லாஹ்வை வேண்டிக்கொள்ளும் போது, வேண்டிக்கொள்ளும் நபர் கடைப்பிடிக்க வேண்டிய சில நிபந்தனைகள் உள்ளன என அல்-குர்துபி சொல்கிறார். இந்த நிபந்தனைகள் கீழ்கண்டவற்றை உள்ளடக்கியது:

• மனத்தாழ்ச்சியுடன் கூடிய பணிவு, பயம், நம்பிக்கை, தொடர்ந்து விண்ணப்பித்தல், தடை செய்யப்படாத உணவையே (ஹலால்) உண்ணுதல்.

• விண்ணப்பம் செய்தல் உண்மையுடன் கூடியதாக இருக்க வேண்டும் என இபின் அட்டா கூறுகிறார்.

• விண்ணப்பம் செய்தல், கீழ்கண்டவாறு ஏற்ற வேளையிலே செய்யப்படுதல் வேண்டும்:

o உபவாசத்தை முடிக்கும் போதோ அல்லது விடியலுக்கு முன்பாக உபவாசத்தைத் தொடங்கும் போதோ, தொழுகைக்கான அழைப்பிற்கும் தொழுகை ஆரம்பிக்கும் வேளைக்கும் இடைப்பட்ட நேரம், நாளின் இரண்டாவது மற்றும் மூன்றாவது தொழுகை வேளைக்கு இடைப்பட்ட நேரம், மற்றும் புதன் கிழமைகள். ஏனைய வேளைகள் தேவைக்கேற்ப துரித மற்றும் அவசர காலங்களை உள்ளடக்கும்.

o விண்ணப்பத்தின் முதன்மையான நோக்கம் முஹம்மது நபியினை மகிமைப்படுத்தும் வண்ணம் இருத்தல் வேண்டும்.

o விண்ணப்பம் கேட்பதற்குத் தெளிவாக இருக்கும் வண்ணம் செய்தல் வேண்டும். முணுமுணுத்தல் இருத்தலாகாது.

மேலே கண்ட நிபந்தனைகளை வாசிக்கும்போது, கட்டுகளுடன் கூடிய ஒரு சட்டரீதியான ஒப்பந்த பத்திரத்தினை வாசிப்பது போன்ற ஒரு உணர்வினையே ஒருவர் பெறுவாரேயன்றி, திறந்த வாசலை உடையவர் என்று வர்ணிக்கப்படக்கூடிய கடவுளின் (அல்லாஹ்) வார்த்தைகளைப் படிக்கும் உணர்வினை அடையமாட்டார்.

**நாம் ஆராயப் போகும் அடுத்த வசனம் சூரா 40:60ல் அடங்கியுள்ளது.**

وَقَالَ رَبُّكُمُ ادْعُونِي أَسْتَجِبْ لَكُمْ إِنَّ الَّذِينَ يَسْتَكْبِرُونَ عَنْ عِبَادَتِي سَيَدْخُلُونَ جَهَنَّمَ دَاخِرِينَ

உங்கள் இறைவன் கூறுகிறான்; "**என்னையே நீங்கள் பிரார்த்தியுங்கள்**; நான் உங்(கள் பிரார்த்தனை)களுக்கு பதிலளிக்கிறேன்; எவர்கள் என்னை வணங்குவதை விட்டும் பெருமையடித்துக் கொண்டிருக்கிறார்களோ, அவர்கள் சிறுமையடைந்தவர்களாக நரகத்தில் நுழைவார்கள்."

"And your Lord says: Call upon Me, I will answer you; surely those who are too proud for My service shall soon enter hell abased" – Q. 40:60 Shakir

அரபியில் இது கீழ் கண்டவாறு வாசிக்கப்படுகிறது[2].

"Waqala rabbukumu odAAoonee astajib lakum inna allatheena yastakbiroona AAan AAibadatee sayadkhuloona jahannama dakhireena"

மேலே காணப்பட்ட வசனத்தில் ஆய்வுக்குரிய வார்த்தை "Call upon Me" அரபி மொழியில் "odAAoonee" (ادْعُونِي) என்பதாகும். இதன் விளக்கத்தினை/விளக்கவுரையை[3] நாம் வாசிப்போமானால், ஆரம்ப கால இஸ்லாமியர்கள் "odAAoonee" (ادْعُونِي)" என்ற வார்த்தைக்கு "என்னையே தொழுதுக்கொள்ளுங்கள் – Worship me" அல்லது "சேவியுங்கள் – Serve me" என்றே பொருள் கொண்டார்கள் என்பதினைக் காணலாம். உண்மையில் இஸ்லாமின் நபியாகிய முஹம்மதுவிடம், இந்த வசனத்தின் பொருள் குறித்துக் கேட்டபோது, "Call upon Me" அல்லது "odAAoonee" (ادْعُونِي)" என்ற வார்த்தை அரபி மூலத்தில் "D-A-A" (دعا) என்பதில் இருந்து உருவாக்கப்பட்டது எனக் காண்பித்தார். அவரது கூற்றின்படி இந்த வார்த்தையின் அர்த்தம் என்னவெனில் "அல்லாஹ்வைத் தொழுகையின் மூலம் சேவித்தல் - serve Allah in worship" என்பதாகும். (அதாவது அரபியில் Ibada). மேலும், முஹம்மது உபயோகித்த வார்த்தையை நாம் அரேபிய அகராதியில்[4] பார்த்தால் ("A-B-D" (عبد) ) என்ற மூல வார்த்தை "சமய தொழுகையை – Religious Worship" குறிப்பதை காணலாம்.

இஸ்லாமியர்கள், அல்லாஹ் தங்களின் ஜெபங்களுக்கு பதிலளிக்கக் காட்டும் ஆர்வத்திற்கு ஆதாரமாகச் சொல்லும் இந்த இரு வசனங்களை நன்கு ஆராய்ந்த பின்பு இவைகளில் இதற்கான சான்றோ, அல்லாஹ்வின் பதிலளிக்கும் முனைப்போ அல்லது அவர்களை அவர் இக்கட்டுகளிலிருந்து காப்பாற்ற விரைந்து வரும் பண்போ இருப்பதாக சிறிதளவேனும் நம்மால் காண முடியவில்லை. இதற்கு ஒப்பீடாகவுள்ள மெய்யான கடவுளாகிய பைபிளின் தேவன் அவரைப் பின்பற்றுவோருக்கு தங்களின் ஜெபங்களுக்கு பதிலினை காலங்காலமாக வாக்களிப்பவராக இருக்கிறார்.

"ஆபத்துக் காலத்தில் என்னை நோக்கிக் கூப்பிடு; **நான் உன்னை விடுவிப்பேன்**, நீ என்னை மகிமைப் படுத்துவாய்." (சங்கீதம் 50:15)

"**கேளுங்கள், அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும்; தேடுங்கள், அப்பொழுது கண்டடைவீர்கள்; தட்டுங்கள் அப்பொழுது உங்களுக்குத் திறக்கப்படும்.** ஏனென்றால், கேட்கிற எவனும் பெற்றுக்கொள்ளுகிறான்; தேடுகிறவன் கண்டடைகிறான்; தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும். உங்களில் எந்த

மனுஷனானாலும் தன்னிடத்தில் அப்பத்தைக்கேட்கிற தன் மகனுக்குக் கல்லைக் கொடுப்பானா? மீனைக்கேட்டால் அவனுக்குப் பாம்பைக்கொடுப்பானா? ஆகையால், பொல்லாதவர்களாகிய நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைக் கொடுக்க அறிந்திருக்கும்போது, **பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா தம்மிடத்தில் வேண்டிக் கொள்ளுகிறவர்களுக்கு நன்மையானவைகளைக் கொடுப்பது அதிக நிச்சயம் அல்லவா?**" (மத்தேயு 7:7-11)

"மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; நான் என் பிதாவினிடத்திற்குப் போகிறபடியினால், என்னை விசுவாசிக்கிறவன் நான் செய்கிறகிரியைகளைத் தானும் செய்வான், இவைகளைப் பார்க்கிலும் பெரிய கிரியைகளையும் செய்வான். **நீங்கள் என் நாமத்தினாலே எதைக் கேட்பீர்களோ, குமாரனில் பிதா மகிமைப்படும்படியாக, அதைச் செய்வேன். என் நாமத்தினாலே நீங்கள் எதைக்கேட்டாலும் அதை நான் செய்வேன்.**" (யோவான் 14:12-14)

"அந்த நாளிலே நீங்கள் என்னிடத்தில் ஒன்றுங் கேட்கமாட்டீர்கள். மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன், நீங்கள் என் நாமத்தினாலே பிதாவினிடத்தில் **கேட்டுக்கொள்வதெதுவோ அதை அவர் உங்களுக்குத் தருவார்.** இதுவரைக்கும் நீங்கள் என் நாமத்தினாலே ஒன்றும் கேட்கவில்லை; **கேளுங்கள், அப்பொழுது உங்கள் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படி பெற்றுக்கொள்வீர்கள்....** இவைகளை நான் உவமைகளாய் உங்களுடனே பேசுகிறேன்; காலம் வரும், அப்பொழுது நான் உவமைகளாய் உங்களுடனே பேசாமல், பிதாவைக்குறித்து வெளிப்படையாக உங்களுக்கு அறிவிப்பேன். அந்த நாளில் நீங்கள் என் நாமத்தினாலே வேண்டிக்கொள்வீர்கள். உங்களுக்காகப் பிதாவை நான் கேட்டுக்கொள்வேனென்று உங்களுக்குச் சொல்லவேண்டியதில்லை. நீங்கள் என்னைச் சிநேகித்து, நான் தேவனிடத்திலிருந்து புறப்பட்டுவந்தேனென்று விசுவாசிக்கிறபடியினால் பிதாதாமே உங்களைச் சிநேகிக்கிறார்." (யோவான் 16:23-27)

"அறிவுக்கெட்டாத அந்த அன்பை அறிந்துகொள்ள வல்லவர்களாகவும், தேவனுடைய சகல பரிபூரணத்தாலும் நிறையப்படவும், அவர் தமது மகிமையினுடைய ஐசுவரியத்தின்படியே, உங்களுக்கு அநுக்கிரகம் பண்ணவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன். **நாம் வேண்டிக்கொள்ளுகிறதற்கும் நினைக்கிறதற்கும் மிகவும் அதிகமாய் நமக்குள்ளே கிரியைசெய்கிற வல்லமையின்படியே**, நமக்குச் செய்ய வல்லவராகிய அவருக்கு, சபையிலே கிறிஸ்து இயேசுவின் மூலமாய்த் தலைமுறை தலைமுறைக்கும் சதாகாலங்களிலும் மகிமை உண்டாவதாக. ஆமென்.(எபேசியர் 3:19-21).

"**நாம் எதையாகிலும் அவருடைய சித்தத்தின்படிகேட்டால், அவர் நமக்குச் செவிகொடுக்கிறாரென்பதே அவரைப் பற்றி நாம் கொண்டிருக்கிற தைரியம்.** நாம் எதைக் கேட்டாலும் அவர் நமக்குச் செவிகொடுக்கிறாரென்று நாம் அறிந்திருந்தோமானால், அவரிடத்தில் நாம் கேட்டவைகளைப் பெற்றுக்கொண்டோமென்றும் அறிந்திருக்கிறோம்.." (I யோவான் 5:14-15)

இதன் பயனாக, நமது இஸ்லாமிய நண்பர்கள் முன்பு நாம் குறிப்பிட்ட வசனங்களை முன்னிறுத்தி முனைவதினைக் குறித்து அவர்கள் தவறாக நடத்தப்படுகிறார்களோ அல்லது தவறாகப் பிறரை வழி நடத்த விழைகிறார்களோ என்ற சந்தேகத்துடன் பார்ப்பதைத் தவிர நமக்கு வேறு வழி இல்லை. இதன் பின்னணியில், உண்மையாகவே இக்காரியத்தினை ஆராய முற்படும் இஸ்லாமியர்களை நான் வரவேற்பதுடன், தேவன் தாமே இவர்களின் சத்திய தாகத்தினை ஆற்றும்படிக்கு வேண்டிக்கொள்கிறேன்.

"**ஆகையால் குமாரன் உங்களை விடுதலையாக்கினால் மெய்யாகவே விடுதலையாவீர்கள்**" (யோவான் 8:36)

கேட்கிறவரும் பதிலளிப்பவருமாகிய நம் ஆண்டவரும் மீட்பருமாகிய இயேசு கிறிஸ்துவுக்கே, சதாகாலங்களிலேயும் மகிமையும் மகத்துவமும் உண்டாகியிருப்பதாக, ஆமென்.

**Footnotes**

1 Arabic source, translation is my own.

2 Source

3 Ibn Kathir, Al Jalalayn, Al Tabari and Al Qurtubi

4 Lane's Lexicon, source

ஆங்கில மூலம்: Does Allah Answer Prayers?

ஆசிரியரின் **இதர கட்டுரைகளை படிக்கவும்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/alfadi/allah_prayers.html

# 10. 9/11: மக்காவில் கிரேன் விபத்து – இது அல்லாஹ்வின் கைவேலையா? பாகம் 1

**முன்னுரை:**

பார்க்கும் அனைத்திலும் அல்லாஹ்வின் அற்புதங்களை கண்டுபிடிக்கும் முஸ்லிம்களுக்கு இந்த மக்காவின் விபத்தில் அல்லாஹ்வின் அற்புதம் ஏதாவது தெரிகின்றதா?

கணினியும், நவீன தொழில் நுட்பமும் உலக மக்களை முன்னேற்றத்தை நோக்கி அழைத்து சென்றுக் கொண்டு இருக்கிறது. ஆனால், முஸ்லிம்கள் இன்னும் தக்காளியில் அல்லாஹ்வின் அற்புதம், பச்சிளம் குழந்தைகளின் தோலில் அல்லாஹ்வின் அற்புதம், வானத்தில் அல்லாஹ்வின் அற்புதம் என்று நவீன தொழில் நுட்பத்தை தவறாக பயன்படுத்திக் கொண்டும், தங்களையும் மற்றவர்களையும் ஏமாற்றிக்கொண்டும் இருக்கிறார்கள் (பார்க்க: **அல்லாஹ்வின் தக்காளி அற்புதம்**).

முஸ்லிம்களின் இந்த நவீன அற்புதங்களில் கணிதமும் சேர்ந்துவிட்டுள்ளது. எண்களைக் கொண்டு, பல மாஜிக்குகளை செய்துக் காட்டி, பாமர முஸ்லிம்களையும், இதர மக்களையும் ஏமாற்றிக்கொண்டு இருக்கிறார்கள். உதாரணத்திற்கு, கீழ்கண்ட தொடுப்புகளை பார்க்கவும். குர்-ஆனில் அல்லாஹ் கணித அற்புதத்தை வைத்துள்ளான் என்றுச் சொல்லி, பல பொய் மூட்டைகளை ஒன்றன் பின் ஒன்றாக அடுக்கிக்கொண்டே இருக்கிறார்கள்.

- www.miraclesofthequran.com/mathematical_03.html
- www.quran-islam.org/main_topics/miracle_of_the_quran_(P1313).html
- www.answering-islam.org/authors/katz/rebuttals/taslaman/allahs_timing.html

- wikiislam.net/wiki/The_Miracle_of_19

இச்சிறிய கட்டுரையில், இம்மாதம் மக்காவில் ஏற்பட்ட விபத்து பற்றிய சிறிய குறிப்பை முஸ்லிம்களுக்கு முன்பாக வைக்க விரும்புகிறேன். இச்செயலிலும் அல்லாஹ்வின் அற்புதம்(கைவரிசை) உள்ளதா? என்பதை கவனிக்குமாறு வாசகர்களை கேட்டுக்கொள்கிறேன்.

### அன்று 9/11 – உலக வர்த்தக மையம் தகர்க்கப்பட்ட நாள்

2001ம் ஆண்டு, செப்டம்பர் 11ம் தேதி, அமெரிக்காவின் உலக வர்த்தக மையம் இஸ்லாமிய தீவிரவாதிகளால் தகர்க்கப்பட்டது. கிட்டத்தட்ட 3000 பேர் மரித்தனர். பின் லாடனின் தீவிரவாத இயக்கமாகிய அல்கய்தா இந்த செயலை வெற்றிகரமாக செய்து முடித்தது. இஸ்லாமிய நாடுகளில் வாழும் முஸ்லிம்கள் அந்த நாளை சந்தோஷ நாளாக கொண்டாடினர். இது ஒருபுறமிருக்கட்டும். இப்போது இதே நாளில் நடந்த இன்னொரு நிகழ்ச்சியை பார்ப்போம்.

### இன்று 9/11 – முஸ்லிம்களின் புனித மக்காவில் விபத்து – அப்பாவி மக்கள் மரித்தனர்.

2015ம் ஆண்டு, அதே செப்டம்பர் 11ம் தேதி, முஸ்லிம்கள் புனிதமாக கருதும் மக்காவில் ஒரு கிரேன் உடைந்து விழுந்தபடியினால், 100க்கும் அதிகமானோர் மரித்தனர், அனேகர் காயமுற்றனர். மரித்தவர்களின் குடும்பங்களுக்கு என் ஆழ்ந்த இரங்கல்களை தெரிவித்துக் கொள்கிறேன். இதில் கவனிக்கவேண்டிய ஒரு முக்கியமான விஷயம் என்னவென்றால், இந்த விபத்துக்கு காரணமான கிரேன் பின் லாடனின் தந்தைக்கு சொந்தமான கட்டுமான கம்பனியுடையதாக்கும்.

### இது யாருடைய செயல்?

முஸ்லிம்களுக்கு யூதன் தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான். முஸ்லிம்களுக்கு எது நடந்தாலும், அதற்கு காரணம் யூதன் ஆவான். யூதனுக்கு அடுத்தபடியாக இருப்பது "அமெரிக்கா" ஆகும். மக்காவில் நிகழ்ந்த விபத்துக்கு "யூதர்கள்" அல்லது "அமெரிக்கா" காரணம் என்று சில முஸ்லிம்கள் சொன்னாலும் ஆச்சரியப்படுவதிற்கில்லை. முஸ்லிமல்லாத எந்த ஒரு நபரும் மக்கா நகரில் நுழைய முடியாது, அவ்வளவு பாதுகாப்பு அங்குள்ளது. மேலும், காபா இருக்கும் பள்ளிவாசலில் நிச்சயமாக முஸ்லிமல்லாத நபர் இருக்கமுடியாது. இப்படி இருக்கும்போது எப்படி இந்த விபத்து நேரிட்டது? எல்லாவற்றிலும் அல்லாஹ்வின் அற்புதங்களை கற்பனைச் செய்யும் முஸ்லிம்கள், இந்த நிகழ்வுக்கு பின்னால் அல்லாஹ்வின் அற்புதம் (செயல்) இருக்கின்றதா? அல்லது மற்றவர்களின் கைவரிசை இருக்கிறதா என்று சிந்தித்துச் சொல்லமுடியுமா?

### 365 நாட்களில் ஏன் 9/11ம் நாள் குறிப்பிட்டு விபத்து நேரிடவேண்டும்?

கணிதம் மூலமாக எண்களின் மூலமாக அல்லாஹ் அற்புதத்தை செய்கிறான், மேலும் குர்-ஆனில் 19 என்ற எண்ணைக் கொண்டும் அற்புதத்தை வைத்திருக்கிறான் என்று பெருமைப்பட்டுக் கொள்ளும் சில முஸ்லிம்கள், மக்காவில் விபத்து நடந்த தேதியை கவனிப்பார்களா?

உலக வர்த்தக மையம் தகர்த்தப்பட்டதும், மக்காவில் விபத்து நடந்த தேதியும் செப்டம்பர் 11ம் தேதியாகும். எல்லாவற்றிலும் அல்லாஹ்வின் அற்புதங்களைப் பார்க்க விரும்பும் முஸ்லிம்களுக்கு இந்த தேதி பற்றிய விஷயத்திலும் அல்லாஹ் அற்புதத்தை செய்து இருக்கிறான் என்று சொல்லமுடிகின்றதா?

இது அல்லாஹ்வின் செயலா? வருடத்தில் 12 மாதங்கள் இருக்கும் போது, 365 நாட்கள் இருக்கும் போது, ஏன் இந்த நாளில் விபத்து நேரிட்டது? அதுவும் மக்காவில், காபாவிற்கு பக்கத்தில் ஏற்பட்டது? இதில் முஸ்லிம்களுக்கு கணித அற்புதம் தெரிகின்றதா?

**காற்றும் மழையும் காரணமா? அல்லது அல்லாஹ் காரணமா?**

இந்த மக்காவின் விபத்துக்கு காரணம், அன்று அதிகமாக வீசிய காற்றும், மழைச் சூழலும் தான் என்று செய்தித் தாள்களில் படிக்கிறோம். முஸ்லிம்களின் படி, இயற்கையை கட்டுப்படுத்துவது அல்லாஹ் ஆவான். அவனே, இந்த தேதியிலே நூறுபேரின் உயிரை குடித்த இவ்விபத்தை செய்திருக்கவேண்டும்!

இதன் மூலமாக முஸ்லிம்களுக்கு அல்லாஹ் எதையாவது கூற விரும்புகிறானா?

ஒருவேளை இந்த செயல், யூதர்களின் கைவரிசை என்றும், அமெரிக்காவின் செயல் என்றும் சில முஸ்லிம்கள் சொல்லக்கூடும். ஆனால், இப்படிப்பட்டவர்கள் கவனிக்க தவறும் விஷயம் என்னவென்றால், காபாவையும், புனித பள்ளிவாசலையும் பாதுகாப்பதாக அல்லாஹ் வாக்கு கொடுத்திருக்கிறான் என்பதாகும். இவ்வாண்டு அவன் தோல்வி அடைந்துவிட்டானா? அல்லாஹ்வின் பாதுகாப்பையும் தாண்டி, மனிதன் ஊடுருவிச் சென்று விபத்தை ஏற்படுத்தக்கூடும் என்றுச் சொல்வது அல்லாஹ்விற்கு இழுக்கு ஆகும், மேலும் அல்லாஹ்விற்கு தன் வணக்கத்தலத்தை காக்க சக்தியில்லை என்று எண்ணவேண்டி வருகிறது. எனவே முஸ்லிம்களே, மக்காவிற்குள் நடக்கும் விபத்துக்ளுக்கு மனிதனை குற்றப்படுத்தாதீர்கள், முக்கியமாக இஸ்லாமிரல்லாதவர்களை குற்றப்படுத்தாதீர்கள்.

தீவிரவாத செயல்களை மற்ற நாடுகள் மீது நடத்துவதை நிறுத்துங்கள் என்று அல்லாஹ் முஸ்லிம்களுக்கு மறைமுகமாகச் சொல்ல முயலுகின்றானா?

வருடத்தில் 365 நாட்கள் இருக்கும் போது, இந்த குறிப்பிட்ட நாளில் காபாவிற்கு அருகே இப்படிப்பட்ட விபத்தை அல்லாஹ் அனுமதித்ததால், முஸ்லிம்களுக்கு அல்லாஹ்வால் ஒரு மறைமுக எச்சரிக்கை கொடுக்கப்பட்டுள்ளது என்று கருதலாமா?

முஸ்லிம்களே! தீவிரவாத செயல்களை நிறுத்திக் கொள்ளுங்கள் என்று அல்லாஹ் சொல்ல வருகின்றானா? முக்கியமாக, பின் லாடனின் தீவிரவாத இயக்கத்தை ஆதரிக்கும் முஸ்லிம்களுக்கு எச்சரிக்கையாக இருக்கும் படி அல்லாஹ் இதனை செய்தானா?

எது எப்படியோ! அப்பாவி மக்கள் மரித்துப் போனார்கள். கர்த்தர் இம்மக்களின் குடும்பங்களை அறுதல்படுத்துவாராக.

**முடிவுரை:** புனித ஸ்தலங்களுக்குச் சென்றால் அதிக புண்ணியம் என்று நம்பும் மக்கள் இருக்கும்வரை, பல விபத்துக்கள் வணக்கஸ்தலங்களில் அவ்வப்போது நடப்பதை தடுக்கமுடியாது. ஹஜ் நெரிசலில் சிக்கி மரித்தவர்கள், விபத்துக்களில் மரித்தவர்கள், வயதானவர்கள் தங்கள் வயதின் காரணமாக மரித்தவர்கள் என்று பட்டியல் நீண்டுக்கொண்டே இருக்கிறது.

உண்மை தெய்வத்தை எங்கும் தொழுதுக் கொள்ளலாம் என்ற சத்தியத்தை முஸ்லிம்கள் அறியும்வரை, மக்கா போன்ற வணக்கஸ்தலங்களில் அவ்வப்போது நடக்கும் விபத்துக்கள் மற்றும் அசம்பாவிதங்களில் மரிப்பவர்கள் இருக்கத்தான் செய்வார்கள்.

### இதுவும் அல்லாஹ்வின் செயலா (அ) உடனிகழ்வா(Co-incident)?

செப்டம்பர் மாதம் 11ம் தேதி, மக்காவின் விபத்து செய்தியை தொலைக்காட்சியில் பார்த்த பின்னர், நான் இந்த கட்டுரையை எழுத ஆரம்பித்தேன், மீதியை அடுத்த நாள் எழுதி முடிக்கலாம் என்று நினைத்தேன். அடுத்த நாள் 12ம் தேதி, நான் சுகவீனமடைந்தேன், மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு, இரண்டு நாட்கள் கழித்து வீடு திரும்பினேன். பலவீனத்தின் காரணமாக கட்டுரையை தொடரமுடியவில்லை. இதுவும் அல்லாஹ்வின் செயலா அல்லது உடனிகழ்வா?

நேற்று (தேதி 24) இரவு, முழுவதுமாக சுகமடைந்து, பாதியில் விட்ட கட்டுரையை தொடர்ந்தேன். இன்று காலை (தேதி 25) கட்டுரையை முடித்துவிட்டு, இரண்டாம் பாகத்திற்கு விவரங்களை சேகரித்துவிட்டு, இக்கட்டுரையை இணையத்தில் பதிக்கலாம் என்று நினைத்த போது, இன்னொரு திடுக்கிடும் தகவலை அறிந்தேன். மக்காவில் நேற்று இன்னொரு விபத்து நிகழ்ந்துள்ளது. நெரிசலில் சிக்கி 700க்கும் அதிகமானோர் மரித்தனர். முக்கியமாக, இவ்வாண்டு ஹஜ்ஜுக்காக என் உறவினர்களில் இரண்டு பேர் செல்லவேண்டி இருந்தது, பல தடங்கல்களினால் அவர்கள் செல்லவில்லை. இந்த செய்தியை கேள்விப்பட்டதும், அவர்கள் ஹஜ்ஜுக்கு செல்லாமல் இருந்தது நல்லதாக ஆகிவிட்டது என்று பெருமூச்சு விட்டேன். ஆனால், அவர்கள் அடுத்த ஆண்டு ஹஜ் செய்ய முயற்சிகளை எடுத்துள்ளார்களே! மக்காவில் என்ன நடக்கிறது? ஏன் வணக்கஸ்தலங்களில் மரணங்கள் தொடர்கின்றன? கர்த்தருக்கு சித்தமானால், வேறு கட்டுரையில் சிந்திப்போம்.

#### தொடுப்புக்கள்:

கிரேன் விபத்து குடித்த அப்பாவி உயிர்கள். பலவீனமான மனநிலையுள்ளவர்கள், இந்த வீடியோக்களை பார்க்கவேண்டாம். மக்கள் விபத்தில் சிக்கிக் கொண்டு இரத்தம் தோய்ந்தவர்களாக காணப்படுகிறார்கள்.

- https://www.youtube.com/watch?v=obXLaxv1hbY
- https://www.youtube.com/watch?v=oBDcdmGEM8E

2015 ஹஜ்ஜின் போது நெரிசலில் சிக்கி 700க்கு அதிகமானோர் மரித்தனர்:

- http://www.nytimes.com/2015/09/25/world/middleeast/mecca-stampede.html?_r=0
- indianexpress.com/article/india/india-others/after-mecca-stampede-kills-over-400-maharashtra-govt-issues-advisory-for-pilgrims/
- http://www.cbc.ca/news/world/deadly-mecca-events-1.3241553

**உமரின் இதர தலைப்புக் கட்டுரைகள்.**

**உமரின் கட்டுரைகள்/மறுப்புக்கள் பக்கம்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/general-topics/crane_accident_911.html

# 11. 9/11: மக்காவில் கிரேன் விபத்து – இது தேவனின் கைவேலையா? பாகம் 2

**முன்னுரை:** இந்த தலைப்பில் எழுதப்பட்ட முதல் பாகத்தை இங்கு படிக்கவும்:

**9/11: மக்காவில் கிரேன் விபத்து – இது அல்லாஹ்வின் கைவேலையா? பாகம் 1**

மக்காவில் நடந்த கிரேன் விபத்தில் அல்லாஹ்வின் அற்புதம் (செயல்) ஏதாவது காணப்படுகின்றதா? என்பதை கவனியுங்கள் என்று முஸ்லிம்களுக்கு ஒரு கேள்வியை முதல் பாகத்தில் முன்வைத்தேன்.

**இரண்டாம் பாகத்திற்கான நோக்கம்:**

இந்த விபத்துப் பற்றி சில தளங்களில் நான் பல பின்னூட்டங்களைப் படித்தேன். இந்த கிரேன் விபத்தை பைபிளின் தேவன் தான் செய்திருக்கிறார் என்று சிலர் **பின்னூட்டமிட்டிருந்தனர்**. அவைகள் என்னை சிறிது கலங்க வைத்துவிட்டன. முக்கியமாக, சில கிறிஸ்தவர்களும், நாத்தீகர்களும் கொடுத்த பின்னூட்டங்கள் ஆழமாக சிந்திக்காமல் கொடுத்த மேலோட்ட விவரங்கள் என்பதை உணர்ந்துக் கொண்டேன். எனவே இதைப் பற்றி, சில விஷயங்களை கிறிஸ்தவர்களோடு பகிர்ந்துக் கொள்ளலாம் என்ற எண்ணத்தில் இந்த இரண்டாம் பாகத்தை எழுதுகிறேன். முக்கியமாக இஸ்லாமிய தீவிரவாத செயல்கள் பற்றியும், அவைகளால் பாதிக்கப்படும் கிறிஸ்தவ திருச்சபை மற்றும் இதர மக்கள் அறியவேண்டியவைகளைப் பற்றியும் என் புத்திக்கு எட்டியதை நான் இக்கட்டுரையில் எழுதுகிறேன். இதனை கேள்வி பதில் நடையில் எழுதுகிறேன்.

**கேள்வி 1:** இவ்வாண்டு 9/11ம் அன்று அமெரிக்காவில் உலக வர்த்தக மையம் இருந்த இடத்தில் "தீவிரவாத தாக்குதலால் மரித்தவர்களுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டபோது" வானத்தில் வானவில் காணப்பட்டது. அதே நாள் மக்காவில் காபாவிற்கு அருகில் மின்னல் தோன்றியது, பலத்த காற்று கிரேனை விழ வைத்தது. இது உடனிகழ்வு (co-incident) அல்ல. இது நிச்சயமாக தேவச்செயலாகத் தான் இருக்கவேண்டும்? பைபிளின் தேவன் தான் இதனை செய்திருக்கவேண்டும்!

**உமரின் பதில்:** இந்த செய்தி உண்மையானதா என்பதை இதுவரை யாரும் சரி பார்க்கவில்லை. அந்த நாள் உண்மையாகவே அமெரிக்காவில் வானவில் காணப்பட்டதா, மக்காவில் மின்னல் காணப்பட்டதா, இந்த புகைப்படங்கள் அந்த குறிப்பிட்ட நாட்களில் எடுத்தவைகளா?

- http://toprightnews.com/breaking-you-wont-believe-who-owned-the-crane-that-collapsed-in-mecca-today/
- https://twitter.com/DefendGlenn/status/642460402912247813/photo/1
- https://twitter.com/RT_com/status/642386111780798464/photo/1

ஒருவேளை அமெரிக்காவின் வானவில்லும், மக்காவின் மின்னலும் உண்மையாக இருந்தாலும், இதனால் எந்த ஒரு சத்தியமும் நிலைநாட்டப்படப்போவதில்லை. ஏனென்றால், அமெரிக்கா போன்ற நாடுகளில் அதுவும் இம்மாதங்களில் (இலையுதிர் காலம்) மழையும், வானவில்லும் தெரிவது சர்வசாதாரணமே. அதே போல, சௌதி அரேபியாவில் காற்றும் மணற்புயலும் இக்காலங்களில் சாதாரணமாகும். இது ஒரு உடனிகழ்வு (co-

incident) என்றுச் சொல்லமுடியுமே தவிர, இது இறைச்செயல் என்றுச் சொல்லமுடியாது. இக்கட்டுரையில் உள்ள அனைத்து பதில்களையும் படித்தால் இதனை சரியாக புரிந்துக் கொள்ளமுடியும்.

**கேள்வி 2:** மக்காவின் கிரேன் விபத்து 9/11 அன்று நடந்ததால், பைபிளின் தேவன் தான் இதனை செய்தார் என்று கருதலாம் அல்லவா?

**உமரின் பதில்:** நிச்சயமாக இல்லை. இதனை பைபிளின் தேவன் செய்யவில்லை என்று என்னால் சொல்லமுடியும். நாம் திரும்ப கேட்கும் கேள்வி: ஏன் தேவன் மக்காவில் விபத்தை 9/11 அன்று செய்யவேண்டும்?

தேவனுக்கு தேவைப்பட்டால் அவர் எந்த நாளிலும் செய்வார், இதே நாளில் செய்யவேண்டிய அவசியமில்லை. 2001ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11ம் தேதியில் இஸ்லாமிய தீவிரவாதிகள் ஒரு தீய செயலை நடத்தினார்கள், அதற்காக தேவன் 14 ஆண்டுகள் கழித்து ஏன் பழி வாங்குவார்? இதற்கு முன்பு 13 செப்டம்பர்கள் வந்தது, அப்போது ஏன் தேவன் இதனைச் செய்யவில்லை? மேலும் மனிதனைப்போல தேவன் பழி வாங்க மாட்டார். அவர் ஞானத்தை யாரும் அறியமுடியாது.

அமெரிக்காவில் தீவிரவாத செயலுக்கு தேவன் பழி வாங்கினால், இந்தியாவில் நடந்த தீவிரவாத செயலுக்கு எப்போது பழி வாங்குவார்? மேலும் இதர நூற்றுக்கணக்கான தீவிரவாத தாக்குதல்களுக்கு எப்போது அவர் பழி வாங்கப்போகிறார்? தன் சொந்த ஜனங்கள் என்று பழைய ஏற்பாட்டில் வாக்குக் கொடுத்த யூத ஜனங்கள் மீது (இஸ்ரவேலில்) நடத்தப்பட்ட தாக்குதல்களுக்கு எப்போது பதில் தரப்போகிறார்?

எனவே, தேவன் தான் இந்த நாளில் மக்காவில் கிரேன் விபத்தை செய்யவைத்தார் என்றுச் சொல்வது, தேவனைப் பற்றிய சரியான அறிவு இல்லாதவர்கள் சொல்லும் விவரமாகும். ஆனால், ஒன்றை மட்டும் ஒப்புக்கொள்ளவேண்டும், அது என்னவென்றால், “தேவனுக்கு எல்லாம் முன்கூட்டியே தெரியும் என்பதாகும், அதாவது இந்த விபத்து அவருக்கு தெரிந்தே நடந்துள்ளது, அதனை அவர் தடுக்கவில்லை என்பதை நாம் ஒப்புக்கொண்டே ஆகவேண்டும்”. முஸ்லிம்களும் இதே நிலைப்பாட்டில் தான் இருக்கிறார்கள், அதாவது அல்லாஹ்விற்கு இந்த விபத்து பற்றித்தெரியும் ஆனால், அவர் அதனை தடுக்காமல், அது நிகழ அனுமதித்துள்ளார் என்பதாகும். ஏன் இறைவன் விபத்துக்களை உலகில் அனுமதிக்கிறார், அதுவும் தன்னை வணங்குமிடங்களிலும் ஏன் அனுமதிக்கிறார்? என்று நாத்தீகர்கள் கேட்கும் கேள்விக்கு இக்கட்டுரையில் பதில் தரமுடியாது, அது மிகப்பெரிய தலைப்பாகும், அது இக்கட்டுரையின் தலைப்பிற்கு அப்பாற்பட்டதாகும்.

**கேள்வி 3:** 9/11ல் மரித்தவர்கள் 3000 பேரில், 100 பேர் தேவனால் பழிவாங்கப்பட்டனர், மீதமுள்ளது 2900 பேர். கணக்கு சரி தானே!

**உமரின் பதில்:** இந்த கேள்வியைப் பார்த்தால், அமெரிக்காவிற்காக மட்டுமே தேவன் செயல்படுகிறார் என்று சொல்வது போல் இருக்கிறது. நீங்கள் கேட்பது உண்மை என்று நினைத்தால், உலகில் எந்த நாட்டில் தீவிரவாத செயல் நடைப்பெற்றாலும், அந்த நாட்டுக்காக தேவன் தனிப்பட்ட முறையில் பழி வாங்க வேண்டும். அரசன் அன்று கொல்வான், தெய்வம் நின்று கொல்லும் என்பதை மறக்கவேண்டாம்.

மேலும் பழிவாங்க வேண்டுமென்றால், பின் லாடனின் தீவிரவாத குழுவில் உள்ளவர்களை அல்லவா தேவன் பழி வாங்கி இருக்கவேண்டும்? அதை விட்டுவிட்டு, மக்காவில் விபத்தை செய்வித்து ஏன் அப்பாவி முஸ்லிம்களை கொல்லவேண்டும்? உங்கள் கணக்கு சரியில்லை. உங்கள் கணக்கில் அனேக பிழைகள் உள்ளன.

**கேள்வி 4:** உபாகமம் 32:35ல் பழிவாக்குவது எனக்கு உரியது, அதனை நான் செய்வேன் என்று கர்த்தர் சொல்கிறார். இதன் படி, கர்த்தர் பழி வாங்கினார் என்று சொல்லலாம் அல்லவா?

**உமரின் பதில்:** இல்லை, கர்த்தர் பழி வாங்கினார் என்று சொல்லமுடியாது. ஒரு மனிதனை இன்னொரு மனிதன் பழி வாங்க துடிக்கக்கூடாது என்றும், மனித சமுதாயத்தில் பழிவாங்கும் எண்ணமுடையவர்களால் அதிக தீமைகள் விளையும் என்பதாலும் கர்த்தர் "பழிவாங்குவதும், பதில் அளிப்பதும்" எனக்கு உரியது. அதனை மனிதர்களே, நீங்கள் செய்யாதீர்கள் என்று எச்சரித்துள்ளார். இதைத் தான் உபாகமம் 32:35ல் படிக்கிறோம்.

உபாகமம் 32:35 பழிவாங்குவதும் பதிலளிப்பதும் எனக்கு உரியது; ஏற்றகாலத்தில் அவர்களுடைய கால் தள்ளாடும்; அவர்களுடைய ஆபத்துநாள் சமீபமாயிருக்கிறது; அவர்களுக்கு நேரிடும் காரியங்கள் தீவிரித்து வரும்.

இந்த ஒரு வசனமல்ல, பைபிளில் அனேக இடங்களில் இதைப் பற்றி சொல்லப்பட்டுள்ளது.

ரோமர் 12:19 பிரியமானவர்களே, பழிவாங்குதல் எனக்குரியது, நானே பதிற்செய்வேன், என்று கர்த்தர் சொல்லுகிறார் என்று எழுதியிருக்கிறபடியால், நீங்கள் பழிவாங்காமல், கோபாக்கினைக்கு இடங்கொடுங்கள்.

எபிரேயர் 10:30 பழிவாங்குதல் எனக்குரியது, நானே பதிற்செய்வேன் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்றும், கர்த்தர் தம்முடைய ஜனங்களை நியாயந்தீர்ப்பார் என்றும் சொன்னவர் இன்னாரென்று அறிவோம்.

இந்த வசனத்தோடு, மக்காவின் கிரேன் விபத்தை முடிச்சு போடுவது சரியானதன்று. இவ்வசனங்கள் தனி மனிதன் வாளை ஏந்தி பழி வாங்கக்கூடாது என்றும், அதனை அரசாங்கம் செய்யவேண்டும், அல்லது இறைவன் பார்த்துக் கொள்வான் என்றும் தெரிவிக்கவே சொல்லப்பட்டது.

கர்த்தர் பழி வாங்குவது உண்மை தான், ஆனால் இப்படி விபத்துக்களினால் அல்ல. மேலும், கிறிஸ்தவத்தின் படி, இவ்வுலகை இப்போதைக்கு அவர் கிருபையின் கீழ் விட்டுள்ளார். மனிதன் உலகில் செயல்படுத்தும் ஒவ்வொரு வன்முறை செயலுக்கும் தேவன் இவ்வுலகிலேயே இப்போதே பழிவாங்க வேண்டுமென்றால், உலகம் ஒரே நாளில் சுடுகாடு ஆகிவிடும்.

உலக வர்த்தக மையத்தை விடுங்கள், அது மதசார்பற்ற ஒரு வியாபார ஸ்தலம். இப்போது இதை கவனியுங்கள். இஸ்லாமிய நாடுகளில் கிறிஸ்தவ சபைகள் எரிக்கப்படுகின்றன, சபைகளில் தீவிரவாதிகள் நுழைந்து ஆராதனை செய்துக் கொண்டு இருக்கும் மக்களை சுட்டுத்தள்ளுகிறார்கள். சமீப காலமாக ஐஎஸ் என்ற பெயரில் இயங்கிக்கொண்டு இருக்கும் இன்னொரு இஸ்லாமிய தீவிரவாத இயக்கம், திருச் சபைகளை இடித்து, கிறிஸ்தவர்களை சுட்டுத் தள்ளுகிறது, இஸ்லாமிய நபி முஹம்மது செய்தது போல, பெண்களை அடிமைகளாக விற்றுக் கொண்டு இருக்கிறது, பெண்கள் கற்பழிக்கப்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள்.

தேவன் உடனே பழிவாங்க வேண்டுமென்றால், இந்த இயக்கத்தில் இருப்பவர்களை அல்லவா கொல்லவேண்டும்? அதை விட்டுவிட்டு, ஏன் அப்பாவி முஸ்லிம்களை மக்காவில் கொல்லப்போகிறார்? லாஜிக் புரிகின்றதா?

கர்த்தருடைய நேரம் இன்னும் வரவில்லை, அவருக்கென்று ஒரு காலத்தை நியமித்து இருக்கிறார். அந்த நேரம் வரும்வரை, வெளிப்படுத்தின விசேஷத்தில் சொல்லியபடி, நாம் நம் வேலையை செய்துக் கொண்டு இருப்போம்.

வெளி 22:10 பின்னும், அவர் என்னை நோக்கி: இந்தப் புஸ்தகத்திலுள்ள தீர்க்கதரிசன வசனங்களை முத்திரை போடவேண்டாம்; காலம் சமீபமாயிருக்கிறது.

22:11 அநியாயஞ்செய்கிறவன் இன்னும் அநியாயஞ்செய்யட்டும்; அசுத்தமாயிருக்கிறவன் இன்னும் அசுத்தமாயிருக்கட்டும்; நீதியுள்ளவன் இன்னும் நீதிசெய்யட்டும்; பரிசுத்தமுள்ளவன் இன்னும் பரிசுத்தமாகட்டும்.

22:12 இதோ, சீக்கிரமாய் வருகிறேன்; அவனவனுடைய கிரியைகளின்படி அவனவனுக்கு நான் அளிக்கும் பலன் என்னோடேகூட வருகிறது.

எனவே, உபாகமம் 32:35ம் வசனத்துக்கும், இந்த மக்காவின் கிரேன் விபத்துக்கும் சம்மந்தமில்லை.

**கேள்வி 5:** இஸ்லாமியர்களின் புனித வணக்கஸ்தலம் மக்காவில் விபத்துக்களினால்/நோய்களினால்/நெரிசல்களினால் முஸ்லிம்கள் மரிப்பது வித்தியாசமானதாக இருக்கின்றதல்லவா? இப்படி மற்றவர்களின் வணக்கஸ்தலங்களில் நடப்பதில்லையே! இது நமக்கு எதனை காட்டுகிறது? முஸ்லிம்களுக்கு எதிராக இறைச்சக்தி செயல்பட்டுக்கொண்டு இருக்கிறது என்பதை காட்டுகின்றதல்லவா?

**உமரின் பதில்:** இஸ்லாமுக்கு எதிராக இறை சக்தி செயல்பட்டுக்கொண்டு இருப்பதை நான் அறிவேன், ஆனால் இஸ்லாமியர்களுக்கு எதிராக அது செயல்படவில்லை என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளவேண்டும். அதற்கு பதிலாக, முஸ்லிம்களுக்கு ஆதரவாக தேவ அன்பு தன் இரு கரங்களை நீட்டி அழைத்துக் கொண்டு இருக்கிறது, அவர்களை பரலோக பிரஜைகளாக மாற்றுவதற்கு முழுமூச்சில் ஊழியங்கள் நடைப்பெற்றுக்கொண்டு இருக்கின்றன, இதனை மறந்துவிடவேண்டாம்.

உங்கள் கேள்விக்கு வருகிறேன்.

புனித ஸ்தலங்களில் அல்லது வணக்க ஸ்தலங்களில் மக்கள் மரிப்பது இஸ்லாமுக்கு மட்டும் சொந்தமானதல்ல. ஒவ்வொரு மதத்திலும் இது நடைப்பெற்றுக் கொண்டு இருக்கிறது. முக்கியமாக, கிறிஸ்தவ வணக்கஸ்தலங்களிலும் மக்கள் மரிக்கிறார்கள். இதனை கர்த்தர் பார்த்துக் கொண்டு தான் இருக்கிறார். ஆனால், இம்மரணங்களுக்காக யார் காரணமாக இருக்கிறார்களோ, அவர்களுக்கு அய்யோ!

**கிறிஸ்தவ மதத்தலங்களில் மரணங்கள்:**

உலகிலேயே இதர மக்களின் கரங்களில் மாட்டிக்கொண்டு அதிகமாக அவதிப்படும் மக்கள் "கிறிஸ்தவர்கள் தான்" என்று ஒரு செய்தியில் படித்த ஞாபகம்.

- முதலாவதாக, சுனாமி, பூகம்பம் மற்றும் இதர விபத்துக்களினால் எல்லா வகையான மார்க்க மக்களும் மரிக்கிறார்கள். இதில் கிறிஸ்தவர்களும் உண்டு, இதில் எந்த பாகுபாடும் இறைவன் காட்டுவதில்லை.
- இது போதாது என்று, இஸ்லாமிய நாடுகளில் வாழும் கிறிஸ்தவர்கள் அவர்கள் தங்கள் திருச்சபைகளில் தொழுதுக் கொண்டு இருக்கும்போதே, இஸ்லாமிய தீவிரவாதிகளால் தாக்கப்படுகிறார்கள், சுட்டுக் கொல்லப்படுகிறார்கள்.

- சில இஸ்லாமிய நாடுகளில் கிறிஸ்தவ சிறுமிகள், வாலிபப் பெண்கள் சில முஸ்லிம்களால் கடத்தப்பட்டு, பல நாட்கள் அவர்கள் கற்பழிக்கப்படுகிறார்கள். அதன் பிறகு கற்பழித்தவனே திருமணம் செய்துக் கொள்கிறான், அப்பெண்களை முஸ்லிம்களாக மாற்றிவிடுகிறார்கள்.
- சரி இந்தியாவிற்குள் இருக்கும் கிறிஸ்தவர்களாவது சுதந்திரமாக தொழுதுக் கொள்ள முடிகிறதா? என்று பார்த்தால், அவ்வப்போது சில சர்சுக்கள் சில இந்துக்களால் கொளுத்தப்படுகின்றன, கிறிஸ்தவர்கள் தாக்கப்படுகிறார்கள்.
- இது போதாது என்றுச் சொல்லி, சமீப காலமாக, ஐஎஸ் என்ற இஸ்லாமிய தீவிரவாத இயக்கம், தன் பங்கிற்கு மிகப்பெரிய அளவில் கிறிஸ்தவர்களையும், அவர்கள் வணக்கஸ்தலங்களையும் தீக்கிரையாக்கிக் கொண்டு இருக்கிறது. கிறிஸ்தவர்களை அவர்கள் வணக்கஸ்தலங்களிலேயே தாக்குவது தீவிரவாதிகளுக்கு ஒரு பேஷனாகிவிட்டது.

### இஸ்லாமிய மதத்தலங்களில் மரணங்கள்:

சில இஸ்லாமியர்களால் கிறிஸ்தவர்களும், இதர மக்களும் பாதிக்கப்படுகிறார்களே! குறைந்தபட்சம் தங்கள் சொந்த இனமாகிய இஸ்லாமியர்களாவது சுகமாக இருக்கிறார்களா? என்று கேள்வி கேட்டால் அதுவும் இல்லை.

என் கருத்துப்படி, கிறிஸ்தவர்களுக்கு அடுத்தபடியாக, அதிகமாக அவதிக்குள் உட்படுத்தப்படுவது முஸ்லிம்கள் என்றுச் சொல்லுவேன். நான் கருத்துக் கணிப்பு எதுவும் எடுக்கவில்லை. அனுதினமும் செய்தித் தாள்களைப் பார்த்தால், ஓரளவிற்கு இதனை அறிந்துக் கொள்ளலாம். உதாரணத்திற்கு:

- சுன்னி முஸ்லிம் தீவிரவாதிகள் ஷியா முஸ்லிம் மசூதிகளில் வெடிகுண்டு வைக்கிறார்கள்.
- ஷியா முஸ்லிம் தீவிரவாதிகள் சுன்னி முஸ்லிம் மசூதிகளில் வெடிகுண்டு வைக்கிறார்கள். இரண்டும் ஒரே குட்டையில் ஊரிய மட்டைகள் தானே, எப்படி அவர்களால் வேறு விதமாக செயல்படமுடியும்?
- ஈரான் ஈராக் சண்டைகள், சத்தாம் உசேனின் குவைத் ஆக்கிரமிப்பு. இதில் மரித்த முஸ்லிம்கள்.
- இது போதாவது என்று மேற்கத்திய நாடுகள் இடையில் நுழைந்து "நான் உதவி செய்கிறேன் என்றுச் சொல்லி உதவிக் கரம் நீட்டியதால்", நடந்த சண்டைகள் இவைகளில் மரித்த முஸ்லிம்கள்.
- இதுவரை இக்கட்டுரையை மூச்சு பிடித்துக் கொண்டு படித்துவிட்ட முஸ்லிம்கள் எதிர்ப்பார்க்கும் அடுத்த பாயிண்ட் எதுவாக இருக்கும்? ஆம் அதுதான், மத்திய கிழக்கு நாடுகளில் நடந்துக் கொண்டு இருக்கும் டாம் அண்டு ஜெர்ரி சண்டை (Tom & Jerry). இன்னுமா உங்களுக்கு புரியவில்லை? அது "இஸ்ரவேல் மற்றும் பாலஸ்தீனா சண்டை" ஆகும். இதில் மரித்த முஸ்லிம்கள், மரித்துக் கொண்டு இருக்கும் முஸ்லிம்கள் மற்றும் மரிக்கப்போகும் முஸ்லிம்கள். இப்போதைக்கு மரித்த யூதர்களை கணக்கில் எடுத்துக் கொள்ளவேண்டாம்.
- இப்படி பல வகைகளில் கொஞ்சம் கொஞ்சமாக அழிந்துக் கொண்டு இருக்கும் முஸ்லிம்களுக்கு புதிய தலைவலியாக மாறியது ஐஎஸ் என்ற இஸ்லாமிய தீவிரவாத இயக்கம். இந்த ஐஎஸ் தீவிரவாதத்தை உருவாக்கியது யார் என்று தெரிந்துக் கொள்ள, ஐஎஸ் தீவிரவாதிகளின் நம்பிக்கைகள் என்ன? அவர்கள் எவைகளை உலகில் ஸ்தாபிக்க நினைக்கிறார்கள்? போன்றவற்றை இணையத்தில் தேடிப்பார்த்து படித்துக் கொள்ளுங்கள். இது உங்களுக்கு கடினமாக இருந்தால், குர்-ஆனையும், ஹதீஸ்களையும் முஹம்மதுவின் வாழ்க்கையையும் ஒரு முறை படித்துப் பாருங்கள், ஓரளவிற்கு ஐஎஸ் தீவிரவாதிகள் பற்றிய துப்பு கிடைக்கும்.
- உலகிலேயே, தன் இன மக்களால் தாங்களே அதிகமாக கொல்லப்படும் அவல நிலை முஸ்லிம்களுக்கு மட்டுமே உள்ளது என்றுச் சொன்னால், அது மிகையாகாது. அவ்வப்போது ஆங்காங்கே இப்படி

தங்கள் இனத்தை அழிக்க துடிக்கும் சர்வாதிகாரிகள் தங்கள் இனத்திலேயே உருவாக்கப்பட்டது உண்டு, ஆனால், இந்த இஸ்லாமில் மட்டுமே, அப்படிப்பட்டவர்கள் தொடர்ந்து உருவாகிக்கொண்டே இருக்கிறார்கள், இன்னும் இஸ்லாம் உலகில் இருக்கும் வரை உருவாகிக்கொண்டே இருப்பார்கள்.

- சௌதி அரேபியாவிற்கு வெளியே மசூதிகளில் மரிக்கும் முஸ்லிம்களை ஆறுதல் படுத்தும் விதமாக, அவ்வப்போது இஸ்லாமின் புனித பூமியாகிய மக்காவிலும், முக்கியமாக காபா இருக்கும் ஸ்தலத்திலும் பல மரணங்கள் நிகழ்ந்து விடுவதுண்டு. இவ்வாண்டு (2015) காபாவிற்கு அருகில் ஒரு கிரேன் விழுந்து 100க்கும் அதிகமானோர் மரித்தனர். நேற்று ஹஜ்ஜின் போது 700க்கும் அதிகமானோர் நெரிசலினால் மரித்தனர். இவையெல்லாம் வணக்க ஸ்தலங்களில் நடக்கும் மரணங்கள். நல்லவேளை, ஒவ்வொரு கிறிஸ்தவனும் எருசலேமுக்கு ஒவ்வொரு ஆண்டும் புனித யாத்திரை செய்யவேண்டும், அங்கு சென்று சாத்தானை கல்லெரியவேண்டும் போன்ற மூடநம்பிக்கைகள் கிறிஸ்தவத்தில் இல்லை. எனவே, நெரிசலில் சிக்கி மரிக்கவேண்டிய துர்பாக்கிய நிலை கிறிஸ்தவர்களுக்கு இல்லை என்பது ஆறுதல் படுத்தும் செய்தியாகும்.

### இந்து மதத்தலங்களில் மரணங்கள்:

கிறிஸ்தவர்கள் மற்றும் முஸ்லிம்களின் வணக்க ஸ்தலங்களில் மரண அவலங்கள் உண்டு என்று சொன்னேன். இந்து மதத்தலங்களில் மரணங்கள் இல்லையா என்று யாரும் கேட்காதீர்கள். இயற்கைக்கு மதமில்லை, அது மதசார்ப்பற்ற ஒன்றாகும். என்னுடைய இந்த கட்டுரை இஸ்லாமையும், கிறிஸ்தவத்தையும் நோக்கி நகர்வதால், இந்துக்கள் பற்றி சில வரிகளை மட்டுமே எழுதி தொடர்ந்து செல்ல விரும்புகிறேன்.

- இந்து மதத்தலங்களின் மரணங்களுக்கு பெரும்பான்மையான காரணம், அதிக பக்தியும், கூட்டமும் நெரிசலும் தான்.
- இந்துக்களின் சில கோயில்கள் மற்றும் புனித ஸ்தலங்கள் மலைகளிலும், மிகவும் ஆபத்தான இடங்களிலும் இருக்கும். சில நேரங்களில் இயற்கை தன் கைவரிசையைக் காட்டும். சமீப காலங்களில் இந்தியாவில் ஏற்பட்ட மலைச்சரிவுகளினாலும், மழை வெள்ளங்களினாலும் மரித்தவர்களின் எண்ணிக்கை அதிகம்.
- தங்கள் இறைவனை காண புனித யாத்திரைச் சென்ற அனேகர், வீடு திரும்பவில்லை. யாரைக் குற்றப்படுத்துவது?
- இது போதாது என்பதற்காக, சில குறிப்பிட்ட விசேஷித்த திருவிழாக்களில் மக்களின் கூட்டம் அதிகமாகும் போது, நெரிசலில் மாட்டிக் கொண்டு மரிப்பவர்களும் இருக்கிறார்கள்.
- இந்தியாவில் தீவிரவாதிகளால் தீய செயல்கள் வெற்றிகரமாக அமுல் படுத்தும் போது, இதில் மரிப்பவர்களில், இந்துக்களின் எண்ணிக்கை மற்றவர்களை விட அதிகமாக இருக்க வாய்ப்பு உள்ளது.

இதுவரை பார்த்த விவரங்களின் படி, இறைவன் பாகுபாடு இன்றி எல்லா இன மக்களையும் மரிக்கச் செய்கின்றான். முக்கியமாக தன்னை வணங்கும் ஸ்தலத்திலேயே மக்களின் உயிர்கள் எடுக்கப்பட அவன் அனுமதிக்கிறான் என்பது மட்டும் உண்மை. அது விபத்தா? தீவிரவாதமா? அல்லது இயற்கை சீற்றமா? என்பது இடத்தைப் பொறுத்து, நாட்டைப் பொறுத்து, முஸ்லிம்களின் சதவிகிதத்தைப் பொறுத்து அமைகிறது.

எனவே, மக்காவில் மரிப்பவர்களின் எண்ணிக்கை நமக்கு எதனையும் காட்டுவதில்லை. சரியாக நிர்வாகம் செய்யாததால் விபத்து நேரிடுகிறது, சில நேரங்களில் இயற்கை தன் சீற்றத்தைக் காட்டுகிறது, அவ்வளவு தான்.

**கேள்வி 6: இஸ்லாமிய தீவிரவாத வன்முறைகளில் சிக்கித் தவிக்கும் கிறிஸ்தவ திருச்சபை என்ன செய்யவேண்டும்?**

**உமரின் பதில்:** இது கடினமான கேள்வியாகும். கிறிஸ்தவ சபை இருக்கும் இடைத்தைப் பொறுத்து செய்யவேண்டிய முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் மாறுபடும். நான் திருச்சபை இருக்கும் இடத்தை மூன்றாக பிரிக்க விரும்புவேன்.

1) இஸ்லாமிய நாடுகளில் இருக்கும் கிறிஸ்தவ திருச்சபைகள்

2) முஸ்லிம்கள் பெரும்பான்மை நாடுகளில் இருக்கும் கிறிஸ்தவ திருச்சபைகள்.

3) முஸ்லிம்கள் சிறும்பான்மை நாடுகளில் இருக்கும் கிறிஸ்தவ திருச்சபைகள்.

**இஸ்லாமிய நாடுகளில் திருச்சபைகள்:**

என்ன சொல்லுவேன்? எப்படி சொல்லுவேன்? இஸ்லாமிய நாடுகளில் கிறிஸ்தவர்களாக பிறப்பது பாவமா? அல்லது இஸ்லாமிய நாடுகளில் முஸ்லிமாக இருந்து கிறிஸ்துவை பின்பற்ற முடிவு செய்வது பாவமா? இஸ்லாமிய நாடுகளில் கிறிஸ்தவ திருச்சபை படும் அல்லல்களை சொல்வது சுலபமல்ல. இணையத்தில் தேடி படித்துப் பாருங்கள். முஸ்லிம்களின் சுலபமான இலக்கு கிறிஸ்தவர்களாவார்கள்.

திருச்சபை என்ன செய்யவேண்டும்? பழிக்கு பழி வாங்கக்கூடாது. முஸ்லிம்கள் திருச்சபைகளில் குண்டு வைக்கிறார்கள் என்பதற்காக, கிறிஸ்தவர்கள் மசூதிகளில் குண்டு வைக்கக்கூடாது. அவர்களை வழி நடத்துகின்ற அவர்களின் வேதம் என்ன சொல்கிறதோ அதைத் தான் அவர்கள் செய்வார்கள். ஆனால், கிறிஸ்தவர்கள் தேவனை சார்ந்து மட்டுமே இருக்கவேண்டும். ஞானமாக நடந்துக் கொள்ளவேண்டும். எல்லோரும் ஒற்றுமையாக இருக்கவேண்டும். ஒற்றுமையாக இருந்து, உரிமைகளுக்காக நியாயமான முறையில் போராடவேண்டும். அந்த மக்கள் மனந்திரும்ப ஜெபிக்கவேண்டும்.

**முஸ்லிம் பெரும்பான்மை நாடுகளில் இருக்கும் திருச்சபைகள்:**

இஸ்லாமிய நாடுகளுக்கும், முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கும் நாடுகளுக்கும் இடையே பெரிய வித்தியாசம் இல்லை. திருச்சபை அதே எதிர்ப்பு மற்றும் வன்முறைக்கு ஆளாகவேண்டி வரும். இஸ்லாமின் ஷரியா சட்டம் அமுலில் இல்லாமல் இருப்பதினால், திருச்சபை தன் உரிமைகளுக்காக நியாயமான முறையில் போராட முடியும். முஸ்லிம்களால் வஞ்சிக்கப்படாமல் திருச்சபை எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

**முஸ்லிம் சிறும்பான்மை நாடுகளில் இருக்கும் திருச்சபைகள்:**

இந்தியா போன்ற நாடுகளில், முஸ்லிம்கள் சிறும்பான்மையாக இருப்பதினால், அமைதி மார்க்க புறாக்கள் போல முஸ்லிம்கள் காணப்படுவார்கள். திருச்சபையை வஞ்சிக்க தீவிரமாக செயல்படுவார்கள். மற்ற நாடுகளில் படும் அல்லல்கள் போல இல்லையென்றாலும், திருச்சபை எச்சரிக்கையாக இருக்கவேண்டும். திருச்சபை விசுவாசிகள் புறாக்களைப்போல கபடற்றவர்களாக இருப்பதோடு கூட, சர்பத்தைப்போல எச்சரிக்கையாக இருக்கவேண்டும். சபையில் இஸ்லாமிய விஷம் அமைதியாக பரவும் அபாயம் இருப்பதால், எச்சரிக்கையாக இருக்கவேண்டும். வெளிவேஷத்தைக் கண்டு, இஸ்லாம் அமைதி மார்க்கம் என்று நம்பி திருச்சபை ஏமாறக்கூடாது.

**கேள்வி 7:** ஒரு சொற்பமான சதவிகித முஸ்லிம்கள் தீவிரவாத செயல்களில் ஈடுபடுவதை ஏன் இவ்வளவு முக்கியத்துவம் கொடுத்து பார்க்கவேண்டும்? பெரும்பான்மையான முஸ்லிம்கள் அமைதி விரும்பிகளாகவும், அமைதியை நிலைநாட்டுபவர்களாகவும் இருக்கிறார்களே! இது சமுதாயத்திற்கு போதாதா? ஒவ்வொரு மார்க்கத்திலும் சொற்ப சதவிகிதத்தினர், வன்முறையில் ஈடுபடுபவர்கள் இருக்கத்தான் செய்கிறார்களே! இஸ்லாம் மட்டும் எப்படி தனித்து விளங்குகிறது?

**உமரின் பதில்:** சொற்பமான சதவிகிதம் என்ற வார்த்தைகளை கவனிக்கும் போது, நீங்கள் சொல்வது சரி தான் என்று தோன்றும், சொற்ப சதவிகித மக்கள் என்ன செய்துவிடப்போகிறார்கள் என்று எண்ணத்தோன்றும். ஆனால், புள்ளி விவரங்களோடு பார்க்கும் போது, விஷயம் விஷமாக மாறுவதை காணமுடியும்.

முஸ்லிம்களில் வெறும் சொற்ப சதவிகித மக்கள் தான் தீவிரவாத செயல்களில் வன்முறைகளில் ஈடுபடுகிறார்கள், மீதமுள்ள பெரும்பான்மையானவர்கள் அமைதியானவர்களாகவும், ஆபத்தை விளைவிக்காதவர்களாகவும் இருக்கிறார்கள், இது உண்மை தான். ஆனால், ஒரு சிறிய புள்ளிவிவர கணக்கை இப்போது காண்போமா!

இந்த "சொற்ப சதவிகிதம்" என்பதற்கு ஒரு எண்ணை (சதவிகிதத்தை) கொடுத்து கணக்கு பார்ப்போமா?

1) நூறில் ஒருவன் - 100:1

2) ஆயிரத்தில் ஒருவன் – 1,000:1

3) லட்சத்தில் ஒருவன் – 1,00,000:1

4) பத்து லட்சத்தில் ஒருவன் - 10,00,000:1

இந்திய ஜனத்தொகை கணக்கெடுப்பு 2011ன் படி, இந்தியாவில் முஸ்லிம் மக்களின் சதவிகிதம் 14.23% ஆகும், எண்ணிக்கையில் பார்த்தால், 17.22 கோடி மக்கள் முஸ்லிம்கள் ஆவார்கள் (http://www.census2011.co.in/religion.php).

1) நூறில் ஒருவன் என்று கணக்கிட்டால், 17.22 கோடியில், இப்படிப்பட்டவர்களின் எண்ணிக்கை 17,22,000 நபர்கள் ஆவார்கள்.

2) ஆயிரத்தில் ஒருவன் என்று கணக்கிட்டால், 1,72,200 நபர்கள் ஆவார்கள்.

3) லட்சத்தில் ஒருவன் என்று கணக்கிட்டால், 1722 நபர்கள் ஆவார்கள்

4) பத்து இலட்சத்தில் ஒருவன் என்று கணக்கிட்டால், 172 நபர்கள் ஆவார்கள்.

**முதலாவது, நூறில் ஒருவன்:** நாம் நியாயமாக எழுதவேண்டுமென்றால், இந்தியாவில் 1% முஸ்லிம்கள் தீவிரவாதி செயல்களில் ஈடுபடுபவர்கள் என்று சொல்லமுடியாது. ஏனென்றால், இந்திய கணக்கெடுப்பின் படி பார்த்தால், 17.22 லட்ச நபர்கள் இந்த வகையில் வருகிறார்கள்.

**இரண்டாவது, ஆயிரத்தில் ஒருவன்:** இதுவும் 1.72 லட்ச நபர்கள் வருகிறார்கள். இந்தியாவின் முஸ்லிம்களின் நிலையை கணக்கில் கொண்டு பார்த்தால், இதனையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டாம் (வேண்டாம் என்றுச் சொன்னேன் ”எடுத்துக் கொள்ள முடியாது என்று சொல்லவில்லை”).

**மூன்றாவது, லட்சத்தில் ஒருவன்:** கணக்கு 1722 நபர்கள் என்று வருகிறது. இதனை தாராளமாக எடுத்துக் கொள்ளலாம். 17 கோடி ஜனத்தொகையில் 1722 நபர்களுக்கு இப்படிப்பட்ட தீவிரவாத செயல்களில் ஈடுபடவேண்டும் என்ற எண்ணம் இருக்குமா என்று கேட்டால், தற்காலத்தில் நடக்கும் இஸ்லாமிய தீவிரவாத செயல்களை பார்க்கும் போது, “இது சரியான கணிப்பு தான்” என்று சொல்லமுடியும்.

கடைசியாக, பத்து லட்சத்தில் ஒருவன் என்று கணக்கிட்டால், 172 பேர் வருகிறார்கள்.

நாம் கேள்வியில் பார்த்ததின் படி “சொற்ப சதவிகிதம்” என்பதற்கு நாம் 1722 அல்லது 172 என்ற எண்களை தரலாம். முஸ்லிம்களின் மீது வைத்துள்ள அன்பின் காரணமாக, நான் 172யே உதாரணமாக எடுத்துக் கொள்கிறேன்.

- இந்த 172 தீவிரவாதிகளால், 121 கோடி இந்திய மக்களுக்கு ஆபத்து உண்டா இல்லையா?
- இந்த சொற்ப எண்ணிக்கையுள்ள 172 பேர், எப்படி 121 கோடி மக்களுக்கு ஆபத்தாக கருதமுடியும்?

நாம் மேலே படித்த கேள்வியைத் தான், புள்ளிவிவரங்களோடு நான் கொடுத்துள்ளேன். இப்பொழுது பிம்பம் எப்படி தெரிகின்றது? இன்னும் புரியவில்லையென்றால், கீழ்கண்ட விவரங்களை பாருங்கள்:

**அ) உலக வர்த்தக மையம் தாக்குதல்** – 19 தீவிரவாதிகள், 2996 பேர் மரணம். மரித்தவர்களின் இந்த எண்ணிக்கையில் உலகத்தின் 90 நாடுகளின் குடிமக்கள் மரித்துள்ளார்கள். பல ஆயிர கோடி மதிப்புள்ள பொருளாதாரம் நட்டமடைந்தது.

**ஆ) மும்பை தாக்குதல்** – 10 தீவிரவாதிகள், 164 பேர் மரித்தனர், 308 பேர் காயமுற்றனர்.

இந்த விவரங்களை நன்றாக கவனியுங்கள். 19 பேர், 3000 பேரை கொல்லமுடியும், 90 நாடுகளின் குடிமக்களை கொல்லமுடியும், பல ஆயிர கோடி பொருளாதாரத்தை நஷ்டப்படுத்த முடியுமென்றால், 172 பேர் எவ்வளவு பெரிய ஆபத்தை உண்டாக்கமுடியும் என்று கணக்கு போட்டு பார்க்கமுடியுமா?

19 பேர் என்பது சொற்ப எண்ணிக்கைத் தான்

10 பேர் என்பது சொற்ப எண்ணிக்கைத் தான்

ஆனால், இவர்களினால் உண்டான உயிர் நஷ்டம், பொருளாதார நஷ்டம் போன்றவற்றை பாருங்கள், கண்கள் பிதுங்கி விடும்.

இந்திய முஸ்லிம் ஜனத்தொகை 172,245,158 யில், 172 பேரை கழித்துவிடுவோம், மீதமுள்ள 17 கோடியே, 22 இலட்ச நல்ல முஸ்லிம்களினால், இந்த 172 மக்களினால் உண்டாகவிருக்கும் ஆபத்திலிருந்து இந்தியாவை காக்கமுடியுமா?

மக்கள் சொற்பம் தான், ஆனால் ஆபத்தோ சொற்பமல்ல, அது பிரமாண்டம்.

எனவே, சொற்ப சதவிகித மக்கள் தானே இப்படியெல்லாம் தீவிரவாதம் என்று திரிகிறார்கள், எனவே நாம் அதனை கண்டுக்கொள்ளத் தேவையில்லை என்று சொல்லமுடியாது, சொல்லவும் கூடாது, இது அறிவுடைமையாகாது. மக்கள் அதிகம் கூடும் இடத்தில் ஒரே ஒரு தீவிரவாதி, தற்கொலை தாக்குதல் நடத்தினால், எத்தனை மக்கள் கொல்லப்படுவார்கள், எவ்வளவு ஆபத்து உண்டாகும் என்பதை நாம் கவனிக்கவேண்டும்.

எனவே சொற்ப எண்ணிக்கையே என்று சும்மா இருந்துவிடமுடியாது, தீவிரவாதத்தை தூண்டும், எதுவாக இருந்தாலும் சரி, அதனை அடியோடு அழித்துவிடவேண்டும், ஒருவேளை பெரும்பான்மை மக்கள் அதனை ஆதரிப்பதாக இருந்தாலும் சரி.

**அடிக்குறிப்புக்கள்:**

- https://en.wikipedia.org/wiki/September_11_attacks#Casualties
- https://en.wikipedia.org/wiki/2008_Mumbai_attacks

**கேள்வி 8:** மும்பை தாக்குதலில் ஈடுபட்ட 10 நபர்கள் அனைவரும் பாகிஸ்தானியர்கள், இந்திய முஸ்லிம்கள் இல்லை. இது நமக்கு எதனை காட்டுகிறது? இந்திய முஸ்லிம்கள் தீவிரவாத செயல்களில் ஈடுபடுவதில்லை என்று காட்டுகின்றதல்லவா? இதனால் இந்திய முஸ்லிம்களால் ஆபதில்லை என்று புரிந்துக்கொண்டு நிம்மதி பெருமூச்சு விடலாம் அல்லவா?

**உமரின் பதில்:** இது இன்னும் ஆபத்தான விஷயமாகும். நான் மேலே சொன்ன சொற்ப எண்ணிக்கை (172 நபர்கள்) இந்திய முஸ்லிம் ஜனத்தொகையிலிருந்து எடுத்துச் சொன்னேன். இப்போது ஆபத்து இன்னும் அதிகமாக உள்ளது. அதாவது, ஒரு நாட்டில் தீவிரவாத செயல் நடந்தேறினால், அதற்கு அந்நாட்டில் வாழும் முஸ்லிம்கள் மட்டுமே காரணம் என்று இருந்தால், ஆபத்தின் சதவிகிதம் குறைவே. ஆனால், அவர்களோடு மற்ற நாட்டு முஸ்லிம் தீவிரவாதிகளும் சேர்ந்து செயல்படுவார்கள் என்று சொல்லும் போது, ஆபத்து இன்னும் அதிகரிக்கிறது.

ஆக, இந்திய மண்ணில் தீவிரவாத செயல் புரிய, இந்திய முஸ்லிம் ஜனத்தொகையில் சொற்ப சதவிகித மக்களின் எண்ணிக்கையை மட்டும் கணக்கில் கொள்ளாமல், அதோடு சேர்த்து உலகமனைத்திலும் உள்ள முஸ்லிம் ஜனத்தொகையில் சதவிகிதத்தையும் கணக்கிடவேண்டும்.

ஆக, சுருக்கமாக சொல்லவேண்டுமென்றால், உலகத்தில் உள்ள எந்த ஒரு நாட்டிலும் ஒரு இஸ்லாமிய தீவிரவாத செயல் நடந்தேற, அந்நாட்டு முஸ்லிம்களின் கைமட்டுமல்ல, உலகத்தில் உள்ள மற்ற நாடுகளில் வாழும் முஸ்லிம்களின் கைகளும் இருக்கும். எனவே, சொற்ப எண்ணிக்கை மக்கள் தான் தீவிரவாத செயலில் ஈடுபடுகிறார்கள் என்ற வாதம் அர்த்தமற்ற வாதமாகும்.

**உதாரணத்திற்கு, உலக ஜனத்தொகையில் அந்த சொற்ப சதவிகிதத்தை (பத்து லட்சத்தில் ஒருவன் என்ற) கணக்கிட்டுப் பார்ப்போம்.**

**கவனிக்க:** இந்திய மண்ணில் மட்டுமே நாம் எடுத்துக் காட்டுக்காக பத்து லட்சத்தில் ஒருவன் என்ற சதவிகிதத்தை கொள்ளமுடியும், ஆனால், இஸ்லாமிய நாடுகளில் நூற்றுக்கு சிலர் இந்த தீவிரவாத வகையில் இருப்பார்கள் என்பதை கவனத்தில் கொள்ளவும். இந்த கணக்கு ஒரு மதத்தை சார்ந்து இருப்பதினாலும், நாம்

வேண்டுமென்றே இவ்விஷயத்தை பூதாகாரமாக காட்டுகின்றோம் என்று மற்றவர்கள் குற்றம் சாட்டக்கூடாது என்பதற்காக, பத்து லட்சத்தில் ஒருவர் என்ற உதாரணத்தை எடுத்துக் கொண்டு கணக்கிடுகிறோம்.

2010ன் கணக்கெடுப்பின் படி, முஸ்லிம்களின் உலக ஜனத்தொகை 157 கோடியாகும். (https://en.wikipedia.org/wiki/Islam_by_country)

நம்முடைய சொற்ப சதவிகிதத்தை கணக்கிடும் போது: 1570 நபர்கள் வருகிறார்கள்.

ஆக, உலகில் உள்ள ஒவ்வொரு நாட்டிற்கும் இந்த 1570 நபர்களால் ஆபத்து உள்ளது என்று தாராளமாகச் சொல்லமுடியும், ஏனென்றால், இவர்கள் உலக இஸ்லாமிய உம்மாவின் குடிமகன்கள் ஆவார்கள். உலக வர்த்தக மையத்தை தாக்கியவர்கள், அமெரிக்காவில் வாழும் முஸ்லிம்கள் அல்ல, அவர்களில் அனேகர் சௌதி முஸ்லிம்கள். மும்பை தாக்குதலில் ஈடுபட்டவர்கள், இந்திய முஸ்லிம்களல்ல, அவர்கள் பாகிஸ்தான் முஸ்லிம்கள்.

ஆக, இந்த சொற்ப எண்ணிக்கை வாதம் அடியோடு அடிபட்டுப் போகிறது. சொற்ப மக்களால் இப்படிப்பட்ட ஆபத்து நிகழுமானால், உண்மையில் சதவிகிதம் இன்னும் அதிகமாக இருப்பதினால், ஆபத்து எவ்வளவு பெரியது என்று கணக்கிட்டுப்பாருங்கள்.

**கேள்வி 9:** முஸ்லிம்கள் தங்கள் மார்க்கத்தின் பெயரில் நடக்கும் தீவிரவாத வன்முறை செயல்களுக்கு தகுந்த பதிலடியை எப்படி கொடுக்கவேண்டும்? இஸ்லாமை சீர்திருத்தி "தீவிரவாதிகளே இல்லாத மதமாக" அதனை மாற்றமுடியும் என்ற நம்பிக்கை எனக்குள்ளது. இஸ்லாமை சீர்திருத்த சிலர் ஏற்கனவே எழும்பிவிட்டனர் என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். சீக்கிரத்தில் இதனை நாம் கண்டு களிக்கப்போகிறோம். இது உங்களுக்குத் தெரியுமா?

**உமரின் பதில்:** முடவன் கொம்புத் தேனுக்கும் ஆசைப்படலாம், ஆனால், இஸ்லாமை சீர்திருத்த ஆசைப்படுவது மிகவும் கடினமான காரியம், மன்னிக்கவும் அது முடியாத காரியமாகும். இஸ்லாமை சீர்திருத்த விரும்புபவர்களுக்கு, ஒன்று இஸ்லாமின் அடிப்படை தெரியாமல் இருக்கவேண்டும், அல்லது அவர்களுக்கு பயித்தியம் பிடித்திருக்கவேண்டும். இந்த பயித்தியம் தெளிவதற்கு முன்பு அவர்களின் உயிர் இஸ்லாமியர்களாலே பிடுங்கி எறியப்பட்டுவிடும்.

**இந்த தொடுப்புக்களை ஒரு முறை படித்துப் பாருங்கள்:**

1. https://en.wikipedia.org/wiki/Liberal_Muslim_movements
2. http://www.answering-islam.org/authors/abraham/reforming_islam.html
3. http://www.frontpagemag.com/fpm/243473/you-cant-reform-islam-without-reforming-muslims-daniel-greenfield
4. http://www.theguardian.com/commentisfree/2015/may/17/islam-reformation-extremism-muslim-martin-luther-europe

மேற்கண்ட நான்காவது கட்டுரையில் கீழ்கண்ட வரிகள் முடிவுரையாக கொடுக்கப்பட்டுள்ளது:

With apologies to Luther, if anyone wants to do the same to the religion of Islam today, it is Isis leader Abu Bakr al-Baghdadi, who claims to rape and pillage in the name of a “purer form” of Islam – and who isn’t,

incidentally, a fan of the Jews either. Those who cry so simplistically, and not a little inanely, for an Islamic reformation, should be careful what they wish for.

ஒரு மார்க்கத்தை சீர்திருத்தவேண்டுமென்றால், அந்த மார்க்கம் தூயதாக இருந்திருக்கவேண்டும், அதனை சிலர் தவறாக பயன்படுத்தி இருந்திருக்கவேண்டும், அப்போது அந்த மார்க்கத்தை அதன் தூய வடிவில் திரும்ப கொண்டுவர அதாவது சீர்திருத்த முயற்சி எடுக்கலாம். ஆனால், இஸ்லாமைப் பொறுத்தமட்டில், குர்-ஆனும், ஹதீஸ்களும் சொல்லும் வழியில் தான் தற்கால இஸ்லாம் இஸ்லாமிய நாடுகளில், ஐஎஸ், அல்கய்தா போன்ற தீவிர்வாதிகளால் பின்பற்றப்படுகிறது. எனவே, இஸ்லாம் தன் உண்மை வடிவில் வாழ்ந்துக் கொண்டு இருக்கும் தற்காலத்தில் அதனை எப்படி சீர்திருத்தவாதிகள் கெடுக்கமுடியும்? அதனை எப்படி தற்கால இஸ்லாமிய இமாம்கள், மற்றும் இஸ்லாமிய தலைவர்கள் ஏற்றுக் கொள்வார்கள்?

இந்த முயற்சியை எடுத்தவர்கள், எடுப்பவர்கள் கொல்லப்படுவார்கள், விமர்சிக்கப்படுவார்கள் தனிமைப் படுத்தப்படுவார்கள். கடைசியாக அவர்களின் முயற்சி எடுபடாது.

முஸ்லிம்கள் தங்கள் மார்க்கத்தின் பெயரால் நடக்கும் தீவிரவாத செயல்களுக்கு "சீர்திருத்தம்" என்ற பதிலடி கொடுக்கமுடியாது. பதிலடி கொடுப்பதற்கு இஸ்லாமிய அறிஞர்கள் அனுமதிக்கமாட்டார்கள். தீவிரவாதிகளுக்கு முஸ்லிம்கள் உதவி செய்யாமல் இருந்தாலே அது அந்நாட்டுக்கு அவர்கள் செய்யும் மிகப்பெரிய உதவியாக இருக்கும். இதற்கு மேலே முஸ்லிம்கள் ஏதாவது செய்யவேண்டுமென்றால், அமைதியாக இஸ்லாமை விட்டு வெளியேறவேண்டும், இதைத் தவிர்த்து வேறு எந்த ஒரு வழியையும் முஸ்லிம்களுக்கு இஸ்லாம் வைத்துவைக்கவில்லை.

**முடிவுரை:** இது வெறும் ஆரம்பம் தான். இஸ்லாமிய தீவிரவாதத்தை புரிந்துக் கொள்ள குர்-ஆனையும், ஹதீஸ்களையும், முஹம்மதுவின் வாழ்க்கை வரலாறையும் நாம் படிக்கவேண்டும். முக்கியமாக முஸ்லிம் நாடுகளில் இருக்கும் தற்கால இமாம்கள், இஸ்லாமிய தலைவர்கள் பேசும் பேச்சுக்களை கேட்கவேண்டும். மசூதிகளில் கொடுக்கப்படும் சொற்பொழிவுகளை கூர்ந்து கவனிக்கவேண்டும். இவர்களின் பேச்சுக்களில் காணப்படும் வெறுப்புணர்வையும், கோபத்தையும், இரத்தம் சிந்ததுடிக்கும் வேகத்தையும் பார்த்து ஆய்வு செய்யவேண்டும். இஸ்லாமிய தீவிரவாதத்தின் ஆணிவேர் "குர்-ஆனும், ஹதீஸ்களும்" ஆகும் என்பதை உணரும் முஸ்லிம்கள்,அமைதியாக அதை விட்டு வெளியேறி விடுகிறார்கள். சிலர் அதனை வெளியே சொல்லாமல், பெயரளவிற்கு முஸ்லிம்களாக வாழ்ந்துக் கொண்டு இருகிறார்கள்.

தொடரும்...

---

**உமரின் இதர தலைப்புக் கட்டுரைகள்**

**உமரின் கட்டுரைகள்/மறுப்புக்கள் பக்கம்**

**Source:** http://www.answering-islam.org/tamil/authors/umar/general-topics/crane_accident_911_part2.html

# 12. முஹம்மதுவின் அல்லாஹ் – உண்மையில் யார்?

இந்தக் கட்டுரை மிகவும் சுருக்கமானதாகும்.

குர்ஆனின் படி, அல்லாஹ் சூழ்ச்சி செய்வதில் சிறந்தவர் ஆவார்.

**ஸூரா 3:45**

அவர்கள் சூழ்ச்சி (மூல அரபி மொழியில் Wa'makaroo) செய்தார்கள், அல்லாஹ்வும் சூழ்ச்சி செய்தான் (wa'makara Allahu). அல்லாஹ் சிறப்பாகச் சூழ்ச்சி செய்பவன் (wa'Allahu khayru al-makireena). (பிஜே மொழிபெயர்ப்பு)

(அவர்கள்) திட்டமிட்டுச் சதி செய்தார்கள்; அல்லாஹ்வும் சதி செய்தான்; தவிர அல்லாஹ் சதி செய்பவர்களில் மிகச் சிறந்தவன் ஆவான். (முஹம்மது ஜான் மொழிபெயர்ப்பு)

(மேற்கண்ட வசனங்களில் நாம் அடைப்பிற்குள் அரபி வார்த்தைகளை கொடுத்துள்ளோம்.)

குர்ஆன் 3:54 க்கு ஒத்த வசனங்களை 8:30 மற்றும் 27:50 வசனங்களிலும் காணலாம்.

சூழ்ச்சி செய்வதில், சதிசெய்வதில், வஞ்சிப்பதில் மற்றும் மற்றவர்களை தவறாக வழிநடத்துவதில் எவராலும் மிஞ்ச முடியத ஒருவர் யார்.

**ஸூரா 4:142**

நயவஞ்சகர்கள் அல்லாஹ்வை ஏமாற்ற நினைக்கின்றனர். அவனோ அவர்களை ஏமாற்றவுள்ளான். அவர்கள் தொழுகையில் நிற்கும் போது சோம்பேறிகளாகவும், மக்களுக்குக் காட்டுவோராகவும் நிற்கின்றனர். குறைவாகவே அல்லாஹ்வை நினைக்கின்றனர். (பிஜே மொழிபெயர்ப்பு)

நிச்சயமாக இந்நயவஞ்சகர்கள் அல்லாஹ்வை வஞ்சிக்க நினைக்கின்றனர்; ஆனால் அவன் அவர்களை வஞ்சித்துவிடுவான்; தொழுகைக்கு அவர்கள் தயாராகும் பொழுது சோம்பலுடையோராகவே நிற்கிறார்கள் - மனிதர்களுக்குத் (தங்களையும் தொழுகையாளியாக்கி) காண்பிப்பதற்காக (நிற்கிறார்கள்); இன்னும், மிகச் சொற்ப அளவேயன்றி அவர்கள் அல்லாஹ்வை நினைவு கூர்வதில்லை. (முஹம்மது ஜான் மொழிபெயர்ப்பு)

**ஸூரா 10:21**

மனிதர்களுக்குத் துன்பம் ஏற்பட்ட பின் அருளை நாம் அவர்களுக்கு அனுபவிக்கச் செய்தால் நமது சான்றுகளில் அவர்கள் சூழ்ச்சி (makrun) செய்கின்றனர். 'அல்லாஹ் விரைந்து சூழ்ச்சி செய்பவன் (makran) என கூறுவீராக! நமது தூதர்கள் நீங்கள் செய்யும் சூழ்ச்சியைப் பதிவு செய்கின்றனர். (பிஜே மொழிபெயர்ப்பு)

மேலும் நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வை நம்புவதைப் பார்க்கிலும் சிறந்ததை அறிந்தவர்களாக இருப்பதால், அல்லாஹ்வின் சூழ்ச்சி மற்றும் வஞ்சிக்கும் பொய்களில் இருந்து பாதுகாப்பான இடத்தில் இருக்கிறார்கள் என குர்ஆன் சான்று பகருகிறது:

ஸுரா 7:99

அல்லாஹ்வின் சூழ்ச்சியில் அச்ச மற்று இருக்கிறார்களா (makra Allahi)? இழப்பை அடைந்த கூட்டத் தினர் தவிர (மற்றவர்கள்) அல்லாஹ்வின் சூழ்ச்சியில் (makra Allahi) அச்சமற்று இருக்க மாட்டார்கள். (பிஜே மொழிபெயர்ப்பு)

அதுமாத்திரமல்ல, சூழ்ச்சிகள் மற்றும் சதிகள் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியவை என்று பெருமை பாராட்டிக் கொள்கிறது.

ஸூரா 13:42

இவர்களுக்கு முன் சென்றோரும் சூழ்ச்சி (makara) செய்தனர். சூழ்ச்சிகள் யாவும் (al-makru) அல்லாஹ்வுக்கே உரியன. ஒவ்வொரு வரும் செய்வதை அவன் அறிவான். யாருக்கு அவ்வுலகின் (நல்ல) முடிவு என்பதை (ஏக இறைவனை) மறுப்போர் அறிந்து கொள்வார்கள்.

அரபி மொழியில் உள்ளதை நாம் மாற்றிச் சொல்கிறோம் என்று எவரும் குற்றம் சாட்டாதபடி, தரமான சொல்லகராதிகள் makr/makara என்ற பதத்திற்கு தரும் பொருள் கீழே தரப்பட்டிருக்கிறது:

م ك ر Miim-Kaf-Ra ம க ர = வஞ்சித்தல் அல்லது சூழ்ச்சி செய்தல் அல்லது குறுக்கு வழியில் செல்லுதல், தப்பிச் செல்லுதல் அல்லது விலகுதல், சதி செய்தல், தந்திரமாக செயல்படுதல், விதிகளுடன் செயல்படுதல்.

م ك ر makara வினைச்சொல். (1)

perf. act. 3:54, 3:54, 7:123, 13:42, 14:46, 16:26, 16:45, 27:50, 40:45, 71:22

impf. act. 6:123, 6:123, 6:124, 8:30, 8:30, 8:30, 10:21, 12:102, 16:127, 27:70, 35:10

n.vb. 7:99, 7:99, 7:123, 10:21, 10:21, 12:31, 13:33, 13:42, 14:46, 14:46, 14:46, 27:50, 27:50, 27:51, 34:33, 35:10, 35:43, 35:43, 71:22

participle. act. 3:54, 8:30

LL, V7, p: 256 (Source: http://www.studyquran.co.uk/14_MIIM.htm)

ஏமாற்றுதல், வஞ்சனை அல்லது சதி செய்தல், மற்றவர்களை முட்டாளாக்க விரும்புதல், அருவருக்க தக்கதைச் செய்தல் அல்லது தீய செயலைச் செய்தல், இரகசியமாக அல்லது மற்றவர்கள் அறியாமல் செய்தல்.

(Lane's Arabic-English Lexicon - www.studyquran.org/LaneLexicon/Volume7/00000256.pdf)

makara u (makr) ஏமாற்றுதல், வஞ்சித்தல், பொய் சொல்தல், முட்டாளாக்குதல், காட்டிக் கொடுத்தல்…

III to try TO DECEIVE ஏமாற்ற முயற்சி செய்தல்…

(Hans-Wehr, 4th edition, P. 1076: http://ejtaal.net/aa/#hw4=1089)

مكر 1076

مكر *makara* *u* (*makr*) to deceive, delude, cheat, dupe, gull, double-cross (ب s.o.) III to try to deceive (ه s.o.)

مكر *makr* cunning, craftiness, slyness, wiliness, double-dealing, deception, trickery

مكرة *makra* ruse, artifice, stratagem, wile, trick, dodge

مكار *makkār* and مكور *makūr* cunning, sly, crafty, wily, shrewd, artful; sly, crafty person, impostor, swindler

ماكر *mākir* pl. مكرة *makara* sly, cunning, wily

சூழ்ச்சிச் செய்வதில் சிறந்தவர் மற்றும் முழு உலகத்தையும் தேவனின் சத்தியத்தில் இருந்து தன் வஞ்சனை மற்றும் புரட்டு மூலமாக வழிவிலகப்பண்ண விரும்புகிறவன் உண்மையில் யார் என பரிசுத்த வேதாகமம் சொல்வதை நாம் இப்பொழுது காண்போம்:

“நீங்கள் உங்கள் பிதாவாகிய பிசாசானவனால் உண்டானவர்கள்; உங்கள் பிதாவினுடைய இச்சைகளின்படி செய்ய மனதாயிருக்கிறீர்கள்; அவன் ஆதிமுதற்கொண்டு மனுஷகொலைபாதகனாயிருக்கிறான்; சத்தியம் அவனிடத்திலில்லாதபடியால் அவன் சத்தியத்திலே நிலைநிற்கவில்லை; அவன் பொய்யனும் பொய்க்குப் பிதாவுமாயிருக்கிறபடியால் அவன் பொய்பேசும்போது தன் சொந்தத்தில் எடுத்துப் பேசுகிறான்.” யோவான் 8:44

“உலகமனைத்தையும் மோசம்போக்குகிற பிசாசு என்றும் சாத்தான் என்றும் சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய பெரிய வலுசர்ப்பம் தள்ளப்பட்டது; அது பூமியிலே விழத்தள்ளப்பட்டது, அதனோடேகூட அதைச்சேர்ந்த தூதரும் தள்ளப்பட்டார்கள். அப்பொழுது வானத்திலே ஒரு பெரிய சத்தமுண்டாகி: இப்பொழுது இரட்சிப்பும் வல்லமையும் நமது தேவனுடைய ராஜ்யமும், அவருடைய கிறிஸ்துவின் அதிகாரமும் உண்டாயிருக்கிறது; இரவும் பகலும் நம்முடைய தேவனுக்குமுன்பாக நம்முடைய சகோதரர்மேல் குற்றஞ் சுமத்தும்பொருட்டு அவர்கள் மேல் குற்றஞ்சாட்டுகிறவன் தாழத் தள்ளப்பட்டுப்போனான். மரணம் நேரிடுகிறதாயிருந்தாலும் அதற்குத் தப்பும்படி தங்கள் ஜீவனையும் பாராமல், ஆட்டுக்குட்டியின் இரத்தத்தினாலும் தங்கள் சாட்சியின் வசனத்தினாலும் அவனை ஜெயித்தார்கள். ஆகையால் பரலோகங்களே! அவைகளில் வாசமாயிருக்கிறவர்களே! களிகூருங்கள். பூமியிலும் சமுத்திரத்திலும் குடியிருக்கிறவர்களே! ஐயோ,

பிசாசானவன் தனக்குக் கொஞ்சக்காலமாத்திரம் உண்டென்று அறிந்து, மிகுந்த கோபங்கொண்டு, உங்களிடத்தில் இறங்கினபடியால், உங்களுக்கு ஆபத்துவரும் என்று சொல்லக்கேட்டேன்." (வெளிப்படுத்தல் 12:9-12)

அடுத்து நாம் பார்க்கப்போகும் வேதாகம வசனங்கள் முஹம்மதுவின் அல்லாஹ் உண்மையில் ஏராளமான முஸ்லீம்களையும் மற்றவர்களையும் ஒரு கள்ள தீர்க்கதரிசியையும் அந்திகிறிஸ்துவையும் பின்பற்றச் செய்து, வஞ்சிக்கும் நோக்கில் ஆபிரகாமின் தேவனைப் போல தன்னைக் காட்டிக்கொண்டு, ஆனால் உண்மையில் தேவன் யார் என்பதையும் அவர் எவ்வளவதிகமாக அவர்களை நேசிக்கிறார் என்பதையும் பற்றிய உண்மையான செய்தியை அறிந்துகொள்ள முடியாதபடிச் செய்கிற பிசாசுதான் என்பதை மறுக்க முடியாத அளவுக்கு இருக்கின்றன:

"நான் உங்களைக் கற்புள்ள கன்னியாகக் கிறிஸ்து என்னும் ஒரே புருஷனுக்கு ஒப்புக்கொடுக்க நியமித்தபடியால், உங்களுக்காக தேவவைராக்கியமான வைராக்கியங்கொண்டிருக்கிறேன். ஆகிலும், சர்ப்பமானது தன்னுடைய தந்திரத்தினாலே ஏவாளை வஞ்சித்ததுபோல, உங்கள் மனதும் கிறிஸ்துவைப்பற்றிய உண்மையினின்று விலகும்படி கெடுக்கப்படுமோவென்று பயந்திருக்கிறேன். எப்படியெனில், உங்களிடத்தில் வருகிறவன் நாங்கள் பிரசங்கியாத வேறொரு இயேசுவைப் பிரசங்கித்தானானால், அல்லது நீங்கள் பெற்றிராத வேறொரு ஆவியையும், நீங்கள் ஏற்றுக்கொள்ளாத வேறொரு சுவிசேஷத்தையும் பெற்றீர்களானால், நன்றாய்ச் சகித்திருப்பீர்களே… அப்படிப்பட்டவர்கள் கள்ள அப்போஸ்தலர்கள், கபடமுள்ள வேலையாட்கள், கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலரின் வேஷத்தைத் தரித்துக்கொண்டவர்களாயிருக்கிறார்கள். அது ஆச்சரியமல்ல, சாத்தானும் ஒளியின் தூதனுடைய வேஷத்தைத் தரித்துக்கொள்வானே. ஆகையால் அவனுடைய ஊழியக்காரரும் நீதியின் ஊழியக்காரருடைய வேஷத்தைத் தரித்துக்கொண்டால் அது ஆச்சரியமல்லவே; அவர்கள் முடிவு அவர்கள் கிரியைகளுக்குத்தக்கதாயிருக்கும்." 2 கொரிந்தியர் 11:2-4, 13-15

"உங்களைக் கிறிஸ்துவின் கிருபையினாலே அழைத்தவரை நீங்கள் இவ்வளவு சீக்கிரமாய் விட்டு, வேறொரு சுவிசேஷத்திற்குத் திரும்புகிறதைப்பற்றி நான் ஆச்சரியப்படுகிறேன்; வேறொரு சுவிசேஷம் இல்லையே; சிலர் உங்களைக் கலகப்படுத்தி, கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தைப் புரட்ட மனதாயிருக்கிறார்களேயல்லாமல் வேறல்ல. நாங்கள் உங்களுக்குப் பிரசங்கித்த சுவிசேஷத்தையல்லாமல், நாங்களாவது, வானத்திலிருந்து வருகிற ஒரு தூதனாவது, வேறொரு சுவிசேஷத்தை உங்களுக்குப் பிரசங்கித்தால், அவன் சபிக்கப்பட்டவனாயிருக்கக்கடவன். முன் சொன்னதுபோல மறுபடியும் சொல்லுகிறேன்; நீங்கள் ஏற்றுக்கொண்ட சுவிசேஷத்தையல்லாமல் வேறொரு சுவிசேஷத்தை ஒருவன் உங்களுக்குப் பிரசங்கித்தால் அவன் சபிக்கப்பட்டவனாயிருக்கக்கடவன்." கலாத்தியர் 1:6-9

"பிள்ளைகளே, இது கடைசிக்காலமாயிருக்கிறது; அந்திக்கிறிஸ்து வருகிறானென்று நீங்கள் கேள்விப்பட்டபடி இப்பொழுதும் அநேக அந்திக்கிறிஸ்துகள் இருக்கிறார்கள்; அதினாலே இது கடைசிக்காலமென்று அறிகிறோம்...இயேசுவைக் கிறிஸ்து அல்ல என்று மறுதலிக்கிறவனேயல்லாமல் வேறே யார் பொய்யன்? பிதாவையும் குமாரனையும் மறுதலிக்கிறவனே அந்திக்கிறிஸ்து. குமாரனை மறுதலிக்கிறவன் பிதாவை உடையவனல்ல, குமாரனை அறிக்கையிடுகிறவன் பிதாவையும் உடையவனாயிருக்கிறான்." (1யோவான் 2:18, 22-23)

"நாம் மனுஷருடைய சாட்சியை ஏற்றுக்கொண்டால், அதைப்பார்க்கிலும் தேவனுடைய சாட்சி அதிகமாயிருக்கிறது; தேவன் தமது குமாரனைக் குறித்துக் கொடுத்த சாட்சி இதுவே. தேவனுடைய

குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் அந்தச் சாட்சியைத் தனக்குள்ளே கொண்டிருக்கிறான்; தேவனை விசுவாசியாதவனோ, தேவன் தம்முடைய குமாரனைக் குறித்துக்கொடுத்த சாட்சியை விசுவாசியாததினால் அவரைப் பொய்யராக்குகிறான். தேவன் நமக்கு நித்திய ஜீவனைத் தந்திருக்கிறார், அந்த ஜீவன் அவருடைய குமாரனில் இருக்கிறதென்பதே அந்தச்சாட்சியாம். குமாரனை உடையவன் ஜீவனை உடையவன், தேவனுடைய குமாரன் இல்லாதவன் ஜீவன் இல்லாதவன். உங்களுக்கு நித்தியஜீவன் உண்டென்று நீங்கள் அறியவும், தேவகுமாரனுடைய நாமத்தின் மேல் நீங்கள் விசுவாசமாயிருக்கவும், தேவகுமாரனுடைய நாமத்தின் மேல் விசுவாசமாயிருக்கிற உங்களுக்கு இவைகளை எழுதியிருக்கிறேன். (1 யோவான் 5:9-13)

மூலம்: **http://answering-islam.org/authors/shamoun/he_will_deceive.html**

**சாம் ஷமானின் இதர கட்டுரைகள்**

**தமிழாக்கம்:** சகோ. அற்புதராஜ் சாமுவேல்

---

**சகோ. அற்புதராஜ் அவர்களின் இதர கட்டுரைகள்/மறுப்புக்கள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/sam-shamoun/he_will_deceive.html

# 13. தேவன் தம்மை எவ்விதம் வெளிப்படுத்துகிறார்?

How does God reveal Himself?

இஸ்லாமியரும் கிறிஸ்தவர்களும் ஆபிரஹாமின் விசுவாசத்தை ஒரே மாதிரியாகக் காத்துக் கொள்கிறார்கள். இவ்விரு பிரிவினரும், தங்கள் தீர்க்கதரிசிகள் மூலமாக தங்கள் தேவன்/அல்லா இறக்கிய வெளிப்பாடுகள் பாதுகாக்கப்பட்டுள்ளது என்றுச் சொல்கிறார்கள். ஆனால் இவர்கள் வெளிப்பாடு என்ற வார்த்தைக்கு என்ன பொருள் கொள்கின்றனர்? மெய்யான ஒரே தெய்வத்தினை வழிபடுதலையே நாடும் நாம் அனைவரும் கடவுள் தான் தம்மை நமக்கு வெளிப்படுத்த வேண்டும் என ஒப்புக்கொள்கிறோம். நம்முடைய சொந்த முயற்சியினால் நாம் அவரைக் கண்டுகொள்ள முடியாது, அதனால் தம்மை வெளிப்படுத்த அவரே வேண்டும். கடவுள் தம்மை எவ்வாறு வெளிப்படுத்துகிறார்?

**குர்ஆன் 42:51-52** "அல்லாஹ் எந்த மனிதரிடத்திலும் வஹீயாகவோ அல்லது திரைக்கப்பால் இருந்தோ அல்லது தான் விரும்பியதைத் தன் அனுமதியின் மீது வஹீயை அறிவிக்கக் கூடிய ஒரு தூதரை அனுப்பியோ அன்றி (நேரிடையாகப்) பேசுவதில்லை நிச்சயமாக அவன் உயர்ந்தவன்; ஞானமுடையவன்.

(நபியே!) இவ்வாறே நாம் நம்முடைய கட்டளையில் ஆன்மாவானதை (குர்ஆனை) வஹீ மூலமாக உமக்கு அறிவித்திருக்கிறோம்; (அதற்கு முன்னர்) வேதம் என்பதோ ஈமான் என்பதோ என்னவென்று நீர் அறிபவராக

இருக்கவில்லை - எனினும் நாம் அதை ஒளியாக ஆக்கி, நம் அடியார்களில நாம் விரும்பியோருக்கு இதைக் கொண்டு நேர்வழி காட்டுகிறோம் - நிச்சயமாக நீர் (மக்களை) நேரான பாதையில் வழி காண்பிக்கின்றீர்."

**வெளிப்பாடு குறித்த இஸ்லாமியரின் பார்வை**

**வெளிப்பாடு குறித்த கிறிஸ்தவரின் பார்வை**

**இயேசு கிறிஸ்து, தேவனின் வார்த்தை**

**சரியான ஒப்பிடுதல்**

## வெளிப்பாடு குறித்த இஸ்லாமியர்களின் பார்வை

## The Islamic View of Revelation

மனோரீதியான தூண்டுதலினாலன்றி (Inspiration) மனிதரிடம் அல்லா நேரிடையாகப் பேசுவதில்லை என சூரா 42:51-52 தெளிவாகச் சொல்கிறது. இக்காரணத்தினாலேயே, "அனுப்பப்பட்டவர்" எனப் பொருள்படும் ரசூல் என்றழைக்கப்படும், நபிகளாக நியமிக்கப்பட்டவர்களின் மூலமாக அல்லா தம்மை வெளிப்படுத்துகிறார். இந்த நபிகள் வெறும் மனிதர்கள் தாம், எனவே ஒரு வரம்புக்கு உட்பட்டவர்களே (சூரா 80:1-3). இஸ்லாமில் வெளிப்பாடு (Revelation) என்பது கடவுளிடமிருந்து மனிதர்களுக்கு நபிகள் மூலமாக வருவதே. இஸ்லாமின் படி, இறுதி வெளிப்பாடு என்று இஸ்லாமியர்களால் மிகவும் முக்கியமானதாகக் கருதப்படும் வெளிப்பாடே குர்ஆன் என்பது. இது முஹம்மதுவிற்கு கி.பி. 610 - 632 ல் காபிரியேல் தூதன், வார்த்தைக்கு வார்த்தை இறங்குதல் என்பதாக, Nazil எனப்படும் (கீழிறங்கி வரும் Tanzil) முறையில் வெளிப்படுத்தப்பட்டது.

சொர்க்கத்தில் இருக்கும் கற்பலகைகளை (சூரா 85:21-22) பற்றி கவனிப்போம். குர்ஆன் நிரந்தரமாகப் பதிவு செய்யப்பட்டு இருக்கும் இப்பலகைகள், உண்டாக்கப்பட்டவை அல்ல, இவைகள் நிரந்தரமானவைகள். அல்லா, அளவிட முடியாதவரும் அற்புதமானவருமாய் இருப்பதினால், அவருடைய வார்த்தையும் வெளிப்பாடுகளும் அளவிட முடியாதவையும் அற்புதமானவையுமாய் இருக்கின்றன. முகமதுவின் மூலமாகக் கொடுக்கப்பட்ட இந்த இறுதி வெளிப்பாடு தெய்வீகமானது; எனவே மனிதர்களின் மதிப்பீட்டிற்கும் சர்ச்சைக்கும் அப்பாற்பட்டது. இதன் அர்த்தம் என்னவென்றால், இப்பொழுது நம் கையில் இருக்கும் குர்ஆன், இன்றும் என்றும் ஒரு எழுத்தும் மாறக்கூடாதபடி அசலாயும் இறுதியாயும் இருக்கும் என்பதே.

நாம் அல்லாவின் குர்ஆனுக்கு, அதன் வாசகங்களைப் பற்றிக் கேள்வியேதும் கேட்காமல் அடிபணிய வேண்டும். ஒரு அடிமை, தன் எஜமானிடம் கேள்வி கேட்க முடியுமா? முடியாதல்லவா, அதுபோன்றே, ஒரு முஸ்லிம் குர்ஆனைப்பற்றி வினவமுடியாது.

இந்தக் கட்டத்தில், முஸ்லிம்கள் கிறிஸ்தவர்களைப் பார்த்து, "உங்களுடைய புத்தகம் எப்படி?" எனக் கேட்கிறார்கள். நாமும் குர்ஆனையும் பைபிளையும் ஒப்பிடுவோம்.

## வெளிப்பாடு குறித்த கிறிஸ்தவர்களின் பார்வை

## The Christian View of Revelation

துரதிர்ஷ்டவசமாக, இந்த விஷயம், தவறான அடிப்படையில் ஆரம்பிக்கப்படுகிறது. கிறிஸ்தவர்களைப் பொருத்தமட்டில், வெளிப்படுத்துதல் தொடர்பான அவர்களின் கருத்தில் இருந்து பைபிள் மற்றும் குர்ஆனின் ஒப்பீடு சற்றுக் குறைவுபடுகிறது.

கிறிஸ்தவர்கள் புரிந்துகொண்டுள்ளபடி, தேவன் ஒரே ஒரு வழியின் மூலமாக அல்லாமல், பல வழிகளில் பேசியிருக்கிறார்:

**1. படைத்தல் (Creation):** இயற்கை, இது தெய்வீக வேலைப்பாட்டின் வெளிப்பாடு.

**2. கிரியைகள் (Action):** அதிசயப்படத்தக்க அற்புதங்கள் மூலமாக பல வழிகளில் தேவன் மனித காரியங்களில் நேரடியாக இடைபட்டிருக்கிறார்.

**3. *தீர்க்கதரிசிகள்* (Prophets):** அவர்களுக்கு அருளப்பட்ட வார்த்தைகள் மூலமாக.

நாம் இந்த வெளிப்படுகளைப் பெற்றிருக்கிறோம். ஆனால், ஏதேன் தோட்டத்தில் ஆதாமின் கீழ்படியாமையினால் நாம் பாவிகளானோம். இது நம் மனதினைக் குருடாகி, தேவனை நாம் காணக்கூடாதபடி செய்தது (2 கொரிந்தியர் 4:4). இவ்விதமாய், மனுக்குலம் முழுவதும் தொடர்ந்து தேவனைப் புரிந்துகொள்ளத் தவறியது. இந்தப் பாவத்தினாலே விக்கிரக ஆராதனை ஆரம்பித்தது. மெய்யான ஒரே தேவனைப் பற்றிய அறிவினை நாம் ஒருபோதும் பற்றிக் கொள்ளவில்லை.

இதன் காரணமாக, தேவன் இறுதியான வழியினைத் தெரிந்துகொண்டார். அவர் நம்மில் ஒருவராகி, தமக்காகத் தாமே பேசினார். அவர் தேவனாய் இருப்பதினால், அவரே அவரை நமக்கு வெளிப்படுத்த முடியும். தேவன் ஒருவரே தேவனுக்காய்ப் பேச முடியும். தேவன் யார் என்று நீங்கள் எனக்குச் சொல்ல முயன்றால் நீங்கள் தோற்றுப் போவீர்கள். நானும் ஒன்றும் பெரிதாய்ச் சொல்லிவிட முடியாது, ஏனெனில், பாவியான ஒரு சாதாரண மனிதனால் தேவன் உண்மையில் எப்படிப்பட்டவர் என்பதில் திரித்தே தான் கூற முடியும். அவரைப் பற்றி அவரே தான் வெளிப்படுத்த வேண்டும்; ஏனெனில் இடையிலுள்ள அனைவரும் அவர் போன்ற அளவிட முடியாத பரிசுத்த ஞானத்தில் மிகவும் குறைவு பட்டவர்களே. எனவே அவர் பேசிய நான்காவது வழி இதுவே:

4. தேவனின் அப்பழுக்கற்ற பரிபூரணமான **வார்த்தையாகிய இயேசு தேவன் யார் என்பதை நமக்குக் காண்பித்தார்.**

## இயேசு கிறிஸ்து, தேவனின் வார்த்தை

## Jesus Christ, the Word of God

தாம் யார் என்பதை மனிதருக்கு வெளிப்படுத்தியதில் இயேசு கிறிஸ்து தேவனுக்குக் கீழானவர் அல்ல, அவர் தேவனுக்கு சமமானவர். அனைவரையும் ஒதுக்கிவிட்டு தேவனே தமக்காகப் பேசுகிறார். நிச்சயமாக, கிறிஸ்துவில் மட்டுமே அவர் அறியப்படுகிறார்.

இயேசுவே இதனை அறிவித்தார். இயேசுவின் சீடராகிய அப்போஸ்தலர் பிலிப்பு ஒருமுறை தேவனை அறிய விரும்பினார். அதற்கு இயேசு,

பிலிப்புவே, இவ்வளவுகாலம் நான் உங்களுடனேகூட இருந்தும் நீ என்னை அறியவில்லையா என்னைக் கண்டவன் பிதாவைக் கண்டான்; அப்படியிருக்க, பிதாவை எங்களுக்குக் காண்பியும் என்று நீ எப்படி சொல்லுகிறாய்?

நான் பிதாவிலும், பிதா என்னிலும் இருக்கிறதை நீ விசுவாசிக்கிறதில்லையா? நான் உங்களுடனே சொல்லுகிற வசனங்களை என் சுயமாய்ச் சொல்லவில்லை; என்னிடத்தில் வாசமாயிருக்கிற பிதாவானவரே இந்தக் கிரியைகளைச் செய்துவருகிறார்." என்றார் (யோவான் 14:9-10)

இப்போது நாம் இயேசுவின் வெளிப்பாடினை கடவுளின் ஏனைய வெளிப்பாடுகளுடன் ஒப்பிடுவோம்.

**1. படைப்பு தேவனின் மகிமையை வெளிப்படுத்துகிறது,** ஆனால் விக்கிரக ஆராதனைக்காரர்களும், இதர தெய்வங்களை வணங்குகிறவர்களும் (Pagans) கூட இதைச் சொல்கிறார்கள்! இவர்கள், "தேவன்/இறைவன் யார்" என்று அறிந்துகொண்டார்கள் என நாம் கூற முடியுமா? இல்லை, தேவனைப் பற்றி அறிந்துகொள்ள வெறும் இயற்கையை விட அதனினும் மேலானவையும் தேவை (No, they need more than just nature to tell them what God is like).

**2. அற்புதங்கள், ஒரு *தீர்க்கதரிசி*** தேவனிடமிருந்து வந்தவர் என்பதை உறுதி செய்கிறது. ஆனால், கள்ளத் தீர்க்கதரிசனம் உரைப்பவர்களைப் பாருங்கள், அவர்கள் அனேகம் தேவர்கள் உள்ளார்களென்றும், சில வேளைகளில் தாங்களே தேவர்களென்றும் அறிக்கை செய்கின்றனர்! இந்துக்கள் மற்றும் புத்த மதத்தினரின் தீர்க்கதரிசிகள், அற்புதங்கள் செய்து, நம்பாதவர்களைக் கூட ஆச்சரியத்தில் ஆழ்த்துகின்றனர். ஆனால், இத்தகைய அதிசயங்கள் தேவனைப் புரிந்துகொள்ளப் போதுமானவையா? இல்லை, நமக்கு அற்புதங்களைக் காட்டிலும் அதிகம் தேவை.

**3. பைபிள்,** தீர்க்கத்தரிசிகளின் மற்றும் தூதர்களின் செய்திகளின் தொகுப்பாகும். அது எள்ளளவும் தவறே இல்லாத, தவறவே முடியாத தேவனின் வார்த்தையாகும். இயேசு கிறிஸ்துவில் தேவனின் வெளிப்பாடு அது. முழு பைபிளும் தேவனைப் பற்றிப் பேசுவதாகவே இயேசு போதித்தார். "**வேத வாக்கியங்களை ஆராய்ந்து பாருங்கள்; ... என்னைக்குறித்துச் சாட்சி கொடுக்கிறவைகளும் அவைகளே**" (யோவான் 5:39), பைபிள் நமது புரிந்து கொள்ளுதலின் முடிவல்ல. அது ஒரு ஆரம்ப இடமே, அதாவது, அது இயேசு கிறிஸ்துவை நோக்கிச் சுட்டிக்காட்டும் ஓர் கைகாட்டி. எனினும், நம்முடைய மனித மூளையினால், மிகவும் பக்தியோடும், அதிக அக்கரையோடும் நாம் என்ன தான் ஆராய்ச்சி செய்தாலும், தேவனைப் பற்றி முழுவதுமாக நாம் அறிந்துக் கொள்ள முடியாது (Yet our human minds cannot discover God by any investigation of a book, no matter how devout, serious or religiously committed that investigation is). எனவே, தேவ ஆவியின் (ruh-allah) மூலம் இயேசு கிறிஸ்துவை பைபிளின் வார்த்தைகளில் நாம் கண்டுபிடிக்கிறோம்.

இது இஸ்லாமியருக்குக் குழப்பமாகத் தோன்றலாம்; அல்லது பயமுறுத்துவது போன்றும் இருக்கலாம். இவ்வுண்மையை அவர்களுக்கு விளக்க, நமக்கு ஒரு வித்தியாசமான கோணம் தேவைப் படுகிறது. பலர் ஆராய முனைவது போல குர்ஆனை பைபிளுடன் ஒப்பிடாமல், அதனை இயேசுவுடனாக ஒப்பிடுவது அதிக பலனுள்ளதாய் இருக்கும். ஏனெனில் இரண்டும் கடவுளின் வார்த்தை என்பது மட்டுமல்லாமல் மனிதர்களுக்குக் கடவுளின் உண்மையான வெளிப்பாடாகவும் நிலை நிற்கின்றன.

**சரியான ஒப்பிடுதல்**

**Better Comparisons**

காலங்காலமாக, பல இஸ்லாமியர்களும் கிறிஸ்தவர்களும், முஹம்மதுவை இயேசுவோடும், மற்றும் குர்ஆனை பைபிளோடும் ஒப்பிட்டு வந்துள்ளனர். (கீழேயுள்ள பட்டியலைப் பார்க்கவும்)

| **முந்தய ஒப்பீடுகள்** | **ஏனெனில் இவை இரண்டும் (இவர்கள் இருவரும்)** |
|---|---|
| குர்ஆன்-பைபிள் ஒப்பீடு | ...புத்தகங்கள் |
| முஹம்மது-இயேசு ஒப்பீடு | ...மனிதர்கள் |

**ஆங்கிலத்தில்:**

| ***OLD COMPARISONS*** | **Because both are...** |
|---|---|
| **Qur'an** compared to **Bible** | ...books |
| **Muhammad** compared to **Jesus** | ...men |

இஸ்லாமியரும் கிறிஸ்தவரும் சிறப்பான முறையில், ஒருசில விவாதங்களையே நடத்தியுள்ளனர் என்பதில் ஆச்சரியம் இல்லை! இஸ்லாமின் மற்றும் கிறிஸ்துவத்தின் பொதுவான தன்மைகளை ஒப்பிட்டுப் பார்ப்பது அவைகளை நன்முறையில் விளங்கிப் புரிந்து கொள்ள ஏதுவாகும். ஒப்பிடுவதற்கேதுவான இத்தன்மைகளின் பிரிவுகள் (1) குர்ஆனும், இயேசுவும், (2) முஹம்மதுவும், இயேசுவின் அப்போஸ்தலரும், மற்றும் (3) பைபிளும், ஹதீஸ்கள்/தரிக்ஹ், சீராக்கள் மற்றும் உரைகள் இவைகளும் ஆகும், (பட்டியலைப் பார்க்கவும்).

| முன்னிலும் சிறந்த ஒப்பீடு | ஏனெனில் இவை இரண்டும் இவ்வாறாகக் கருதப்படுகின்றன ... |
|---|---|
| குர்ஆனும், இயேசுவும் | ...கடவுளின் நித்திய வெளிப்பாடு |
| முஹம்மதுவும், இயேசுவின் அப்போஸ்தலரும் | ...வெளிப்பாட்டின் செய்தியினை அறிவித்தவர்கள் |
| பைபிளும், ஹதீஸ்கள்/தரிக்ஹ், சீராக்கள் மற்றும் உரைகள் ஆகிய இவைகளும் | ...வெளிப்பாட்டின் வரலாறும் போதனைகளும் செய்திகளும் |

**ஆங்கிலத்தில்**

| *BETTER COMPARISONS* | **Because both are regarded as...** |
|---|---|
| **Qur'an** compared to **Jesus** | ...the eternal revelation of God |
| **Muhammad** compared to **Jesus' Apostles** | ...messengers of the revelation |
| **Hadith, Tarikh, Sira and Tafsir** compared to the **Bible** | ...the history and teachings of the revelation and messengers |

இது ஒருவரையொருவர் புரிந்துகொள்ள உதவியாயிருக்கும் என்ற அதே வேளையில், நாம் ஒன்றினைக் கவனமாக மனதிற் கொள்ள வேண்டும். அதாவது, புதிய ஏற்பாடு இயேசுவைப் பற்றியே பிரதானமாகப் பேசினாலும், அவருடைய வாழ்க்கை நடைமுறைகளைப் பற்றி அதில் அதிகம் சொல்லப்படவில்லை. மாறாக, ஹதீஸ்களும் சூராவும், முகமதுவின் வாழ்க்கை முறைகளை அவர் என்ன செய்தார் என்பன போன்றவற்றை அவர் கூறியவற்றின் விளக்கங்களுடன் விவரமாகச் சொல்கின்றன.

கிறிஸ்தவர்கள் மற்றும் இஸ்லாமியருக்குள்ளான இறைவனின் வெளிப்பாடு தொடர்பான ஒரு விவாதத்தில் நாம் ஈடுபடுவோமேயானால், அதில் இயேசு கிறிஸ்துவையும் குர்ஆனையும் மட்டுமே ஒப்பிடுதல் வேண்டும், பைபிளையும் குர்ஆனையும் அல்ல. அதாவது, நாம் பைபிளை அல்ல, மாறாக இயேசு கிறிஸ்துவையே நிச்சயமான தேவனின் வெளிப்பாடாகக் கொள்ள வேண்டும். இயேசு தான் தேவனின் இறுதி வார்த்தை. தேவனின் ஆவி மூலமும் பைபிளின் எழுதப்பட்ட வார்த்தையின் மூலமாகவும் நம் தனிப்பட்ட அனுபவத்தின் மூலமாகவும் இன்றும் நாம் காணக்கூடியவர் அவரே.

இக்காரணத்தினாலேயே, நாம் பைபிளை, தேவனால் அருளப்பட்ட பிழையற்ற தேவ வார்த்தை எனவும், இயேசுவின் பிறப்பு, வாழ்க்கை மற்றும் உயிர்த்தெழுதலின் சரித்திரம் முழுவதிலும் அது செயலாற்றுகிறது எனவும் மதிக்கிறோம். விசுவாசத்தின் மூலம் நாம் அவரை அணுகும்போது தேவனை அவர் நமக்கு வெளிப்படுத்துவார். தேவன், மனிதர்களின் வார்த்தைகட்கு மிகவும் அப்பாற்பட்டவர். அவரின்

வார்த்தையினாலன்றி எதினாலும் அவரை வெளிப்படுத்த முடியாது.

தேவ ஆவியானவர் தாமே தேவனைத் தேடுபவர்களுக்குத் தம்மை வெளிப்படுத்த இயேசு கிறிஸ்துவிடமே அழைத்துச் செல்கிறார். வெறும் மனிதர்களின் வார்த்தைகளில் மட்டுமே போலியான கடவுளின் வெளிப்பாட்டைக் கண்டு திருப்தி அடைவோர் வீண் நம்பிக்கையை வளர்க்கட்டும், தடையில்லை, ஆனால் தாமே சுயமாக வெளிப்படுத்தும் தேவனைச் சந்திப்பதைத் தவிர நாம் வேறெதிலும் திருப்தியடைய மாட்டோம்.

இப்புதிய ஒப்பிடுதலின்படி, இயேசு மற்றும் குர்ஆன் இரண்டிற்கும் எந்த விதப் பொருத்தமும் இல்லை. குர்ஆன் என்பது ஒரு சாதாரணப் புத்தகம் தான். அதன் ஆதாரம் ஒரு அநித்தியமான பாவமுள்ள மனிதனின் தோளின் மீது சுமத்தப்பட்டுள்ளது (சூரா 80:1-3). இது இஸ்லாமியராலும் கிறிஸ்தவராலும் ஒரு மனதாய்ப் பாவமற்றவர் எனக் கருதப்படும் இயேசுவுக்கு எவ்வகையிலும் நிகராகாது. அவரின் வார்த்தையின் படியே அவர் தேவன் தான் என்பது பூரணமான வெளிப்பாடு.

In light of these new comparisons, there is no match between the two revelations, Jesus and the Qur'an. The Qur'an is merely a book whose authenticity rests solely on the shoulders of one finite and sinful man (Sura 80:1-3). It is no match against Jesus, revered by Muslims and Christians alike as sinless, who, according to His word, is God Himself, the perfect revelation.

"பூர்வகாலங்களில் பங்குபங்காகவும் வகைவகையாகவும், தீர்க்கதரிசிகள் மூலமாய்ப் பிதாக்களுக்குத் திருவுளம்பற்றின தேவன், இந்தக் கடைசி நாட்களில் குமாரன் மூலமாய் நமக்குத் திருவுளம் பற்றினார்; இவரைச் சர்வத்துக்கும் சுதந்தரவாளியாக நியமித்தார், இவரைக் கொண்டு உலகங்களையும் உண்டாக்கினார்." (எபிரெயர் 1:1-2)

ஆங்கில மூலம்: **How does God reveal Himself?**

This pamphlet was compiled by an interdenominational group of evangelical Christians concerned with Muslim-Christian dialogue.

---

பைபிள் பற்றிய **கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/bible/t08.html

# 14. ஏமாற்றும் இறைவன், திறமையில்லா மஸிஹா

**(அல்லாவைப் பற்றியும், இயேசுவைப் பற்றியும் உண்மையில் இஸ்லாம் என்ன போதிக்கிறது)**

ஆசிரியர்: டேவிட் உட்

கிட்டத்தட்ட இரண்டாயிரம் ஆண்டுகளாக கிறிஸ்தவர்கள் இயேசுவின் மரணம் மற்றும் அவர் உயிர்த்தெழுதலைப் பற்றி சொல்லிக் கொண்டுவருகிறார்கள். இந்த இரண்டு கோட்பாடுகளையும் இஸ்லாம் தள்ளிவிட்டது மற்றும் சிலுவை நேரத்திலும், அதன் பிறகும் என்ன நடந்தது என்று வேறு வகையான நிகழ்ச்சி நிரலை சொல்கிறது. எப்படி இருந்தாலும், இஸ்லாம் தன் சொந்த விளக்கத்திகாக அதிக விலை செலுத்தியுள்ளது. அவர்களின் இந்த விளக்கம் "இறைவனை ஒரு கொடுமையான ஏமாற்றுக்காரராக காட்டுகிறது" மற்றும் தீர்க்கதரிசிகளின் சரித்திரத்திலேயே இயேசு "படுதோல்வி" அடைந்தவராக காட்டுகிறது. இப்படி இருந்தும், "அல்லா உண்மையுள்ளவர்" மற்றும் இயேசு அல்லாவின் தீர்க்கதரிசிகளில் எல்லாம் மிகச்சிறந்தவர் என்று மதிக்கப்படுகிறார் என்று இஸ்லாமியர்கள் சொல்கிறார்கள். அவர்களின் இந்த வாதங்கள் அனைத்தும் குறையுள்ளது, ஏனென்றால், இஸ்லாமிய கோட்பாடுகள் அனைத்தும் பெரும்பான்மையாக வாய்வழி மரபுகளாகவே வருகிறது.

### Allah starts Christianity.... By Accident

#### அல்லா தற்செயலாக உருவாக்கிய கிறிஸ்தவம்

இஸ்லாமிய போதனைகளை நாம் கூர்ந்து ஆராய்ந்தால், கிறிஸ்தவத்தை அல்லா உருவாக்கியதாகவும், மட்டுமல்ல, கிறிஸ்தவத்தை உலகத்தின் மிகப்பெரிய அதிகாரமுடைய மதமாக மாற்றியதாகவும் நாம் கவனிக்க முடியும். இந்த உண்மை எல்லாருக்கும் ஏதோ புதுமையாக தோன்றும், நான் சொல்வதை நம்புங்கள், இஸ்லாமியர்களோ "கிறிஸ்தவம் ஒரு தவறான மதம்" என்று சொல்கிறார்கள். கிறிஸ்தவம் மனிதர்களால் மாற்றப்பட்டதால், அது ஒரு பிழையான மதம் என்று இஸ்லாமியர்கள் பதில் சொல்கிறார்கள். இதே செய்தியைத்தான் அல்லா மரியமின் மகனான இயேசுவிற்குச் சொன்னார்.

இயேசுவை பின்பற்றியவர்கள் (சீடர்கள்) இப்போதுள்ள இஸ்லாம் போல ஒரு கோட்பாட்டை நம்பியதாக ஒரு சிறு ஆதாரமும் இல்லை. இது ஒரு புறமிருக்க, இஸ்லாம் படி, கிறிஸ்தவத்தை திருத்தியதே அல்லா தான் (According to Islam, Christianity was corrupted by Allah himself) இஸ்லாம் ஏன் நம்மை இப்படி நம்பச்சொல்கிறது என்று புரிந்துக்கொள்ளவேண்டுமானால், நாம் சில உண்மைகளை தெரிந்துக்கொள்ளவேண்டும்.

**FACT #1: இயேசு அல்லாவின் தூதர் என்றும், இஸ்லாமின் தீர்க்கதரிசி(நபி) என்றும் குர்-ஆன் கூறுகிறது:**

இயேசு பிறந்த குழந்தையாக இருந்த நாளிலிருந்தே இஸ்லாமிய கோட்பாடுகளை (Islamic Theology) போதித்துவந்தார் என்று குர்-ஆன் அதிகாரம் (சூரா) 19 சொல்கிறது.

**பின்பு (அவருக்கு ஏற்பட்ட) பிரசவ வேதனை அவரை ஒரு பேரீத்த மரத்தின்பால் கொண்டு வந்தது "இதற்கு முன்பே நான் இறந்து, முற்றிலும் மறக்கப் பட்டவளாகி இருக்கக் கூடாதா" என்று கூறி(அரற்றி)னார். (19:23) (அப்போது ஜிப்ரயீல்) அவருக்குக் கீழிருந்து "(மர்யமே!) கவலைப்படாதீர்கள்! உம்முடைய இறைவன்**

**நிச்சயமாக உமக்கு கீழாலேயே ஒரு சின்ன ஆற்றை உண்டாக்கியிருக்கின்றான்" என்று அழைத்து கூறினான். (19:24) "இன்னும், இந்த பேரீச்ச மரத்தின் கிளையைப் பிடித்து உம் அருகில் இழுத்துக் குலுக்கும்; (கொய்வதற்குப்) பக்குவமான பழங்களை உம் மீது அது உதிர்க்கும். (19:25)**

**"ஆகவே, (அவற்றை) உண்டு, (ஆற்று நீரைப்) பருகி கண் குளிர்ந்து இருப்பீராக! பின்னர் எந்த மனிதரையேனும் நீர் பார்க்க நேரிட்டால், 'மெய்யாகவே அர்ரஹ்மானுக்காக நான் நோன்பிருப்பதாக நேர்ந்திருக்கின்றேன்; ஆதலின் இன்றைய தினம் எந்த மனிதருடனும் பேச மாட்டேன்" என்று கூறும். (19:26)**

**"நிச்சயமாக நான் அல்லாஹ்வுடைய அடியானாக இருக்கின்றேன்; அவன் எனக்கு வேதத்தைக் கொடுத்திருக்கின்றான்; இன்னும், என்னை நபியாக ஆக்கியிருக்கின்றான். (19:30)**

**"இன்னும், நான் எங்கிருந்தாலும், அவன் என்னை முபாரக்கினாவனாக (நற்பாக்கியமுடையவனாக) ஆக்கியிருக்கின்றான்; மேலும், நான் உயிருடன் இருக்கும் காலமெல்லாம் தொழுகையையும், ஜகாத்தையும் (நிறைவேற்ற) எனக்கு வஸீயத் செய்து (கட்டளையிட்டு) இருக்கின்றான். (19:31)**

**"என் தாயாருக்கு நன்றி செய்பவனாக (என்னை ஏவியிருக்கின்றான்;) நற்பேறு கெட்ட பெருமைக்காரனாக என்னை அவன் ஆக்கவில்லை. (19:32)**

**"இன்னும், நான் பிறந்த நாளிலும், நான் இறக்கும் நாளிலும் (மறுமையில்) நான் உயிர் பெற்று எழும் நாளிலும் என் மீது சாந்தி நிலைத்திருக்கும்" என்று (அக்குழந்தை) கூறியது. (19:33) [2]**

இயேசு தன் வாழ்நாள் முழுவதும், அதாவது அல்லா தன்னை தன் அளவில் உயர்த்திக்கொள்ளும்வரை இந்த இஸ்லாமிய கோட்பாடுகளை போதித்துவந்தார். குர்-ஆன்படி இயேசு கொண்டுவந்த இஞ்ஜில் என்ற வேதத்தின் செய்தியும், தனக்கு முன் வந்த தீர்க்கதரிசிகள் கொண்டுவந்த செய்தியும் வெவ்வேறானவை அல்ல. இயேசு அல்லாவின் ஊழியனாகவும், நபியாகவும் இருந்து இஸ்லாமை போதித்தார்.

**நூஹுக்கு எதனை அவன் உபதேசித்தானோ, அதனையே உங்களுக்கும் அவன் மார்க்கமாக்கியிருக்கின்றான். ஆகவே (நபியே) நாம் உமக்கு வஹீ மூலம் அறிவிப்பதும், இப்றாஹீமுக்கும், மூஸாவுக்கும், ஈஸாவுக்கும் நாம் உபதேசித்ததும் என்னவென்றால்; "நீங்கள் (அனைவரும்) சன்மார்க்கத்தை நிலை நிறுத்துங்கள், நீங்கள் அதில் பிரிந்து விடாதீர்கள்' என்பதே - இணைவைப்போரை நீங்கள் எதன் பக்கம் அழைக்கின்றீர்களோ, அது அவர்களுக்குப் பெரும் சுமையாகத் தெரிகிறது - தான் நாடியவர்களை அல்லாஹ் தன் பால் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான் - (அவனை) முன்னோக்குபவரை அவன் தன்பால் நேர்வழி காட்டுகிறான்.(42:13) [3]**

**அவர் (ஈஸா நம்முடைய) அடியாரே அன்றி வேறில்லை அவருக்கு நாம் அருட்கொடையைச் சொரிந்து இஸ்ராயீலின் சந்ததியாருக்கு அவரை நல்லுதாரணமாக ஆக்கினோம். (43:59) இன்னும், ஈஸா தெளிவான அத்தாட்சிகளுடன் வந்தபோது "மெய்யாகவே நான் உங்களுக்கு ஞானத்தைக் கொண்டு வந்திருக்கிறேன்; நீங்கள் கருத்து வேற்றுமையுடன் இருக்கும் சிலவற்றை உங்களுக்கு விளக்கிக் கூறுவேன் - ஆகவே நீங்கள் அல்லாஹ்விடம் பயபக்தியுடன் இருங்கள்; எனக்கும் கீழ்படியுங்கள்" என்று கூறினார். (43:63) நிச்சயமாக, அல்லாஹ்தான் எனக்கும் இறைவன், உங்களுக்கும் இறைவன். ஆகவே அவனையே வணங்குங்கள், இதுவே ஸிராத்துல் முஸ்தகீம் (நேரான வழி). (43:64) [4]**

ஆக, இயேசு தான் பிறந்ததிலிருந்து, வானத்திற்கு அல்லாவிடம் எடுத்துக்கொள்ளப்படும் காலம் வரை, கிட்டத்தட்ட 33 ஆண்டுகள் இஸ்ரவேல் மக்களுக்கு இஸ்லாமை போதிப்பதில் செலவழித்தார். அவர் சிலுவையில் அறையப்படுவதற்கு கொண்டுபோகப்படும் முன்பு வரை அவருடைய இஸ்லாமிய பிரச்சாரம் ஓரளவிற்கு வெற்றிப்பெற்றதாக இருந்தது என்றுச் சொல்லலாம். ஏனென்றால், அவரை பின்பற்றுகிற பல சீடர்கள் அவருக்கு இருந்தார்கள் என்பதை நாம் இதற்கு ஆதாரமாகக் கொள்ளலாம்.

**FACT #2: இயேசு பல சீடர்களை சம்பாதித்தார் என்று குர்-ஆன் சொல்கிறது.**

இயேசு தன் வாழ்நாள் முழுவதும் இஸ்லாமை போதித்தபடியால், அவருடைய ஆரம்பகால சீடர்களுக்கு அவர் கொடுத்த செய்தி, இஸ்லாமின் அடிப்படை கோட்பாடுகளைச் சுற்றியே இருந்திருக்கும். இப்போதுள்ள முஸ்லீம்கள் போல அவருடைய சீடர்கள் போதிக்கப்பட்டு(அ) கற்றுக்கொடுக்கப்பட்டு இருப்பார்கள். இதைத் தான் இஸ்லாம் (குர்-ஆன்) இயேசுவைப்பற்றி கீழ்கண்டவாறுச் சொல்கிறது:

**அவர்களில் குஃப்ரு இருப்பதை (அதாவது அவர்களில் ஒரு சாரார் தம்மை நிராகரிப்பதை) ஈஸா உணர்ந்த போது, "அல்லாஹ்வின் பாதையில் எனக்கு உதவி செய்பவர்கள் யார்?" என்று அவர் கேட்டார்; (அதற்கு அவருடைய சிஷ்யர்களான) ஹவாரிய்யூன்; "நாங்கள் அல்லாஹ்வுக்காக (உங்கள்) உதவியாளர்களாக இருக்கிறோம், நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின் மீது ஈமான் கொண்டுள்ளோம்; திடமாக நாங்கள் (அவனுக்கு முற்றிலும் வழிப்பட்ட) முஸ்லீம்களாக இருக்கின்றோம், என்று நீங்கள் சாட்சி சொல்லுங்கள்" எனக் கூறினர். (3:52) [5]**

**"என் மீதும் என் தூதர் மீதும் ஈமான் கொள்ளுங்கள்" என்று நான் ஹவாரிய்யூன் (சீடர்)களுக்கு தெரிவித்தபோது, அவர்கள், "நாங்கள் ஈமான் கொண்டோம், நிச்சயமாக நாங்கள் முஸ்லீம்கள் (அல்லாஹ்வுக்கு வழிப்பட்டவர்கள்) என்பதற்கு நீங்களே சாட்சியாக இருங்கள்" என்று கூறினார்கள். (5:111) [6]**

**அன்றியும், திடமாக நாமே நூஹையும், இப்ராஹீமையும் (தூதர்களாக) அனுப்பினோம், இன்னும், அவ்விருவரின் சந்ததியில் நுபவ்வத்தை (நபித்துவத்தை)யும் வேதத்தையும் ஏற்படுத்தினோம், (அவர்களில்) நேர்வழி பெற்றவர்களும் உண்டு, எனினும் அவர்களில் பெரும்பாலோர் ஃபாஸிக்குகளாக - பாவிகளாக இருந்தனர். (57:26)[7]**

குர்-ஆன் சொல்வது உண்மையானால், இயேசு குறைந்தபட்சம் சில இஸ்ரவேல் மக்களையாவது இஸ்லாமுக்கு மாற்றியிருப்பார். ஆனால், இப்படிப்பட்ட மாற்றம் நடந்தது என்று ஒரு சரித்திர ஆதாரமும் இல்லை. இருந்தாலும் விவாதத்திற்காக வேண்டி, இயேசுவின் இஸ்லாமிய போதனைகளை விசுவாசித்த முதல் நூற்றாண்டு யூதர்கள் முஸ்லீம்களாக மாறினார்கள் என்று நாம் எண்ணிக்கொள்வோம். இப்படிப்பட்ட கருத்து (Assumption), இஸ்லாமுக்காக வாதாடுபவர்களுக்கு எதிராக பல பிரச்சனைகளுக்கு வழி வகுக்கும் என்று இனி நாம் பார்க்கப்போகிறோம்.

**FACT #3: இயேசுவின் போதனையைக்கேட்டு முதல் நூற்றாண்டு யூதர்கள் இஸ்லாமியர்களாக மாறியிருந்தாலும், அவர்களின் இஸ்லாமிய நம்பிக்கை அதிக நாட்கள் நீடிக்கவில்லை.**

இயேசுவின் சீடர்கள் முஸ்லீம்களாக இருந்தார்கள் என்ற வாதம் ஒரு தெளிவான கேள்வியை எழுப்பக்கூடியதாக உள்ளது. முதல் நூற்றாண்டில் முஸ்லீம்கள் இருந்தார்கள் என்பதை ஏன் நாம் ஒரு முறைகூட கேள்விப்பட்டதே இல்லை? இயேசுவை முதல் நூற்றாண்டில் பின்பற்றியவர்ககளைப்பற்றி

அதிகபடியான சரித்திர விவரங்கள் இன்று நம்மிடம் உள்ளது, ஆனால், முஸ்லீம்கள் பற்றிய ஒரு ஆதாரமும் ஏன் நம்மிடம் இல்லை? இயேசுவை பின்பற்றிய கிறிஸ்தவ அல்லாத மார்க்க (இஸ்லாம் சம்மந்தப்பட்ட) எல்லா விவரங்களையும் கிறிஸ்தவம் துடைத்துவிட்டது என்று இஸ்லாமுக்காக வாதாடுபவர்கள் இதற்கு பதிலாக சொல்வார்கள். ஆனால், அவர்களின் இந்த பதில் வெறும் அறிவீனமான வாதமே ஒழியவேறில்லை. கிறிஸ்தவத்திற்கு முந்தைய நம்பிக்கைகளைச் சொல்லக்கூடிய கிறிஸ்தவ மற்றும் கிறிஸ்தவம்-அல்லாத நிறைய ஆதாரங்கள் நம்மிடம் உள்ளன. ஆனால், இந்த இரண்டு விதமான ஆதாரங்களிலும் (Christian and Non-Christian Source), ஒரு “முஸ்லீம்-கிறிஸ்தவன்” இருந்ததாக ஒரு தகவலும் இல்லை. ஒன்று மட்டும் நாம் நிச்சயமாகச் சொல்லலாம், அதாவது "இயேசுவின் மரணம்" பற்றிய விவரம் அந்த காலத்து அதிகாரிகளுக்கு தெரிந்தவிவரமாக இருந்தது. மற்றும் இயேசுவின் ஆரம்பகால சீடர்களாகிய பேதுரு, யாக்கோபு மற்றும் யோவான் போன்றவர்களுக்கு கூட இயேசு தங்கள் பாவங்களுக்காக மரித்தார் என்றும் பிறகு உயிர்த்தெழுந்தார் என்றும் அவர்கள் நம்பினர். (இது மட்டுமல்ல இயேசுவின் சீடர்கள் இயேசு ஒரு தேவகுமாரன் என்று நம்பினர், இது இப்போதைக்கு என் கட்டுரையின் கருப்பொருள் அல்ல) இயேசு மரித்தார் மறுபடியும் உயிர்த்தெழுந்தார் என்று ஆரம்பகால கிறிஸ்தவர்கள் நம்பினார்கள் என்று புதிய ஏற்பாட்டின் நான்கு சுவிசேஷங்களிலிருந்தும், அப்போஸ்தலர் நடபடிகள் புத்தகத்திலிருந்தும் நாம் தெரிந்துக்கொள்கிறோம். பவுல் எழுதிய கடிதங்கள் கூட இயேசுவின் மரணம் உயிர்த்தெழுதல் பற்றி அடிக்கடி குறிப்பிடுவதை காணலாம். மட்டுமல்ல, இயேசுவிற்கு பிறகு வாழ்ந்த கிறிஸ்தவர்களின் நம்பிக்கையை நாம் 1 கொரிந்தியர் 15ம் அதிகாரத்தில் காணலாம். எனவே இயேசுவின் சீடர்கள் (அப்போஸ்தலர்கள்) காலத்தில் நிலவிய அவர்களின் நம்பிக்கைக்கு இது ஒரு அத்தாட்சியாகக் கொள்ளலாம்.

**நான் அடைந்ததும் உங்களுக்குப் பிரதானமாக ஒப்புவித்ததும் என்னவென்றால், கிறிஸ்துவானவர் வேதவாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக மரித்து, அடக்கம்பண்ணப்பட்டு, வேதவாக்கியங்களின்படி மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்து, கேபாவுக்கும், பின்பு பன்னிருவருக்கும் தரிசனமானார் [8]**

இயேசுவின் சீடர்களின் நம்பிக்கையைப் பற்றிச் சொல்கின்ற புதிய ஏற்பாடு அல்லாத மற்ற கிறிஸ்தவ ஆதாரங்களும் (Early Christian Writings) இன்று நம்மிடம் உள்ளது.

உதாரணத்திற்கு: அப்போஸ்தர் பேதுரு "ரோம பேராயராக" நியமித்த “**ரோம் கிளமண்ட் (Clement of Rome)”** என்பவர் கூட பல முறை அப்போஸ்தர்களின் நம்பிக்கையாகிய "இயேசுவின் மரணம் மற்றும் அவரது உயிர்த்தெழுதல்" பற்றி பலமுறை எழுதியுள்ளார் [9]. அப்போஸ்தலர் **யோவான் நியமித்த போலிகார்ப் (Polycarp),** என்பவரும் இயேசுவின் உயிர்த்தெழுதல் பற்றி பலமுறை எழுதியுள்ளார் [10]. இன்னும் பல "கிறிஸ்தவ அல்லாத ஆதாரங்கள் (Non-Christian Writings)" இயேசுவைப் பற்றியும், அவரது அப்போஸ்தலர்கள் பற்றியும் மிக முக்கியமான விவரங்களைச் சொல்கின்றன. **யூத சரித்திர ஆசிரியர் "ஜோசபாஸ் (Josephus)"** மற்றும் **ரோம சரித்திர ஆசிரியர் டாசிடஸ்** (Tacitus) இவர்களின் விவரங்களின்படி, இயேசு பொந்தியுஸ் பிலாத்து (Pontius Pilate) என்பவர் ஆட்சிசெய்யும் போது சிலுவையில் அறையப்பட்டார் [11]. ஒரு கிரேக்க நகைச்சுவை (Satirist) எழுத்தாளர் "Lucian of Samosata" என்பவர் இவ்விதமாகச் சொல்கிறார், **"இன்று கிறிஸ்தவர்கள் என்பவர்கள் ஒரு மனிதனை வணங்குகிறார்கள், இவர்களுடைய எல்லா நம்பிக்கைக்கும் அவர் தான் காரணர் மற்றும் இதனாலேயே அவர் சிலுவையில் அறையப்பட்டார்** "[12]. அவ்வளவு ஏன், யூதர்களின் தல்மட் (Talmud) கூட இயேசுவின் சிலுவையில் அறையப்படுதலைப் பற்றிச் சொல்கிறது [13].

**எனவே, குர்-ஆன் சொல்லும் (1) இயேசு மரிக்கவில்லை, (2) இயேசுவின் சீடர்கள் முஸ்லீம்களாக இருந்தார்கள் என்ற வாதம் தவறானது என்று நாம் நிச்சயமாகச் சொல்லலாம்.**

உண்மை இப்படி இருந்தாலும், வாதத்திற்காக வேண்டி, முதல் நூற்றாண்டில் குறிப்பிட்ட அளவிற்கு முஸ்லீகள் இருந்ததாகவும், அவர்களுடைய விவரங்கள் சம்மந்தப்பட்ட ஆதாரங்கள் அனைத்தும், பின்பு வந்த கிறிஸ்தவர்கள் அழித்துவிட்டதாகவும் நினைத்துக்கொள்வோம். நாம் மேலே சொன்னது போல வித்தியாசமான கற்பனையை (Outlandish Assumption) நினைத்துக்கொண்டாலும், இதனால், முஸ்லீம்களுக்கு நிறைய பிரச்சனைகள் எழுகின்றன:

**1. இந்த முதல் நூற்றாண்டு முஸ்லீம்கள் என்ன ஆனார்கள்?**

**2. ஏன் இயேசுவின் தியாக மரணம் மற்றும் மரணத்திலிருந்து உயிர்த்தெழுந்தார் என்ற நம்பிக்கை, இஸ்லாம் நம்பிக்கையை மாற்றிவிட்டது?**

**3. ஏன் இயேசுவின் 33 வருடகால இஸ்லாமிய போதனை ஒரு நம்பிக்கையாக மதிக்கப்படாமல் அழிந்துவிட்டது?**

இந்த கேள்விகளுக்கு வழக்கம் போல "கிறிஸ்தவர்கள் இயேசுவின் போதனையை மாற்றிவிட்டார்கள், மற்றும் கிறிஸ்தவ குருக்கள் இயேசுவின் இஸ்லாமிய போதனையை மொத்தமாக அழித்துவிட்டார்கள்" என்று இஸ்லாமியர்கள் பதில் சொல்வார்கள். ஆனால், ஒரு உண்மையான முஸ்லீம் இதை ஏற்றுக்கொள்ளமாட்டான், காரணம் இது இயேசுவிற்கு என்ன நடந்தது என்று குர்-ஆன் சொல்வதை மறைத்துவிடுகிறது.

**FACT #4: “இயேசு சிலுவையில் மரித்தார்” என்று மக்கள் அனைவரும் நம்பும்படி அல்லா எல்லா மக்களையும் ஏமாற்றினார் (Deceive) என்று குர்-ஆன் சொல்கிறது**

குர்-ஆனின் கூற்றுப்படி, இயேசு சில யூதர்களை முஸ்லீம்களாக மாற்ற அவரால் முடிந்தது என்று அறியலாம். ஆனால், இயேசுவின் சீடர்கள் அல்லது அவரை பின்பற்றியவர்கள், அவரின் மரணம் மற்றும் உயிர்த்தெழுதலை நம்பினார்கள் என்று சரித்திரத்தின் மூலமாக நாம் அறிந்துக்கொள்ளலாம். இருந்தாலும், இயேசு வானத்திற்கு எடுத்துக்கொண்ட பிறகு ஏன் "ஒரு முஸ்லீம் கூட" இல்லை? என்ற கேள்வி எழுகிறது. இதற்கு பதில் என்னவென்றால், இயேசுவை பின்பற்றிய எல்லாரும் "இயேசு சிலுவையில் மரித்தார் என்றும் அவர் மறுபடியும் மரித்ததிலிருந்து உயிரோடு எழுந்தார்" என்றும் நம்பினார்.

சரி, இவர்களுக்கு "இயேசு சிலுவையில் மரித்தார்" என்ற ஐடியாவை(விவரத்தை) யார் கொடுத்தது? இஸ்லாம் கூற்றுப்படி, "இயேசு சிலுவையில் மரித்தார்" என்ற ஐடியாவை ஆரம்பித்தவரே (கொடுத்தவரே) அல்லா தான்.

**இன்னும், "நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின் தூதராகிய - மர்யமின் குமாரராகிய-ஈஸா மஸீஹை கொன்றுவிட்டோம்" என்று அவர்கள் கூறுவதாலும் (அவர்கள் சபிக்கப்பட்டனர்). அவர்கள் அவரைக் கொல்லவுமில்லை, அவரை அவர்கள் சிலுவையில் அறையவுமில்லை. ஆனால் அவர்களுக்கு (அவரைப் போன்ற) ஒருவன் ஒப்பாக்கப்பட்டான்; மேலும் இ(வ் விஷயத்)தில் அபிப்ராய பேதம் கொண்டவர்கள், அதில் சந்தேகத்திலேயே இருக்கின்றார்கள் - வெறும் யூகத்தைப் பின்பற்றுவதேயன்றி அவர்களுக்கு இதில் எத்தகைய அறிவும் கிடையாது. நிச்சயமாக அவர்கள், அவரைக் கொல்லவே இல்லை. (4:157) ஆனால் அல்லாஹ் அவரைத் தன் அளவில் உயர்த்திக் கொண்டான் - இன்னும் அல்லாஹ் வல்லமை மிக்கோனாகவும் ஞானமுடையோனாகவும் இருக்கின்றான். (4:158) [14]**

இயேசுவை கொல்ல நினைத்தவர்களை மட்டும் ஏமாற்ற வேண்டும் என்பது தான் அல்லாவின் முக்கிய நோக்கமாக இருந்திருக்கும் என்று நாம் நினைத்தாலும், இயேசுவின் சீடர்களும் அல்லாவால் ஏமாற்றப்பட்டனர் என்பதை நாம் சந்தேகத்திற்கு இடமில்லாமல் புரிந்துக்கொள்ளலாம். அப்படியானால்,

இயேசு சிலுவையில் மரித்தார் என்ற கிறிஸ்தவ நம்பிக்கைக்கு யார் பொறுப்பு? (So who is responsible for the Christian belief that Jesus died on the cross?)

இஸ்லாம் (குர்-ஆன்) சொல்வது உண்மையான தகவலாக இருக்குமானால், இயேசுவின் எதிரிகள் அவரை கொன்றுவிட்டோம் என்ற எண்ணம் அவர்களுக்கு வரவேண்டும் என்று அல்லா அவர்களை ஏமாற்றுவதற்கு முடிவு செய்தார். அதனால், "இயேசு சிலுவையில் மரித்தார்" என்ற ஐடியா அல்லது நம்பிக்கை வருவதற்கு காரணமே அல்லா தானே! இது இன்னும் பல பிரச்சனைகளை உருவாக்கிவிடும். இயேசுவின் சீடர்கள் ஏமாற்றப்பட்டது "தற்செயலாக (unintentional) அல்லது ஒரு விபத்தாக நடந்தது" என்று சொல்வீர்களானால், நாம் இந்த முடிவுக்கு வரலாம், அது என்னவென்றால், "உலகத்தில் மிகப்பெரிய ஒரு பொய்யான மதம் உருவாகப்போகிறது" என்பதை அல்லா அறியாமல் இதை செய்தார் என்று நாம் முடிவு செய்யலாம். இல்லை, அல்லா இதை தெரிந்தே வேண்டுமென்றே செய்தார் என்று சொன்னால், அல்லாவிற்கு பொய்யான மதங்களை உலகத்தில் உருவாக்கும் வியாபாரம் உள்ளது என்று முடிவு செய்யலாம். ஆக, இஸ்லாமின் இறைவனாகிய அல்லா, ஒரு சின்ன விஷயத்தை கூட சரியாக செய்யத்தெரியாத "அறியாமையில்" இருக்கிறார் என்று முடிவு செய்யலாம், அல்லது "அவர் தெரிந்தே ஏமாற்றக்கூடியவர்" என்ற முடிவிற்கு வரலாம். (If the deception of the disciples was unintentional, then we must conclude that God didn't realize that he was about to start the largest false religion in the world. If it was intentional, then God is in the business of starting false religions. Therefore, the God of Islam is either dreadfully ignorant or maliciously deceptive.)

**முகமதுவின் கூற்றுப்படி தீர்க்கதரிசிகளின் சரித்திரத்திலேயே இயேசுவின் ஊழியம் ஒரு மிகப்பெரிய தோல்வியை அடைந்தது.** இயேசு 33 ஆண்டுகள் இஸ்லாமிய போதனையை போதிப்பதில் கழித்தார் (அதிலும், அவர் குழந்தையாக இருந்ததிலிருந்தே இஸ்லாமிய கோட்பாடுகளை போதித்தார் என்று இஸ்லாம் கூறுகிறது), அப்படியிருந்தும், அவர் மரித்த சில நாட்களுக்குள் இஸ்ரவேல் மக்கள் இரண்டு பெரும் பிரிவுகளாக பிரிந்தனர். முதல் பிரிவு மக்கள் இயேசுவின் போதனை கேட்டவர்கள் "கிறிஸ்தவர்களாக" மாறிவிட்டனர், இவர்கள் கற்பனைகூட செய்யமுடியாத பாவமான "ஷிர்க் - SHIRK"[15] என்ற பாவத்தை செய்தவர்களாயினர். இரண்டாம் பிரிவு மக்களாகிய இவர்கள் "இயேசுவின் போதனைக்கு" கீழ்படியாததினால், இவர்களும் "இறைவனின் மிகப்பெரிய தீர்க்கதரிசியை" தள்ளிவிட்ட அல்லது நம்பாத பாவத்திற்கு ஆளானார்கள். ஆக, இயேசுவை நம்பினவர்கள், இயேசுவை நம்பாதவர்கள் இந்த இரு பிரிவினரும் கடைசியில் நரகநேருப்பில் பங்கடைய அல்லாவால் தண்டனைக்கு உட்பட்டார்கள். இப்படியிருந்தும், முஸ்லீம்கள் "இயேசு தீர்க்கதரிசிகளிலேயே சிறந்தவர்" என்றுச் சொல்வது மிகவும் ஆச்சரியத்தைத் தருகிறது. **அதாவது, இயேசு, கடைசி வரை முஸ்லீமாக இருக்கக்கூடிய ஒருவரையாவது "சம்பாதித்து" இருந்திருக்கலாம். ஆனால், அவர் அப்படிப்பட்ட ஒருவரையும் இஸ்லாமுக்கு மாற்றவில்லை.** மட்டுமல்ல, ஒரு இஸ்லாம் தீர்க்கதரிசியாக, இயேசு, அல்லாவின் ஏமாற்றும் செயலில் தன் சீடர்களாகிய நீங்கள் ஏமாறக்கூடாது என்று அவர்களை எச்சரித்து இருந்திருக்கலாம். ஆனால், இயேசு தன் ஊழிய நாட்கள் அனைத்திலும் இப்படிப்பட்ட எச்சரிக்கை செய்தியை அல்லாவிடமிருந்து பெறவில்லை, அதனால், தன்னை பின்பற்றியவர்களுக்கு இதைப் பற்றி சொல்லவில்லை. இதன் பலனாக, உலகத்தின் கோடான கோடி மக்கள், இப்போது இஸ்லாமை ஏற்றுக்கொள்ள மறுக்கின்றனர், ஏனென்றால், இயேசு தங்கள் பாவங்களுக்காக சிலுவையில் மரித்தார் என்று அவர்கள் நம்புகின்றனர். ஏன் இவர்கள் இப்படி நம்புகின்றனர் என்றால், இந்த செய்தியை முதலாவது பரப்பியதே "ஏமாற்றும் இறைவனாகிய" அல்லாவும், படுதோல்வி அடைந்த மஸிஹாவுமே.

## Allah Spreads the False Religion He Accidentally Started

### தற்செயலாக ஆரம்பித்த பொய்யான மதத்தை, அல்லா பெருகச்செய்தார்

இஸ்லாமின் போதனையை நாம் கூர்ந்து கவனித்தால், அல்லா "கிறிஸ்தவ மார்க்கத்தை" தெரிந்தோ அல்லது தேரியாமலோ (intentionally or unintentionally) துவக்கினார் என்ற முடிவிற்கு வரலாம். அதோடு மட்டும் குர்-ஆன் நின்றுவிடவில்லை. தான் செய்த குழப்பத்தை சரி செய்வதை விட்டுவிட்டு, அல்லா "கிறிஸ்தவ மார்க்கத்தை" அடுத்த நிலைக்கு கொண்டுச் செல்கிறார்.

### FACT #5: கிறிஸ்தவ மார்கம் வளர்ச்சி அடைய அல்லா உதவியதாக குர்-ஆன் சொல்கிறது

இயேசுவின் மரணம் மற்றும் உயிர்த்தெழுதல் என்ற நம்பிக்கைக்கு அடித்தளம் அல்லா அமைத்ததோடு மட்டுமல்லாமல், அந்த பொய்யான செய்தியை (False Message) கிறிஸ்தவர்கள் பரப்புவதற்கும் மிகவும் நேர்த்தியாக அல்லா உதவினார்.

**ஈமான் கொண்டவர்களே! மர்யமின் குமாரர் ஈஸா (தம்) சீடர்களை நோக்கி, "அல்லாஹ்வுக்காக எனக்கு உதவி செய்வோர் யார்?" எனக் கேட்க, சீடர்கள், "நாங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்களாக இருக்கின்றோம்" என்று கூறியதுபோல், நீங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்களாக ஆகிவிடுங்கள் - எனினும், இஸ்ராம?ீல் மக்களில் ஒரு கூட்டம் ஈமான் கொண்டது, பிறிதொரு கூட்டமோ நிராகரித்தது, ஆகவே ஈமான் கொண்டவர்களுக்கு, அவர்களுடைய பகைவர்களுக்கு எதிராக உதவி அளித்தோம் - அதனால் அவர்கள் வெற்றியாளராய் ஆகிவிட்டார்கள். (61:14) [16]**

இந்த வசனம் மிகவும் முக்கியமான வசனம். இயேசுவின் போதனையை தள்ளிவிட்ட யூதர்களுக்கு எதிராக, அல்லா இயேசுவை பின்பற்றியவர்களுக்கு(சீடர்களுக்கு) உதவி செய்ததாக இந்த வசனம் சொல்கிறது. மற்றும் இந்த வசனத்தின்படி "இயேசுவின் சீடர்கள் வெற்றியாளர்கள் ஆகிவிட்டார்கள்" என்று குர்-ஆன் சொல்கிறது. எனவே, யூதர்களை விட மிகவும் வலிமைவாய்ந்தவர்களாக மாறிய மற்றும் இயேசுவை பின்பற்றியவர்களாகிய இவர்கள் யார்? இந்த விவரத்திற்கு சரியாக பொருந்துகிறவர்கள் சரித்திரத்தின் படி "ஆதி கிறிஸ்தவர்கள் - orthodox Christians" தான், இவர்களின் நம்பிக்கை "இயேசுவின் மரணத்தின் மீதும், அவர் உயிர்த்தெழுதலிலும், அவருடைய தெய்வீக தன்மையின்" மீதும் இருந்தது. இயேசுவின் போதனை மாற்றப்பட்டது என்றும், உண்மை சுவிசேஷம் (இஞ்ஜில் - Gospel) துடைக்கப்பட்டது என்றும் இஸ்லாமியர்கள் இப்போது வாதிக்கமுடியாது, ஏனென்றால், இந்த மக்கள் கூட்டம் குர்-ஆன் வசனம் சொல்லும் மக்கள் அல்ல. ஒருவேளை குர்-ஆன் சொல்வது படி, முதல் நூற்றாண்டில் "முஸ்லீம்-கிறிஸ்தவ" கூட்ட மக்கள் இருந்ததாக ஏற்றுக்கொண்டாலும், அவர்கள் மற்றவர்களின் மீது வெற்றியுள்ளவர்களாக இருக்கவில்லை. அவர்கள் மிக சீக்கிரமாக துடைத்துவிடப்பட்டார்கள். இயேசுவை பின்பற்றியவர்களில், யூதர்களை விட அதிகமாக வலிமையானவர்கள், பிரகாசித்தவர்கள் கிறிஸ்தவர்களே. ரோம சாம்ராஜ்ஜியத்தில் அதிகமாக பரவியது இந்த கிறிஸ்தவமே. இந்த கிறிஸ்தவர்களின் அடிப்படை நம்பிக்கை, இன்று உள்ள கிறிஸ்தவர்களின் நம்பிக்கையைப் போலவே இருந்தது. ஆக, குர்-ஆன் வசனத்தின் படி இந்த கிறிஸ்தவர்கள் அதிகாரத்திற்கு வர அல்லா உதவியாக இருந்தார் அதாவது வெற்றியாளர்களாக மாற்றினார். பின் எப்படி, கிறிஸ்தவம் வளர்ந்து, உலகத்தின் மிகப்பெரிய மதமாக மாறியது? இது அல்லாவின் வல்லமை சக்தியினால் வளர்ந்தது! மற்றும் கிறிஸ்தவ அடிப்படை செய்தியாகிய "இயேசு சிலுவையில் மரித்தார்" என்ற செய்தியை உருவாக்கியது யார்? இறைவன்(அல்லா) தான் இந்த செய்தியை கண்டுபிடித்தார் (Invented). கிறிஸ்தவம் அல்லாத சரித்திர ஆசிரியர்கள் (non-Christian historians) கூட இயேசுவின் மரணம் ஒரு நிருபிக்கப்பட்ட ஆதாரமாக உள்ளது என்று ஏற்றுக்கொள்ளக்கூடிய அளவிற்கு, இந்த செய்தி பரவியிருக்கிறது [17]. இந்த சரித்திர ஆசிரியர்களுக்கு

இந்த செய்தி எப்படி கிடைத்தது? அவர்கள் இதை இறைவனிடமிருந்து பெற்றுக்கொண்டனர். பல மக்கள் "இயேசு சிலுவையில் மரித்தார்" என்று நம்பும்படி செய்ய அல்லா தான் காய்நகர்த்தினார். அதனால், இந்த நிகழ்ச்சியைப் பற்றிய பல ஆதாரங்கள் நம்மிடம் உள்ளது. தற்போதுள்ள கணக்குப்படி, கிட்டத்தட்ட இரண்டு பில்லியன் கிறிஸ்தவர்கள் இப்போது உலகத்தில் இருக்கிறார்கள். இஸ்லாமின் மீது அதிகாரம் செலுத்தும் உலக மதமாக கிறிஸ்தவம் ஆரம்பித்ததற்கு பொறுப்பு இயேசுவும், அல்லாவுமே வகிக்கவேண்டும்.

**If Islam Is True . . .**

**இஸ்லாம் உண்மையாக இருந்தால்...**

இஸ்லாமின் கருத்து பல பிரச்சனைகளை உருவாக்குகிறது என்று சொல்லித்தெரிய வேண்டியதில்லை என்று நான் நினைக்கிறேன். இறைவன் பல பில்லியன் மக்களை ஏமாற்றினார் என்று இஸ்லாம் நம்மை நம்பச் சொல்கிறது. இது மட்டுமல்ல, இயேசுவின் சீடர்களும் "இயேசு சிலுவையில் மரித்தார்" என்று நம்பும்படிச்செய்து அவர்கள் இறைவனின் வழியைவிட்டு விலக அல்லா காரணமானார். அல்லா மக்களை ஏமாற்ற வேண்டும் என்று திட்டம் தீட்டாமல் இருந்திருந்தால், இதை தவிர்த்து இருந்திருக்கலாம். அதனால், இது நிறைய கேள்விகளை எழுப்புகிறது:

**உண்மையில் "இயேசு சிலுவையில் மரிக்காமல் இருக்கும்போது" ஏன் இயேசு சிலுவையில் மரித்தார் என்று மக்கள் நம்பவேண்டும் என்று அல்லா நினைத்தார்?**

இயேசுவை யூதர்களின் மற்றும் ரோம அதிகாரிகளின் கைகளிலிருந்து காப்பாற்றவே இப்படி அல்லா செய்தார் என்று முஸ்லீம்கள் வாதம் புரியமுடியாது, ஏனென்றால், அல்லா "இயேசுவை பாதுகாப்பாக" தன் அளவில் எடுத்துக்கொண்டு அவருக்கு பாதுகாப்பு அளித்துவிட்டாரே. ஏன் இயேசுவின் எதிரிகள் "இயேசு மரித்துவிட்டார்" என்று நம்பி நிம்மதியடைய அல்லா அனுமதித்தார்? ஏன் அல்லா யாரையும் ஏமாற்றாமல், இயேசுவை அப்படியே எல்லாருக்கும் முன்பாக தன் அளவில் உயர்த்திக்கொள்ளவில்லை? இப்படி இயேசுவை எடுத்துக்கொண்டு இருந்தால், இப்படி பல மக்களை ஏமாற்றவேண்டிய அவசியமே இருந்திருக்காதே? ஆனால், அல்லாவின் இந்த ஏமாற்றுச் செயல், கிறிஸ்தவம் உருவாக காரணமாகி விட்டதே! கிறிஸ்தவம் இப்படித் தான் ஆரம்பித்தது என்று இஸ்லாம் நம்மை நம்பச் சொல்கிறது, இது நம்மால் ஜீரணிப்பதற்கு மிக கடினமாக உள்ளது. இஸ்லாம் சொல்வது உண்மையானால், தன் தீர்க்கதரிசிகளை நம்பின மக்களை அல்லா ஏமாற்றினார் என்பது தெளிவாகிறது. இஸ்லாம் சொல்வது உண்மையானால், அல்லா ஒரு தவறான செய்தியை (கிறிஸ்தவ செய்தி) ஆரம்பித்து, அது உலகத்தில் மிகப்பெரிய மார்க்கமாகும் வரை அதை வளர்த்தார் என்பது தெளிவாகிறது. இஸ்லாம் சொல்வது உண்மையானால், இயேசு மஸிஹா, திறமையில்லாதவராகவும் இறைவன் அனுப்பாதவராகவும் இருக்கிறார், ஏனென்றால், அவரது வாழ்க்கை யின் முடிவு, பல மக்களை இறைவனின் வழியிலிருந்து விலகச் செய்தது. இப்படி வழிவிலகச் செய்தவர் இயேசுவைத் தவிர ஒருவரும் உலக சரித்திரத்தில் இருக்கமுடியாது. ஏனென்றால், இறைவனின் குணம் எப்படி இருக்கும் என்று எல்லாரும் பொதுவாக நம்பிக்கொண்டு இருக்கிறார்களோ, அப்படி இல்லாமல் இஸ்லாமின் இறைபார்வை வித்தியாசமாக உள்ளது. ஒரு சராசரி சிந்திக்ககூடிய மனிதன் தள்ளிவிடுகிற அளவிற்கு இஸ்லாமின் கோட்பாடுகள் குழப்பமாக உள்ளது. கிறிஸ்தவத்தின் ஆரம்பம் என்று இஸ்லாம் சொல்லும் விவரங்கள் மிகவும் வெறுக்கத்தக்கதாக உள்ளது, மற்றும் அறிவுடமை உள்ளதாக இல்லை. இஸ்லாம் என்பது உண்மையானால், கிறிஸ்தவம் இப்போது இருப்பதில் எந்த அர்த்தமும் இல்லை. (If Islam is true, Jesus, the Messiah, was completely incompetent and should never have been sent by God, since Jesus' life ended up leading more people astray than any other life in history. Because the Muslim view is at odds with any traditional

understanding of God's nature (including the Islamic understanding), Islam is an incoherent religious system, which should be rejected by all rational people. Islam has a poor and contemptible explanation for the origin of Christianity. If Islam is true, the existence of Christianity makes no sense at all.)

### If Christianity Is True . . .

### கிறிஸ்தவம் உண்மையானதாக இருந்தால்...

அதே நேரத்தில், இஸ்லாம் எப்படி ஆரம்பிக்கப்பட்டது ஏன் ஆரம்பிக்கப்பட்டது என்று கிறிஸ்தவம் தெளிவாகச் சொல்கிறது. ஒரு வேளை கிறிஸ்தவம் உண்மையான மார்க்கமாக இருக்குமானால், இஸ்லாம் ஏன் உருவானது என்பது தெளிவாகப் புரியும். ஏன் இப்படிப்பட்ட இஸ்லாம் போன்ற மதம் உருவானது என்று இப்போது உடனே உங்களுக்கு புரியவில்லையானால், கீழே உள்ள சில வரிகளை படியுங்கள், அப்போது புரியும்.

கிறிஸ்தவம் உண்மையாக இருக்குமானால், கீழ் கண்ட வாக்கியங்களும் உண்மையாக இருக்கும்:

**(1) மக்கள் இயேசு மூலமாகத் தான் இறைவனிடம் வருகிறார்கள்.**

**(2) சாத்தான் என்ற ஒரு தீயசக்தி மக்களை இறைவனிடமிருந்து பிரித்துவிடுகிறான்.**

மேலே உள்ள வரிகளை மனதிலே வைத்துக்கொண்டு, "சாத்தான்" பற்றி ஏதாவது ஒரு சில விவரங்களை கண்டுபிடிக்க முடியுமா என்று நாம் இப்போது சிந்திக்கலாம். சாத்தான் மக்களை இறைவனிடமிருந்து தூரப்படுத்தவேண்டும் என்று விரும்பினால், மற்றும் இறைவனிடம் செல்வதற்கு இயேசு வழி என்று அவன் தெரிந்துக்கொண்டால், சாத்தானுடைய குறி எதுவாக இருக்கும்? மக்களை அதிகமாக கெட்டவர்களாக மாற்றுவது அவனின் மிக மிக முக்கிய நோக்கமாக இருக்காது (அவன் இறைவனிடமிருந்து மக்களை பிரிக்க, இப்படியும் மக்களை அதிகமாக தீயகாரியங்கள் செய்யச் செய்வான்), இதற்கு பதிலாக, மக்கள் இயேசுவை ஏற்றுக்கொள்ளக்கூடாது தள்ளிவிடவேண்டும் என்ற எண்ணத்தை அவன் மக்களின் மனதில் பாய்ச்சுவான். இதனால், மக்கள் உண்மை இறைவனிடம் சேராமல் இருக்க வாய்ப்பு உண்டாகும்.

ஆனால், எப்படி சாத்தான் மக்கள் இயேசுவை மறுத்துவிட அவர்கள் நம்பும்படிச் செய்வான்? நாம் ஒன்றை இங்கு கவனிக்கவேண்டும், அது என்னவென்றால், இந்த உலகத்தில் "இறைவன்" பற்றி அக்கரைக் கொள்ளாத அனேகமாயிர மக்கள் உள்ளனர். சாத்தான் அவர்களைப் பற்றி கவலைப்படமாட்டான், ஏனென்றால், இறைவன் மூலமாக வரும் இரட்சிப்பு அல்லது முக்தி பற்றி அவர்களுக்கு அக்கரை இல்லை.

சாத்தான் முடிந்த அளவு எவ்வளவு மக்களை இறைவனுக்கு தூரமாக பிரிக்கமுடியுமோ என்று முயற்சி செய்கிறான். முக்கியமாக, ஓர் அளவிற்கு இறைவன் விஷயங்களில் அக்கரை காட்டும் மக்கள் மீது அவன் கண் எப்போதும் இருக்கும் என்று நாம் சொல்லமுடியும். மக்களை இறைவனிடமிருந்து வேறுபடுத்த சாத்தான் இரண்டுவகையான முறையை கையாள்வான்: ஒன்று "இறைவன் நம்பிக்கை" ஒரு முட்டாள் தனம் என்று நம்பவைப்பான் (இப்போது நாம் உலகத்தில் காண்கின்ற "சமயசார்பற்ற - secularism" கொள்கையை பரப்புவான்) அல்லது அவன் உண்மைக்கு பதிலாக வேறு ஒரு மார்க்கத்தை கொடுப்பான் (இரட்சிப்பு அல்லது முக்தி அடைய தடையாக இருக்கும் ஒரு மார்க்கம்) கிறிஸ்தவம் உண்மையானதாக இருக்குமானால், சாத்தான் இயேசுவின் மரணத்தையும், உயிர்த்தெழுதலையும் மறுக்கும்படி மதங்களை நம்பும்படிச் செய்வான். சில நேரங்களில் இப்படிப்பட்ட மதங்கள் கிறிஸ்தவத்தைப் போல சில கோட்பாடுகளைக் கொண்டு இருக்கக்கூடும். கிறிஸ்தவம் உண்மையான மார்க்கமாக இருக்குமானால், என்ன நடக்க வாய்ப்பு உள்ளது என்று நாம்

இப்போது சரியாக ஊகிக்கமுடியும். இப்போது "இஸ்லாம்" நம்முடைய ஊகத்திற்கு ஏற்றதாக உள்ளதா என்று பார்க்கலாம். இஸ்லாமுடைய போதனை இப்படியாக இருக்கும்: "இறைவனை நம்பு, நன்மைகளைச் செய்". நீ அதிக நன்மைகள் செய்தால், உனக்கு சொர்க்கம் நிச்சயமாக கிடைக்கும். இயேசுவை மதிக்கவேண்டும், ஏனென்றால், அவர் அல்லாவினுடைய சிறந்த நபியாக (தீர்க்கதரிசியாக) இருக்கிறார், அவர் அல்லாவின் செய்தியை இஸ்ரவேல் மக்களுக்கு போதித்தார். மட்டுமல்ல, இயேசு கன்னியின் வயிற்றில் பிறந்தார் என்றும், அவர் அனேக அற்புதங்கள் செய்தார் என்றும், அவர் தான் "மஸிஹா - Messiah " என்றும் நம்பவேண்டும். ஆனால், நீங்கள் எதை நம்பினாலும், அவர் உன்னுடைய பாவங்களுக்காக சிலுவையில் மரித்தார் என்பதை மட்டும் நம்பவேண்டாம். மற்றும் அவர் மரித்ததிலிருந்து உயிரோடு எழுந்தார் என்றும் நீங்கள் நம்பவேண்டாம். முக்கியமாக நீங்கள் செய்யும் மிகப்பெரிய பாவம் என்னவாக இருக்கும் என்றால், இயேசு ஒரு தேவகுமாரன் என்று நம்புவதாகும். இங்கு கவனிக்கவும், இஸ்லாம் இயேசுவின் மற்ற எல்லா காரியங்களையும் ஏற்றுக்கொள்கிறது, ஆனால், மனிதன் இரட்சிக்கப்பட தேவையான முக்கியமான விஷயத்தை மறுக்கிறது. முஸ்லீம்கள் இறைவனை நம்பவேண்டும் என்று கட்டளையிடப்பட்டுள்ளனர், ஆனால், சாத்தானும் அவன் கூட்டமும் இறைவனை நம்புகின்றன (For instance, Muslims are commanded to believe in God, but even Satan and his demons believe in God).

நல்ல காரியங்களை செய்யும் படி முஸ்லிம்கள் கட்டளையிடப்பட்டுள்ளனர், மற்ற மதங்களிலும் இதே கட்டளை உள்ளது. முஸ்லீம்கள் இயேசுவின் பிறப்பு அற்புதத்தையும், அவர் ஒரு நபி என்றும் இஸ்லாம் நம்பும்படிச் சொல்கிறது, ஆனால், இந்த நம்பிக்கை ஒரு மனிதனை இரட்சிக்காது. ஆக, எப்போது நாம் இயேசுவின் மரணம் உயிர்த்தெழல் போன்ற மனிதன் இரட்சிக்கப்பட தேவையான விவரங்களை சொல்கிறோமோ, அவைகளை மிகவும் கடினமாக இஸ்லாம் எதிர்க்கிறது [19]. Islam, then, looks exactly like the religion we predicted that Satan would form, for it denies what is necessary for people to come to God. எனவே, கிறிஸ்தவத்தை நம்புகிறவர்கள் இஸ்லாம் போன்ற மார்க்கம் உருவாக வாய்ப்பு உள்ளது என்பதை சுலபமாக எதிர்பார்க்கலாம். பைபிளில் சொல்லப்பட்ட சில தீர்க்கதரிசன வசனங்களை (எதிர் காலத்தில் நடக்கும் என்று சொல்லப்பட்ட வசனங்கள்) நாம் பார்க்கலாம்:

இயேசு சொன்னார்: அநேகங் கள்ளத்தீர்க்கதரிசிகளும் எழும்பி, அநேகரை வஞ்சிப்பார்கள் [20], பவுல் கூட இப்படி சொல்கிறார் :"…சிலர் வஞ்சிக்கிற ஆவிகளுக்கும் பிசாசுகளின் உபதேசங்களுக்கும் செவிகொடுத்து, விசுவாசத்தைவிட்டு விலகிப்போவார்கள் ."[21] (The phrase “deceitful spirit” is reminiscent of the Qur’anic claim that Allah deceived people about the death of Jesus.) உண்மை சுவிசேஷத்தை கெடுக்க பொய் போதகர்களும், தீர்க்கதரிசிகளும் வருவார்கள் என்று, பைபிள் அடிக்கடி போதிக்கிறது. இந்த எச்சரிக்கையை முகமதுவின் காலத்தில் சிலர் கவனித்ததாக தெரிகிறது.

## Final Thoughts

### முடிவுரை

சரித்திரத்தை சிறிது திரும்பிபார்ப்போமானால் அனேகர் தங்களை தீர்க்கதரிசிகள் என்று சொல்லிக்கொண்டு வந்திருக்கிறார்கள் என்பதை கவனிக்கலாம். உண்மையில் இன்று கூட தங்களை தீர்க்கதரிசிகள் என்று சொல்கிறவர்கள் இருக்கிறார்கள், நாளைக்கும் சிலர் வரவாய்ப்பு உள்ளது. ஒரு வேளை எதிர்காலத்திலே ஒரு தீர்க்கதரிசி எழும்பி, தனக்கு இறைவனிடமிருந்து செய்தி வருகிறது என்று சொல்வார் என்று வைத்துக்கொள்வோம் [22]. நிச்சயமாக முஸ்லீம்களும், கிறிஸ்தவர்களும் அவரை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். ஒரு வேளை இந்த தீர்க்கதரிசி முஸ்லீம்களைப் பார்த்து கீழ்கண்டவாறு சொல்கிறார் என்று

நினைத்துக்கொள்வோம்.

"சகோதரர்களே, நீங்கள் முகமதுவின் போதனையை நம்புகிறீர்கள், இதோ நான் சொல்கிறேன், இஸ்லாம் என்பது மக்களை ஏமாற்றுவதற்கு இறைவனால் உருவாக்கப்பட்டது". ஏனென்றால், இஸ்லாமுக்கு முன்பு இருந்த அரேபியர்கள், மிகவும் கொடுமையான பழக்கங்களை கொண்டு இருந்தனர், அதாவது தங்கள் மகள்களை கொன்றுபோட்டனர், மற்றும் நூற்றுக்கணக்கான பெண்களை திருமணம் செய்தனர். இறைவன் அவர்களுக்கு தண்டனை கொடுக்க முடிவுசெய்தார், எனவே, அவர்களை வழிவிலகச் செய்தார், உண்மையை விட்டு பொய்யானவற்றை நம்பும்படிச் செய்தார். இதோ நான் உங்களுக்கு உண்மையைச் சொல்கிறேன். நான் இறைவனின் மிகப்பெரிய நபியாவேன், தீமையிலிருந்து உங்களை காப்பாற்ற வந்துள்ளேன்.

**முஸ்லீம்கள் இவரை நம்புவார்களா? நிச்சயமாக நம்பமாட்டார்கள். ஏன் முஸ்லீம்கள் இந்த புதிய நபியை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்? முஸ்லிம்கள் அவர் சொல்வதை நம்பமாட்டார்கள் ஏனென்றால், இறைவன் தெரிந்தே பல மில்லியன் மக்களை ஏமாற்றினார் என்று அவர் சொல்வதை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்.** இதே போலத்தான் இயேசுவின் மரணத்தின் செய்தியை நம்பினார்கள் முஸ்லீம்கள். ஆக, மக்களை மற்றும் தன் நபியை பின்பற்றிய சீடர்களையும் ஏமாற்றும் இறைவனின் மீது தங்கள் நம்பிக்கையை வைத்தால், தங்களுக்கு நிச்சயமாக உண்மை சொல்லப்பட்டிருக்கும் என்று எப்படி நம்புகிறார்கள். (So if Muslims believe in a God who deceives people, even those who follow his prophets, how can Muslims be confident that they have been given the truth?)

முஸ்லீம்கள் தங்கள் இறைவனைப்பற்றியும், தங்கள் தீர்க்கதரிசிகளைப் பற்றியும் அதிகமாக பெருமையாக சொல்லிக்கொள்வார்கள். ஆனால், நாம் சரியாக ஆராய்ந்துபார்ப்போமானால், இஸ்லாம் மிகப்பெரிய மதத்தின் இறைவனாகிய அல்லாவை ஏமாற்றுபவன் என்று குற்றம் சாட்டுகிறது. இப்போது நாம் சிறிது நின்று நிதானித்து சிந்திக்கவேண்டும். ஏன் தன்னைப் பற்றி கவுரவமாக பெருமைப்படும் மதம், தன் இறைவன், ஒரு பொய்யான மதத்தை ஆரம்பித்தார் என்று பறைசாற்றுகிறது. ஏன் இயேசுவை மதிக்கிறோம் என்று சொல்லும் மக்கள், அவர் மிகப்பெரிய படுதோல்வி அடைந்தார் என்று சொல்லிக்கொள்கிறார்கள்? இஸ்லாம் மிகவும் வேகமாக கிறிஸ்தவத்தை அழித்துவிட முயற்சி செய்ததாக தெரிகிறது, ஆனால், அதனால், தன்னைத்தானே அழித்துக்கொண்டிருக்கிறது என்பதை அறியாமல் இருக்கிறது. வேறு வகையில் சொல்லவேண்டுமானால், இயேசுவின் மரணம் மற்றும் உயிர்தெழுதலைப் பற்றிச் சொல்லும் போது, இஸ்லாம் இறைவனை(அல்லாவை) ஒரு "ஏமாற்றுபவர்" என்று சுட்டிக்காட்டுகிறது. இது இஸ்லாமிய கோட்பாடு இறைவனுக்கு பொருந்தக்கூடியது அல்ல. (This desperation only makes sense if Christianity is true, and if Islam was designed by Satan to keep people from being saved).

முஸ்லீம்கள் இவைகள் அனைத்தையும் மறுக்கக்கூடும். அவர்கள் தங்கள் இறைவனுக்கு காட்டும் மதிப்பும், தங்கள் தீர்க்கதரிசிக்கு காட்டும் மரியாதையும் தொடரக்கூடும். ஆனால், அவர்கள் கிறிஸ்தவத்தை விவரிப்பதிலே சில விபரீதங்களைச் சொல்கிறார்கள். இறைவன் உலகத்தை திசைதிருப்பிவிட்டான் (astray) என்று அவர்கள் சொல்வது தான், புதுமையாக உள்ளது. இஸ்லாம் உண்மையாக இருக்குமானால், அல்லாவும், இயேசுவும் தோல்வி அடைந்தவர்கள் என்பது நிச்சயம். ஆனால், கிறிஸ்தவம் உண்மையாக இருக்குமானால், இறைவனும், இயேசுவும் வெற்றிப்பெற்றவர்கள். சிலுவையிலே இரட்சிகப்படுவதற்கான வாசல் திறந்தே இருக்கிறது, தங்கள் கதவுகளை திறக்கமாட்டோம் என்று மூடிக்கொண்டு இருப்பவர்களுக்கும் சேர்த்து.

பொய்யான தீர்க்கதரிசிகள் வருவார்கள் என்று இயேசு தன்னை பின்பற்றினவர்களுக்கு எச்சரித்தார். அவர்களை நம்பவேண்டாம் என்று கட்டளையும் கொடுத்துள்ளார். அவர்களை எப்படி நாம் கண்டுபிடிப்பது

என்றுச் சொன்னால், அவர்களுடைய போதனைகள் இறைவனுக்கு தகுதியில்லாத குணத்தை இறைவனுக்கு உள்ளது போல காட்டக்கூடியதாக இருக்கும். இறைவன் உண்மையுள்ளவர், மற்றும் அன்புள்ளவர். இஸ்லாமை நாம் கூர்ந்து ஆராய்ந்தால், இந்த இரண்டும் இறைவனுக்கு இல்லை என்று நம்மை நம்பச்சொல்லும்.

**Notes:**

1 See Qur'an, 24:25

2 Qur'an 19:23-26, 30-33,

3 Qur'an 42:13.

4 Qur'an 43:59, 63-64.

5 Qur'an 3:52.

6 Qur'an 5:111.

7 Qur'an 57:26.

8 1 Corinthians 15:3-5.

9 See 1 Clement 42:3.

10 See Polycarp, To the Philippians 1:2, 2:1-2, 9:2, 12:2.

11 See Josephus, Antiquities 18.64, and Tacitus, Annals 15.44.

12 Lucian of Samosata, The Death of Peregrine, 11-13.

13 Talmud, Sanhedrin 43a.

14 Qur'an 4:157-158. According to Muslim tradition, Allah made Judas Iscariot look like Jesus, so that Judas was crucified in Jesus' place.

15 To associate partners with God is to commit the sin of shirk.

16 Qur'an 61:14.

17 For instance, John Dominic Crossan, of the notoriously anti-Christian "Jesus Seminar," says "That [Jesus] was crucified is as sure as anything historical can ever be" (Jesus: A Revolutionary Biography [San Francisco: HarperCollins, 1991] p. 145).

18 This spirit being is not to be confused with the popular image of a harmless red figure with a pointy tail and a pitchfork!

19 One may wonder why I have not included belief in God among the doctrines necessary for salvation. I'm certainly not denying the necessity of belief in God. However, I do draw a distinction between a necessary doctrine and a necessary and sufficient doctrine. Belief in God is necessary for salvation, but it is not sufficient to produce it. In contrast, the Christian doctrines of confession of the lordship of Christ and belief in his resurrection from the dead are necessary and sufficient. That is, these doctrines are sufficient to guarantee the salvation of the Christian. Yet it is these doctrines that Islam most vehemently opposes.

20 Matthew 24:11.

21 1 Timothy 4:1.

22 Even Islam has had its share of self-proclaimed new prophets. Most notably, Mirza Ghulam Ahmad announced his prophethood towards the end of the 19th Century. He also claimed to be the second coming of Jesus. Millions of people have followed him. However, the vast majority of Muslims consider these "Ahmadiyyas" to be a heretical sect. The Ahmadiyyas, though they profess to be Muslims, aren't even allowed to take the pilgrimage to Mecca. The Ahmadiyya movement is significant in that Ahmadiyyas say that true Islam was corrupted, just as Muslims claim that Christianity was corrupted. Hence, Ahmadiyyas claim that

God sent another prophet to restore the true message of God. Muslims reject this, because they don't believe that Islam has been corrupted. They conclude that Mirza Ghulam Ahmad must have been a false prophet. But this is the same reason Christians reject Muhammad. We don't believe that Christianity has been corrupted, so Muhammad must have been a false prophet.

ஆங்கில மூலம்: Deceptive God, Incompetent Messiah - What Islam Really Teaches About Allah and Jesus

டேவின் உட் அவர்களின் **இதர கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/davidwood/deceptive_god.html

# 15. தேவன் மனிதனாக வந்ததை புரிந்துக் கொள்வதெப்படி?

சாம் ஷமான்

பரிசுத்த பைபிளில் "தேவன் மனிதாக வருதல்" பற்றி வரையறுக்கப்பட்டுள்ளது. இதனை கிறிஸ்தவம் எப்படி விவரிக்கிறது என்பதை இக்கட்டுரையில் காணப்போகிறோம். இந்த விவரங்கள் கிறிஸ்தவர்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும். தேவன் மனிதனாக வந்தார் என்ற அத்தியாவசியமான உபதேசத்தை சரியாக புரிந்துக்கொள்ளவும், திரித்துவ தேவனை விமர்சிக்கும் முஸ்லிம்களுக்கு சரியான பதிலைத் தரவும் இக்கட்டுரை உதவியாக இருக்கும்.

கிறிஸ்து நித்திய வார்த்தையாகவும், தேவகுமாரனாகவும் இருக்கிறார். இவர் மனித சரீரம் மற்றும் இரத்தத்தை உடையவராகவும் அதே நேரத்தில் பாவமில்லாதவராகவும் வெளிப்பட்டார். பரிசுத்த ஆவியின் வல்லமை நிரைந்தவராய், ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் ஒரு கன்னிப்பெண்ணின் கர்ப்பத்தில் உருவாகி, ஒரு மனிதனாக பிறந்தார்.

இயேசு கிறிஸ்துவினுடைய ஜெநநத்தின் விவரமாவது: அவருடைய தாயாகிய மரியாள் யோசேப்புக்கு நியமிக்கப்பட்டிருக்கையில், அவர்கள் கூடிவருமுன்னே, அவள் பரிசுத்த ஆவியினாலே கர்ப்பவதியானாள் என்று காணப்பட்டது. அவள் புருஷனாகிய யோசேப்பு நீதிமானாயிருந்து, அவளை அவமானப்படுத்த மனதில்லாமல், இரகசியமாய் அவளைத் தள்ளிவிட யோசனையாயிருந்தான். அவன் இப்படிச் சிந்தித்துக்கொண்டிருக்கையில், கர்த்தருடைய தூதன் சொப்பனத்தில் அவனுக்குக் காணப்பட்டு: தாவீதின் குமாரனாகிய யோசேப்பே, உன் மனைவியாகிய மரியாளைச் சேர்த்துக்கொள்ள ஐயப்படாதே; அவளிடத்தில் உற்பத்தியாயிருக்கிறது பரிசுத்த ஆவியினால் உண்டானது. அவள் ஒரு குமாரனைப் பெறுவாள், அவருக்கு இயேசு என்று பேரிடுவாயாக; ஏனெனில் அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிப்பார் என்றான். தீர்க்கதரிசியின் மூலமாய்க் கர்த்தராலே உரைக்கப்பட்டது நிறைவேறும்படி இதெல்லாம் நடந்தது. அவன்: இதோ, ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள்; அவருக்கு இம்மானுவேல் என்று பேரிடுவார்கள் என்று சொன்னான். இம்மானுவேல் என்பதற்குத் தேவன் நம்மோடிருக்கிறார் என்று அர்த்தமாம். (மத்தேயு 1:18-23)

ஆறாம் மாதத்திலே காபிரியேல் என்னும் தூதன், கலிலேயாவிலுள்ள நாசரேத்தென்னும் ஊரில், தாவீதின் வம்சத்தானாகிய யோசேப்பு என்கிற நாமமுள்ள புருஷனுக்கு நியமிக்கப்பட்டிருந்த ஒரு

கன்னிகையினிடத்திற்கு தேவனாலே அனுப்பப்பட்டான்; அந்தக் கன்னிகையின் பேர் மரியாள். அவள் இருந்த வீட்டில் தேவதூதன் பிரவேசித்து: கிருபை பெற்றவளே, வாழ்க, கர்த்தர் உன்னுடனே இருக்கிறார், ஸ்திரீகளுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவள் என்றான். அவளோ அவனைக் கண்டு, அவன் வார்த்தையினால் கலங்கி, இந்த வாழ்த்துதல் எப்படிப்பட்டதோ என்று சிந்தித்துக் கொண்டிருந்தாள். தேவதூதன் அவளை நோக்கி: மரியாளே, பயப்படாதே; நீ தேவனிடத்தில் கிருபைபெற்றாய். இதோ, நீ கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாய், அவருக்கு இயேசு என்று பேரிடுவாயாக. அவர் பெரியவராயிருப்பார், உன்னதமானவருடைய குமாரன் என்னப்படுவார்; கர்த்தராகிய தேவன் அவருடைய பிதாவாகிய தாவீதின் சிங்காசனத்தை அவருக்குக் கொடுப்பார். அவர் யாக்கோபின் குடும்பத்தாரை என்றென்றைக்கும் அரசாளுவார்; அவருடைய ராஜ்யத்துக்கு முடிவிராது என்றான். அதற்கு மரியாள் தேவதூதனை நோக்கி: இது எப்படியாகும்? புருஷனை அறியேனே என்றாள். தேவதூதன் அவளுக்குப் பிரதியுத்தரமாக: பரிசுத்த ஆவி உன்மேல் வரும்; உன்னதமானவருடைய பலம் உன்மேல் நிழலிடும்; ஆதலால் உன்னிடத்தில் பிறக்கும் பரிசுத்தமுள்ளது தேவனுடைய குமாரன் என்னப்படும். (லூக்கா 1:26-35)

ஆதியிலே வார்த்தை இருந்தது, அந்த வார்த்தை தேவனிடத்திலிருந்தது, அந்த வார்த்தை தேவனாயிருந்தது. அவர் ஆதியிலே தேவனோடிருந்தார். சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று; உண்டானதொன்றும் அவராலேயல்லாமல் உண்டாகவில்லை. அவருக்குள் ஜீவன் இருந்தது, அந்த ஜீவன் மனுஷருக்கு ஒளியாயிருந்தது. உலகத்திலே வந்து எந்த மனுஷனையும் பிரகாசிப்பிக்கிற ஒளியே அந்த மெய்யான ஒளி. அவர் உலகத்தில் இருந்தார், உலகம் அவர் மூலமாய் உண்டாயிற்று, உலகமோ அவரை அறியவில்லை. அந்த வார்த்தை மாம்சமாகி, கிருபையினாலும் சத்தியத்தினாலும் நிறைந்தவராய், நமக்குள்ளே வாசம் பண்ணினார்; அவருடைய மகிமையைக் கண்டோம்; அது பிதாவுக்கு ஒரேபேறானவருடைய மகிமைக்கு ஏற்ற மகிமையாகவே இருந்தது. (யோவான் 1:1-4, 9-10, 14)

அதெப்படியெனில், மாம்சத்தினாலே பலவீனமாயிருந்த நியாயப்பிரமாணம் செய்யக்கூடாததைத் தேவனே செய்யும்படிக்கு, தம்முடைய குமாரனைப் பாவமாம்சத்தின் சாயலாகவும், பாவத்தைப் போக்கும் பலியாகவும் அனுப்பி, மாம்சத்திலே பாவத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்தார். (ரோமர் 8:3)

காலம் நிறைவேறினபோது, ஸ்திரீயினிடத்திற் பிறந்தவரும் நியாயப்பிரமாணத்திற்குக் கீழானவருமாகிய தம்முடைய குமாரனைத் தேவன் அனுப்பினார். (கலாத்தியர் 4:5)

கிறிஸ்து இயேசுவிலிருந்த சிந்தையே உங்களிலும் இருக்கக்கடவது; அவர் தேவனுடைய ரூபமாயிருந்தும், தேவனுக்குச் சமமாயிருப்பதைக் கொள்ளையாடின பொருளாக எண்ணாமல், தம்மைத்தாமே வெறுமையாக்கி, அடிமையின் ரூபமெடுத்து, மனுஷர் சாயலானார். அவர் மனுஷரூபமாய்க் காணப்பட்டு, மரணபரியந்தம், அதாவது சிலுவையின் மரணபரியந்தமும் கீழ்ப்படிந்தவராகி, தம்மைத்தாமே தாழ்த்தினார். (பிலிப்பியர் 2:5-8)

இயேசு உண்மையான மனிதனாக வருவதற்காக, மனிதனிடம் காணப்படும் பலவீனங்களை தானும் மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டார். இதனை விவரிக்கவே வேதம் அவரைப் பற்றிச் சொல்லும் போது அவர் “ஆவியிலே பெலன் கொண்டு ஞானத்தினால் நிறைந்தார்” என்றுச் சொல்கிறது.

பிள்ளை வளர்ந்து, ஆவியிலே பெலன்கொண்டு, ஞானத்தினால் நிறைந்தது. தேவனுடைய கிருபையும் அவர்மேல் இருந்தது. . .. இயேசுவானவர் ஞானத்திலும், வளர்த்தியிலும், தேவகிருபையிலும், மனுஷர் தயவிலும் அதிகமதிகமாய் விருத்தியடைந்தார். (லூக்கா 2:40,52)

அவர் குமாரனாயிருந்தும் பட்டபாடுகளினாலே கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டு, (எபிரேயர் 5:8)

மனிதனாக வந்ததால், கிறிஸ்து மனிதனைப் போல சோர்வு அடைவார், அவருக்கு ஓய்வும், உறக்கமும் தேவை, மேலும் மனிதனைப் போலவே அவரும் உணவு உட்கொள்வார், தண்ணீர் குடிப்பார்.

அப்பொழுது இயேசு பிசாசினால் சோதிக்கப்படுவதற்கு ஆவியானவராலே வனாந்தரத்திற்குக் கொண்டுபோகப்பட்டார். அவர் இரவும் பகலும் நாற்பதுநாள் உபவாசமாயிருந்தபின்பு, அவருக்குப் பசியுண்டாயிற்று. (மத்தேயு 4:1-2)

அன்று சாயங்காலத்தில், அவர் அவர்களை நோக்கி: அக்கரைக்குப் போவோம் வாருங்கள் என்றார். அவர்கள் ஜனங்களை அனுப்பிவிட்டு, அவர் படவிலிருந்தபடியே அவரைக் கொண்டுபோனார்கள். வேறே படவுகளும் அவரோடேகூட இருந்தது. அப்பொழுது பலத்த சுழல்காற்று உண்டாகி, படவு நிரம்பத்தக்கதாக, அலைகள் அதின்மேல் மோதிற்று. கப்பலின் பின்னணியத்தில் அவர் தலையணையை வைத்து நித்திரையாயிருந்தார். அவர்கள் அவரை எழுப்பி: போதகரே, நாங்கள் மடிந்துபோகிறது உமக்குக் கவலையில்லையா என்றார்கள். (மாற்கு 4:35-38)

யாக்கோபு தன் குமாரனாகிய யோசேப்புக்குக் கொடுத்த நிலத்துக்கு அருகே இருந்த சமாரியாவிலுள்ள சீகார் என்னப்பட்ட ஊருக்கு வந்தார். அங்கே யாக்கோபுடைய கிணறு இருந்தது; இயேசு பிரயாணத்தினால் இளைப்படைந்தவராய் அந்தக் கிணற்றினருகே உட்கார்ந்தார்; அப்பொழுது ஏறக்குறைய ஆறாம்மணி வேளையாயிருந்தது. அவருடைய சீஷர்கள் போஜன பதார்த்தங்களைக் கொள்ளும்படி ஊருக்குள்ளே போயிருந்தார்கள். அப்பொழுது சமாரியா நாட்டாளாகிய ஒரு ஸ்திரீ தண்ணீர் மொள்ள வந்தாள். இயேசு அவளை நோக்கி: தாகத்துக்குத் தா என்றார். (யோவான் 4:5-8)

இதுமட்டுமல்ல, இயேசு மனிதனாக வந்ததினால், அவர் படைப்பின் ஒரு அங்கமாக மாறிவிட்டார். எப்போது அவர் படைப்பின் ஒரு பாகமாக மாறினாரோ, அப்போதே பிதா அவருக்கும் தேவனாக மாறிவிட்டார். இதைத் தான் இந்த வேத பகுதியும் நமக்கு தேவனைப் பற்றிச் சொல்கிறது. அதாவது தேவன் எல்லா மனிதர்களுக்கும் இறைவனாக இருக்கிறார்.

இதோ, நான் மாம்சமான யாவருக்கும் தேவனாகிய கர்த்தர்; என்னாலே செய்யக்கூடாத அதிசயமான காரியம் ஒன்றுண்டோ? எரேமியா 32:27

**இப்போது இந்த வசனங்களை கவனியுங்கள்:**

அந்த வார்த்தை மாம்சமாகி, கிருபையினாலும் சத்தியத்தினாலும் நிறைந்தவராய், நமக்குள்ளே வாசம் பண்ணினார்; அவருடைய மகிமையைக் கண்டோம்; அது பிதாவுக்கு ஒரேபேறானவருடைய மகிமைக்கு ஏற்ற மகிமையாகவே இருந்தது. (யோவான் 1:14)

மற்றும்:

என் தேவனே, என் தேவனே, ஏன் என்னைக் கைவிட்டீர்? எனக்கு உதவி செய்யாமலும், நான் கதறிச் சொல்லும் வார்த்தைகளைக் கேளாமலும் ஏன் தூரமாயிருக்கிறீர்? நானோ ஒரு புழு, மனுஷனல்ல; மனுஷரால் நிந்திக்கப்பட்டும், ஜனங்களால் அவமதிக்கப்பட்டும் இருக்கிறேன். என்னைப் பார்க்கிறவர்களெல்லாரும் என்னைப் பரியாசம்பண்ணி, உதட்டைப் பிதுக்கி, தலையைத் துலுக்கி:

கர்த்தர்மேல் நம்பிக்கையாயிருந்தானே, அவர் இவனை விடுவிக்கட்டும்; இவன்மேல் பிரியமாயிருக்கிறாரே, இப்பொழுது இவனை மீட்டுவிடட்டும் என்கிறார்கள்.

நீரே என்னைக் கர்ப்பத்திலிருந்து எடுத்தவர்; என் தாயின் முலைப்பாலை நான் உண்கையில் என்னை உம்முடையபேரில் நம்பிக்கையாயிருக்கப்பண்ணினீர்.

கர்ப்பத்திலிருந்து வெளிப்பட்டபோதே உமது சார்பில் விழுந்தேன்; நான் என் தாயின் வயிற்றில் இருந்ததுமுதல் நீர் என் தேவனாயிருக்கிறீர். நாய்கள் என்னைச் சூழ்ந்திருக்கிறது; பொல்லாதவர்களின் கூட்டம் என்னை வளைந்துகொண்டது; என் கைகளையும் என் கால்களையும் உருவக் குத்தினார்கள். என் எலும்புகளையெல்லாம் நான் எண்ணலாம்; அவர்கள் என்னை நோக்கிப் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டு, என் உடையின்பேரில் சீட்டுப்போடுகிறார்கள். உம்முடைய நாமத்தை என் சகோதரருக்கு அறிவித்து, சபைநடுவில் உம்மைத் துதிப்பேன். (சங்கீதம் 22:1, 6-10, 16-18, 22)

புதிய ஏற்பாட்டின்படி, மேற்கண்ட சங்கீதம், மேசியா பற்றிய சங்கீதமாகும், அதாவது மேசியாவின் மரணம், உயிர்த்தெழுதல் மற்றும் அவரது மகத்துவத்தை தீர்க்கதரிசனமாக சொல்லும் சங்கீதமாகும்.

ஒன்பதாம்மணி நேரத்திலே, இயேசு: எலோயீ! எலோயீ! லாமா சபக்தானி, என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்; அதற்கு: என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர் என்று அர்த்தமாம். (மாற்கு 15:34)

அவரைச் சிலுவையில் அறைந்தபின்பு, அவர்கள் சீட்டுப்போட்டு அவருடைய வஸ்திரங்களைப் பங்கிட்டுக் கொண்டார்கள். என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டு, என் உடையின்பேரில் சீட்டுப்போட்டார்கள் என்று தீர்க்கதரிசியால் உரைக்கப்பட்டது நிறைவேறும்படி இப்படி நடந்தது. அவர்கள் அங்கே உட்கார்ந்து, அவரைக் காவல்காத்துக்கொண்டிருந்தார்கள். அன்றியும் அவர் அடைந்த ஆக்கினையின் முகாந்தரத்தைக் காண்பிக்கும் பொருட்டு, இவன் யூதருடைய ராஜாவாகிய இயேசு என்று எழுதி, அவர் சிரசுக்கு மேலாக வைத்தார்கள். அப்பொழுது, அவருடைய வலதுபக்கத்தில் ஒருவனும் அவருடைய இடதுபக்கத்தில் ஒருவனுமாக இரண்டு கள்ளர் அவரோடேகூடச் சிலுவைகளில் அறையப்பட்டார்கள். அந்த வழியாய் நடந்துபோகிறவர்கள் தங்கள் தலைகளைத் துலுக்கி: தேவாலயத்தை இடித்து, மூன்று நாளைக்குள்ளே கட்டுகிறவனே, உன்னை நீயே ரட்சித்துக்கொள்; நீ தேவனுடைய குமாரனானால் சிலுவையிலிருந்து இறங்கி வா என்று அவரைத் தூஷித்தார்கள். அப்படியே பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் பரியாசம்பண்ணி: மற்றவர்களை ரட்சித்தான்; தன்னைத்தான் ரட்சித்துக்கொள்ளத் திராணியில்லை; இவன் இஸ்ரவேலின் ராஜாவானால் இப்பொழுது சிலுவையிலிருந்து இறங்கிவரட்டும், அப்பொழுது இவனை விசுவாசிப்போம். தன்னைத் தேவனுடைய குமாரனென்று சொல்லி, தேவன்மேல் நம்பிக்கையாயிருந்தானே; அவர் இவன்மேல் பிரியமாயிருந்தால் இப்பொழுது இவனை இரட்சிக்கட்டும் என்றார்கள். அவரோடேகூடச் சிலுவைகளில் அறையப்பட்ட கள்ளரும் அந்தப்படியே அவரை நிந்தித்தார்கள். (மத்தேயு 27:35-44)

போர்ச்சேவகர் இயேசுவைச் சிலுவையில் அறைந்தபின்பு, அவருடைய வஸ்திரங்களை எடுத்து, ஒவ்வொரு சேவகனுக்கு ஒவ்வொரு பங்காக நாலு பங்காக்கினார்கள்; அங்கியையும் எடுத்தார்கள், அந்த அங்கி, தையலில்லாமல் மேலே தொடங்கி முழுவதும் நெய்யப்பட்டதாயிருந்தது. அவர்கள்: இதை நாம் கிழியாமல், யாருக்கு வருமோ என்று இதைக்குறித்துச் சீட்டுப்போடுவோம் என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள். என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டு, என் உடையின்மேல் சீட்டுப்போட்டார்கள் என்கிற வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாகப் போர்ச்சேவகர் இப்படிச் செய்தார்கள். (யோவான் 19:23-24)

எப்படியெனில், பரிசுத்தஞ்செய்கிறவரும் பரிசுத்தஞ்செய்யப்படுகிறவர்களுமாகிய யாவரும் ஒருவராலே உண்டாயிருக்கிறார்கள்; இதினிமித்தம் அவர்களைச் சகோதரரென்று சொல்ல அவர் வெட்கப்படாமல்: உம்முடைய நாமத்தை என் சகோதரருக்கு அறிவித்து, சபை நடுவில் உம்மைத் துதித்துப் பாடுவேன் என்றும்; (எபிரேயர் 2:11-12)

இதுவரை கண்ட விவரங்களின் படி," மேசியா மனிதனாக கருவுற்ற சமயத்திலிருந்து" பிதாவானவர் அவருக்கு தேவனாக கருதப்படுகிறார் என்பதை அறியலாம்.

மேலும் கிறிஸ்து ஒரு ஊழியக்காரனாக இருக்கிறார் என்பதையும் அறியமுடியும். மேசியா ஊழியக்காரராக இருப்பதினால், பிதாவாகிய தேவன் அவரை விட அந்தஸ்தில் பெரியவராக காணப்படுகிறார்.

இயேசு அதை அறிந்து, அவ்விடம் விட்டு விலகிப்போனார். திரளான ஜனங்கள் அவருக்குப் பின்சென்றார்கள்; அவர்களெல்லாரையும் அவர் சொஸ்தமாக்கி, தம்மைப் பிரசித்தம்பண்ணாதபடி அவர்களுக்குக் கண்டிப்பாய்க் கட்டளையிட்டார். ஏசாயா தீர்க்கதரிசியால் உரைக்கப்பட்டது நிறைவேறும்படி இப்படி நடந்தது. அவன் உரைத்ததாவது: இதோ, நான் தெரிந்துகொண்ட என்னுடைய தாசன், என் ஆத்துமாவுக்குப் பிரியமாயிருக்கிற என்னுடைய நேசன்; என் ஆவியை அவர்மேல் அமரப்பண்ணுவேன், அவர் புறஜாதியாருக்கு நியாயத்தை அறிவிப்பார். வாக்குவாதம் செய்யவுமாட்டார், கூக்குரலிடவுமாட்டார்; அவருடைய சத்தத்தை ஒருவனும் வீதிகளில் கேட்பதுமில்லை. அவர் நியாயத்திற்கு ஜெயங்கிடைக்கப் பண்ணுகிறவரைக்கும், நெரிந்த நாணலை முறிக்காமலும், மங்கியெரிகிற திரியை அணைக்காமலும் இருப்பார். அவருடைய நாமத்தின்மேல் புறஜாதியார் நம்பிக்கையாயிருப்பார்கள் என்பதே. (மத்தேயு 12:15-21)

அப்படியே, மனுஷகுமாரனும் ஊழியங்கொள்ளும்படி வராமல், ஊழியஞ்செய்யவும், அநேகரை மீட்கும்பொருளாகத் தம்முடைய ஜீவனைக் கொடுக்கவும் வந்தார் என்றார். (மாற்கு 10:45 – மேலும் பார்க்க மத்தேயு 20:28)

பந்தியிருக்கிறவனோ, பணிவிடைசெய்கிறவனோ, எவன் பெரியவன்? பந்தியிருக்கிறவன் அல்லவா? அப்படியிருந்தும், நான் உங்கள் நடுவிலே பணிவிடைக்காரனைப்போல் இருக்கிறேன். (லூக்கா 22:27)

நான் போவேன் என்றும், திரும்பி உங்களிடத்தில் வருவேன் என்றும் நான் உங்களுடனே சொன்னதைக் கேட்டீர்களே. நீங்கள் என்னில் அன்புள்ளவர்களாயிருந்தால் பிதாவினிடத்திற்குப் போகிறேனென்று நான் சொன்னதைக் குறித்துச் சந்தோஷப்படுவீர்கள், ஏனெனில் என் பிதா என்னிலும் பெரியவராயிருக்கிறார். (யோவான் 14:28 – மேலும் பார்க்க 13:3-17)

ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்களுடைய தேவனாகிய நம்முடைய பிதாக்களின் தேவன் தம்முடைய பிள்ளையாகிய இயேசுவை மகிமைப்படுத்தினார்; அவரை நீங்கள் ஒப்புக்கொடுத்தீர்கள்; பிலாத்து அவரை விடுதலையாக்கத் தீர்மானித்தபோது, அவனுக்கு முன்பாக அவரை மறுதலித்தீர்கள். அவர் உங்களெல்லாரையும் உங்கள் பொல்லாங்குகளிலிருந்து விலக்கி, உங்களை ஆசீர்வதிக்கும்படி தேவன் தம்முடைய பிள்ளையாகிய இயேசுவை எழுப்பி, முதலாவது உங்களிடத்திற்கே அவரை அனுப்பினார் என்றான். (அப்போஸ்தலர் நடபடிகள் 3:13, 26)

ஏரோதும் பொந்தியுபிலாத்தும், புறஜாதிகளோடும் இஸ்ரவேல் ஜனங்களோடுங்கூட, நீர் அபிஷேகம் பண்ணின உம்முடைய பரிசுத்த பிள்ளையாகிய இயேசுவுக்கு விரோதமாய், மெய்யாகவே கூட்டங்கூடினார்கள். உம்முடைய பரிசுத்த பிள்ளையாகிய இயேசுவின் நாமத்தினாலே அடையாளங்களும்

அற்புதங்களும் நடக்கும்படி செய்து, பிணியாளிகளைக் குணமாக்கும்படி உம்முடைய கரத்தை நீட்டி, உம்முடைய ஊழியக்காரர் உம்முடைய வசனத்தை முழு தைரியத்தோடும் சொல்லும்படி அவர்களுக்கு அநுக்கிரகஞ்செய்தருளும் என்றார்கள். (அப்போஸ்தலர் நடபடிகள் 4:28, 30)

மேலும், பிதாக்களுக்குப் பண்ணப்பட்ட வாக்குத்தத்தங்களை உறுதியாக்கும்படிக்கு, தேவனுடைய சத்தியத்தினிமித்தம் இயேசு கிறிஸ்து விருத்தசேதனமுள்ளவர்களுக்கு ஊழியக்காரரானாரென்றும்; (ரோமர் 15:8)

மேற்சொல்லியவைகளின் முக்கியமான பொருளென்னவெனில்; பரலோகத்திலுள்ள மகத்துவ ஆசனத்தின் வலதுபாரிசத்திலே உட்கார்ந்திருக்கிறவருமாய், பரிசுத்த ஸ்தலத்திலும், மனுஷரால் அல்ல, கர்த்தரால் ஸ்தாபிக்கப்பட்ட மெய்யான கூடாரத்திலும் ஆசாரிய ஊழியஞ் செய்கிறவருமாயிருக்கிற பிரதான ஆசாரியர் நமக்கு உண்டு…" (எபிரேயர் 8:1-2)

கிறிஸ்துவிற்கு மேலே ஒரு தேவன் இருக்கிறார் என்பதை காட்ட பல வசனங்களை மேற்கோள் காட்டினோம். இயேசு மேசியாவாக வந்து தேவனுக்கு கீழ்படிந்து ஊழியம் செய்தார். அதாவது ஒரு சராசரி மனிதன் எப்படி தன் எஜமானனுக்கு கீழ்படிந்து ஊழியம் செய்வாரோ அதே போல மேசியாவாக வந்து இயேசுவும் ஊழியம் செய்தார். இயேசு மனிதனாக வந்து இப்படி ஊழியம் செய்தது, பைபிளில் சொல்லப்பட்ட தேவ குமாரன் என்ற நிலைப்பாட்டிலிருந்து அந்தஸ்திலிருந்து அவரை குறைத்துவிடுவதாக இருக்காது.

இதே போல, இயேசு தேவனல்ல அல்லது பிதா அல்ல என்பதை விளக்கும் வசனங்களை மேற்கோள் காட்டினாலும், இயேசுவின் தெய்வீகத்தன்மைக்கு எந்த களங்கமும் ஏற்படாது. ஏனென்றால், இயேசு பிதா அல்ல என்று திரித்துவத்தை நம்பும் கிறிஸ்தவர்களுக்கு தெரியும். ஆனால், இயேசு பிதாவின் நித்திய நேசகுமாரனாக இருக்கிறார். புதிய ஏற்பாட்டில், "தேவன்" என்ற வார்த்தை பிதாவை குறிக்கும் சொல்லாக இருக்கிறது, இதனை கீழ்கண்ட வசனங்களின் மூலம் அறியலாம்.

தேவன், தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார். உலகத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கும்படி தேவன் தம்முடைய குமாரனை உலகத்தில் அனுப்பாமல், அவராலே உலகம் இரட்சிக்கப்படுவதற்காகவே அவரை அனுப்பினார். அவரை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான்; விசுவாசியாதவனோ, தேவனுடைய ஒரேபேறான குமாரனுடைய நாமத்தில் விசுவாசமுள்ளவனாயிராதபடியினால், அவன் ஆக்கினைத் தீர்ப்புக்குட்பட்டாயிற்று. (யோவான் 3:16-18)

அவர் ஓய்வுநாள் கட்டளையை மீறினதுமல்லாமல், தேவனைத் தம்முடைய சொந்தப் பிதா என்றுஞ் சொல்லித் தம்மைத் தேவனுக்குச் சமமாக்கினபடியினாலே, யூதர்கள் அவரைக் கொலைசெய்யும்படி அதிகமாய் வகைதேடினார்கள். (யோவான் 5:18)

இயேசு கிறிஸ்துவின் ஊழியக்காரனும், அப்போஸ்தலனாகும்படி அழைக்கப்பட்டவனும், தேவனுடைய சுவிசேஷத்திற்காகப் பிரித்தெடுக்கப்பட்டவனுமாகிய பவுல், ரோமாபுரியிலுள்ள தேவப்பிரியரும் பரிசுத்தவான்களாகும்படி அழைக்கப்பட்டவர்களுமாகிய அனைவருக்கும் எழுதுகிறதாவது; நம்முடைய பிதாவாகிய தேவனாலும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாவதாக. இயேசு கிறிஸ்துவைக் குறித்துத் தேவன் தம்முடைய தீர்க்கதரிசிகள் மூலமாய்ப் பரிசுத்த வேதாகமங்களில் முன்னே தம்முடைய சுவிசேஷத்தைப்பற்றி வாக்குத்தத்தம்பண்ணினபடி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவானவர், (ரோமர் 1:1-4)

இவைகளைக்குறித்து நாம் என்ன சொல்லுவோம்? தேவன் நம்முடைய பட்சத்திலிருந்தால் நமக்கு விரோதமாயிருப்பவன் யார்? தம்முடைய சொந்தக்குமாரனென்றும் பாராமல் நம்மெல்லாருக்காகவும் அவரை ஒப்புக்கொடுத்தவர், அவரோடேகூட மற்ற எல்லாவற்றையும் நமக்கு அருளாதிருப்பதெப்படி? (ரோமர் 8:31-32)

அப்படியிருந்தும், நான் என் தாயின் வயிற்றிலிருந்ததுமுதல், என்னைப் பிரித்தெடுத்து, தம்முடைய கிருபையினால் அழைத்த தேவன், தம்முடைய குமாரனை நான் புறஜாதிகளிடத்தில் சுவிசேஷமாய் அறிவிக்கும் பொருட்டாக, அவரை எனக்குள் வெளிப்படுத்தப் பிரியமாயிருந்தபோது, உடனே நான் மாம்சத்தோடும் இரத்தத்தோடும் யோசனைபண்ணாமலும்; (கலாத்தியர் 1:15-16)

மேலும் நீங்கள் புத்திரராயிருக்கிறபடியினால், அப்பா, பிதாவே! என்று கூப்பிடத்தக்கதாகத் தேவன் தமது குமாரனுடைய ஆவியை உங்கள் இருதயங்களில் அனுப்பினார். ஆகையால் இனி நீ அடிமையாயிராமல் புத்திரனாயிருக்கிறாய்; நீ புத்திரனேயானால், கிறிஸ்துமூலமாய்த் தேவனுடைய சுதந்தரனாயுமிருக்கிறாய். (கலாத்தியர் 4:6-7)

ஆகையால், புதிய ஏற்பாட்டில் பொதுவாக "தேவன்" என்று வரும் வார்த்தைகள் அனைத்தும் பெரும்பான்மையாக பிதாவை குறிப்பிடுவதாக இருக்கும், ஏனென்றால், இயேசு பிதா இல்லை. இவ்வசனங்களில் தேவனிடமிருந்து இயேசுவை பிரித்துக் காட்டும் விவரங்களை காணமுடியும்.

இப்போது அடுத்த முக்கியமான விஷயத்துக்கு வருவோம். இயேசு கூட இறைவனாக இருக்கிறார், அவரும் மாற்றமில்லாதவராகவும், இயற்கையால் பாதிக்கப்படாதவராகவும் காணப்படுகிறார் என்பதை இப்போது காண்போம்.

பூர்வகாலங்களில் பங்குபங்காகவும் வகைவகையாகவும், தீர்க்கதரிசிகள் மூலமாய்ப் பிதாக்களுக்குத் திருவுளம் பற்றின தேவன், இந்தக் கடைசி நாட்களில் குமாரன் மூலமாய் நமக்குத் திருவுளம்பற்றினார்; இவரைச் சர்வத்துக்கும் சுதந்தரவாளியாக நியமித்தார், இவரைக்கொண்டு உலகங்களையும் உண்டாக்கினார். இவர் அவருடைய மகிமையின் பிரகாசமும், அவருடைய தன்மையின் சொரூபமுமாயிருந்து, சர்வத்தையும் தம்முடைய வல்லமையுள்ள வசனத்தினாலே தாங்குகிறவராய், தம்மாலேதாமே நம்முடைய பாவங்களை நீக்கும் சுத்திகரிப்பை உண்டுபண்ணி, உன்னதத்திலுள்ள மகத்துவமானவருடைய வலது பாரிசத்திலே உட்கார்ந்தார். குமாரனை நோக்கி: தேவனே, உம்முடைய சிங்காசனம் என்றென்றைக்குமுள்ளது, உம்முடைய ராஜ்யத்தின் செங்கோல் நீதியுள்ள செங்கோலாயிருக்கிறது. நீர் நீதியை விரும்பி, அக்கிரமத்தை வெறுத்திருக்கிறீர்; ஆதலால், தேவனே, உம்முடைய தேவன் உமது தோழரைப் பார்க்கிலும் உம்மை ஆனந்த தைலத்தினால் அபிஷேகம் பண்ணினார் என்றும்; கர்த்தாவே, நீர் ஆதியிலே பூமியை அஸ்திபாரப்படுத்தினீர்; வானங்கள் உம்முடைய கரத்தின் கிரியைகளாயிருக்கிறது; அவைகள் அழிந்துபோம்; நீரோ நிலைத்திருப்பீர்; அவைகளெல்லாம் வஸ்திரம்போலப் பழைமையாய்ப்போம்; ஒரு சால்வையைப்போல அவைகளைச் சுருட்டுவீர், அப்பொழுது மாறிப்போம்; நீரோ மாறாதவராயிருக்கிறீர், உம்முடைய ஆண்டுகள் முடிந்துபோவதில்லை என்றும் சொல்லியிருக்கிறது. (எபிரேயர் 1:1-3, 8-12)

இயேசு கிறிஸ்து நேற்றும் இன்றும் என்றும் மாறாதவராயிருக்கிறார். (எபிரேயர் 13:8)

**இயேசு சர்வ ஞானியாக இருக்கிறார்:**

இயேசு அவர்கள் விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி: மகனே, உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது என்றார். அங்கே உட்கார்ந்திருந்த வேதபாரகரில் சிலர்: இவன் இப்படித் தேவதூஷணம்

சொல்லுகிறதென்ன? தேவன் ஒருவரேயன்றிப் பாவங்களை மன்னிக்கத்தக்கவர் யார் என்று தங்கள் இருதயங்களில் சிந்தித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் தங்களுக்குள்ளே இப்படிச் சிந்திக்கிறார்களென்று இயேசு உடனே தம்முடைய ஆவியில் அறிந்து, அவர்களை நோக்கி: நீங்கள் உங்கள் இருதயங்களில் இப்படிச் சிந்திக்கிறதென்ன? உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டதென்று சொல்வதோ, எழுந்து உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நடவென்று சொல்வதோ, எது எளிது? பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷகுமாரனுக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்கள் அறியவேண்டும் என்று சொல்லி, திமிர்வாதக்காரனை நோக்கி: நீ எழுந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப் போ என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார். உடனே, அவன் எழுந்து, தன் படுக்கையை எடுத்துக்கொண்டு எல்லாருக்கு முன்பாகப் போனான். அப்பொழுது எல்லாரும் ஆச்சரியப்பட்டு: நாம் ஒருக்காலும் இப்படிக் கண்டதில்லையென்று சொல்லி, தேவனை மகிமைப்படுத்தினார்கள். (மாற்கு 2:5-12)

அவருடைய சீஷர்கள் அவரை நோக்கி: இதோ, இப்பொழுது நீர் உவமையாய்ப் பேசாமல், வெளிப்படையாய்ப் பேசுகிறீர். நீர் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர் என்றும், ஒருவன் உம்மை வினாவ வேண்டுவதில்லையென்றும், இப்பொழுது அறிந்திருக்கிறோம்; இதினாலே நீர் தேவனிடத்திலிருந்து வந்தீரென்று விசுவாசிக்கிறோம் என்றார்கள். இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: இப்பொழுது நீங்கள் விசுவாசிக்கிறீர்கள். (யோவான் 16:29-31)

மூன்றாந்தரம் அவர் அவனை நோக்கி: யோனாவின் குமாரனாகிய சீமோனே, நீ என்னை நேசிக்கிறாயா என்றார். என்னை நேசிக்கிறாயா என்று அவர் மூன்றாந்தரம் தன்னைக் கேட்டபடியினாலே, பேதுரு துக்கப்பட்டு: ஆண்டவரே, நீர் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர், நான் உம்மை நேசிக்கிறேன் என்பதையும் நீர் அறிவீர் என்றான். இயேசு: என் ஆடுகளை மேய்ப்பாயாக என்றார். (யோவான் 21:17 – மேலும் பார்க்க 2:23-25; 1 யோவான் 3:20)

அவர்களுடைய இருதயங்கள் தேற்றப்பட்டு, அவர்கள் அன்பினால் இணைக்கப்பட்டு, பிதாவாகிய தேவனுக்கும் கிறிஸ்துவுக்கும் உரிய இரகசியத்தை அறிந்துகொள்ளுகிற உணர்வின் பூரண நிச்சயத்தினுடைய எல்லா ஐசுவரியத்திற்கும் உரியவர்களாகவேண்டுமென்றே இப்படி விரும்புகிறேன். அவருக்குள் ஞானம் அறிவு என்பவைகளாகிய பொக்கிஷங்களெல்லாம் அடங்கியிருக்கிறது. ஏனென்றால், தேவத்துவத்தின் பரிபூரணமெல்லாம் சரீரப்பிரகாரமாக அவருக்குள் வாசமாயிருக்கிறது." (கொலோசெயர் 2:2-3, 9)

தியத்தீரா சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்: அக்கினிஜுவாலை போன்ற கண்களும், பிரகாசமான வெண்கலம்போன்ற பாதங்களுமுள்ள தேவகுமாரன் சொல்லுகிறதாவது; உன் கிரியைகளையும், உன் அன்பையும், உன் ஊழியத்தையும், உன் விசுவாசத்தையும், உன் பொறுமையையும், நீ முன்பு செய்த கிரியைகளிலும் பின்பு செய்த கிரியைகள் அதிகமாயிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன். . .. . அன்றியும் உங்களில் ஒவ்வொருவனுக்கும் உங்கள் கிரியைகளின்படியே பலனளிப்பேன். (வெளிப்படுத்தின விசேஷம் 2:18-19, 23b)

மேலும், இயேசுவாகிய இறைவன், படைப்புகளின் தேவனாக இருப்பதினால், படைப்புக்கள் மற்றும் இயற்கை மீது முழு அதிகாரம் உடையவராக இருக்கிறார்:

அவர் எழுந்து, காற்றை அதட்டி, கடலைப்பார்த்து: இரையாதே, அமைதலாயிரு என்றார். அப்பொழுது காற்று நின்றுபோய், மிகுந்த அமைதல் உண்டாயிற்று. அவர் அவர்களை நோக்கி: ஏன் இப்படிப் பயப்பட்டீர்கள்? ஏன் உங்களுக்கு விசுவாசம் இல்லாமற்போயிற்று என்றார். அவர்கள் மிகவும் பயந்து: இவர் யாரோ? காற்றும் கடலும் இவருக்குக் கீழ்ப்படிகிறதே என்று, ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள். (மாற்கு 4:39-41)

இயேசு ஜனங்களை அனுப்பிவிடுகையில், தம்முடைய சீஷர்கள் படவில் ஏறி, தமக்கு முன்னே அக்கரைக்குப் போகும்படி அவர்களைத் துரிதப்படுத்தினார். அவர் ஜனங்களை அனுப்பிவிட்ட பின்பு, தனித்து ஜெபம்பண்ண ஒரு மலையின்மேல் ஏறி, சாயங்காலமானபோது அங்கே தனிமையாயிருந்தார். அதற்குள்ளாகப் படவு நடுக்கடலிலே சேர்ந்து, எதிர்க்காற்றாயிருந்தபடியால் அலைகளினால் அலைவுபட்டது. இரவின் நாலாம் ஜாமத்திலே, இயேசு கடலின்மேல் நடந்து, அவர்களிடத்திற்கு வந்தார். அவர் கடலின்மேல் நடக்கிறதைச் சீஷர்கள் கண்டு, கலக்கமடைந்து, ஆவேசம் என்று சொல்லி, பயத்தினால் அலறினார்கள். உடனே இயேசு அவர்களோடே பேசி: திடன்கொள்ளுங்கள், நான்தான், பயப்படாதிருங்கள் என்றார். பேதுரு அவரை நோக்கி: ஆண்டவரே! நீரேயானால் நான் ஜலத்தின்மேல் நடந்து உம்மிடத்தில் வரக் கட்டளையிடும் என்றான். அதற்கு அவர்: வா என்றார். அப்பொழுது, பேதுரு படவை விட்டிறங்கி, இயேசுவினிடத்தில் போக ஜலத்தின்மேல் நடந்தான். காற்று பலமாயிருக்கிறதைக் கண்டு, பயந்து, அமிழ்ந்துபோகையில்: ஆண்டவரே, என்னை ரட்சியும் என்று கூப்பிட்டான். உடனே இயேசு கையை நீட்டி அவனைப் பிடித்து: அற்பவிசுவாசியே, ஏன் சந்தேகப்பட்டாய் என்றார். அவர்கள் படவில் ஏறினவுடனே காற்று அமர்ந்தது. அப்பொழுது, படவில் உள்ளவர்கள் வந்து: மெய்யாகவே நீர் தேவனுடைய குமாரன் என்று சொல்லி, அவரைப் பணிந்துகொண்டார்கள். (மத்தேயு 14:22-33 – மேலும் பார்க்க யோபு 9:8; சங்கீதம் 65:5-8; 77:19; 107:22-32)

**மேலும், தம்மிடம் வருபவர்களுக்கு பரிபூரண சமாதானத்தையும், இளைப்பாறுதலையும் தருபவராக இயேசு இருக்கிறார்:**

சகலமும் என் பிதாவினால் எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறது; பிதா தவிர வேறொருவனும் குமாரனை அறியான்; குமாரனும், குமாரன் எவனுக்கு அவரை வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ அவனும் தவிர, வேறொருவனும் பிதாவை அறியான். வருத்தப்பட்டுப் பாரஞ்சுமக்கிறவர்களே! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்; நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன். நான் சாந்தமும் மனத்தாழ்மையுமாய் இருக்கிறேன்; என் நுகத்தை உங்கள்மேல் ஏற்றுக்கொண்டு, என்னிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள்; அப்பொழுது, உங்கள் ஆத்துமாக்களுக்கு இளைப்பாறுதல் கிடைக்கும். என் நுகம் மெதுவாயும், என் சுமை இலகுவாயும் இருக்கிறது என்றார். (மத்தேயு 11:27-30)

சமாதானத்தை உங்களுக்கு வைத்துப்போகிறேன், என்னுடைய சமாதானத்தையே உங்களுக்குக் கொடுக்கிறேன்; உலகம் கொடுக்கிறபிரகாரம் நான் உங்களுக்குக் கொடுக்கிறதில்லை. உங்கள் இருதயம் கலங்காமலும் பயப்படாமலும் இருப்பதாக. (யோவான் 14:27)

என்னிடத்தில் உங்களுக்குச் சமாதானம் உண்டாயிருக்கும்பொருட்டு இவைகளை உங்களுக்குச் சொன்னேன். உலகத்தில் உங்களுக்கு உபத்திரவம் உண்டு, ஆனாலும் திடன்கொள்ளுங்கள்; நான் உலகத்தை ஜெயித்தேன் என்றார். (யோவான் 16:33)

ஆன்மீக தாகத்தோடு தன் மீது நம்பிக்கை வைக்கும் ஒவ்வொருவரின் ஆன்மீக தாகத்தையும் பசியையும் முழுவதுமாக பூர்த்தி செய்கிறவராக கிறிஸ்து இருக்கிறார்:

யூதர்கள் சமாரியருடனே சம்பந்தங்கலவாதவர்களானபடியால், சமாரியா ஸ்திரீ அவரை நோக்கி: நீர் யூதனாயிருக்க, சமாரியா ஸ்திரீயாகிய என்னிடத்தில், தாகத்துக்குத் தா என்று எப்படிக் கேட்கலாம் என்றாள். இயேசு அவளுக்குப் பிரதியுத்தரமாக: நீ தேவனுடைய ஈவையும், தாகத்துக்குத்தா என்று உன்னிடத்தில் கேட்கிறவர் இன்னார் என்பதையும் அறிந்திருந்தாயானால், நீயே அவரிடத்தில் கேட்டிருப்பாய், அவர் உனக்கு ஜீவத்தண்ணீரைக் கொடுத்திருப்பார் என்றார். அதற்கு அந்த ஸ்திரீ: ஆண்டவரே, மொண்டுகொள்ள

உம்மிடத்தில் பாத்திரமில்லையே, கிணறும் ஆழமாயிருக்கிறதே, பின்னை எங்கேயிருந்து உமக்கு ஜீவத்தண்ணீர் உண்டாகும்.

இந்தக் கிணற்றை எங்களுக்குத் தந்த நம்முடைய பிதாவாகிய யாக்கோபைப்பார்க்கிலும் நீர் பெரியவரோ? அவரும் அவர் பிள்ளைகளும் அவர் மிருகஜீவன்களும் இதிலே குடித்ததுண்டே என்றாள். இயேசு அவளுக்குப் பிரதியுத்தரமாக: இந்தத் தண்ணீரைக் குடிக்கிறவனுக்கு மறுபடியும் தாகமுண்டாகும். நான் கொடுக்கும் தண்ணீரைக் குடிக்கிறவனுக்கோ ஒருக்காலும் தாகமுண்டாகாது; நான் அவனுக்குக் கொடுக்கும் தண்ணீர் அவனுக்குள்ளே நித்திய ஜீவகாலமாய் ஊறுகிற நீரூற்றாயிருக்கும் என்றார். (யோவான் 4:9-14)

அழிந்துபோகிற போஜனத்திற்காக அல்ல, நித்தியஜீவன்வரைக்கும் நிலைநிற்கிற போஜனத்திற்காகவே கிரியை நடப்பியுங்கள்; அதை மனுஷகுமாரன் உங்களுக்குக் கொடுப்பார்; அவரைப் பிதாவாகிய தேவன் முத்திரித்திருக்கிறார் என்றார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி: தேவனுக்கேற்ற கிரியைகளை நடப்பிக்கும்படி நாங்கள் என்ன செய்யவேண்டும் என்றார்கள். இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: அவர் அனுப்பினவரை நீங்கள் விசுவாசிப்பதே தேவனுக்கேற்ற கிரியையாயிருக்கிறது என்றார். இயேசு அவர்களை நோக்கி: வானத்திலிருந்து வந்த அப்பத்தை மோசே உங்களுக்குக் கொடுக்கவில்லை; என் பிதாவோ வானத்திலிருந்து வந்த மெய்யான அப்பத்தை உங்களுக்குக் கொடுக்கிறார் என்று, மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். வானத்திலிருந்திறங்கி, உலகத்துக்கு ஜீவனைக் கொடுக்கிற அப்பமே தேவன் அருளிய அப்பம் என்றார். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி: ஆண்டவரே, இந்த அப்பத்தை எப்பொழுதும் எங்களுக்குத் தரவேண்டும் என்றார்கள். இயேசு அவர்களை நோக்கி: ஜீவ அப்பம் நானே, என்னிடத்தில் வருகிறவன் ஒருக்காலும் பசியடையான், என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் ஒருக்காலும் தாகமடையான். நீங்கள் என்னைக் கண்டிருந்தும் விசுவாசியாமலிருக்கிறீர்கள் என்று உங்களுக்குச் சொன்னேன். பிதாவானவர் எனக்குக் கொடுக்கிற யாவும் என்னிடத்தில் வரும்; என்னிடத்தில் வருகிறவனை நான் புறம்பே தள்ளுவதில்லை. என் சித்தத்தின்படியல்ல, என்னை அனுப்பினவருடைய சித்தத்தின்படி செய்யவே நான் வானத்திலிருந்திறங்கி வந்தேன். அவர் எனக்குத் தந்தவைகளில் ஒன்றையும் நான் இழந்துபோகாமல், கடைசி நாளில் அவைகளை எழுப்புவதே என்னை அனுப்பின பிதாவின் சித்தமாயிருக்கிறது. குமாரனைக் கண்டு, அவரிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் எவனோ, அவன் நித்தியஜீவனை அடைவதும், நான் அவனைக் கடைசிநாளில் எழுப்புவதும், என்னை அனுப்பினவருடைய சித்தமாயிருக்கிறது என்றார்.

என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவனுக்கு நித்தியஜீவன் உண்டென்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். ஜீவ அப்பம் நானே. உங்கள் பிதாக்கள் வனாந்தரத்திலே மன்னாவைப் புசித்திருந்தும் மரித்தார்கள். இதிலே புசிக்கிறவன் மரியாமலிருக்கும்படி வானத்திலிருந்திறங்கின அப்பம் இதுவே. நானே வானத்திலிருந்திறங்கின ஜீவ அப்பம்; இந்த அப்பத்தைப் புசிக்கிறவன் என்றென்றைக்கும் பிழைப்பான்; நான் கொடுக்கும் அப்பம் உலகத்தின் ஜீவனுக்காக நான் கொடுக்கும் என் மாம்சமே என்றார்.

என் மாம்சத்தைப் புசித்து, என் இரத்தத்தைப் பானம்பண்ணுகிறவனுக்கு நித்தியஜீவன் உண்டு; நான் அவனைக் கடைசிநாளில் எழுப்புவேன். என் மாம்சம் மெய்யான போஜனமாயிருக்கிறது, என் இரத்தம் மெய்யான பானமாயிருக்கிறது. (யோவான் 6:27-29, 32-40, 47-51, 54-55)

பண்டிகையின் கடைசிநாளாகிய பிரதான நாளிலே இயேசு நின்று, சத்தமிட்டு: ஒருவன் தாகமாயிருந்தால் என்னிடத்தில் வந்து, பானம்பண்ணக்கடவன். வேதவாக்கியம் சொல்லுகிறபடி என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் எவனோ, அவன் உள்ளத்திலிருந்து ஜீவத்தண்ணீருள்ள நதிகள் ஓடும் என்றார்.

தம்மை விசுவாசிக்கிறவர்கள் அடையப்போகிற ஆவியைக்குறித்து இப்படிச் சொன்னார். இயேசு இன்னும் மகிமைப்படாதிருந்தபடியினால் பரிசுத்த ஆவி இன்னும் அருளப்படவில்லை. (யோவான் 7:37-39)

கிறிஸ்து மனிதனாக வந்தார் என்ற கோட்பாடு பற்றி ஒரு சில கிறிஸ்தவர்களுக்கு இருக்கும் தவறான புரிந்துக் கொள்ளுதலுக்கு இப்போது பதில் கிடைத்து இருக்கும் என்று நம்புகிறேன். இதனை அறிந்துக் கொண்டால், கிறிஸ்தவரல்லாதவர்களும், திரித்துவத்தை எதிர்க்கிறவர்களும் ஏற்படுத்தும் குழப்பங்களுக்கு சரியான பதிலை கிறிஸ்தவர்கள் கொடுக்கமுடியும். இவர்கள் அறியாமையில் செய்தாலும் சரி, தெரிந்தே வேண்டுமென்றே குழப்பத்தை உண்டாக்கினாலும் சரி, கிறிஸ்தவர்கள் சரியான பதிலை அமைதியாக கொடுக்க இவ்விவரங்கள் உதவும் என்று நம்புகிறேன்.

மூலம்: **http://www.answeringislam.org/authors/shamoun/the_incarnation.html**
**சாம் ஷமான் அவர்களின் இதர கட்டுரைகள்**
Source: http://www.answering-islam.org/tamil/authors/sam-shamoun/the_incarnation.html

# 16. ஸூரா 18:50 & 1 யோவான் 3 - சாத்தானின் பிள்ளைகளுக்கும் இறைவனின் பிள்ளைகளுக்கும் இடையே இருக்கும் வேறுபாடுகளை அறிதல்

ஆசிரியர்: ரோலண்ட கிளார்க்

"பிள்ளைகள் தங்கள் பெற்றோர்களைப் போலவே காணப்படுகிறார்கள்" என்று கடந்த காலங்களில் வாழ்ந்த மக்கள் கவனித்துள்ளார்கள். பிள்ளைகள் தங்கள் தோற்றத்தில் மாட்டுமல்ல, குணநலன்களிலும் பெற்றோர்களை பிரதிபலிப்பவர்களாக காணப்படுகிறார்கள். எனவே தான் "தாயைப் போல பிள்ளை" என்ற பழமொழி பரவலாக பயன்படுத்தப்படுகிறது. இந்த பழமொழி ஆன்மீக ரீதியாகவும் ஏற்றுக் கொள்ளக்கூடியதாக இருக்கிறது.

சாத்தான் பற்றி ஸூரா 18:50 கீழ்கண்டவிதமாக கூறுகிறது:

". . . அவன் (இப்லீஸ்) ஜின் இனத்தைச் சேர்ந்தவனாக இருந்தான்; அவன் தன் இறைவனுடைய கட்டளையை மீறி விட்டான்; ஆகவே நீங்கள் என்னையன்றி **அவனையும் அவன் சந்ததியாரையும்** (உங்களைப்) பாதுகாப்பவர்களாக எடுத்துக் கொள்வீர்களா? அவர்களோ உங்களுக்குப் பகைவர்களாக இருக்கிறர்கள்; அக்கிரமக்காரர்கள் (இவ்வாறு) மாற்றிக் கொண்டது மிகவும் கெட்டதாகும். "

"சாத்தானின் இனம்" என்பது எதனை குறிப்பிடுகிறது? இதற்கு யூசுப் அலி அவர்கள் தன் குர்-ஆன் மொழியாக்கத்தின் பின் குறிப்பில் கீழ்கண்டவாறு கூறுகிறார்:

**2394: சாத்தானின் இனம்: இதனை நாம் நேரடியான பொருளில் எடுத்துக் கொள்ளத்தேவையில்லை. சாத்தானை பின்பற்றும் அனைவரும் அவனது சந்ததியாகவே (இனமாகவே) நாம் கருதவேண்டும்.**

**தீய செயல்கள் செய்பவர்களை சாத்தானோடு சம்மந்தப்படுத்தி பைபிள் கூறுகிறது** :

**பாவஞ்செய்கிறவன் பிசாசினாலுண்டாயிருக்கிறான்;** ஏனெனில் பிசாசானவன் ஆதிமுதல் பாவஞ்செய்கிறான், பிசாசினுடைய கிரியைகளை அழிக்கும்படிக்கே தேவனுடைய குமாரன் வெளிப்பட்டார். தேவனால் பிறந்த எவனும் பாவஞ்செய்யான், ஏனெனில் அவருடைய வித்து அவனுக்குள் தரித்திருக்கிறது; அவன் தேவனால் பிறந்தபடியினால் பாவஞ்செய்யமாட்டான். இதினாலே **தேவனுடைய பிள்ளைகள் இன்னாரென்றும், பிசாசின் பிள்ளைகள் இன்னாரென்றும் வெளிப்படும்** ; நீதியைச் செய்யாமலும் தன் சகோதரனில் அன்புகூராமலும் இருக்கிற எவனும் தேவனால் உண்டானவனல்ல. நாம் ஒருவரிலொருவர் அன்புகூரவேண்டுமென்பதே நீங்கள் ஆதிமுதல் கேள்விப்பட்ட விசேஷமாயிருக்கிறது. பொல்லாங்கனால் உண்டாயிருந்து தன் சகோதரனைக் கொலைசெய்த காயீனைப் போலிருக்கவேண்டாம்; அவன் எதினிமித்தம் அவனைக் கொலைசெய்தான்? தன் கிரியைகள் பொல்லாதவைகளும், தன் சகோதரனுடைய கிரியைகள் நீதியுள்ளவைகளுமாயிருந்ததினிமித்தந் தானே. (1 யோவான் 3:8-12)

ஆபேலின் கொலைக்கு பின்னால் தூண்டுதலாக இருந்தவன் சாத்தான் என்று இயேசு கூட கூறியுள்ளார். யூத மத தலைவர்கள் தாங்கள் "ஆபிரகாமின் பிள்ளைகள்" என்று தவறாக கூறியதை இயேசு கடிந்துக்கொண்டார். மேலும், அவர்களை நோக்கி இயேசு "**நீங்கள் உங்கள் பிதாவாகிய பிசாசானவனால் உண்டானவர்கள்** ;. . . . அவன் ஆதிமுதற்கொண்டு மனுஷ கொலை பாதகனாயிருக்கிறான்;... (யோவான் 8:44)" என்று கூறினார்.

கொலை செய்வது சாத்தானுடைய ஒரு குணமாக அல்லது செயலாக இருப்பதினால், தற்காலத்தில் நடைப்பெறும் உலக நடப்புகளை சாத்தானின் செயல்களாக நாம் கருதலாம். "இவ்வாண்டு ரமளான் மாதத்தில் நடைப்பெற்ற வன்முறைகளால் மரித்த 3,400 இஸ்லாமியர்களின் மரணத்திற்கு பின்னால், இருட்டு சக்திகளின் (சாத்தானின்) கைவேலை இருக்குமோ?". இந்த வன்முறைகளில் ஈடுபட்ட மனிதர்கள் ஸூரா 18:50 கூறுவது போல, சாத்தானின் சந்ததிகளாக (இனமாக) இருப்பார்களோ?

தொடர்ச்சியாக முஸ்லிம்கள் ஒருவரை ஒருவர் சண்டையிட்டுக்கொண்டு, இஸ்லாமிய உம்மாவை (நம்பிக்கையை) காயப்படுத்தி, இரத்தம் சிந்த வைக்கும் போது, இதனை காணும் மக்கள் இப்படிப்பட்ட கேள்விகளை கேட்கிறார்கள். இதுமட்டுமல்ல, அமைதியை விரும்பும் முஸ்லிகள் இப்படி முஸ்லிம்கள் சண்டையிட்டு இரத்தம் சிந்தி மரிப்பதை காணும் போது. அதிகமாக ஏமாற்றமடைகிறார்கள். இவர்களில் சில தைரியமான முஸ்லிம்கள் கீழ்கண்டவிதமான கேள்விகளை கேட்கிறார்கள்:

"2012ம் ஆண்டு, ரமளான் மாதத்தில் சக முஸ்லிகளால் கொலை செய்யப்பட்டு மரித்த முஸ்லிம்களின் எண்ணிக்கை இதர மாதங்களை விட 66% உயர்ந்துள்ளது, உண்மை இப்படி இருக்கும் போது, ரமளான் மாதத்தில் சாத்தான் விலங்கிடப்படுகிறான் என்று கூறுவது எப்படி சாத்தியமாகும்?" (**இந்த கட்டுரையை படிக்கவும்**).

சாத்தான் பற்றிய வேறுபல கேள்விகளுக்கான விவரமான ஆய்வை இந்த கட்டுரையில் படிக்கலாம்: "**நம்முடைய பொதுவான எதிரி – சாத்தான்**".

உவமையாக பேசும் போது சாத்தானுக்கு சந்ததி (பிள்ளைகள்) இருப்பதாக நாம் கூறும் போது, இறைவனின் பிள்ளைகள் என்று ஏன் நாம் விசுவாசிகளை குறிப்பிடக்கூடாது? இதனை படித்தவுடன், இஸ்லாமிய வாசகர்கள்,

**"குர்-ஆனோ அல்லது ஹதீஸ்களோ, இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையே குடும்ப உறவு போன்ற ஒரு உறவு இருப்பதாக கூறியிருக்கிறதா? அதாவது இறைவன் அப்பாவாகவும், மனிதர்கள் பிள்ளைகளாகவும் எங்கேயாவது கூறியிருக்கிறதா? "**

என்று கேள்வி எழுப்புவார்கள்.

முஸ்லிம்கள் இறைவனை "தகப்பனாகவும்", மனிதர்களை "பிள்ளைகளாகவும்" கருதமாட்டார்கள். இது குர்-ஆனின் படி தடை செய்யப்பட்ட ஒன்றாகும். இதனை மேலும் அறிய இந்த கட்டுரையை படிக்கவும்: **இஸ்லாமுக்கு பிதா இல்லை.**

இறைவன் நமக்கெல்லாம் ஒரு அப்பாவைப் போல இருக்கிறார் என்பதை ஆணித்தரமாக எதிர்க்கும் முஸ்லிம்கள், முந்தைய தீர்க்கதரிசிகள் இறைவனை தகப்பனாகவே குறிப்பிட்டார்கள் என்பதை கற்பனையும் செய்து பார்க்கமாட்டார்கள், இதனை முஸ்லிம்களால் ஜீரணித்துக்கொள்ள முடியாது, ஏனென்றால், இறைவனை தகப்பனாக கருதுவது ஒரு மன்னிக்கமுடியாத பாவமாக முஸ்லிம்கள் கருதுகிறார்கள். ஆனால், உண்மை என்னவென்றால், யூத வேதாகமம் சர்வ வல்ல இறைவனை தகப்பன் என்றே குறிப்பிடுகின்றது.

யூத வேதமாகிய "தனக்"கில் நாம் கீழ்கண்டவாறு படிக்கிறோம்:

எப்பிராயீம் எனக்கு அருமையான குமாரன் அல்லவோ? அவன் எனக்குப் பிரியமான **பிள்ளையல்லவோ?** அவனுக்கு விரோதமாய்ப் பேசினது முதல் அவனை நினைத்துக்கொண்டே இருக்கிறேன்; ஆகையால் என் உள்ளம் அவனுக்காகக் கொதிக்கிறது; அவனுக்கு உருக்கமாய் இரங்குவேன் என்று கர்த்தர் சொல்லுகிறார். நீங்கள் என் ஜனமல்ல என்று அவர்களுக்குச் சொல்வதற்குப் பதிலாக **நீங்கள் ஜீவனுள்ள தேவனுடைய பிள்ளைகள்** என்று அவர்களுக்குச் சொல்லப்படும். **நம்மெல்லாருக்கும் ஒரே பிதா இல்லையோ?** ஒரே தேவன் நம்மைச் சிருஷ்டித்ததில்லையோ? நாம் நம்முடைய பிதாக்களின் உடன்படிக்கையைப் பரிசுத்தக் குலைச்சலாக்கி, அவனவன் தன் தன் சகோதரனுக்குத் துரோகம் பண்ணுவானேன்? (எரேமியா 31:20, ஓசியா 1:10,மல்கியா 2:10)

இன்ஜிலில் (நற்செய்தி) இயேசு தம் சீடர்களுக்கு எப்படி ஜெபிக்க கற்றுக்கொடுத்திருக்கிறார் என்பதை காணமுடியும்:

".... பரமண்டலங்களிலிருக்கிற **எங்கள் பிதாவே,** உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக; உம்முடைய ராஜ்யம் வருவதாக; உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறதுபோலப் பூமியிலேயும் செய்யப்படுவதாக; எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை அன்றன்றும் எங்களுக்குத் தாரும்; எங்கள் பாவங்களை எங்களுக்கு மன்னியும்; நாங்களும் எங்களிடத்தில் கடன்பட்ட எவனுக்கும் மன்னிக்கிறோமே; எங்களைச் சோதனைக்குட்படப்பண்ணாமல், தீமையினின்று எங்களை இரட்சித்துக் கொள்ளும், என்று சொல்லுங்கள் என்றார்." (லூக்கா 11:2-4)

பழைய ஏற்பாட்டில், அனேக இடங்களில் பிதா குமாரன் என்ற உறவு பற்றி கூறும் வசனங்கள் மட்டுமல்ல, புதிய ஏற்பாட்டிலும் இயேசு இறைவனின் குமாரன் என்பதை காட்டும் அனேக வசனங்கள் உண்டு. இதைப் பற்றிய புதிய ஏற்பாட்டின் ஒரு சில வசனங்களை இங்கு காணலாம்: மத்தேயு 17:5, 26:63-66; மாற்கு 2:1-12, யோவான் 10:24-38.

**முடிவுரையாக,** இயேசு கூறிய ஒரு உவமையை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். இந்த உவமையில் 'மேசியா என்பவர், இறைவனின் குமாரனாக' இருக்கிறார் என்பதை இயேசு கூறுகிறார். இயேசுவின் உவமையை கேட்டுக்கொண்டு இருந்த யூத மத தலைவர்கள், இயேசு எதைச் சொல்கிறார் என்பதை புரிந்துக்கொண்டார்கள். இந்த உவமைப் பற்றி லூக்கா 20:9-19 வசனங்களில் காணலாம்.

ஒரு மனுஷன் ஒரு திராட்சத்தோட்டத்தை உண்டாக்கி, அதைத் தோட்டக்காரருக்குக் குத்தகையாக விட்டு, நெடுநாளாகப் புறத்தேசத்துக்குப் போயிருந்தான். அந்தத் தோட்டக்காரர் திராட்சத்தோட்டத்தின் கனிகளில் தன் பாகத்தைக் கொடுத்தனுப்பும்படி, பருவகாலத்திலே அவர்களிடத்தில் ஒரு ஊழியக்காரனை அனுப்பினான். அந்தத் தோட்டக்காரர் அவனை அடித்து, வெறுமையாக அனுப்பிவிட்டார்கள். பின்பு அவன் வேறொரு ஊழியக்காரனை அனுப்பினான்; அவனையும் அவர்கள் அடித்து, அவமானப்படுத்தி, வெறுமையாக அனுப்பிவிட்டார்கள். அவன் மூன்றாந்தரமும் ஒரு ஊழியக்காரனை அனுப்பினான்; அவனையும் அவர்கள் காயப்படுத்தி, துரத்திவிட்டார்கள்.

அப்பொழுது திராட்சத்தோட்டத்தின் எஜமான்: நான் என்ன செய்யலாம், எனக்குப் பிரியமான குமாரனை அனுப்பினால், அவனையாகிலும் கண்டு அஞ்சுவார்கள் என்று எண்ணி, அவனை அனுப்பினான். தோட்டக்காரர் அவனைக் கண்டபோது: இவன் சுதந்தரவாளி, சுதந்தரம் நம்முடையதாகும்படிக்கு இவனைக் கொல்லுவோம் வாருங்கள் என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டு, அவனைத் திராட்சத்தோட்டத்திற்குப் புறம்பே தள்ளி, கொன்றுபோட்டார்கள்.

இப்படியிருக்க, திராட்சத்தோட்டத்தின் எஜமான் அவர்களை என்னசெய்வான்? அவன் வந்து அந்தத் தோட்டக்காரரைச் சங்கரித்து, திராட்சத்தோட்டத்தை வேறு தோட்டக்காரரிடத்தில் கொடுப்பான் அல்லவா என்றார்.

அவர்கள் அதைக்கேட்டு, அப்படியாகாதிருப்பதாக என்றார்கள்.

அப்பொழுது அவர் அவர்களைப் பார்த்து: வீடு கட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே, மூலைக்குத் தலைக்கல்லாயிற்று என்று எழுதியிருக்கிற வேதவாக்கியத்தின் கருத்தென்ன? அந்தக் கல்லின்மேல் விழுகிறவன் எவனோ அவன் நொறுங்கிப்போவான், அது எவன்மேல் விழுமோ அவனை நசுக்கிப்போடும் என்றார்.

பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் தங்களைக் குறித்துத் தான் இயேசு சொல்கிறார் என்பதை உணர்ந்துக்கொண்டார்கள், அதாவது மேலே சொன்ன உவமையில் வரும் அந்த தீய உழவர்கள் இவர்கள் தான். இதனால் இயேசுவை கைது செய்ய நினைத்தார்கள், ஆனால் மக்களுக்கு பயந்ததினால் அவரை கைது செய்யவில்லை.

இறைவனை குறிப்பிடும் போது அவரை பிதா என்று அழையுங்கள் என்று இயேசு தம் சீடர்களுக்கு கற்றுக்கொடுத்தார். நான் இப்போது ஒரு கேள்வியை உங்களிடம் கேட்கிறேன், "நீங்கள் இறைவனிடம்

வேண்டிக்கொள்ளும் போது அவரை எப்படி அழைக்கிறீர்கள்?", இறைவனை பிதாவாக அழைக்கும் அனுபவம் உங்களுக்கு உண்டா?

**இறைவன் நம் பிதாவாக இருக்கிறார் என்பதைப் பற்றி மேலும் அறிய எனக்கு எழுதவும்.**

மஸிஹாவின் தெய்வீகத்தன்மையைப் பற்றி மேலும் அறியவேண்டுமென்று விரும்புகிற வாசகர்கள் இந்த கட்டுரைகளை படித்து தெரிந்துக்கொள்ளலாம்: 1, 2

1 யோவான் 3:8ம் வசனத்தை படிக்கும் போது எழும் இன்னொரு முக்கியமான கேள்வி: " பிசாசினுடைய கிரியைகளை அழிக்கும்படிக்கே தேவனுடைய குமாரன் வெளிப்பட்டார். என்று 1 யோவான் 3:8 சொல்வதின் அர்த்தமென்ன?".

இவைகள் பற்றி அறிய இந்த இரண்டு கட்டுரைகளை படியுங்கள்: 1) Timeless Truth Encrypted in Ancient Wisdom and 2) Wasn't the God of the Bible strong enough to save Jesus from being killed?

ஆங்கில மூலம்: Surah 18:50 & 1 John 3 - Distinguishing God's Children from the Devil's

ரோலண்ட் கிளார்க் அவர்களின் **இதர கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/rolandclarke/like_their_father.html

# 17. அல்லாஹ் ஏன் ஆபிரகாமின் சந்ததி பட்டியலை தாறுமாறாக கூறுகிறார்

கீழ்கண்ட குர்-ஆன் வசனங்களை ஒரு குறிப்பிட்ட வகையில் பதித்துள்ளேன். இக்கட்டுரையில் சொல்லப்படும் விவரங்கள் தெளிவாக புரியவேண்டும் என்பதற்காக இப்படி பதிக்கப்பட்டுள்ளது.

**குர்-ஆன் ஸூரா 6:83-89**:

83. இவை நம்முடைய ஆதாரங்களாகும், நாம் இவற்றை **இப்ராஹீமுக்கு** அவருடைய கூட்டத்திற்கு எதிராகக் கொடுத்தோம்; நாம் விரும்புவோருக்கு பதவிகளை (மேலும் மேலும்) உயர்த்துகிறோம்; நிச்சயமாக உம்முடைய இறைவன் பூரண ஞானமும் பேரறிவும் உள்ளவன்.

84. நாம் **அவருக்கு இஸ்ஹாக்கையும், யஃகூபையும்** (சந்ததியாகக்) கொடுத்தருளினோம், இவர்கள் அனைவரையும் நாம் நேர்வழியில் செலுத்தினோம்;

> **இதற்கு** முன்னர் நாம் **நூஹையும்**
>
> **அவருடைய** சந்ததியிலிருந்து

தாவூது, ஸுலைமான், அய்யூப், யூஸுஃப், மூஸா, ஹாரூன்

ஆகியோரையும் நேர்வழியில் செலுத்தினோம்;

இப்படியே நாம் நன்மை புரிவோருக்கு நற்கூலி வழங்குகிறோம்.

6:85. இன்னும், ஜகரிய்யா, யஹ்யா, ஈஸா, இல்யாஸ் -

இவர்கள் யாவரும் (நேர் வழிசார்ந்த) ஸாலிஹானவர்களில் நின்றுமுள்ளவர்களே.

6:86. இன்னும் இஸ்மாயீல், அல்யஸவு, யூனுஸ், லூத் -

இவர்கள் யாவரையும் உலகத்திலுள்ள அனைவரிலும் மேன்மையாக்கினோம்.

6:87. இவர்களுடைய மூதாதையர்களிலிருந்தும், இவர்களுடைய சந்ததிகளிலிருந்தும், இவர்களுடைய சகோதரர்களிலிருந்தும் (பலரை) நாம் தேர்ந்தெடுத்து, அவர்களை நேர் வழியில் செலுத்தினோம்.

6:88. இதுவே அல்லாஹ்வின் நேர் வழியாகும், தன் அடியார்களில் அவன் யாரை விரும்புகிறானோ, அவர்களுக்கு இதன்மூலம் நேர்வழி காட்டுகிறான்; (பின்னர்) அவர்கள் இணைவைப்பார்களானால், அவர்கள் செய்து வந்ததெல்லாம், அவர்களை விட்டு அழிந்துவிடும்.

6:89. இவர்களுக்குத்தான் நாம் வேதத்தையும், அதிகாரத்தையும், நபித்துவத்தையும் கொடுத்தோம்; ஆகவே இவற்றை இவர்கள் நிராகரித்தால் இதனை நிராகரிக்காத ஒரு சமுதாயத்தினரை இதற்கு நாம் நிச்சயமாக பொறுப்பாக்குவோம். (குர்-ஆன் 6:83-89)

அல்லாஹ், பெயர்களின் பட்டியலை கொடுக்கும் போது அவைகளை தாறுமாறாக மாற்றி கொடுக்க காரணம் என்ன? ஏன் குர்-ஆனில் பெயர்கள் ஒரு வரிசை கிரமமாக கொடுக்கப்படாமல் இருக்கின்றது?

மேற்கண்ட நபர்கள் வாழ்ந்த காலங்களின் படி, அவர்களை வரிசைப் படுத்தவேண்டுமென்றால், அவைகளை கீழ்கண்ட விதமாக வரிசைப்படுத்தி பட்டியலிடவேண்டும்.

**ஆபிரகாமின் சந்ததியிலிருந்து:**

இஸ்மாயில், ஈசாக்கு, யாக்கோபு, யோசேப்பு, ஆரோன், மோசே, தாவீது, சாலொமோன், எலியா, எலிஷா, யோனா, ஜகரிய்யா, யோவான் ஸ்நானகன் மற்றும் இயேசு.

இது குர்-ஆனின் மிகப்பெரிய பிழை என்று சொல்லமுடியாது, ஆனால், சர்வத்தையும் அறிந்த அல்லாஹ்விற்கு எப்படி இந்த குழப்பம் வந்தது என்பது தான் கேள்வி?

**குர்-ஆனின் இவ்வசனங்கள் பற்றி பல கேள்விகள் எழுகின்றன:**

முதலாவதாக, லோத்தும் யோபுவும் ஆபிரகாமின் சந்ததி இல்லை என்பதை கவனிக்கவும். லோத்து ஆபிரகாமின் சகோதரனுடைய மகன் ஆவார், தனக்கு பிறந்தவரல்ல. ஆபிரகாம் இஸ்ரவேல் நாட்டிற்கு சென்ற

போது, அவரோடு கூட சென்றவர் தான் லோத்து. இந்த நேரத்தில் ஆபிரகாமுக்கு பிள்ளைகள் பிறக்கவில்லை (பார்க்க ஆதியாகமம் 11:27-30, 12:4-5).

அடுத்தபடியாக, யோபுவைப் பற்றி பார்ப்போம். இவரைப் பற்றி அதிகமாக விவரங்கள் கொடுக்கப்படவில்லை என்றாலும், இவர் வேறு ஒரு நாட்டில் / இடத்தில் வாழ்ந்தவராவார். இவர் ஆபிரகாமின் சந்ததியில் பிறந்தவர் அல்ல. குர்-ஆனின் வசனங்கள் அமைக்கப்பட்டுள்ள வகையை கூர்ந்து கவனித்தால், அவைகள் ஆபிரகாமைப் பற்றியும், அவரது சந்ததியில் வந்தவர்கள் பற்றியும் பட்டியலிட்டுத் தருகின்றது. இந்த பட்டியலில் உள்ளவர்களோடு ஆபிரகாமுக்கு ஒரு உறவுமுறை இருப்பது போன்று அமைக்கப்பட்டுள்ளது.

நோவா மட்டுமே ஆபிரகாமுக்கு முன்பு வந்தவர். மற்ற பெயர்கள் அனைத்தும் ஆபிரகாமுக்கு பிறகு வந்தவர்கள் என்றும், அவரது சந்ததி என்ற வகையிலும் குர்-ஆன் பேசுகின்றது.

இதுமட்டுமல்ல, குர்-ஆன் 89ம் வசனம், "இவர்களுக்குத் தான் நாம் வேதத்தையும், அதிகாரத்தையும், நபித்துவத்தையும் கொடுத்தோம்" என்று சொல்கிறது.

இவ்வசனம் குறிப்பிடும் "**வேதம்**" (the Book) எது? இதற்கு பதிலாக, "இவர்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக **ஒரு வேதம் (a Book)** கொடுக்கப்பட்டது" என்று சொல்லியிருந்தால் சரியாக இருந்திருக்கும் அல்லவா? இவர்கள் அனைவருக்கும் எப்படி ஒரே வேதம் கொடுக்கப்பட்டிருக்க முடியும்? அது எந்த புத்தகம்?

குர்-ஆனின் இதர இடங்களில் வாசிக்கும் போது மோசேக்கு தோரா கொடுத்ததாகவும், தாவீதுக்கு ஜபூர் கொடுத்ததாகவும், இயேசுவிற்கு இன்ஜில் கொடுத்ததாகவும் தனித்தனியாக சொல்லப்படுகின்றது. ஆனால், மேற்கண்ட வசனத்தை படித்தால், இவர்கள் அனைவருக்கும் கொடுக்கப்பட்டது "ஒரே வேதத்தை தானா?" என்ற கேள்வி எழுகின்றது.

இஸ்லாமிய நபி முஹம்மதுவிற்கும் "**ஒரு வேதம்/புத்தகம்**" கொடுக்கப்பட்டது. அப்படியானால், இந்த கணக்கு சரியாக இருக்குமா?

இவைகள் அனைத்தையும் ஒரு வேதம்/புத்தகம் என்று அழைக்கமுடியுமா?

**தோரா = ஜபூர் = இன்ஜில் = குர்-ஆன்?**

அதாவது தோரா என்றுச் சொன்னாலும், ஜபூர் என்றுச் சொன்னாலும், இன்ஜில் என்றுச் சொன்னாலும், கடைசியாக குர்-ஆன் என்றுச் சொன்னாலும் அது ஒரு புத்தகத்தையே குறிக்கும் என்று கருதமுடியுமா?

(சிலர் ஆம், மேற்கண்ட கணக்கு சரியானது என்றுச் சொல்கிறார்கள், இதைப் பற்றி அறிய இங்கு சொடுக்கி படிக்கவும் - http://www.answering-islam.org/Quran/Versions/004.159.html).

குர்-ஆன் சொல்வது போல "எல்லோருக்கும் ஒரே வேதம் கொடுக்கப்பட்டது" என்று குர்-ஆனுக்கு முன்பு வந்த பைபிளில் சொல்லப்படவில்லையே! வேதக்காரர்களிடம் இருக்கும் தோராவும், ஜபூரும்(சங்கீதம்), இன்ஜிலும் (சுவிசேஷங்கள்) தனித்தனி வேதங்களாகவும், புத்தகங்களாகவும் இருக்கின்றன, அதே போல குறிப்பிடப்பட்டும் இருக்கின்றன.

யோவான் ஸ்நானகனின் தந்தை ஜகரியாவிற்கு எந்த வேதம் கொடுக்கப்பட்டது? இதுமட்டுமல்ல, யோவான் ஸ்நானகனுக்கு கொடுக்கப்பட்ட வேதம் எது? அதன் பெயர் என்ன? இஸ்மாயிலுக்கு கொடுக்கப்பட்ட வேதம்

எது? அதன் பெயர் என்ன? தேவனுடைய உண்மையான வெளிப்பாடாக இருக்கும் பைபிளின் படி பார்க்கும் போது, குர்-ஆனின் இவ்விதமான கூற்றுக்கள் அனைத்தும் ஒன்றையொன்று முரண்படுகின்றதை காணமுடியும். இது மட்டுமல்ல, குர்-ஆனின் ஒரு வசனம், இதர வசனங்கள் சொல்லும் விவரங்களோடும் மற்றும் இதர இஸ்லாமிய ஹதீஸ்களோடும் மோதுகின்றன / முரண்படுகின்றன. இந்த ஹதீஸ்கள் அல்லாஹ்விடம் இருக்கும் "**தாய் புத்தகத்திலிருந்து**" கொடுக்கப்பட்ட வெளிப்பாடுகள் அல்ல என்பதை கவனத்தில் கொள்ளவும்.

இதே போல ஒரு வசனத்தை நாம் குர்-ஆன் 29:27ல் காணலாம், இதிலும் ஒரு தவறு உள்ளது.

மேலும், அவருக்கு இஸ்ஹாக்கையும், யஃகூபையும் அளித்தோம்; இன்னும் அவருடைய சந்ததியிலே, நபித்துவத்தையும், வேதத்தையும் ஏற்படுத்தினோம்; அவருக்கு அவருடைய கூலியை இவ்வுலகத்திலும் கொடுத்தோம்; நிச்சயமாக மறுமையில் அவர் நல்லவர்களில் ஒருவராவார். (குர்-ஆன் 29:27)

மேற்கண்ட வசனத்தில் வரும் "**அவருடைய சந்ததியிலே**" என்ற சொற்றொடர் பற்றி பலர் பலவிதமாக கருத்து கூறுகின்றனர்:

- சிலர், கடைசியாக பெயர் குறிப்பிடப்பட்ட "யாக்கோபு உடைய சந்ததியிலிருந்து நபித்துவமும், வேதமும் வரும் என்று பொருள் கொள்ளவேண்டும்" என்று கூறுகிறார்கள்.
- வேறு சிலர் "ஆபிரகாமின் சந்ததி அனைவரிலிருந்தும் நபித்துவமும், வேதமும் வரும்" என்று பொருள் கொள்ளவேண்டும் என்று கூறுகின்றனர்.

நபித்துவம் என்பது ஆபிரகாமின் சந்ததிக்கு உரியது என்று இவ்வசனம் சொல்கிறது. இவ்வசனத்திற்கு முன்புள்ள (29:26) மற்றும் பின்புள்ள (29:28) வசனங்களை கவனித்தால், அதில் லோத்தைப் பற்றி குர்-ஆன் பேசுகின்றது. லோத்து ஆபிரகாமின் சந்ததியும் அல்ல, யாக்கோபின் சந்ததியும் அல்ல என்பதை கவனிக்கவும். இதே போல, யோபுவும், நோவாவும் ஆபிரகாமின் சந்ததிகள் அல்ல. இதனைப் பற்றி மேலும் அறிய படிக்கவும்: குர்-ஆன் 16:36ன் முரண்பாடு (**எல்லா நாடுகளிலிருந்தும் நபிகளா? அல்லது ஆபிரகாமின் சந்ததியிலிருந்து மட்டும் நபிகளா?**)

**இன்னொரு பிரச்சனை:** இக்கட்டுரையில் பார்த்த வசனத்தின் படி, புத்தகம் (அல் கிதாப் – வேதம்) கொடுக்கப்பவர்களின் பட்டியலில் இஸ்மாயிலும் இருக்கிறார். ஆனால், குர்-ஆன் 6:156-157ன் படி, "வேதம்" என்பது இவருக்கு முன்பு இரண்டு சமுகத்தாருக்குத் தான் கொடுக்கப்பட்டது, இவர்களில் அரபியர்களின் சமூகம் இல்லை.

6:156. **நமக்கு முன் இரு கூட்டத்தினர் மீது மட்டுமே வேதம் இறக்கப்பட்டது** - ஆகவே நாங்கள் அதனைப் படிக்கவும் கேட்கவும் முடியாமல் பாராமுகமாகி விட்டோம் என்று நீங்கள் கூறாதிருக்கவும்;

6:157. **அல்லது மெய்யாகவே எங்கள் மீது ஒரு வேதம் அருளப்பட்டிருந்தால், நிச்சயமாக நாங்கள் அவர்களைவிட மிக்க நேர்மையாக நடந்திருப்போம் என்று நீங்கள் கூறாதிருக்கும் பொருட்டும்** (இவ்வேதத்தை அருளினோம்);ஆகவே உங்களுடைய இறைவனிடமிருந்தும் மிகத்தெளிவான வேதமும், நேர்வழியும், அருளும் வந்துவிட்டது - எவனொருவன் அல்லாஹ்வின் வசனங்களைப் புறக்கணித்து, அவற்றைவிட்டு விலகிவிடுகின்றானோ அவனைவிட அதிக அநியாயக்காரன் யார்? நம்முடைய வசனங்களை விட்டுவிலகிக் கொள்கிறவர்களுக்கு, அவர்கள் விலகிக் கொண்ட காரணத்தால் கொடிய வேதனையைக் கூலியாகக் கொடுப்போம்.

இது எப்படி சாத்தியமாகும்? இதன்படி பார்த்தால், குறைஷிகள் இஸ்மாயிலின் சந்ததியிலிருந்து வந்தவர்கள் இல்லையா? இஸ்மாயிலின் சந்ததிக்கு கொடுக்கப்பட்ட வேதத்தை குறைஷிகள் பெறவில்லையா? இவ்வசனங்களில் உள்ள பிரச்சனைகளை தனிக் கட்டுரையாக பிறகு காண்போம்.

மூலம்: **http://www.answering-islam.org/Quran/Contra/qb012.html**

***குர்-ஆன் முரண்பாடுகள் பற்றிய கட்டுரைகள்***

Source: http://www.answering-islam.org/tamil/quran/contra/qb012.html

# 18. குர்ஆன் முரண்பாடு - மோசே அல்லது யாக்கோபு! அல்லாஹ்வின் குழப்பம்

குர்ஆன் மோசேயின் கதையை மட்டுமல்ல, மோசே மற்றும் பார்வோனின் கதையை அனேக இடங்களில் சொல்கிறது. குர்ஆன் சொல்லும் இந்த நிகழ்ச்சிகளில் இருக்கும் பல முரண்பாடுகள் மற்றும் தவறுகளை **இந்த பக்கங்களில்** குறிப்பிட்டுள்ளோம். இந்த சிறிய கட்டுரையிலும், குர்ஆன் எப்படி பைபிளுக்கு முரண்படுகிறது என்பதை விவரமாக காண்போம். ஏன் இப்படி குர்ஆன் முரண்படுகிறது என்று பார்த்தால், குர்ஆனின் ஆசிரியர் பைபிளில் காணப்படும் இரண்டு நிகழ்ச்சிகளைக் குறித்து குழம்பியுள்ளார், ஆதலால், ஒரு கதையில் வரும் விவரங்களை இன்னொரு கதையில் நுழைத்துவிட்டுள்ளார்.

மோசே மற்றும் யாக்கோபு என்பவர்களாகிய இவ்விருவர் தங்கள் ஊரை விட்டு ஓடிப்போனார்கள் (யாக்கோபு தன் சகோதரன் ஏசாவை ஏமாற்றி ஓடிப்போனார், மோசே ஒரு எகிப்தியனை கொன்று விட்டதினால் தன் உயிர் தப்ப ஓடிப்போனார்). மட்டுமல்ல, இவ்விருவரின் திருமணம் சம்மந்தப்பட்ட நிகழ்வுகள் அல்லது தங்கள் மனைவிகளை கண்ட விதமும் கிட்டத்தட்ட ஒன்றாகவே இருக்கும். இவ்விருவர் வேறு நாட்டிலிருந்து வந்தார்கள், வாலிப்பபெண்கள் தங்கள் ஆடுகளுக்கு தண்ணீர் குடிக்க வைக்க வரும்போது, மற்றும் அவர்களுக்கு உதவி தேவைப்பட்டபோது, இவ்விருவரும் உதவி செய்து கிணற்றிலிருந்து தண்ணீர் வார்த்து கொடுத்தார்கள். மோசே மற்றும் யாக்கோபின் கதையில் வரும் இந்த ஒற்றுமைகள் குர்ஆன் ஆக்கியோனின் மனதில் குழப்பத்தை உண்டாக்கியுள்ளது.

மோசே தன் எதிர்கால மனைவியை எப்படி சந்தித்தார் என்பதை முதலில் பைபிளிலிருந்து படிப்போம், அதன் பிறகு குர்ஆனின் வசனங்களைக் காண்போம்.

பார்வோன் அந்தக் காரியத்தைக் கேள்விப்பட்டபோது, மோசேயைக் கொலைசெய்ய வகைதேடினான். மோசே பார்வோனிடத்தினின்று தப்பியோடி, மீதியான் தேசத்தில் போய்த் தங்கி, ஒரு துரவண்டையிலே உட்கார்ந்திருந்தான். மீதியான் தேசத்து ஆசாரியனுக்கு **ஏழு குமாரத்திகள் இருந்தார்கள்**; அவர்கள் தங்கள் தகப்பனுடைய ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டும்படிக்கு அங்கே வந்து, தண்ணீர் மொண்டு, தொட்டிகளை நிரப்பினார்கள். அப்பொழுது மேய்ப்பர்கள் வந்து, அவர்களைத் துரத்தினார்கள்; மோசே எழுந்திருந்து, அவர்களுக்குத் துணை நின்று, அவர்களுடைய ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டினான். அவர்கள் தங்கள் தகப்பனாகிய ரெகுவேலிடத்தில் வந்தபோது, அவன்: நீங்கள் இன்று இத்தனை சீக்கிரமாய் வந்தது என்ன என்று கேட்டான். அதற்கு அவர்கள்: எகிப்தியன் ஒருவன் மேய்ப்பரின் கைகளுக்கு எங்களைத் தப்புவித்து,

எங்களுக்குத் தண்ணீர் மொண்டு கொடுத்து, ஆடுகளுக்கும் தண்ணீர் காட்டினான் என்றார்கள். அப்பொழுது அவன் தன் குமாரத்திகளைப் பார்த்து: அவன் எங்கே? அந்த மனிதனை நீங்கள் விட்டுவந்தது என்ன? போஜனம்பண்ணும்படிக்கு அவனை அழைத்துக்கொண்டுவாருங்கள் என்றான். **<u>மோசே அந்த மனிதனிடத்தில் தங்கியிருக்கச் சம்மதித்தான்.</u>** அவன் சிப்போராள் என்னும் தன் குமாரத்தியை மோசேக்குக் கொடுத்தான். அவள் ஒரு குமாரனைப் பெற்றாள். நான் அந்நிய தேசத்தில் பரதேசியாய் இருக்கிறேன் என்று சொல்லி, அவனுக்கு கெர்சோம் என்று பேரிட்டான். (யாத்திராகமம் 2:15-22)

குர்ஆனின் படி மோசே தன் எதிர்கால மனைவியை எப்படி சந்தித்தார் என்பதை இப்போது காண்போம்:

இன்னும், அவர் மத்யன் நாட்டுத் தண்ணீர்(த் துறையின்) அருகே வந்தபோது, அவ்விடத்தில் ஒரு கூட்டத்தினர் (தம் கால் நடைகளுக்குத்) தண்ணீர் புகட்டிக் கொண்டிருந்ததைக் கண்டார்; அவர்களைத் தவிர, **<u>பெண்கள் இருவர் (தங்கள் ஆடுகளுக்குத் தண்ணீர் புகட்டாது) ஒதுங்கி நின்றதைக் கண்டார்;</u>** "உங்களிருவரின் விஷயம் என்ன?" என்று (அப்பெண்களிடம்) அவர் கேட்டார்; அதற்கு "இம்மேய்ப்பவர்கள் (தண்ணீர் புகட்டிக் விட்டு) விலகும் வரை நாங்கள் எங்கள் (ஆடுகளுக்குத்) தண்ணீர் புகட்ட முடியாது - மேலும் எங்கள் தந்தை மிகவும் வயது முதிர்ந்தவர்" என்று அவ்விருவரும் கூறினார்கள். ஆகையால், அவ்விருவருக்குமாக அவர் (ஆட்டு மந்தைக்குத்) தண்ணீர் புகட்டினார்; பிறகு அவர் (ஒரு மர) நிழலில் ஒதுங்கி; "என் இறைவா! நீ எனக்கு இறக்கியருளும் நல்லவற்றின்பால் நிச்சயமாக நான் தேவையுள்ளவனாக இருக்கின்றேன்" என்று கூறினார். (சிறிது நேரத்திற்குப்) பிறகு அவ்விரு பெண்களில் ஒருவர் நாணத்துடன் நடந்து மூஸாவின் முன் வந்து "எங்களுக்காக நீங்கள் தண்ணீர் புகட்டியதற்கான கூலியை உங்களுக்கு வழங்குவதற்காக எங்கள் தந்தை உங்களை அழைக்கிறார்" என்று கூறினார்; இவ்வாறாக மூஸா அவரிடம் வந்தபோது தம் வரலாற்றை எடுத்துச் சொன்னார்; அதற்கவர்; "பயப்படாதீர்! அக்கிரமக்கார சமூகத்தாரை விட்டும் நீர் தப்பித்துவிட்டீர்" என்று கூறினார். அவ்விரு பெண்களில் ஒருவர் கூறினார்; "என் அருமைத் தந்தையே! நீங்கள் இவரைக் கூலிக்கு அமர்த்திக் கொள்ளுங்கள்; நீங்கள் கூலிக்கு அமர்த்துபவர்களில் நிச்சயமாக இவர் மிகவும் மேலானவர் பலமுள்ளவர்; நம்பிக்கையானவர்." அப்போது அவர் மூஸாவிடம்) கூறினார்; **<u>"நீர் எனக்கு எட்டு ஆண்டுகள் வேலை செய்யவேண்டும் என்ற நிபந்தனையின் மீது, என்னுடைய இவ்விரு பெண்களில் ஒருவரை உமக்கு மணமுடித்துக் கொடுக்க நிச்சயமாக நான் நாடுகிறேன் - ஆயினும், நீர் பத்து (ஆண்டுகள்) பூர்த்தி செய்தால், அது உம் விருப்பம்; நான் உமக்கு சிரமத்தை கொடுக்க விரும்பவில்லை.</u>** இன்ஷா அல்லாஹ், என்னை நல்லவர்களில் உள்ளவராக காண்பீர்." (அதற்கு மூஸா) கூறினார் "இதுவே எனக்கும் உங்களுக்கிமிடையே (ஒப்பந்தமாகும்), இவ்விரு தவணைகளில் நான் எதை நிறைவேற்றினாலும் என் மீது குற்றமில்லை - நாம் பேசிக் கொள்வதற்கு அல்லாஹ்வே சாட்சியாக இருக்கிறான். ( குர்ஆன் 28:23-28)

மேற்கண்ட குர்ஆன் வசனங்கள், பைபிளில் சொல்லப்பட்ட அதே நிகழ்ச்சியைத் தான் குறிப்பிட்டு பேசுகிறது. ஆனால், அனேக முரண்பாடுகள் மற்றும் வித்தியாசங்கள் குர்ஆன் குறிப்பிடும் வசனங்களில் காணப்படும். இதில் இரண்டு முக்கியமான விஷயங்கள் உள்ளன: முதலாவதாக, யாத்திராகமத்தில் நாம் பார்க்கும் போது, மோசே ஏழு வாலிப பெண்களை காண்கிறார், மற்றும் அந்த ஏழுபேரும் ஒரே மனிதனின் பெண் பிள்ளைகளாக இருந்தார்கள். ஆனால், குர்ஆனில் பார்க்கும் போது, அது வெளிப்படையாக "மோசே அங்கு சந்தித்தது இரண்டு பெண்களை" என்று கூறுகிறது, மற்றும் அவ்விருவரும் ஒரே மனிதனின் புதல்விகள் என்றும் கூறுகிறது. பைபிள் மற்றும் குர்ஆன் கூறும் நிகழ்ச்சிகளில், அந்த மனிதன், மோசேக்கு தன் மகள்களில் ஒரு மகளை திருமணத்திற்காக கொடுக்கிறார். ஆனால், குர்ஆனில் ஒரு வித்தியாசம் உள்ளது, அது என்னவென்றால், அந்த பெண்ணின் தந்தை, மோசேயிடம் "என் மகளை திருமணம் புரிய" எனக்கு பணம் தரவேண்டும் என்று கேட்கிறார். இந்த பணத்தை எப்படி கொடுப்பது என்று பார்த்தால், அந்த பெண்ணுக்காக மோசே 8 அல்லது 10 ஆண்டுகள் தன்னிடத்தில் உழைக்கவேண்டும் என்று ஒரு நிபந்தனையை போடுகிறார்.

இங்கு குறிப்பிடவேண்டிய விவரம் என்னவென்றால், இரண்டு ஆண்டுகள் பற்றி குர்ஆன் கூறுகிறது, அவைகள் அடுத்தடுத்த வரும் எண்களாக இருந்தாலும், 8 அல்லது 10 ஆண்டுகள் என்று குறிப்பிடுகிறது. குர்ஆனின் நிகழ்ச்சிப்படி இரண்டு பெண்கள் மற்றும் இரண்டு வருட எண்கள் குறிப்பிடப்பட்டுள்ளது.

குர்ஆனில் காணப்படும் இந்த விவரங்கள் எப்படி மற்றும் எங்கிருந்து வந்தது? அவைகள் பைபிளில் யாக்கோபின் கதையில் வருகிறது, அதாவது யாக்கோபு எப்படி இரண்டு மனைவிகளை திருமணம் செய்துக்கொண்டார் என்ற விவரங்களிருந்து எடுத்து குர்ஆனின் ஆக்கியோன், மோசேயின் கதையில் குழப்பத்தில் நுழைத்துள்ளார். இப்போது யாக்கோபு எப்படி இரண்டு மனைவிகளை திருமணம் செய்தார் என்பதை பைபிளிலிருந்து காண்போம்.

யாக்கோபு பிரயாணம்பண்ணி, கீழ்த்திசையாரின் தேசத்தில் போய்ச் சேர்ந்தான். அங்கே வயல்வெளியிலே ஒரு கிணற்றையும், அதின் அருகே மடக்கியிருக்கிற மூன்று ஆட்டுமந்தைகளையும் கண்டான்; அந்தக் கிணற்றிலே மந்தைகளுக்குத் தண்ணீர் காட்டுவார்கள்; அந்தக் கிணற்றின் வாய் ஒரு பெரிய கல்லினால் அடைக்கப்பட்டிருந்தது. அவ்விடத்தில் மந்தைகள் எல்லாம் சேர்ந்தபின் கிணற்றின் வாயிலிருக்கும் கல்லை மேய்ப்பர் புரட்டி, ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டி, மறுபடியும் கல்லை முன்னிருந்தபடி கிணற்றின் வாயில் வைப்பார்கள். யாக்கோபு அவர்களைப் பார்த்து: சகோதரரே, நீங்கள் எவ்விடத்தார் என்றான்; அவர்கள், நாங்கள் ஆரான் ஊரார் என்றார்கள். அப்பொழுது அவன்: நாகோரின் குமாரனாகிய லாபானை அறிவீர்களா என்று கேட்டான்; அறிவோம் என்றார்கள். அவன் சுகமாயிருக்கிறானா என்று விசாரித்தான்; அதற்கு அவர்கள்: சுகமாயிருக்கிறான்; அவன் குமாரத்தியாகிய ராகேல், அதோ, ஆடுகளை ஓட்டிக்கொண்டு வருகிறாள் என்று சொன்னார்கள். அப்பொழுது அவன்: இன்னும் வெகு பொழுதிருக்கிறதே; இது மந்தைகளைச் சேர்க்கிற வேளை அல்லவே, ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டி, இன்னும் மேயவிடலாம் என்றான். அதற்கு அவர்கள்: எல்லா மந்தைகளும் சேருமுன்னே அப்படிச் செய்யக்கூடாது; சேர்ந்தபின் கிணற்றின் வாயிலுள்ள கல்லைப் புரட்டுவார்கள்; அப்பொழுது ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டுவோம் என்றார்கள். அவர்களோடே அவன் பேசிக்கொண்டிருக்கும்போதே, தன் தகப்பனுடைய ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்த ராகேல் அந்த ஆடுகளை ஓட்டிக்கொண்டு வந்தாள். யாக்கோபு தன் தாயின் சகோதரனான லாபானுடைய குமாரத்தியாகிய ராகேலையும், தன் தாயின் சகோதரனாகிய லாபானின் ஆடுகளையும் கண்டபோது, யாக்கோபு போய், கிணற்றின் வாயிலிருந்த கல்லைப் புரட்டி, தன் தாயின் சகோதரனாகிய லாபானின் ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டினான்.

பின்பு யாக்கோபு ராகேலை முத்தஞ்செய்து, சத்தமிட்டு அழுது, தான் அவள் தகப்பனுடைய மருமகனென்றும், ரெபெக்காளின் குமாரனென்றும் ராகேலுக்கு அறிவித்தான். அவள் ஓடிப்போய்த் தன் தகப்பனுக்கு அறிவித்தாள். லாபான் தன் சகோதரியின் குமாரனாகிய யாக்கோபுடைய செய்தியைக் கேட்டபோது, அவனுக்கு எதிர்கொண்டோடி, அவனைக் கட்டிக்கொண்டு முத்தஞ்செய்து, தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோனான்; அவன் தன் காரியங்களையெல்லாம் விவரமாய் லாபானுக்குச் சொன்னான். அப்பொழுது லாபான்: நீ என் எலும்பும் என் மாம்சமுமானவன் என்றான். ஒரு மாதம்வரைக்கும் யாக்கோபு அவனிடத்தில் தங்கினான். பின்பு லாபான் யாக்கோபை நோக்கி: நீ என் மருமகனாயிருப்பதினால், சும்மா எனக்கு வேலைசெய்யலாமா? சம்பளம் எவ்வளவு கேட்கிறாய், சொல் என்றான். லாபானுக்கு இரண்டு குமாரத்திகள் இருந்தார்கள்; மூத்தவள் பேர் லேயாள், இளையவள் பேர் ராகேல். லேயாளுடைய கண்கள் கூச்சப்பார்வையாயிருந்தது; ராகேலோ ரூபவதியும் பார்வைக்கு அழகானவளுமாயிருந்தாள். **யாக்கோபு ராகேல்பேரில் பிரியப்பட்டு: உம்முடைய இளைய குமாரத்தியாகிய ராகேலுக்காக உம்மிடத்தில் ஏழு வருஷம் வேலை செய்கிறேன் என்றான்.** அதற்கு லாபான்: நான் அவளை அந்நிய புருஷனுக்குக்

கொடுக்கிறதைப்பார்க்கிலும், அவளை உனக்குக் கொடுக்கிறது உத்தமம், என்னிடத்தில் தரித்திரு என்றான். அந்தப்படியே யாக்கோபு ராகேலுக்காக ஏழு வருஷம் வேலை செய்தான்; அவள் பேரில் இருந்த பிரியத்தினாலே அந்த வருஷங்கள் அவனுக்குக் கொஞ்சநாளாகத் தோன்றினது. பின்பு யாக்கோபு லாபானை நோக்கி: என் நாட்கள் நிறைவேறினபடியால், என் மனைவியிடத்தில் நான் சேரும்படி அவளை எனக்குத் தரவேண்டும் என்றான்.

அப்பொழுது லாபான் அவ்விடத்து மனிதர் எல்லாரையும் கூடிவரச்செய்து விருந்துபண்ணினான். அன்று இரவிலே அவன் தன் குமாரத்தியாகிய லேயாளை அழைத்துக்கொண்டுபோய், அவனிடத்தில் விட்டான்; அவளை அவன் சேர்ந்தான். லாபான் தன் வேலைக்காரியாகிய சில்பாளைத் தன் குமாரத்தியாகிய லேயாளுக்கு வேலைக்காரியாகக் கொடுத்தான். காலையிலே, இதோ, அவள் லேயாள் என்று யாக்கோபு கண்டு, லாபானை நோக்கி: ஏன் எனக்கு இப்படிச் செய்தீர்? ராகேலுக்காக அல்லவா உம்மிடத்தில் வேலைசெய்தேன்; பின்னை ஏன் எனக்கு வஞ்சகம்பண்ணினீர் என்றான். அதற்கு லாபான்: மூத்தவள் இருக்க இளையவளைக் கொடுப்பது இவ்விடத்து வழக்கம் அல்ல. இவளுடைய ஏழு நாளை நிறைவேற்று; அவளையும் உனக்குத் தருவேன்; அவளுக்காகவும் நீ இன்னும் ஏழு வருஷம் என்னிடத்தில் வேலைசெய் என்றான். **அந்தப்படியே யாக்கோபு, இவளுடைய ஏழு நாளை நிறைவேற்றினான். அப்பொழுது தன் குமாரத்தியாகிய ராகேலையும் அவனுக்கு மனைவியாகக் கொடுத்தான்.** மேலும் லாபான் தன் வேலைக்காரியாகிய பில்காளைத் தன் குமாரத்தியாகிய ராகேலுக்கு வேலைக்காரியாகக் கொடுத்தான். யாக்கோபு ராகேலையும் சேர்ந்தான்; லேயாளைப்பார்க்கிலும் ராகேலை அவன் அதிகமாய் நேசித்து, **பின்னும் ஏழு வருஷம் அவனிடத்தில் சேவித்தான்.** (ஆதியாகமம் 29:1-30)

இது தான் அந்த இரண்டு பெண் பிள்ளைகளுடைய நிகழ்ச்சியாகும், மற்றும் யாக்கோபு தான் நேசித்த பெண்ணுக்காக இரண்டு தவனை முறையில் தன் மாமனாரிடம் வேலை செய்தார். "இல்லை.. நாங்கள் இதனை அங்கீகரிக்கமாட்டோம்", குர்ஆன் இப்படி யாக்கோபின் கதையில் வரும் சிலவற்றை காப்பி அடித்து மோசேயின் நிகழ்ச்சியோடு சேர்த்துச் சொல்லவில்லை என்று நீங்கள் சொல்வீர்களானால், அடுத்த வசனத்தில் குர்ஆன் சொல்லும் விவரத்தை சிறிது படித்துப் பாருங்கள்.

**ஆகவே மூஸா (தம்) தவணையை முடித்துக்கொண்டு, தம் குடும்பத்துடன் பயணம் செய்து கொண்டிருந்த போது 'தூர்' (மலையின்) பக்கத்தில் ஒரு நெருப்பைக் கண்டார்; அவர் தம் குடும்பத்தாரிடம் "நீங்கள் (இங்கு சிறிது) தங்குங்கள்; நிச்சயமாக, நான் ஒரு நெருப்பைக் காண்கின்றேன். நான் உங்களுக்கு அதிலிருந்து ஒரு செய்தியையோ, அல்லது நீங்கள் குளிர் காயும் பொருட்டு, ஒரு நெருப்புக் கங்கையோ கொண்டு வருகிறேன்" என்று கூறினார். (குர்ஆன் 28:29)**

மோசே தன் மனைவியை திருமணம் செய்துக்கொள்வதற்கு ஒப்புக்கொண்டு இருந்த அந்த காலக்கெடு முடிந்தபிறகு அவர் தன் குடும்பத்துடன் தன் மாமனாரை விட்டு பிராயணம் மேற்கொண்டார். ஏன் ? மோசே எந்த ஊருக்குப் போகிறார்? பைபிளின்படி நாம் பார்த்தால், மோசேயை தேவன் எரியும் முட்புதரிலிருந்து சந்தித்து பேசிய நிகழ்ச்சியானது, மோசே தன் குடும்பத்தாருடன் பிரயாணம் செய்யும் போது அல்ல, அதற்கு பதிலாக, அவர் தனது அனுதின வேலையாகிய ஆடுகளை மேய்த்துக்கொண்டு இருக்கும் போது நடந்த நிகழ்ச்சியாகும்.

மோசே மீதியான் தேசத்து ஆசாரியனாயிருந்த தன் மாமனாகிய எத்திரோவின் ஆடுகளை மேய்த்துவந்தான். அவன் ஆடுகளை வனாந்தரத்தின் பின்புறத்திலே ஓட்டி, தேவபர்வதமாகிய ஓரேப் மட்டும் வந்தான். அங்கே கர்த்தருடைய தூதனானவர் ஒரு முட்செடியின் நடுவிலிருந்து உண்டான அக்கினிஜுவாலையிலே நின்று

அவனுக்குத் தரிசனமானார். அப்பொழுது அவன் உற்றுப்பார்த்தான்; முட்செடி அக்கினியால் ஜுவாலித்து எரிந்தும், அது வெந்துபோகாமல் இருந்தது. அப்பொழுது மோசே: இந்த முட்செடி வெந்துபோகாதிருக்கிறது என்ன, நான் கிட்டப்போய் இந்த அற்புதகாட்சியைப் பார்ப்பேன் என்றான். அவன் பார்க்கும்படி கிட்ட வருகிறதைக் கர்த்தர் கண்டார். முட்செடியின் நடுவிலிருந்து தேவன் அவனை நோக்கி: மோசே, மோசே என்று கூப்பிட்டார். அவன்: இதோ, அடியேன் என்றான். (யாத்திராகமம் 3:1-4)

"மோசே தன் குடும்பத்தாருடன் பிரயாணம் செய்தார், அந்த வழியில் இறைவனை சந்தித்தார்" என்ற இந்த குறிப்பிட்ட விவரமானது, மூன்றாவதாக முஹம்மது செய்த தவறாகும். அதாவது பைபிளின் படி கூறப்பட்ட யாக்கோபின் நிகழ்ச்சியிலிருந்து சில விவரங்களை எடுத்து முஹம்மது மோசேயின் நிகழ்ச்சியோடு சேர்த்துள்ளார். யாக்கோபு தான் தன் குடும்பத்தாருடன் சேர்ந்து தன் மாமனாராகிய லாபானை விட்டு, தன் காலக்கெடு முடிந்தவுடன் சென்றார். இன்னும் சில ஆண்டுகள் அதிகபடியாகவும் அவர் தன் மாமனாருடன் இருந்துள்ளார் (ஆதியாகமம் 30:25 லிருந்து 31:55 வரை பார்க்கவும்). இதைத் தான் ஒரு மாதிரியான நிபந்தனையாக "எட்டு ஆண்டுகள்... பத்து ஆண்டுகள்" என்று குர்ஆன் ஸூரா 28:27ல் குறிப்பிடப்பட்டுள்ளது.

யாக்கோபு தன் மாமனாராகிய லாபானை விட்டு, தன் தாய் நாட்டிற்கு (ஊருக்கு) செல்வதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் இருக்கின்றன:

(1) லாபான் யாக்கோபை அனேகமுறை ஏமாற்றினார் (ஆதியாகமம் 31:41) மற்றும்

(2) தன் சகோதரனாகிய ஏசாவுடன் மறுபடியும் ஒற்றுமையடைய செல்கிறார் (ஆதியாகமம் 32,33).

இந்த பயணத்தின் போது யாக்கோபு தேவனை சந்தித்தார் (ஆதியாகமம் 32:22 லிருந்து 30 வரை).

இதுவரை நாம் கண்ட விவரங்களிலிருந்து புரியும் விவரம் என்னவென்றால், குர்ஆனின் ஆசிரியர் யாக்கோபின் மற்றும் மோசேயின் வாழ்க்கை வரலாறை சரியாக புரிந்துக்கொள்ளாமல் குழப்பமடைந்துள்ளார். குர்ஆன் ஆக்கியோன், யாக்கோபின் வாழ்வில் நடந்த அனேக விவரங்களை எடுத்து, தாமே சொந்தமாக மோசேயின் வாழ்க்கையோடு முடிச்சு போட்டுள்ளார்.

இதில் வேடிக்கை என்னவென்றால் அல்லது நம்ப முடியாத உண்மை என்னவென்றால், இந்த குழப்பபடைந்த நபரே இறைவனாக இருப்பது தான் அல்லது இந்த குழப்பம் அல்லாஹ்வின் வெளிப்பாடு என்று முஸ்லிம்கள் நம்புவது தான். இதன் முடிவு? ஏற்கனவே குர்ஆனில் காணப்படும் அனேக பிழைகள் மற்றும் முரண்பாடுகளோடு சேர்ந்து, இந்த முரண்பாடும் ஒண்டிவிடுகிறது, இதன் மூலம் அறிவது என்ன? குர்ஆன் என்பது அறியாமையில் இருக்கும் மற்றும் தவறுகள் செய்யும் ஒரு சாதாரண மனிதனின் கைவேலை என்பது நிருபனமாவதாகும்.

தோரா அல்லது ஐந்தாகமங்களின் விவரங்களின் படி பார்க்கும் போது, குர்ஆன் சொல்லும் விவரங்கள் எப்படி முஹம்மதுவின் அறியாமையினாலும், குழப்பத்தினாலும் நிரம்பியுள்ளது என்பதை எளிதாக கண்டுக்கொள்ளலாம். இந்த குழப்பத்திற்கு காரணம் என்னவென்றால், முஹம்மது சுயமாக எபிரேய வேதத்தை பார்த்து படித்து தெரிந்துக்கொள்ள அவரால் முடியவில்லை ஆகையால், தன்னுடைய குறையுள்ள ஞானத்தோடு அங்கும் இங்கும் கேட்ட நிகழ்ச்சிகளை தன் சொந்த கதைகளோடு சேர்த்து குர்ஆனில் கூறியுள்ளார். குர்ஆன் இறைவனிடமிருந்து வந்தது என்ற கற்பனை கட்டுக்கதையை இதுவரை கேட்காமல் இருக்கும் ஒரு சராசரி மனிதன், மேற்கண்ட விவரங்களைக் கண்டால், அவன் இப்படித்தான்

நினைத்துக்கொள்வான், அதாவது இந்த விவரங்களை குர்ஆனில் சேர்த்தவர் கண்டிப்பாக இரண்டு நிகழ்ச்சிகள் பற்றி குழம்பிப்போய் இப்படி முரண்பட்டுள்ளார் என்று எண்ணுவான். குர்ஆனின் குழப்ப கதைகளுக்கு இந்த நிகழ்ச்சி மட்டும் ஒரு எடுத்துக்காட்டு என்று நினைத்துக்கொள்ளக்கூடாது. இது போல அனேக நிகழ்ச்சிகளை பைபிளிலிருந்து எடுத்து அதை புரிந்துக்கொள்ளாமல் குழம்பமடைந்து இப்படி முரண்பட்ட நிகழ்ச்சிகள் குர்ஆனில் ஏராளம் உண்டு. இவைகள் பற்றி அறிய "**குர்ஆனின் சரித்திர பிழைகள்**" என்ற தலைப்பில் உள்ள முரண்பாடுகளை படித்து தெரிந்துக்கொள்ளவும்.

மேலும், ஒருவேளை குர்ஆனில் சொல்லிய படியே தோராவில் இருந்தது என்று இஸ்லாமியர்கள் சொல்வார்களானால், இது எப்படி சாத்தியமாகும் என்பதை இஸ்லாமியர்கள் விளக்கவேண்டும்? இஸ்லாமியர்கள் "தோரா திருத்தப்பட்டது" என்று சொல்வது அவர்களுக்கு சுலபமான பதிலாக இருக்கும். ஆனால், எந்த ஒரு குற்றமும், அல்லது பரிசுத்த வார்த்தைகளை மாற்றி எழுதும் குற்றமும் வெறுமனே நடந்துவிடாது, அவைகளுக்கு பின்னே ஒரு மிகப்பெரிய காரணம் அல்லது நோக்கம் இருக்கும். இப்போது இஸ்லாமியர்கள் பதில் சொல்லுங்கள், ஒரு மனிதனுக்கு "இரண்டு பெண்கள் இருக்கிறார்கள்" என்ற வார்த்தைகள் இருக்கும் இடத்தில் "ஏழு பெண்கள் இருக்கிறார்கள்" என்று மாற்றி எழுதவேண்டுமானால், இப்படி ஒருவன் மாற்றவேண்டியதின் அவசியம் என்ன? மட்டுமல்ல, இப்படி மாற்றுவது சுலபமானதும் அல்ல, உலகில் அந்த காலத்தில் தோராவின் எத்தனை பிரதிகள் இருந்தனவோ, அவைகள் அனைத்திலும் சென்று இந்த மாற்றம் செய்வது கூடாத காரியமாகும். இந்த "இரண்டு பெண்கள்" என்ற இடத்தில் "ஏழு பெண்கள்" என்று மாற்றுவதினால், மத ரீதியாக தத்துவ ரீதியாக எந்த முக்கியத்துவம் அடையப்போவதில்லை, இதனால் எந்த உபயோகமும் இல்லை. இப்படி எந்த ஒரு யூதனும், அல்லது கிறிஸ்தவனும் மாற்றப்போவதில்லை, அவனுக்கு இதில் விருப்பமும் இருக்க நிச்சயமாக வாய்ப்பு இல்லை. பைபிள் மற்றும் குர்ஆனுக்கு இடையே காணப்பட்ட இந்த ஒரு வித்தியாசத்தை மட்டும் இஸ்லாமியர்கள் விளக்கினால் போதாது, இது போல இருக்கும் இன்னும் அனேக குழம்ப்பம் தரும் குர்ஆனின் தவறுகள், மற்றும் முரண்பாடுகளை அவர்கள் விளக்கவேண்டும், அதாவது அனேக கதைகளில் குர்ஆன் செய்த குழப்பம் பற்றி விளக்கமளிக்க வேண்டும்.

இந்த மாற்றங்கள் எந்த ஒரு மத கோட்பாட்டையும் மாற்றிவிடப்போவதில்லை, அதாவது "இரண்டு பெண்கள்" என்ற வார்த்தையை "ஏழு பெண்கள்" என்று ஒரு யூதன் மாற்றுவதினால், மார்க்க ரீதியாக என்ன பயன் உண்டாகப்போகிறது? எந்த ஒரு பயனும் இல்லை, ஆகவே, இது மாற்றமடைந்த ஒன்று அல்ல, இது குர்ஆனின் குழப்பமாகும்.

நேரடியாக ஒரே வரியில் சொல்லவேண்டுமென்றால், குர்ஆனின் இந்த குழப்பத்திற்கு காரணம் முந்தைய வேதங்கள் பற்றிய அறிவு முஹம்மதுவிற்கு சரியான முறையில் இல்லாமல் இருந்தது தான். இந்த ஆய்வின் மூலமாக நாம் அறிவது இது தான், இயற்கையாகவே முஹம்மது அதிகமாக குழம்பியுள்ளார். எந்த ஒரு இஸ்லாமியரும், இது வரை தங்கள் குர்ஆன் இறைவனின் வேதம் என்று நிரூபிக்க, இப்படிப்பட்ட முரண்பாட்டுக்கு சரியான முறையில் பதில் சொல்லி, குர்ஆனை காப்பாற்றிக்கொள்ளவில்லை.

ஆங்கில மூலம்: **Qur'an Contradiction - Moses or Jacob?**
இதர குர்ஆன் முரண்பாடுகளை **இங்கு படிக்கவும்**.
ஆசிரியர் ஜோசன் கட்ஜ் அவர்களின் இதர கட்டுரைகளை **இங்கு படிக்கவும்**
Source: http://www.answering-islam.org/tamil/quran/contra/moses_jacob.html

# 19. நீ அல்லாஹ்வை நேசிக்கிறாயா?

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]

அன்பு தம்பிக்கு,

உனக்கு சமாதானம் உண்டாவதாக.

என்னுடைய இரண்டாவது கடிதத்தை படித்தாயா? நான் கேட்கச்சொன்ன விவரங்களை கேட்டாயா?

இஸ்லாமுக்கும் கிறிஸ்தவத்திற்கும் இடையே இருக்கும் முக்கியமான வித்தியாசங்களை நீ அறியாததால் தான் இஸ்லாமை தழுவியுள்ளாய்.

இஸ்லாமுக்கும் கிறிஸ்தவத்திற்கும் இடையே இருக்கும் முக்கியமான வித்தியாசங்கள் இவைகளாகும்:

- இஸ்லாமின் தெய்வம் ஒரு எஜமான், நீ அவனது அடிமை (Master and Slave)
- கிறிஸ்தவத்தின் தெய்வம் ஒரு தந்தை, நீ அவரது செல்லக்குமாரன். (Father and Son)
- ஒரு மனிதனுக்கும் அல்லாஹ்விற்கும் இடையே இருப்பது ஒரு "ஒப்பந்தம்" (Contract).
- ஒரு மனிதனுக்கும் யெகோவா தேவனுக்கும் இடையே இருப்பது ஒரு "உறவு முறை" (Relationship).
- ஒரு அன்பான அப்பாவிற்கு மகனாக இருப்பதை உதறி தள்ளிவிட்டு, நீ ஒரு கடினமான எஜமானனுக்கு அடிமையாக வேலை செய்ய உன்னை விற்றுவிட்டாய்.

பைபிளின் தெய்வமாகிய நம் பரம பிதா தன் மகனுக்காக எதையும் செய்வார். இந்த பிதா தன் மகனுக்காக தன் நிலையிலிருந்து இறங்கி வருவார், தன் மகனை தன் தோளில் சுமப்பார், முதிர்வயது வரையும் சுமப்பார், ஆறுதல்படுத்துவார், கடினமான நேரங்களில் பலப்படுத்துவார், தன்னால் முடிந்த அனைத்தையும் தன் மகனுக்காக மகளுக்காக செய்வார். ஏன் இப்படி சர்வ வல்ல தேவன் செய்கிறார் என்று நாம் பார்த்தால், அதற்கு ஒரே ஒரு பதில் தான் நமக்கு கிடைக்கும், அது என்னவென்றால் "அவர் நம்மை நேசிக்கிறார்" என்பதாகும். இதைவிட வேறு எந்த காரணமும் இருக்கமுடியாது. இப்படிப்பட்ட பிதாவை நாம் நேசிக்க நமக்கு வேறு ஒரு பலமான காரணம் ஒன்று தேவையா?

ஆனால், அல்லாஹ் தன் அடியார்களிடம் நெருங்கி வந்து ஆறுதல்படுத்துகிறாரா? ஒரு தந்தையைப் போல அன்போடு நடந்துக்கொள்கிறாரா? சிந்தித்துப்பார்.

இதோ "நான் உனக்காக இவைகளை செய்தேன், இதோ உனக்காக நான் இவ்வளவு அதிகமாக அன்பு கூறுகிறேன்" என்று பைபிளின் தேவன் தன் அன்பை வெளிப்படுத்துகிறார். ஆனால், அல்லாஹ், எனக்கு கீழ்படிகிறாயா? நான் சொன்ன சட்டங்களை கைக்கொள்கிறாயா? எனக்கு அடிமையாக எப்பொழுதும் இருப்பாயா? என்று மக்களிடம் கேட்டு தம்முடைய ஒப்பந்தத்தை வெளிப்படுத்துகிறார். மனிதனுக்காக தன் நிலையிலிருந்து இறங்கி வருகிற ஒரு அப்பாவாக அல்லாஹ் இல்லை என்பது தான் மிகவும் வேதனையான விஷயம்.

நீ அப்பா இல்லாத அனாதையாக இருப்பதை நான் விரும்பவில்லை தம்பி. எனக்கு பரலோகில் ஒரு பிதா உண்டு. அவரே உனக்கும் பிதாவாக இருக்கிறார், நீ அவரை உதறிதள்ளிவிட்டாய். ஆனால், இன்னும் அவர் உனக்காக காத்துக்கொண்டு இருக்கிறார். இளையக் குமாரன் எப்போது வருவான் என்று எதிர்ப்பார்த்து

வாசலிலேயே காத்துக்கிடந்த அந்த உவமையில் வரும் பிதாவைப்போல, நம் தேவன் கூட உனக்காக காத்துக்கொண்டு இருக்கிறார். நீ எப்போது வேண்டுமாலும் வரலாம், நிபந்தனைகளோ சட்டங்களோ கிடையாது. மகன் அப்பா வீட்டிற்கு வருவதற்கு எது தடையாக இருக்கமுடியும்?

இன்று நீ நோன்பு ஆரம்பித்து மூன்றாம் நாள் ஆகிறது. நீ உன் பரலோக அப்பாவின் பிரசன்னத்தை மற்றும் அன்பை உணர்ந்தாயா? அல்லது அல்லாஹ்விற்கு பயந்து ஒரு எஜமானனுக்கு முன்பாக நடுங்கிக்கொண்டு நிற்கும் ஒரு அடிமையைப்போல தொழுதுக்கொள்கிறாயா? சிந்தித்து பாரடா தம்பி சிந்தித்து பாரு,

அம்மாவின் அன்பை நீ ருசி பார்த்துள்ளாய்; நம் அப்பாவின் அன்பையும் நீ ருசி பார்த்துள்ளாய், நம் சகோதர சகோதரிகளின் அன்பையும் நீ ருசி பார்த்துள்ளாய், உன் நல்ல நண்பர்களின் நட்பையும் நீ ருசி பார்த்துள்ளாய். ஆனால், உன்னை படைத்த இறைவன் உன்னை அதிகமாக நேசிக்கிறார் என்பதை உணராமல் போய்விட்டாயே, அவரது அன்பை ருசி பார்க்காமல் சென்று விட்டாயே!

இன்று நீ அல்லாஹ்வை தொழுதுக்கொள்ளும் போது "யா அல்லாஹ், நீங்கள் என் தந்தை, நான் உம்முடைய மகன், நான் உம்மை நேசிக்கிறேன், நீங்களும் என்னை நேசிக்கிறீர்களா இல்லையா என்பதை எனக்கு எவ்விதத்திலாவது தெரியப்படுத்தும்" என்று வேண்டிக்கொள். ஆனால், தம்பி இஸ்லாமில் இப்படி வேண்டுவது பாவமாகவும், மிகப்பெரிய தவறாகவும் கருதப்படுகிறது என்பதை நீ அறிந்துக்கொள். நீ அல்லாஹ்வை ஒரு அப்பாவைப்போல நேசிக்கமுடியாது. ஒரு அடிமையைப் போல வெறும் கீழ்படிய மட்டுமே உன்னால் முடியும். உன் அல்லாஹ் உன் வேண்டுதலுக்கு பதில் அளிக்கமாட்டார், ஆனால், நான் உனக்கு சவால் விடுகிறேன், அல்லாஹ்விடம் நீ கேட்ட வேண்டுதலுக்கு நம் தேவன் பதில் அளிப்பார். இந்த சவாலை ஏற்க நீ தயாராக இருந்தால், தினமும் இந்த வேண்டுதலை செய்துப்பார்.

நான் உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்,

இப்படிக்கு உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

**மூலம்**

**உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/ramalan2012day3.html

# 20. அல்லாஹ் தன்னை வணங்க இயந்திரங்களை படைத்துள்ளனா?

[அன்புள்ள தம்பிக்கு உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க இங்கு சொடுக்கவும்]

அன்புள்ள தம்பி,

உனக்கு சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக.

எனக்கு நீண்ட நாட்களாக இஸ்லாமியர்களிடம் ஒரு குறிப்பிட்ட கேள்வியை கேட்கவேண்டும் என்ற ஆசை இருந்தது. அதை எந்த முஸ்லிமிடம் கேட்பது? இன்று அதற்கு எனக்கு நல்ல வாய்ப்பு கிடைத்துள்ளது, ஏனென்றால், என் தம்பி தன்னை ஒரு முஸ்லிம் என்று சொல்லியுள்ளான்.

என் கேள்வி இது தான்:

### அல்லாஹ் தன்னை வணங்க படைத்தது இயந்திரங்களையா? அல்லது மனிதர்களையா?

தம்பி, நான் ஏன் இந்த கேள்வியை கேட்கிறேன் என்று உனக்கு புரிகின்றதா? அதாவது உனக்கு தமிழ், ஆங்கிலம் மற்றும் ஒரு சில இதர மொழிகள் தெரியும். உனக்கு அரபி மொழி தெரியாது என்று எனக்குத் தெரியும்.

ஆனால்,

- நீ அல்லாஹ்வை எப்படி தொழுதுக்கொள்கிறாய்? எவைகளைச் சொல்லி தொழுதுக்கொள்கிறாய்?
- உனக்கு புரியும் மொழிகளாகிய தமிழ் அல்லது ஆங்கிலத்தில் அல்லாஹ்வை தொழுதுக்கொள்கிறாயா? அல்லது அரபியில் தொழுதுக்கொள்கிறாயா?
- நீ நமாஜ் செய்யும் போது எந்த மொழியை முக்கியமாக பயன்படுத்துகிறாய்? எந்த மொழியில் கலிமாக்களை சொல்கிறாய்?
- நீ அரபியில் தான் நமாஜ் செய்கிறாய் என்பது நிச்சயம். அப்படியானால், நீ என்ன சொல்கிறாயோ அது உனக்கு புரிகின்றதா? அல்லது ஒரு டேப்ரிகார்டர் போல, மனப்பாடம் செய்ததை புரியாமல் ஒப்புவிக்கிறாயா?
- நீ அரபியில் சில வசனங்களை மனப்பாடம் செய்து, அவைகளை ஒப்புவிக்கிறாய் என்றால், நீ மனிதனா அல்லது இயந்திரமா?

இயந்திரங்களில் விவரங்களை சேமித்து வைத்துவிட்டால், தேவைப்படும்போதெல்லாம் அவைகள் ஒலிப்பெருக்கியில் வாசித்துத்தள்ளும். ஒரு இலட்சம் முறை அவைகளை அது வாசித்தாலும், அந்த இயந்திரத்திற்கு எந்த ஒரு உணர்வும், சொரணையும் இருக்காது. தான் வாசித்துத் தள்ளிய வார்த்தைகளில் உள்ள உண்மையும், கருத்துக்களும் அந்த இயந்திரத்திற்கு தெரியாது.

தம்பி, இந்த இயந்திரத்தைப் போல நீயும் அரபியில் தான் உன் இறைவனை தொழுதுக்கொள்கிறாயா? ஆம் என்று தான் நீ பதில் அளிக்கவேண்டும்.

உனக்கு புரியாத மொழியில் நீ எப்படி மற்றவர்களிடம் பேசுவாய்? உனக்கு புரியாதவற்றை ஒப்புவிப்பதினால், உன் உள்ளத்தில் எந்த ஒரு மாற்றமோ அல்லது பேசப்பட்ட வார்த்தைகளில் இருக்கும் பொருளோ புரியப்போவதில்லை, இதனால் என்ன பயன்? இப்படி செய்வதினால் இயந்திரத்திற்கும், உனக்கும் இடையே எந்த ஒரு வித்தியாசமும் இல்லை.

காது கேளாதவர்கள் செய்திகளை அறிந்துக்கொள்ளவேண்டும் என்பதற்காக செய்திகள் வாசிக்கும் போது, "காது கேளாதவர்கள் புரிந்துக்கொள்ள சைகை மூலமாக" செய்திகளை தெரிவிக்கிறார்கள். உலக செய்திகளுக்கே இவ்வளவு முக்கியத்துவம் என்றால், இறைவனை தொழுதுக்கொள்வதற்கு எவ்வளவு முக்கியத்துவம் இஸ்லாம் கொடுத்திருக்கவேண்டும்? உலக விஷயங்களுக்கே இவ்வளவு முக்கியத்துவம் என்றால், ஆன்மீக விஷயங்களுக்கு எவ்வளவு முக்கியத்துவம் தரவேண்டும்?

தம்பி, உனக்கு "பிரைலி" என்று ஒன்று இருப்பது தெரியுமா? அதாவது கண்கள் தெரியாதவர்கள் படித்து தெரிந்துக்கொள்ளவேண்டும் என்பதற்காக உருவாக்கப்பட்ட ஒரு எழுத்துமுறையாகும். எனக்கு கண்கள் தெரியாது எனவே நான் படிக்கவில்லை, உலகை புரிந்துக்கொள்ள வில்லை என்று யாரும் இந்த காலத்தில் சொல்லமாட்டார்கள். ஆனால், கண்கள் இருந்தும், காதுகள் இருந்தும், இன்னும் நீ உன் இறைவனை புரியாமலேயே தொழுதுக்கொள்கிறாய். என்ன ஆச்சரியம் பார்த்தாயா? குருடர்கள் பிரைலி முறையை கற்றுக்கொண்டு படித்து தெரிந்துக்கொள்கிறார்கள், காது கேளாதவர்கள் கூட சைகை மொழியை கற்றுக்கொள்கிறார்கள், ஆனால் நீ என்ன செய்யப்போகிறாய்?

ஒரு உண்மையான இறைவன், தன்னை வணங்கும் மனிதர்கள் வெறும் மனப்பாடம் செய்த வசனங்களை தலை கால் புரியாமல் மடமடவென்று ஒப்புவிப்பதை விரும்புவானா? அல்லது தன்னை வணங்கும் மனிதன் தன் இருதய ஆழத்திலிருந்து நான்கு வார்த்தைகளைச் சொல்லி, இறைவனை புகழ்ந்து, அவன் செய்த நன்மைகளை நினைத்து, நன்றி சொல்லுவதை விரும்புவானா? இறைவனை தொழுதுக்கொள்கின்றவர்கள் உண்மையோடும், தாம் பேசும் வார்த்தைகளின் பொருளை புரிந்துக்கொண்டும் தொழவேண்டும் என்று பரிசுத்த பைபிளில் இயேசு கூறியுள்ளார்.

மனிதனுக்குத் தான் இயந்திரங்கள் தேவை, இறைவனுக்கு மனிதன் தான் தேவை இயந்திரங்கள் அல்ல.

ஒரு மனிதன் 50 ஆண்டுகள் இஸ்லாமியனாக வாழ்ந்து, ஒவ்வொரு நாளும் 5 வேளை தொழுகிறான் என்று வைத்துக்கொள்வோம். இந்த 50 ஆண்டுகளில் அவன் (50*365*5) 91250 முறை தொழுகை செய்வான், ஆனால், தனக்கு புரியாத, மொழியில் இத்தனை முறை தொழுதுக்கொண்டும், எந்த ஒரு பயனும் அவனுக்கு கிட்டுவதில்லை. பெயரளவிற்கு ஒரே பயன் மட்டும் கிட்டும் என்றுச் சொல்லிக்கொள்ளலாம், அது என்ன? "நான் இஸ்லாமிய கடைமையை நிறைவேற்றினேன் (என்ன செய்கிறோம் என்று புரிந்துக்கொள்ளாமலேயே). அதாவது, படிப்பு படிக்காமலேயே பெயருக்கு பின்னால், M.A. MSc. என்று சிலர் எழுதிக்கொள்கிறார்களே, அது போல நானும் இறைவனை தொழுதுக்கொண்டேன் என்ற வரட்டு திருப்தி மட்டும் கிடைக்கும். இதனை இறைவன் அங்கீகரிப்பான் என்று நீ நினைக்கிறாயா?

"அல்லாஹ் தான் இப்படி சொல்லியுள்ளான்" என்று நீ சொல்லலாம், இப்போது கேள்வி அதுதான், இயந்திரங்களைப் போல தன்னை வணங்க உண்மையான இறைவன் விரும்புவானா? "ஆம்" என்று நீ சொன்னால் அவன் உண்மையான இறைவன் இல்லை என்பது தான் உண்மை.

நீ இவைகளைப் பற்றி சிறிது சிந்துத்துப்பார்க்கவேண்டுமென்று உன்னை உற்சாகப்படுத்துகிறேன்.

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்,

இப்படிக்கு உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

**மூலம்**
**உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்**
Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/ramalan2012day7.html

## 21. அல்லாஹ்வின் சொர்க்கத்தில் நுழைந்த முதல் நாள்

[அன்புள்ள தம்பிக்கு உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]

அன்புள்ள தம்பி,

உனக்கு சமாதானம் உண்டாவதாக.

குர்-ஆன் பற்றியும், இஸ்லாமிய தொழுகைப்பற்றியும் அதிகமாக எழுதிவிட்டேன். அல்லாஹ்வின் சொர்க்கம் பற்றி ஒரு சிறு குறிப்பு எழுத விரும்புகிறேன். சில விஷயங்கள் உரைநடையில் படித்தால் கருத்து விளங்கும், சில முக்கியமான காரியங்களை நாடகவடிவில் அல்லது கதை வடிவில் விளக்கினால், அதன் சாரம் சரியாக புரியும், எனவே இந்த கடிதத்தில் ஒரு கதையைப் போல உனக்கு ஒரு விஷயத்தை தெளிவாக்க விரும்புகிறேன்.

**நான் உனக்கு ஒரு சூழ்நிலையை விளக்குகிறேன், அதை கேட்டுவிட்டு, எனக்கு நீ பதில் அளிக்கவேண்டும்.**

நீ ஒரு பட்டணத்திற்குள் முதல் முறை நுழைகிறாய், அது உலகிலேயே மிகவும் அழகான பட்டணம். எங்கு பார்த்தாலும் மக்கள் அழகான வீடுகளில் உட்கார்ந்துக்கொண்டு, பழங்கள் சாப்பிட்டுக்கொண்டும், பானங்கள் பருகிக்கொண்டும், அனேக பெண்களோடு உள்ளாசமாக உடலுறவில் ஈடுபட்டுக்கொண்டும் இருக்கிறார்கள். இந்த நிகழ்ச்சி ஏதோ ஒரு வீட்டில் நடக்கும் நிலை அல்ல, ஒரு மணி அல்லது இரண்டு மணி நேரம் நடக்கும் நிகழ்ச்சி அல்ல, தொடர்ந்து நித்திய நித்தியமாக இது நடந்துக்கொண்டே இருக்கிறது. ஒரு கையில் பானம், இன்னொரு கையில் சோலைமயில், எப்போது பார்த்தலும், எங்கு பார்த்தாலும் ஆண்கள் அழகான பெண்களோடு உடலுறவில் ஈடுபட்டுக்கொண்டு இருக்கிறார்கள். அதுவும் ஒரே பெண்ணுடன் இல்லை, பல பெண்களுடன். இவைகளைக் கண்டவுடன் 'ஒரு சராசரி ஆண் எப்படி இப்படி தொடர்ந்து உடலுறவில் ஈடுபடமுடியும், விஞ்ஞானத்தின் படி இது முடியாதல்லவா?" என்ற கேள்வி உன் மனதில் எழுகிறது. உடனே உன் செவிகளில் 'இம்மக்களின் இறைவன், இவர்களுக்கு இப்படிப்பட்ட வினோத சக்தியை கொடுத்துள்ளான்' என்ற சத்தம் கேட்கிறது.

இப்பொழுதுச் சொல், நீ சென்றுக்கொண்டு இருந்த இடத்திற்கு என்ன பெயர் வைப்பாய்?

- பரிசுத்தமான இறைவன் தங்கும் இடமா?
- அல்லது பரிசுத்தமில்லாத பட்டணமா?

இவைகளைக் கண்டால் ஒரு விபச்சார விடுதிபோலவும், விபச்சார பட்டணம் போலவும் காட்சி அளிக்கிறது.

தம்பி, இது வேறு எந்த இடமும் இல்லை, நீ வணக்கும் அல்லாஹ்வின் சொர்க்கம் ஆகும். இம்மக்களுக்கு இப்படிப்பட்ட அதீத சக்தியை கொடுக்கப்போகிறவர் வேறு யாருமில்லை, தினமும் ஐந்து வேளை நீ தொழுதுக்கொள்ளும் அல்லாஹ் தான். இஸ்லாமின் அல்லாஹ், முஸ்லிம்களுக்கு 100 ஆண்களின் சக்தியை கொடுத்து, மேலும் அவர்கள் உடலுறவுக்கு பெண்களை தயார்படுத்தியும் கொடுக்கிறார்.

கீழ்கண்ட வசனங்களை ஒரு முறை படித்துப்பார், முக்கியமாக இவ்வசனங்கள் பற்றி இஸ்லாமிய விரிவுரையாளர்களாகிய இப்னு கதீர் போன்றவர்களின் விரிவுரையை நீயே படித்துப்பார். மேலும், இஸ்லாமிய சொர்க்கம் பற்றிய பயான்களை கேட்டுப்பார்.

அவற்றில் அடக்கமான பார்வையுடைய (அமர) கன்னியர் இருக்கின்றனர். அவர்களை இவர்களுக்கு முன்னர் எந்த மனிதனும், எந்த ஜின்னும் தீண்டியதில்லை. (குர்-ஆன் 55:56)

[எந்த மனிதனும், ஜின்னும் இப்பெண்களை தொடவில்லை என்று அல்லாஹ் ஏன் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்? ஆண்களின் ஆர்வத்தை அதிகமாக தூண்டும் வண்ணமாக அல்லாஹ் தன் வஹியை இறக்கியுள்ளார். நிச்சயமாக இது உண்மை இறைவனின் வசனமாக இருக்கமுடியாது]

அவற்றில், அழகு மிக்க நற் குணமுள்ள கன்னியர் இருக்கின்றனர். (குர்-ஆன் 55:70)

ஹூர் (என்னும் அக்கன்னியர் அழகிய) கூடாரங்களில் மறைக்கப்பட்டிருப்பர். (குர்-ஆன் 55:72)

அவர்களை இவர்களுக்கு முன்னர் எந்த மனிதனும், எந்த ஜின்னும் தீண்டியதில்லை. (குர்-ஆன் 55:74)

(அவர்கள்) பசுமையான இரத்தினக்கம்பளங்களின் மீதும், அழகு மிக்க விரிப்புக்கள் மீதும் சாய்ந்தவர்களாக இருப்பார்கள். (குர்-ஆன் 55:76)

(அங்கு இவர்களுக்கு) ஹூருல் ஈன் (என்னும் நெடிய கண்களுடைய) கன்னியர் இருப்பர். (குர்-ஆன் 56:22)

நிச்சயமாக (ஹூருல் ஈன் என்னும் பெண்களைப்) புதிய படைப்பாக, நாம் உண்டாக்கி, (குர்-ஆன் 56:35)

அப்பெண்களைக் கன்னிகளாகவும், (குர்-ஆன் 56:36)

(தம் துணைவர் மீது) பாசமுடையோராகவும், சம வயதினராகவும், (குர்-ஆன் 56:37)

வலப்புறத்தோருக்காக (ஆக்கி வைத்துள்ளோம்). (குர்-ஆன் 56:38)

ஒரே வயதுள்ள கன்னிகளும். (குர்-ஆன் 78:33)

பானம் நிறைந்த கிண்ணங்களும், (இருக்கின்றன). (குர்-ஆன் 78:34)

(முஹம்மது ஜான் டிரஸ்ட் தமிழாக்கம்)

நீ இவைகளைக் கண்டு சிறிது வேதனைப்பட்டு இருப்பாய், ஆனால், நாம் ஒன்றும் செய்வதற்கில்லை, இது தான் இஸ்லாமிய சொர்க்கம். இஸ்லாமின்படி ஒவ்வொரு ஆணுக்கும் 100 ஆண்களின் சக்தியை அல்லாஹ் கொடுப்பாராம். ஒரு நாளுக்கு ஒரு ஆண் 100 பெண்களிடம் உடலுறவு கொள்ளமுடியும். இஸ்லாமிய இறைவன் எவைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார் என்பதை கவனி.

இஸ்லாமின் சொர்க்கத்தில் வெறும் கன்னிகள் மட்டும் கிடைப்பார்கள் என்று நான் சொல்லவில்லை, கனிவகைகள், மயக்கம் வராத பானங்கள் என்று அனேகம் உண்டு என்று குர்-ஆன் கூறுகிறது. இஸ்லாமிய பரலோகில் முஸ்லிம்கள் உடலுறவு கொள்வதற்காகவே அழகான பெண்களை படைப்பதாக அல்லாஹ் கூறுகிறார். இதில் இன்னொரு வேடிக்கை என்னவென்றால், இஸ்லாமிய பெண்களுக்கும் சொர்க்கத்தில் கணவரல்லாத ஆண்களோடு உடலுறவு கொள்ள அல்லாஹ் வகை செய்வானாம். ஒரு முறை பீஜே என்ற இஸ்லாமிய அறிஞர், இஸ்லாமிய ஆண்களுக்கு புதிய பெண்கள் கிடைப்பது போல, இஸ்லாமிய பெண்களுக்கும் புதிய ஆண்கள் கிடைப்பார்கள் என்று கூறுகிறார், என்னே அல்லாஹ்வின் சொர்க்கம்!

உனக்கு யெகோவா தேவனின் பரலோகம் பற்றி தெரியுமல்லவா?

இறைவன் இருக்கும் இடம் பரிசுத்த இடமாகும், அங்கு பெண் கொடுப்பதுமில்லை, பெண் கொள்வதுமில்லை என்று பைபிள் சொல்கிறது. முக்கியமாக, உடலுறவு என்பது மனித இனம் பூமியில் பெருக இறைவன் அமைத்த ஒரு வழியாகும். அது பரலோகில் தேவையேயில்லை.

தம்பி, உன்னிடம் தனிப்பட்ட முறையில் சில கேள்விகளை கேட்க விரும்புகிறேன்:

உனக்கு அல்லாஹ் அனேக பெண்களை சொர்க்கத்தில் கொடுக்கவேண்டுமென்று விரும்புகிறாயா?

இறைவன் இருக்கும் இடத்தில் ஒரு ஆண் அனேக பெண்களுடன் உடலுறவில் ஈடுபடுகிறார்கள் என்ற கோட்பாட்டை நீ ஜீரணித்துக் கொள்கிறாயா? அல்லது இதுவரை இந்த விவரம் பற்றி உன் இஸ்லாமிய நண்பர்கள் உன்னிடம் கூறவே இல்லையா?

பைபிளின் பரலோகம் மற்றும் குர்-ஆனின் சொர்க்கம், இவைகளில் எது சரியானதாக இருக்கும் என்று நீ நினைக்கிறாய்? இஸ்லாமியனாக மாறிய நீ, விரும்பினாலும், விரும்பாவிட்டாலும், இஸ்லாமிய சொர்க்கமே சரியானது என்பதை நம்பவேண்டும். இதைப் பற்றி உன் தனிப்பட்ட கருத்தை அறிய விரும்புகிறேன்.

தம்பி, நீ இதைப்பற்றி அதிகமாக ஆய்வு செய்யவேண்டும் என்று உனக்கு ஆலோசனை சொல்கிறேன். இந்த கடிதத்தில் நான் சொன்ன விவரங்கள் சரியானவையா இல்லையா என்பதை நீயே சோதித்துப்பார். இமாம்கள், அறிஞர்கள் இந்த சொர்க்கம் பற்றி அதிகம் பேசி இஸ்லாமிய ஆண்களை மூளைச் சலவை செய்வதாக ஒரு குற்றச்சாட்டும் உண்டு, அதாவது ஜிஹாதில் ஆண்கள் ஈடுபடவேண்டும் என்பதற்காக இப்படி செய்வதாக கேள்விப்பட்டுள்ளேன்.

ஒரு தம்பியிடம் இஸ்லாமிய சொர்க்கம் பற்றி பேச வெட்கமாகத் தான் உள்ளது, ஆனால், என்ன செய்யமுடியும் சிலருக்கு சில சத்தியங்கள் சொல்ல இவைகளை சொல்லவேண்டியுள்ளது. நீ எல்லாவற்றையும் சோதித்துப்பார்த்து நலமானதைப் பற்றிக்கொள்.

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.

இப்படிக்கு, உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

**மூலம்**

**உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/ramalan2012day8.html

# 22. இயேசுவின் சீடர்களை அல்லாஹ் ஏமாற்றலாமா?

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]

அன்புள்ள தம்பிக்கு,

உனக்கு சமாதானம் உண்டாவதாக

நீ எழுதிய கடிதத்தில் "இயேசு சிலுவையில் அறையப்படவில்லை, அல்லாஹ் இயேசுவை அப்படியே எடுத்துக்கொண்டார், இயேசுவின் இடத்தில் இன்னொரு நபரை வைத்துவிட்டார், அங்கு இருந்தவர்கள் அனைவரும், இயேசு தான் சிலுவையில் மரித்ததாக நினைக்கும்படி அல்லாஹ் செய்துவிட்டார்" என்று எழுதியிருந்தாய். இதற்கு என்னுடைய பதில் என்ன என்று கேட்டு இருந்தாய்.

இந்த கேள்விகளுக்கு முதல் பதிலை நான் நேற்று அனுப்பினேன், இப்போது இரண்டாவது பதிலை பார்க்கலாம்.

**அல்லாஹ் செய்த மிகப்பெரிய தவறு இது தான் என்று நான் சொல்லுவேன்.**

நீ உன் கடிதத்தில் ஏன் நீங்கள் இஸ்லாமை தழுவக்கூடாது என்று அடிக்கடி கேட்கிறாய், ஆனால், இப்போது நீ கடிதத்தில் எழுதிய படி, அல்லாஹ் அனேக தவறுகள் செய்து இருப்பதினால் அவரை இறைவன் என்று நம்ப முடிவதில்லை. அப்படி என்ன அல்லாஹ் தவறு செய்துவிட்டார்? என்று நீ கேட்கலாம், அதற்கு இப்போது நான் பதிலை கீழ்கண்ட தலைப்புகளில் தருகிறேன்.

- இயேசுவின் தாய், உலக பெண்களில் சிறந்தவர் - அல்லாஹ்வின் சாட்சி
- இயேசுவின் சீடர்கள் நல்லடியார்கள் - அல்லாஹ்வின் சாட்சி
- யூதர்களின் சூழ்ச்சி மற்றும் அல்லாஹ்வின் சூழ்ச்சி
- அல்லாஹ்வின் சூழ்ச்சியின் விளைவு?

**1) இயேசுவின் தாய், உலக பெண்களில் சிறந்தவர் - அல்லாஹ்வின் சாட்சி**

இயேசுவின் தாயாகிய மரியாள் பற்றி குர்ஆன்கூறும் போது, அவர் "அல்லாஹ்வினால் தெரிந்தெடுக்கப்பட்டவர்", "அல்லாஹ் தூய்மையாக்கியுள்ளான்", மற்றும் "உலக பெண்கள் யாவரையும்விட மேன்மையாக தெரிந்தெடுத்துள்ளான்" என்று சாட்சி பகருகிறது. இதனை குர்ஆன் 3:42ல் காணலாம்:

(நபியே! மர்யமிடத்தில்) மலக்குகள்; மர்யமே! நிச்சயமாக அல்லாஹ் உம்மைத் தேர்ந்தெடுத்திருக்கின்றான்;. உம்மைத் தூய்மையாகவும் ஆக்கியிருக்கிறான்; இன்னும் உலகத்திலுள்ள பெண்கள் யாவரையும் விட (மேன்மையாக) உம்மைத் தேர்ந்தெடுத்திருக்கின்றான்" (என்றும்). (குர்ஆன் 3:42)

குர்ஆன் 5:75ல், மரியாள் உண்மையுள்ளவர் என்றும் குர்ஆன் கூறுகிறது.

**2) இயேசுவின் சீடர்கள் நல்லடியார்கள் - அல்லாஹ்வின் சாட்சி**

இயேசுவின் சீடர்கள் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டு இருந்தார்கள் என்றும், அவர்கள் முஸ்லிம்களாக இருந்தார்கள் என்றும் அவர்களுக்கு பகைவர்கள் மீது அல்லாஹ் உதவி அளித்தான் என்றும் குர்ஆன் சாட்சி பகருகிறது.

அவர்களில் குஃப்ரு இருப்பதை (அதாவது அவர்களில் ஒரு சாரார் தம்மை நிராகரிப்பதை) ஈஸா உணர்ந்த போது, "அல்லாஹ்வின் பாதையில் எனக்கு உதவி செய்பவர்கள் யார்?" என்று அவர் கேட்டார்; (அதற்கு அவருடைய சிஷ்யர்களான) ஹவாரிய்யூன்; "நாங்கள் அல்லாஹ்வுக்காக (உங்கள்) உதவியாளர்களாக இருக்கிறோம், நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின் மீது ஈமான் கொண்டுள்ளோம்;. திடமாக நாங்கள் (அவனுக்கு முற்றிலும் வழிப்பட்ட) முஸ்லீம்களாக இருக்கின்றோம், என்று நீங்கள் சாட்சி சொல்லுங்கள்" எனக் கூறினர். (குர்ஆன் 3:52)

ஈமான் கொண்டவர்களே! மர்யமின் குமாரர் ஈஸா (தம்) சீடர்களை நோக்கி, "அல்லாஹ்வுக்காக எனக்கு உதவி செய்வோர் யார்?" எனக் கேட்க, சீடர்கள், "நாங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்களாக இருக்கின்றோம்" என்று கூறியதுபோல், நீங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்களாக ஆகிவிடுங்கள் - எனினும், இஸ்ராயீல் மக்களில் ஒரு கூட்டம் ஈமான் கொண்டது, பிறிதொரு கூட்டமோ நிராகரித்தது, ஆகவே ஈமான் கொண்டவர்களுக்கு, அவர்களுடைய பகைவர்களுக்கு எதிராக உதவி அளித்தோம் - அதனால் அவர்கள் வெற்றியாளராய் ஆகிவிட்டார்கள். (குர்ஆன் 61:14)

**3) யூதர்களின் சூழ்ச்சி மற்றும் அல்லாஹ்வின் சூழ்ச்சி**

இயேசுவை கொலை செய்ய யூதர்கள் சதி செய்ததாகவும்,அதனை முறியடிக்க அல்லாஹ்வும் சதி செய்ததாக குர்ஆன் கூறுகிறது.

(ஈஸாவை நிராகரித்தோர் அவரைக் கொல்லத்) திட்டமிட்டுச் சதி செய்தார்கள். அல்லாஹ்வும் சதி செய்தான்;. தவிர அல்லாஹ் சதி செய்பவர்களில் மிகச் சிறந்தவன் ஆவான். (குர்ஆன் 3:54)

மேலும், இயேசுவை சிலுவையில் அறையப்பட்ட பிறகோ, அல்லது அதற்கு முன்பாகவோ அல்லாஹ் இயேசுவை எடுத்துக்கொண்டாராம். ஆனால், யாருக்கும் தெரியா வண்ணம், இயேசுவின் இடத்தில்

இன்னொருவன் ஒப்பாக்கப்பட்டானாம். அல்லாஹ் செய்த இந்த சூழ்ச்சி யாருக்கும் தெரியவில்லை, எல்லாரும் "இயேசு தான் சிலுவையில் அறையப்பட்டு மரித்தார்" என்று எண்ணிக்கொண்டனர்.

இன்னும், "நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின் தூதராகிய - மர்யமின் குமாரராகிய-ஈஸா மஸீஹை கொன்றுவிட்டோம்" என்று அவர்கள் கூறுவதாலும் (அவர்கள் சபிக்கப்பட்டனர்). அவர்கள் அவரைக் கொல்லவுமில்லை, அவரை அவர்கள் சிலுவையில் அறையவுமில்லை. ஆனால் அவர்களுக்கு (அவரைப் போன்ற) ஒருவன் ஒப்பாக்கப்பட்டான்;. மேலும் இ(வ் விஷயத்)தில் அபிப்ராய பேதம் கொண்டவர்கள், அதில் சந்தேகத்திலேயே இருக்கின்றார்கள் - வெறும் யூகத்தைப் பின்பற்றுவதேயன்றி அவர்களுக்கு இதில் எத்தகைய அறிவும் கிடையாது. நிச்சயமாக அவர்கள், அவரைக் கொல்லவே இல்லை. (குர்ஆன் 4:175)

### 4) அல்லாஹ்வின் சூழ்ச்சியின் விளைவு?

தம்பி இதுவரை உனக்கு வசனங்களை மேற்கோள் காட்டினேன். இப்போது அல்லாஹ் செய்த சூழ்ச்சி எவ்வளவு பெரிய தவறாக மாறியுள்ளது என்பதை உனக்கு விளக்குகிறேன்.

இயேசுவை சிலுவைக்கு அழைத்துக்கொண்டு செல்லும் போது, அல்லாஹ் ஆள்மாறாட்டம் செய்து, எல்லாருடைய கண்களில் மண்ணை வாரிப்போட்டு (அதாவது ஏமாற்றி) வேறு ஒரு நபரை சிலுவையில் அறையும் படி செய்துவிட்டார். இதனை பார்த்துக்கொண்டு இருந்த மக்கள் அனைவரும் இயேசு சிலுவையில் அறையுண்டு மரித்துவிட்டார் என்று நினைத்துக்கொண்டனர். ஆனால், 600 ஆண்டுகளுக்கு பின்பு அரேபிய பாலைவனத்தில் எழும்பிய முஹம்மது மூலமாக "இல்லை... இல்லை... மரித்தது இயேசு அல்ல, அவர் வேறு ஒரு நபர், அல்லாஹ் சதி செய்து, யூதர்களின் சதியை முறியடித்துவிட்டார்" என்று குர்ஆனில் எழுதிவிட்டார். கிட்டத்தட்ட எல்லா இஸ்லாமிய அறிஞர்களும் சிலுவை மரணம் பற்றிச் சொல்லும் சுருக்கம் இது தான்.

இப்படி சதி செய்த அல்லாஹ், ஐந்து வகையான மக்களை ஏமாற்றியுள்ளார்:

1) இயேசுவின் சீடர்கள்

2) இயேசுவின் தாய்

3) யூத மத தலைவர்கள்

4) ரோம அரசின் சேவகர்கள்

5) எருசலேமில் வாழ்ந்த பொதுமக்கள்.

யூத மத தலைவர்களையும், ரோம அரசின் சேவர்களையும் அல்லாஹ் ஏமாற்றினார், அதாவது தாங்கள் கொன்றது இயேசுவை என்று அவர்கள் நினைத்துக்கொள்ளும் அளவிற்கு ஏதோ மாயம் செய்து சதி செய்தார். எதிரிகளின் சதியை முறியடிப்பது சரியே.

**ஆனால், இயேசுவின் சீடர்களையும், இயேசுவும் தாயையும் ஏமாற்றியது எந்த விதத்தில் நியாயமானது?**

நாங்கள் உன் வேதத்தையும், தூதரையும் நம்புகிறோம், எங்களை சத்தியத்திற்கு சாட்சி சொல்பவர்களாக செய்வாயாக என்று சீடர்கள் அல்லாஹ்விடம் வேண்டினார்கள்:

"எங்கள் இறைவனே! நீ அருளிய (வேதத்)தை நாங்கள் நம்புகிறோம், (உன்னுடைய) இத்தூதரை நாங்கள் பின்பற்றுகிறோம்;. எனவே எங்களை (சத்தியத்திற்கு) சாட்சி சொல்வோருடன் சேர்த்து எழுதுவாயாக!" (என்று சிஷ்யர்களான ஹவாரிய்யூன் பிரார்த்தித்தனர்.) (குர்ஆன் 3:53)

ஆனால் அல்லாஹ் செய்தது என்ன? சீடர்களை அல்லாஹ் ஏமாற்றினார், இயேசு தான் சிலுவையில் மரித்தார் என்று சீடர்கள் நினைத்தார்கள். இயேசு சிலுவையில் அறையப்படும் போது பார்த்துக்கொண்டு இருந்த பொதுமக்களையும் அல்லாஹ் ஏமாற்றியுள்ளார்.

சரி, இப்படி அனைத்து மக்களையும் ஏமாற்றிய அல்லாஹ் வெற்றி பெற்றாரா என்று பார்த்தால், அதுவும் இல்லை, இன்று உலகின் பெரிய மார்க்கமாக கிறிஸ்தவம் திகழ்கிறது. அல்லாஹ் செய்த தவறினால் கிறிஸ்தவம் உருவானது என்றுச் சொல்லலாம் அல்லவா?

## யெகோவா தேவனின் வெற்றி, அல்லாஹ்வின் தோல்வி:

குறைந்தபட்சம், இயேசுவின் தாய் மற்றும் சீடர்களுக்கு அல்லாஹ் தன் திட்டத்தை அறிவித்து இருந்திருந்தால், சீடர்கள் தங்கள் வேலையை பார்த்து சென்று இருப்பார்கள். சீடர்களிடம் மறைத்தபடியால், அவர்கள் இயேசு மரித்ததாக நினைக்க, மறுபடியும் இயேசு மூன்றாம் நாள் உயிரோடு எழுந்ததாகவும், சீடர்களிடம் பேசியதாகவும் பைபிள் கூறுகிறது, இதோ இன்று மிகப்பெரிய மார்க்கமாக கிறிஸ்தவம் திகழ்கிறது. கிறிஸ்தவத்திற்கு அடித்தளம் அமைத்து எது? அல்லாஹ்வின் அறியாமையாகும்.

எதிர் காலத்தில் என்ன நடக்கும் என்று அல்லாஹ்விற்கு தெரிந்து இருந்தால், சீடர்களுக்கு அன்றே உண்மையை கூறியிருப்பார், ஆனால், அல்லாஹ்விற்கு எதிர்காலம் தெரியவில்லை, ஆகையால் சும்மா இருந்தார், 600 ஆண்டுகள் சும்மா இருந்தார். இயேசு சிலுவையில் அறையப்பட்டு 50வது நாளிலிருந்து சீடர்கள் இயேசுவின் சுவிசேஷத்தை பரப்ப ஆரம்பித்துவிட்டார், அல்லாஹ்வின் சதி, மிகப்பெரிய கெடுதியாக இஸ்லாமுக்கு மாறிவிட்டது.

## தம்பி, இப்படிப்பட்ட அல்லாஹ்வை எப்படி நம்புவது?

• நாங்கள் முஸ்லிம்கள் என்றும், நல்வழிகாட்டு என்றும் வேண்டிக்கொண்ட சீடர்களையே அல்லாஹ் ஏமாற்றினால், உன்னை இன்று அல்லாஹ் ஏமாற்றமாட்டார் என்று என்ன நிச்சயம்?

• உலக பெண்களில் சிறந்த பெண்மணி என்று இயேசுவின் தாயைப்பற்றி கூறிவிட்டு, அவரையும் ஏமாற்றிவிட்டார், தன் மகனை அல்லாஹ் தன்னிடம் எடுத்துக்கொண்டார் என்று ஏன் அவரிடம் கூறவில்லை? கூறியிருந்தால், அவர் சீடர்களை தடுத்து இருந்திருப்பார்களே?

• குர்ஆனின் படி முதலாம் நூற்றாண்டு முஸ்லிம்களை (இயேசுவின் சீடர்கள், மரியாள் இன்னும் நம்பிக்கை கொண்ட இதர மக்கள்) அல்லாஹ் வஞ்சித்தார். அப்படியானால், 21ம் நூற்றாண்டில் வாழும் உன்னை அல்லாஹ் ஏமாற்றமாட்டார் என்று என்ன நிச்சயம் தம்பி?

இதுவரை நான் மேலே கூறிய விவரங்கள், பிரச்சனைகள் அனைத்தும் குர்ஆன் சொல்வது உண்மை என்று நினைத்துக்கொண்டால் வரும் பிரச்சனையாகும். ஆனால் பைபிளின் படி பார்த்தால் யெகோவா தேவன் தன் திட்டத்தில் முழுவதுமாக வெற்றிப் பெற்றார், அல்லாஹ் தோற்றுப்போனார்.

கொஞ்சம் அதிகமாகவே எழுதிவிட்டேன், அடுத்த கடிதத்தில் உன்னை சந்திக்கிறேன், உன் கேள்விகள் எதுவாக இருந்தாலும் எனக்கு எழுத மறக்காதே

இப்படிக்கு, உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

**மூலம்**
**உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்**
Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/ramalan2012day16.html

# 23. பவுலை குற்றப்படுத்தி அல்லாஹ்வை அவமதிக்கும் முஸ்லிம்கள்

['அன்புள்ள தம்பிக்கு' உமர் எழுதிய முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு** சொடுக்கவும்]

அன்புள்ள தம்பிக்கு,

உனக்கு சமாதானம் உண்டாவதாக.

நீ எழுதிய கடிதத்தை படித்தேன், உன் நண்பர்கள் பவுல் பற்றி கேள்வி கேட்கிறார்கள் என்று என்னிடம் கூறினாய்: "கிறிஸ்தவத்தை தோற்றுவித்தவர் பவுல் தான், இயேசு அல்ல" என்ற குற்றச்சாட்டிற்கு உங்கள் பதில் என்ன என்னிடம் கேள்வி கேட்டுள்ளாய்.

கேள்வியை கேட்கும் இஸ்லாமியர்களிடம் ஒரே ஒரு முறை அவர்கள் புதிய ஏற்பாட்டை முழுவதுமாக படித்தார்களா? என்று கேட்டுப்பார். யாரோ சொன்ன விவரத்தை அப்படியே சொல்லும் இவர்கள் நிதானமாக ஆராய ஆரம்பித்தால் இவர்களின் இஸ்லாமிய நம்பிக்கை ஆட்டங்காணும். சரி நான் இப்போது உனக்கு சுருக்கமாக விளக்குகிறேன்.

**உன் கேள்விக்கு சம்மந்தப்பட்ட புதிய ஏற்பாட்டு கால அட்டவணையை சுருக்கமாக கொடுக்கிறேன்.**

- கி.மு. 4 – கி.பி. 1: இயேசுவின் பிறப்பு
- கி.பி. 30 – 33: இயேசுக் கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்டு, உயிர்த்தெழுந்தார்
- கி.பி. 35 – 36: சவுலின் மனந்திரும்புதல்

கவனிக்கவும்: இயேசு உயிர்த்தெழுந்த பிறகு, இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு பிறகு தான் பவுல் மனந்திரும்புகிறார்.

**1) இது இஸ்லாமியர்களின் அறியாமையா அல்லது வஞ்சகமா?**

தம்பி, புதிய ஏற்பாட்டை படித்து முழுவதுமாக ஆய்வு செய்யும் ஒரு நபர் இப்படி அப்போஸ்தலர் பவுல் மீதும், கிறிஸ்தவத்தின் மீதும் இப்படிப்பட்ட குற்றச்சாட்டை சுமத்தமாட்டார். ஏனென்றால், எவர் ஒருவர் அப்போஸ்தலர் நடபடிகளை படிப்பாரோ, அவர் நிச்சயமாக இப்படிப்பட்ட குற்றச்சாட்டை வைக்கமாட்டார். ஏனென்றால், அப்போஸ்தலர் நடபடிகளில் கிறிஸ்தவத்தின் ஆரம்ப விவரங்கள் தெளிவாக கூறப்பட்டுள்ளது. இந்த கேள்வியை கேட்கும் இஸ்லாமியர்கள் ஒன்று அறியாமையில் இப்படி கேட்கவேண்டும் அல்லது கிறிஸ்தவத்தின் மீது வெறுப்போடு இப்படி வஞ்சகமான குற்றச்சாட்டுகளை சுமத்தவேண்டும்.

**2) இயேசுவின் சீடர்களின் ஆரம்பகால வாழ்க்கை வரலாறு:**

இஸ்லாம் சொல்லுகின்றபடி, இயேசுவை அல்லாஹ் தன்னலவில் எடுத்துக்கொண்டு இருந்திருந்தால், சீடர்களின் வாழ்வு அப்போஸ்தலர் நடபடிகளில் உள்ளது போல இருந்திருக்காது. சீடர்கள் தங்களின் சொந்த தொழிலை செய்துக்கொண்டு, வாழ்ந்திருப்பார்கள். ஆனால், சரித்திரம் வேறுவகையாகச் சொல்கிறது. குர்-ஆனில் இயேசுவின் சிலுவைப் பற்றி அல்லாஹ் சொன்னது சுத்தப்பொய், அதாவது மிகப்பெரிய பொய்.

இயேசு உயிர்த்தெழுந்த பிறகு சீடர்களோடு அனேக நாட்கள் இருந்து அவர்கள் அடுத்து என்ன செய்யவேண்டுமென்று இயேசு அறிவித்துச் சென்றார். பரிசுத்த ஆவியானவரின் வருகைக்காக காத்திருக்கும் படி இயேசு கட்டளையிட்டார், அதே போல சீடர்கள் காத்திருந்தார்கள், பரிசுத்த ஆவியானவரும் பொழிந்தருளினார். அதன் பிறகு சீடர்களின் ஊழியம் ஆரம்பித்தது.

[தம்பி, இந்த விவரம் பற்றி ஒரு கட்டுரையை நான் இணையத்தில் படித்தேன், அதனை ஒரு முறை நீயும் படித்துப் பார் (Answering PJ - 3: இஸ்லாமை மண்ணை கவ்வ வைத்த அப். நடபடிகள் - பாகம் 1 - isakoran.blogspot.in/2010/04/answering-pj-3-1.html).]

**3) பவுல் இல்லாமலேயே தொடர்ந்த இயேசுவின் ஊழியம்:**

தம்பி, அப்போஸ்தலர் நடபடிகள் முதல் 8 அதிகாரங்களை படித்துப் பார்த்தால், முஸ்லிம்களின் குற்றச்சாட்டு ஒரு மிகப்பெரிய பொய் என்பது எல்லாருக்கும் தெளிவாக விளக்கும். அதாவது இயேசுவின் சீடர்களே ஊழியத்தை ஆரம்பித்தார்கள். அவர்கள் இயேசுவை தெய்வம் என்று அறிவித்தார்கள், அதனால் அனேக கஷ்டங்களை அனுபவித்தார்கள், ஸ்தேவான் என்ற சீடரும் கொல்லப்பட்டார், இவரின் மரணத்தின் போது சவுலும் அங்கீகரித்து இருந்தார்.

**அப்போஸ்தலருடைய நடபடிகளின் முதல் எட்டு அதிகாரங்களின் சுருக்கம்:**

1) உயிர்த்தெழுந்த இயேசு சீடர்களுக்கு காணப்படல், மற்றும் பரமேறுதல் (1:4-11)

2) தேற்றரவாளனாகிய பரிசுத்த ஆவியானவருக்காக சீடர்கள் எருசலேமில் காத்திருத்தல் (1:12-14)

**எருசலேம் சபையின் ஆரம்பகால விசுவாசிகளின் நடபடிகள் (1:15 - 8:3)**

1) யூதாசுக்கு பதிலாக மத்தியாஸை நியமித்தல் (1:15-26)

2) பெந்தேகோஸ்தே நாளில் பரிசுத்த ஆவியானவரின் வருகை (2: 1-13)

3) எருசலேமில் பேதுருவின் முதல் பிரசங்கம், அனேகர் மனந்திரும்பினர்(2:14-41)

4) பேதுரு மற்றும் யோவான், ஒரு முடவனை சுகமாக்குதல் (3:1-10)

5) அற்புதத்திற்கு பிறகு பேதுரு செய்த இரண்டாம் பிரசங்கம் (3:11-26)

6) பேதுரு மற்றும் யோவானின் கைது, நீதிமன்றத்திற்கு முன்பு சாட்சி கொடுத்தல் (4:1-22)

7) பேதுரு யோவானின் விடுதலை, விசுவாசிகளின் கூட்டு ஜெபம் (4:23-31)

8) அப்போஸ்தலர்களின் அற்புதங்கள், சுகமாக்குதல் (5:12-16)

9) மறுபடியும் அப்போஸ்தலர்கள் கைது செய்யப்படல், நீதிமன்றத்திற்குமுன்பு சாட்சியிடல் ( 5:17-42)

10) ஸ்தேவான் கைது செய்யப்படல், பயமில்லாமல் அவர் செய்த பிரசங்கம் ( 6:8 - 7:53)

11) ஸ்தேவான் கல்லெறியப்பட்டு கொல்லப்படல், தன்னை கொன்றவர்களுக்காக வேண்டிக்கொள்ளுதல் (7:54 - 60)

12) சவுல் சபையை துன்புறுத்த ஆரம்பித்தல் (8:1-3)

**4) பவுல் எதிரியாக இருந்த போதிலும் தொடர்ந்த இயேசுவின் ஊழியம்:**

தம்பி, பவுல் கிறிஸ்தவர்களுக்கு மிகபெரிய எதிரியாக மாறினார். அவர்களை கொடுமைப்படுத்தினார். தமஸ்குவில் இருக்கும் கிறிஸ்தவர்களை கொடுமைப்படுத்த அவர் பிரயாணம் செய்யும் போது இயேசுவால் சந்திக்கப்பட்டு அவர் மனந்திரும்பினார். அதன் பிறகு சீடர்களோடு சேர்ந்து அவரும் ஊழியம் செய்தார்.

தம்பி, இதுவரை நான் மேலே சொன்ன விவரங்களின் அடிப்படையில் உன்னிடம் சில கேள்விகளை வைக்கப்போகிறேன். உன்னால் முடிந்தால், உலக இஸ்லாமிய அறிஞர்களில் மிகப்பெரிய அறிஞரிடம் கேட்டு எனக்கு பதில்களை அனுப்பு:

அ) இயேசு கி.பி. 30 – 33 ல் சிலுவையில் அறையப்பட்டு உயிர்த்தெழுந்தார். பவுல் கி.பி. 35ம் ஆண்டு மனந்திரும்பினார் (கிறிஸ்தவரானார்), அப்படியானால், இந்த இடைப்பட்ட காலகட்டட்தில் (2 அல்லது 3 ஆண்டுகள்) சீடர்கள் என்ன செய்துக் கொண்டு இருந்தார்கள்? இயேசுவின் சிலுவைப் பற்றி இஸ்லாம் சொல்வது உண்மையானது என்று கருதுபவர்கள் மேற்கண்ட கேள்விக்கு பதில் சொல்லட்டும்.

ஆ) பவுல் கிறிஸ்தவராக மாறுவதற்கு முன்பாக, இயேசுவின் சீடர்கள் யூத மத தலைவர்களால் எந்த குற்றத்திற்காக துன்புறுத்தப்பட்டார்கள்?

இ) பவுல் கிறிஸ்தவர்களை அல்லது இயேசுவின் சீடர்களை கொடுமைப்படுத்த காரணமென்ன? இஸ்லாமியர்களின் கருத்துப்படி, இயேசு ஒரு நபி மட்டுமே என்று சீடர்கள் சொல்லியிருந்தால், இவர்களை கொலை செய்யவேண்டும் என்று பவுல் ஏன் நினைக்கவேண்டும்? யூத தலைவர்கள் ஏன் நினைக்கவேண்டும்? இதிலிருந்து அறிவது என்ன?

ஈ) இயேசு ஒரு நபி என்று சொல்லியிருந்தால், யூத தலைவர்கள் சீடர்களை ஏன் சிறைச்சாலையில் அடைக்கவேண்டும்?

உ) இயேசு ஒரு நபி என்று சொல்லியிருந்தால், ஏன் யூத தலைவர்கள் ஸ்தேவானை கல்லெரிந்து கொல்லவேண்டும்? ஏன் இவர்களுக்கு துணையாக பவுல் இருக்கவேண்டும்?

### 5) குர்-ஆனை அவமதிக்கும் இஸ்லாமிய குற்றச்சாட்டுகள்:

இயேசுவோடு மூன்று ஆண்டுகளுக்கும் அதிகமான நாட்கள் வாழ்ந்த அனைத்து சீடர்கள், இயேசு சொன்னதையெல்லாம் காற்றிலே விட்டுவிட்டு, பவுல் சொன்னதை ஏற்றுக்கொண்டார்கள் என்று இஸ்லாமியர்கள் குற்றப்படுத்துவது வேடிக்கையாக இருக்கிறது. இயேசுவின் அற்புதங்களை கண்டவர்கள், வார்த்தைகளை கேட்டவர்கள் எப்படி அவர் மூன்று ஆண்டுகளாக சொன்ன விவரங்களை மறந்துவிடுவார்கள்? இது சாத்தியமில்லாத ஒன்றாகும். ஒருவேளை ஒன்று அல்லது இரண்டு சீடர்கள் சிறிது தவறினாலும், மற்றவர்கள் அதனை சரிபடுத்தியிருப்பார்கள். ஆக, இஸ்லாமியர்களின் குற்றச்சாட்டு ஒரு பச்சைப்பொய்யாகும். முஹம்மதுவின் தோழர்கள் மீது இஸ்லாமியர்களுக்கு எவ்வளவு நம்பிக்கை உள்ளதோ அதைவிட பல ஆயிரமடங்கு நம்பிக்கை இயேசுவின் சீடர்கள் மீது கிறிஸ்தவர்களுக்கு உள்ளது என்பதை எல்லா இஸ்லாமியர்களுக்கு நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

இதுமட்டுமல்ல, இஸ்லாமியர்களின் குற்றச்சாட்டு குர்-ஆனையும், அல்லாஹ்வையும் அவமதிக்கிறது: இந்த குர்-ஆன் வசனத்தை படி தம்பி:

அவர்களில் குஃப்ரு இருப்பதை (அதாவது அவர்களில் ஒரு சாரார் தம்மை நிராகரிப்பதை) ஈஸா உணர்ந்த போது, "அல்லாஹ்வின் பாதையில் எனக்கு உதவி செய்பவர்கள் யார்?" என்று அவர் கேட்டார்; (அதற்கு அவருடைய சிஷ்யர்களான) ஹவாரிய்யூன்; "நாங்கள் அல்லாஹ்வுக்காக (உங்கள்) உதவியாளர்களாக இருக்கிறோம், நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின் மீது ஈமான் கொண்டுள்ளோம்;. திடமாக நாங்கள் (அவனுக்கு முற்றிலும் வழிப்பட்ட) முஸ்லீம்களாக இருக்கின்றோம், என்று நீங்கள் சாட்சி சொல்லுங்கள்" எனக் கூறினர். (குர்ஆன் 3:52)

தம்பி, நன்றாக சிந்தித்துப் பார். கி.பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்த சீடர்கள் பற்றி, 7ம் நூற்றாண்டில் வந்த குர்-ஆன் மேற்கண்ட புகழாரத்தை சூட்டுகிறது. அதாவது, இயேசுவின் சீடர்கள் அல்லாஹ்விற்கு உதவியாளர்களாக இருப்பதாக கூறினார்களாம், அதனை முஹம்மதுவின் காலத்தில் அல்லாஹ் சாட்சி கொடுக்கிறார். இப்போது நமக்கு எழும் கேள்விகள் என்னவென்றால்:

அ) இன்று இஸ்லாமியர்கள் சூட்டும் குற்றச்சாட்டு உண்மையென்றால், அன்று அல்லாஹ் சூட்டிய புகழாரம் பொய்யாகும். எனவே, குர்-ஆன் சொல்வது பொய் என்று இன்று இஸ்லாமியர்கள் ஏற்க தயாராக இருக்கிறார்களா? இயேசுவின் சீட்ர்கள் அல்லாஹ்வின் உதவியாளர்களாக இல்லை, அவர்கள் பவுலின் பேச்சைக் கேட்டு மாறிவிட்டார்கள் என்று இஸ்லாமியர்கள் கூறப்போகிறார்களா?

ஆ) இயேசுவின் சீடர்களாகிய பேதுரு, யோவான் போன்றவர்கள், பவுலின் வார்த்தைகளை நம்பி அவர் சொன்னது போல செய்தார்கள் என்று இஸ்லாமியர்களின் குற்றசாட்டு உண்மையானால், குர்-ஆனில் சீடர்கள் பற்றி அல்லாஹ் சொல்வது பொய்யானதாகும்.

எனவே, பவுலின் மீது குற்றம் சுமத்த விரும்பும் இஸ்லாமியர்கள் குர்-ஆனை இறக்கிய அல்லாஹ்வை அவமானப்படுத்துகிறார்கள். தங்களுக்கு எல்லாம் தெரியும், ஆனால் அல்லாஹ்விற்கு ஒன்றுமே தெரியாது என்று நேரடியாகவே முஸ்லிம்கள் சொல்கிறார்கள்.

அல்லாஹ் சொல்கின்றான் "இயேசுவின் சீடர்கள் தனக்கு உதவியாளர்கள்", ஆனால், இஸ்லாமியர்கள் சொல்கிறார்கள், "இல்லை இல்லை, பவுலின் போதனைகளை கேட்டு சீடர்கள் கெட்டுவிட்டார்கள், இயேசு போதிக்காத கொள்கைகளை ஏற்றுக்கொண்டார்கள்".

ஆக, பவுலை குற்றப்படுத்துபவர்கள் கரியை தங்கள் அல்லாஹ்வின் முகத்தில் தான் முதலாவது பூசுகிறார்கள். பாவம் அல்லாஹ், இன்று நம்மிடம் இருக்கும் இஸ்லாமியர்களை விட அறிவில் குறையுள்ளவராக இஸ்லாமியர்களுக்கு காணப்படுகிறார். இன்றைய இஸ்லாமியர்கள் அல்லாஹ்வை விட சர்வ ஞானிகளாக இருக்கிறார்கள்.

தம்பி, பவுல் மீது குற்றம் சுமத்தும் இஸ்லாமியர்கள் முதலாவது புதிய ஏற்பாட்டை படிக்கட்டும், அதன் பிறகு தங்கள் குர்-ஆனை தமிழில் படிக்கட்டும், அதன் பிறகு கொஞ்சம் ஆய்வு செய்யட்டும். ஏனென்றால், இஸ்லாமியர்கள் கிறிஸ்தவத்தின் மீது சுமத்தும் குற்றச்சாட்டுகள் அவர்கள் அல்லாஹ்விற்கும், குர்-ஆனுக்குமே பிரச்சனையாக இருப்பதினால், அவர்கள் சிறிது எச்சரிக்கையாக இருக்கட்டும்.

**முடிவுரை:** தம்பி, கடைசியாக நான் உனக்கு சொல்லிக்கொள்வது என்னவென்றால், முதல் நான்கு சுவிசேஷங்களில் இயேசு தம்முடைய தெய்வீகத்தன்மையை ஆணித்தரமாக விளக்கியுள்ளார். பவுலுக்கு முன்பாக இயேசுவின் சீடர்கள் இயேசுவே தெய்வம் என்று அறிக்கையிட்டு, சிறைச்சாலைகளில் அடைக்கப்பட்டுள்ளார்கள், கொலை செய்யப்பட்டுள்ளார்கள். சரித்திரம் நமக்கு முன்பாக தெளிவாக இருக்கும் போது அதனை ஏற்கமறுப்பவர்களை நாம் என்னவென்று கூறமுடியும்?

கிறிஸ்தவத்தை குற்றப்படுத்தினால், இஸ்லாமுக்கு ஆபத்து,

பைபிளை குற்றப்படுத்தினால், குர்-ஆனுக்கு ஆபத்து,

இயேசுவின் சீடர்களை, பவுலை குற்றப்படுத்தினால், அல்லாஹ்விற்கே ஆபத்து.

எனவே, இவைகளை மனதில் வைத்து இஸ்லாமியர்கள் பேசட்டும், எழுதட்டும், மறுத்தால் விளைவுகளை சந்திக்க தயாராகிக்கொள்ளட்டும்.

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.

இப்படிக்கு, உன் சகோதரன்

தமிழ் கிறிஸ்தவன்.

**மூலம்**

**உமரின் ரமளான் மாத தொடர் கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/ramalan2012day29.html

# 24. ஆறு முறை தோல்வியுற்ற அல்லாஹ்விற்கு ஏழாவது முறை வெற்றியை கொடுத்த சஹாபாக்கள்

முந்தைய ஐந்து தொடர் கட்டுரைகளை கீழேயுள்ள தொடுப்புகளை சொடுக்கி படிக்கலாம்:

- 2013 ரமளான் நாள் 1 - **அன்புள்ள அண்ணாவிற்கு . . . போர் புரிவது அமைதியை நிலைநாட்டுவதற்கு அல்லவா?**
- 2013 ரமளான் நாள் 2 - **முஹம்மதுவும் வழிப்பறி கொள்ளைகளும்**
- 2013 ரமளான் நாள் 3 - **தேன் கூட்டில் கல்லெறிந்து தேனீக்களை கோபமூட்டியது யார்? முஹம்மதுவா? மக்காவினரா?**
- 2013 ரமளான் நாள் 4 - **பதிலுக்கு பதில்: நீங்கள் செல்வங்களை எடுத்துக்கொண்டீர்கள், நாங்கள் கொள்ளையடிக்கிறோம்**
- 2013 ரமளான் நாள் 5 - **முஸ்லிம் குருசேடர்களும் கிறிஸ்தவ குருசேடர்களும் (ஜிஹாதும் சிலுவைப்போர்களும்)**

ஆறாவது தொடர் கட்டுரையை இப்போது படிப்போம்.

---

**அன்புள்ள தம்பிக்கு,**

ஒவ்வொரு நாளும் கடிதம் எழுதும் நீ, ஏன் நேற்று எழுதவில்லை? அலுவலகத்தில் வேலை அதிகமாக உள்ளதா? அல்லது எனக்கு எழுதக்கூடாது என்று எண்ணிவிட்டாயா?

நீ விரும்பியபடியே, இந்த கடிதத்தில் முஹம்மது புரிந்த இதர வழிப்பறி கொள்ளைகள் பற்றிய கேள்விகளை உன்னிடம் கேட்கிறேன்.

**முதல் மூன்று வழிப்பறி கொள்ளைகள்:**

முஹம்மது மதினாவிற்குச் சென்றுவிட்ட பிறகு அவர் தம்முடைய சஹாபாக்களை குறைஷிகளின் வியாபாரிகளை கொள்ளையிட அனுப்பினார். முதல் மூன்று வழிப்பறி கொள்ளைகளைப் பற்றி முந்தைய கடிதத்தில் எழுதினேன். இப்போது இன்னும் நான்கு வழிப்பறி கொள்ளைகள் பற்றி மிக சுருக்கமாக காண்போம். இந்த வழிப்பறி கொள்ளைகள் "முஹம்மது ஒரு உண்மையான நபி அல்ல" என்பதை நிருபிக்கின்றன, மேலும் இஸ்லாமியர்களை தர்மசங்கட சூழ்நிலையில் தள்ளுகின்றன.

**அடுத்த நான்கு வழிப்பறி கொள்ளைகள் (மூலம்: ரஹீக் மற்றும் இதர சரித்திர புத்தகங்கள்)**

**நான்காவது வழிப்பறி கொள்ளை – 'அப்வா' (அ) 'வத்தான்'**

ஹிஜ்ரி 2ல் ஸஃபர் (கி.பி. 623 ஆகஸ்டு) மாதம் நபி (ஸல்) அவர்கள் 70 முஹாஜிர்களுடன் குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தை இடை மறிப்பதற்காக "அல்அப்வா" அல்லது "வத்தான்" என்ற இடத்தை நோக்கிச் சென்றார்கள். ஆனால், சண்டை ஏதும் நடைபெறவில்லை. . . . இந்த போரின் போது "ழம்ரா" கிளையினரின் தலைவரான அம்ர் இப்னு மக்ஷி என்பவருடன் நட்பு உடன்படிக்கை செய்தார்கள்.

[இந்த வழப்பறியில், குறைஷிகளை இவர்கள் சந்திக்கமுடியவில்லை, ஆனால், "ழம்ரா" இனத்தவரை கொள்ளையடித்தார்கள், அதன் பிறகு அவர்களோடு உடன்படிக்கை செய்துக்கொண்டார்கள், ரஹீக் புத்தகத்தில் இவர்களை கொள்ளையிட்டது பற்றி அதன் ஆசிரியர் எழுதவில்லை]

### ஐந்தாவது வழிப்பறி கொள்ளை – 'பூவாத்'

ஹிஜ்ரி 2, ரபீவுல் அவ்வல் (கி.பி. 623 செப்டம்பர்) மாதம் நபி (ஸல்) தங்களது 200 தோழர்களுடன் குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தை வழிமறிப்பதற்காகச் சென்றார்கள். இந்த வியாபாரக் கூட்டத்தில் உமய்யா இப்னு கலஃபும் நூறு குறைஷிகளும் இருந்தனர். இவர்களுடன் 2500 ஒட்டகங்கள் இருந்தன. நபி (ஸல்) அவர்கள் "ரழ்வா" என்ற மலைக்கருகில் உள்ள "பூவாத்" என்ற இடம் வரை சென்றார்கள். ஆனால், வியாபாரக்

கூட்டம் அந்த இடத்தை முன்கூட்டியே கடந்து விட்டதால் சண்டை ஏதும் நடைபெறவில்லை.

### ஆறாவது வழிப்பறி கொள்ளை – 'துல் உஷைரா':

ஹிஜ்ரி 2ல் ஜுமாதா அல்ஊலா அல்லது ஜுமாதா அல் ஆகிரா (கி.பி. 623 நவம்பர் அல்லது டிசம்பர்) மாதம் நபி (ஸல்) அவர்கள் தமது 150 அல்லது 200 முஹாஜிர் தோழர்களுடன் இந்தப் போருக்காக புறப்பட்டார்கள். இப்போரில் கலந்து கொள்ளும்படி எவரையும் நிர்பந்திக்கவில்லை. இந்த 150 (அல்லது) 200 தோழர்களும் 30 ஒட்டகங்களில் ஒருவர் மாறி ஒருவராக பயணித்தனர். மக்காவிலிருந்து வியாபாரச் சாமான்களுடன் ஷாம் நோக்கி சென்று கொண்டிருந்த குறைஷிகளின் வியாபாரக் கூட்டத்தினரை வழிமறிப்பதே நபி (ஸல்) அவர்களின் நோக்கமாக இருந்தது. ஆனால், நபி (ஸல்) அவர்கள் "துல் உஷைரா" என்ற இடத்தை அடைவதற்குப் பல நாட்களுக்கு முன்னதாகவே அக்கூட்டம் அந்த இடத்தைக் கடந்து விட்டது தெரியவந்தது.

அன்பான தம்பி, மேற்கண்ட மூன்று வழிப்பறி கொள்ளைகளிலும் முஹம்மதுவிற்கு எதுவும் கிடைக்கவில்லை. மொத்தம் ஆறு வழிப்பறி கொள்ளைகளை முஹம்மது மேற்கொண்டாலும், அவர் குறைஷிகளை பிடிக்கமுடியவில்லை, அவர்கள் வேறு வழியாகவோ அல்லது இவர்களுக்கு முன்பாகவோ கடந்துச் சென்றுவிட்டார்கள். இந்த மேற்கண்ட ஆறு வழிப்பறி கொள்ளைகள் முஹம்மதுவின் நபித்துவம் பற்றிய அனேக சந்தேகங்களை எழுப்புகிறது. அவைகளை கீழ்கண்ட ஏழாவது வழிப்பறி கொள்ளைப் பற்றி நாம் தெரிந்துக்கொண்ட பின்பு பார்க்கலாம். முஹம்மது ஒரு உண்மையான தீர்க்கதரிசியா? அல்லது கள்ளத் தீர்க்கதரிசியா? என்பது இதன் மூலம் விளங்கும்.

### ஏழாவது வழிப்பறி கொள்ளை – "நக்லா'

இந்த ஏழாவது வழிப்பறி கொள்ளை வித்தியாசமானது. முஹம்மதுவின் வார்த்தைகளுக்கு கீழ்படியாமல் போனதே, வெற்றியின் இரகசியம் ஆகிவிட்டது. முஹம்மதுவிற்கு கீழ்படிவது அல்லாஹ்விற்கு கீழ்படிவதற்கு

சமம் இல்லையா? இப்படியிருக்க முஹம்மதுவின் வார்த்தைகளை உதறித்தள்ளியதே, அல்லாஹ்வின் விருப்பத்தின் படி செய்வது போல ஆகிவிட்டது.

**இந்த விவரம் பற்றி விவரமாக ரஹீக் புத்தகத்தின் 203ம் பக்கத்தில் படிக்கவும். நான் இங்கு சுருக்கமாக எழுதுகிறேன்.**

**அ) முஹம்மது 12 நபர்களை அனுப்பி,** குறைஷி வியாபாரிகளை வேவு பார்த்து வரும் படி அனுப்புகிறார்.

**ஆ) அவர்களும் சென்று வேவு பார்க்கிறார்கள்**, இவர்கள் தலைச்சவரம் செய்துச் சென்றதாலும், அந்த மாதம் புனித மாதம் என்பதாலும் குறைஷி வியாபாரிகள் இவர்கள் மீது சந்தேகம் கொள்ளவில்லை. இவர்கள் மூலம் ஆபத்து வராது என்று நினைத்துவிட்டார்கள்.

**இ) ஆனால், முஹம்மது அனுப்பிய நபர்களோ**, இந்த அருமையான சந்தர்ப்பத்தை நழுவவிடக்கூடாது என்ற எண்ணத்தில், அதாவது பொருட்களுடன் இருக்கும் குறைஷி வியாபாரிகளை விட்டுவிடக்கூடாது, அவர்களை தாக்கி கொள்ளையிடவேண்டும் என்று தங்களுக்குள் முடிவு செய்துக்கொண்டார்கள்.

**ஈ) முஹம்மதுவின் வார்த்தைக்கு விரோதமாக செயல்பட்டு**, அவர்கள் குறைஷிகளை கொள்ளையிட்டு, கொலையும் செய்து பொருட்களை மதினா கொண்டுவந்துவிட்டார்கள். முஹம்மதுவிற்கும் ஐந்தில் ஒரு பாகத்தை கொடுத்தார்கள், ஆனால் முஹம்மது இந்த செயலை வெறுத்தார், அவர் கோபத்தில் இருந்தார். முஹம்மது தனக்கு கொடுத்த பொருட்கள் மற்றும் பிடிபட்ட கைதிகள் பற்றி மௌனம் சாதித்தார்.

**உ) குறைஷிகள் முஹம்மது பற்றி தவறாக பேச ஆரம்பித்துவிட்டார்கள்**. புனித மாதத்திலும் இவர் வன்முறையில் ஈடுபடுகிறார், இவர் எப்படி நபியாக இருக்கமுடியும்? என்று கேள்வி கேட்க ஆரம்பித்துவிட்டார்கள். முஹம்மதுவின் வார்த்தைக்கு எதிராக செயல்பட்டதினால், சஹாபாக்கள் தர்ம சங்கடமான சூழ்நிலையில் மாட்டிக்கொண்டு துக்கமாக இருக்கிறார்கள்.

**ஊ) இந்த சமயத்தில் அல்லாஹ் குர்ஆன் 2:217** வசனத்தை இறக்கி, "சஹாபாக்களின் செய்கைகளுக்கு ஆதரவாக" பேசினார். இதன் பிறகு முஹம்மது இயல்பு நிலைக்கு திரும்பினார், பொருட்களை பெற்றுக்கொண்டார். சஹாபாக்களும் நிம்மதியடைந்தார்கள்.

இது தான் நக்லா கொள்ளைப் பற்றிய விவரங்கள். மேற்கண்ட அனைத்து விவரங்கள் பற்றி ரஹீக் என்ற புத்தகத்தில் படிக்கலாம் (பக்கங்கள் 201, 202 & 203).

இப்போது மேற்கண்ட அனைத்து நிகழ்ச்சிகளும், எப்படி முஹம்மதுவின் நபித்துவத்தை சந்தேகத்திற்கு உட்படுத்துகிறது? என்பதைக் காண்போம்.

### முஹம்மதுவின் வஹி பற்றி இஸ்லாமிய நம்பிக்கை:

**1) இஸ்லாமியர்களின் படி** முஹம்மது ஒரு தீர்க்கதரிசி ஆவார்.

**2) இவருக்கு இரண்டு** வகையான வஹிகளை (வெளிப்பாடுகளை) அல்லாஹ் கொடுத்தார்.

**3) முதல் வகை வஹி -** ஜிப்ராயீல் தூதன் குர்-ஆனை முஹம்மதுவிற்கு ஓதிக் காண்பிப்பார், அதனை முஹம்மது மக்களுக்கு ஓதிக்காண்பிப்பார், அதுவே குர்-ஆன்.

**4) இரண்டாவது வகையான வஹியை** யார் கொண்டு வந்தார்கள் என்று தெரியாது, ஆனால் அதனை முஹம்மது பெற்று, அதன் படி தான் மற்றவர்களுக்கு கட்டளைகளை கொடுத்தார், தானும் அந்த வஹியின் படியே வாழ்ந்து காட்டினார். அதாவது, முஹம்மதுவின் பேச்சும், செயல்களும் இரண்டாவது வஹியின் படியே இருந்தது. சண்டைக்குச் செல்லும் படி, முஹம்மது சஹாபாக்களுக்கு கட்டளை கொடுத்தால், இவருக்கு அல்லாஹ்விடமிருந்து இரண்டாவது வகையான வஹி ஏற்கனவே வந்துள்ளது என்று பொருள். இதனை அடிப்படையாகக் கொண்டு முஹம்மது சஹாபாக்களை போருக்கு செல்லும் படி, குறைஷிகளின் வியாபாரிகளை தாக்கி, அவர்களின் பொருட்களை அபகரிக்கும் படி கூறியுள்ளார்.

**5) முஹம்மதுவின் சொல்லும் செயலும்** அல்லாஹ்வின் வஹியாகும். ஆகையால் தான் முஸ்லிம்கள் முஹம்மதுவை அப்படியே காபி அடித்து வாழவேண்டும் என்று உற்சாகப்படுத்தப்படுகிறார்கள். முஹம்மது தாடி விட்டால், முஸ்லிம்களும் தாடி விடுகிறார்கள். இஸ்லாமின்படி, இப்படி முஹம்மதுவை முழுவதுமாக பின்பற்ற முஸ்லிம்கள் முயற்சிப்பது மிகவும் நல்ல விஷயம் ஆகும்.

தம்பி, மேற்கண்டவைகள் இஸ்லாமிய நம்பிக்கைகளாகும், இதனை நீ மறுக்கமாட்டாய் என்று நம்புகிறேன். இவைகளை மனதில் வைத்துக்கொண்டு, நாம் இப்போது "நக்லா" என்ற வழிப்பறி கொள்ளை நிகழ்ச்சியை சுற்றியுள்ள விஷயங்களை ஆய்வு செய்வோம். தம்பி, இந்த விஷயங்கள் மிகவும் முக்கியமானவைகள், இவைகளை கூர்ந்து கவனி.

### முதல் ஆறு வழிப்பறி கொள்ளைகள் தோல்வியை தழுவியது ஏன்?

அ) முதன் முதலாக குறைஷி வியாபாரிகளை கொள்ளையிட முஹம்மது ஆறுமுறை சஹாபாக்களை அனுப்பினார். ஆனால், ஒரு முறையும் அவரால் குறைஷி வியாபாரிகளை கொள்ளையிட முடியவில்லை. இவர்களின் கைக்கு பிடிபடாமல் குறைஷிகள் வேறு வழியாக சென்றுவிட்டார்கள், சில நேரங்களில் முஸ்லிம்கள் அந்த இடத்தை அடைவதற்கு முன்பே, அதை தாண்டி சென்றுவிட்டார்கள். முஸ்லிம்கள் வெறுங்கையோடு திரும்பி வந்தார்கள்.

ஆ) முஹம்மது ஒரு நபியானால், தனக்கு வந்த வஹியின்படிதான் அவர் அனைத்தையும் செய்தார் என்றுச் சொல்வது உண்மையானால், ஏன் இத்தனை முறை, முஹம்மதுவிற்கு வந்த வஹி தோல்வி அடைந்தது?

இ) இந்த ஆறுமுறை கொள்ளையிட முஹம்மது அனுப்பியது தன்னுடைய சொந்த சிந்தனை என்று இதன் மூலம் தெரிகின்றதல்லவா? இப்படி சண்டையிட முஹம்மது அனுப்பியது தன் சொந்த சிந்தனையிலிருந்து வந்த செயல் என்று கருதினால், இன்னும் எவைகளையெல்லாம் அவர் சொந்தமாக கூறியிருப்பார் எந்த சந்தேகம் எழுகின்றது. ஹதீஸ்களில் வரும் விவரங்களில் எத்தனை சதவிகிதம் வஹி? எத்தனை சதவிகிதம் சொந்தமாக இட்டுக்கட்டியது?

ஈ) "இல்லை.. இல்லவே இல்லை. முஹம்மது தனக்கு வந்த இரண்டாவது வகையான வஹியின் படி தான் அல்லாஹ்வின் காரியங்களைச் செய்வார்" என்று முஸ்லிம்கள் சொல்வார்களானால், ஏன் அந்த ஆறுமுறையும் தோல்வியை தழுவினார்கள்? இதனால் அல்லாஹ்வின் வஹியில் தவறு இருக்கிறது என்று நாம் எண்ணவேண்டி வருமே!

உ) அல்லாஹ் என்பவர் சர்வ ஞானி என்றால், குறைஷிகள் எந்த வழியில் செல்கிறார்கள்? எந்த காலத்தில் அந்த குறிப்பிட்ட இடத்தை அடைவார்கள் என்று அல்லாஹ் அறியாமல் போனதென்ன? அவர் ஏன் தன் நபிக்கு தவறான விஷயங்களை வஹியாக சொன்னார்? ஒரு முறை இரு முறை அல்ல, ஆறுமுறையும் இப்படியே நடந்தது.

இப்பொழுது நக்லா வழிப்பறி கொள்ளைப் பற்றி பார்ப்போம்.

## அல்லாஹ்வின் வஹியை பெற்றவர்கள் யார்? முஹம்மதுவா? (அ) சஹாபாக்களா?

நம்முடைய கேள்விகள் என்னவென்றால்:

1) முஹம்மதுவிற்கு வஹி வந்து அதன்படி தான் அவர் சஹாபாக்களை நக்லாவிற்கு சண்டையிடக்கூடாது என்று சொல்லி அனுப்பினாரா? அல்லது சுமயாக சிந்தித்து, அல்லாஹ் கட்டளையிடாமலேயே அனுப்பினாரா?

2) வஹி வந்ததால் தான் முஹம்மது அனுப்பினார் என்றுச் சொன்னால்? சஹாபாக்கள் செய்தது முஹம்மதுவிற்கு / அல்லாஹ்விற்கு எதிரான செயல் அல்லவா?

3) சஹாபாக்களின் செய்கைகளை ஆதரித்து அல்லாஹ் வசனத்தை இறக்குகிறார், அப்படியானால் ஏன் அவர் முதலில் சண்டையிடக்கூடாது என்று முஹம்மதுவிற்கு சொல்லவேண்டும்? அதன் பிறகு, சண்டையிட்டு கொள்ளையிட்டதை ஆதரிக்கவேண்டும்? அல்லாஹ் முஹம்மதுவோடு விளையாடுகிறாரா?

4) நக்லா நிகழ்ச்சிப் பற்றி, முஹம்மதுவிற்கு எட்டாத ஞானம் கூட சஹாபாக்களுக்கு எட்டியது என்று நாம் சொல்லலாம் அல்லவா? அதாவது அல்லாஹ் சிந்தித்தது போலவே, சஹாபாக்கள் சிந்தித்து செயல்பட்டார்கள். ஆனால், அல்லாஹ் சிந்தித்தது போல முஹம்மது சிந்திக்கவில்லை.

5) முஹம்மது நபியா அல்லது சஹாபாக்கள் நபிகளா?

6) நிலைமை இன்னும் மோசமாக மாறுகிறது, அதாவது ஆறுமுறை முஹம்மது குறைஷி வியாபாரிகளை கொள்ளையடிக்க அனுப்பினார், முஹம்மதுவின் வார்த்தைகளின்படியே அவர்கள் செய்தார்கள், அதனால் தோல்வி தான் மிஞ்சியது. ஏழாவது முறையும் அனுப்பினார், இந்த முறை முஹம்மதுவின் பேச்சை கேட்காமல், சொந்தமாக முடிவு எடுத்தார்கள், இதனால் வெற்றியும் பெற்றார்கள், பொருட்களையும் கொள்ளையடித்தார்கள், எல்லாவற்றுக்கும் மேலாக, அல்லாஹ்வின் அனுமதியும் கிடைத்துவிட்டது, தண்டனையிலிருந்தும் தப்பித்தார்கள். முஹம்மதுவின் வார்த்தைகளை கேட்காததினால் கிடைத்த நன்மைகளைப் பாருங்கள்.

7) கடைசியாக, முஹம்மதுவையும், அல்லாஹ்வையும் வெற்றிப்பெற வைத்தவர்கள் சஹாபாக்கள் என்றுச் சொன்னால் மிகையாகாது.

தம்பி, நபி செய்யும் அனைத்து செயல்களுக்கும் "இறைவனின் வஹியை" வம்புக்கு இழுப்பதினால் வந்த பிரச்சனையை பார்த்தாயா?

முஹம்மது பேசினால் வஹி,

பேசாமல் இருந்தாலும் வஹி,

நடந்தால் வஹி,

சிரித்தால் வஹி,

விரலை ஆட்டினால் வஹி,

விரலை ஆட்டாமல் இருந்தால் வஹி,

தாடி வைத்தால் வஹி,

தாடியை கத்தரித்தால் வஹி,

மக்கள் கேள்வி கேட்டு முஹம்மது பதில் சொன்னால் வஹி,

பதில் சொல்லாமல் இருந்தாலும் வஹி,

மக்கள் கேள்வி கேட்காமலேயே அவராக பதில் சொன்னலும் வஹி

அவர் உண்மையைச் சொன்னாலும் வஹி,

பொய்யைச் சொன்னாலும் வஹி,

அவர் கட்டுக்கதைகளைச் சொன்னாலும் வஹி,

இட்டுக்கட்டிச் சொன்னாலும் வஹி

இப்படி ஒரு மனிதனை விக்கிரமாக பூஜிக்கிறீர்கள் நீங்கள். இதனால் விளையும் பிரச்சனைகளை பார்த்தாயா தம்பி?

இரண்டாவது வகை வஹி முஹம்மதுவிற்கு வருவது போல, சஹாபாக்களுக்கும் அதே வஹி வந்து அவர்கள் (அல்லாஹ்வின் விருப்பத்தின் படி) செயல்பட்டதாக மேற்கண்ட நிகழ்ச்சியில் காண்கிறோம்.

முஹம்மது கொள்ளையடிக்க அனுப்பியது தன் சுய விருப்பத்தின் படியா? அல்லது வஹியின் அடிப்படையிலா? தம்பி உன்னால் பதில் சொல்லமுடியுமா? [தமிழ் நாட்டின் இஸ்லாமிய அறிஞர்களிடம் இதற்கு பதில் இருந்தாலும் அனுப்புங்கள்]

உன்னுடைய பதிலுக்காக எதிர்ப்பார்க்கிறேன்.

இப்படிக்கு

உன் அண்ணன்

உமர்

மூலம்

உமரின் ரமளான் மாத கட்டுரைகள்

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/ramalan2013part6.html

# 25. அல்லாஹ்வின் தற்கால அற்புதங்களும், குர்-ஆனின் அறிவியலும் - அழுகிப்போன தக்காளியில் தத்தளிக்கும் அல்லாஹ்

உமரின் தம்பி சௌதி அரேபியாவில் வேலை பார்க்கிறார். அவர் இஸ்லாமை தழுவியுள்ளார். உமரோடு அவ்வப்போது இஸ்லாம் பற்றி பேசுவார், கிறிஸ்தவம் பற்றி கேள்விகளைக் கேட்பார். ஒவ்வொரு ஆண்டும் ரமளான் மாதத்தில் இவ்விருவரும் சில தலைப்புகளில் விவாதிப்பதும், கடிதங்களை பரிமாறிக்கொள்வதும் உண்டு. இவ்வாண்டும் உமரின் தம்பி, "அல்லாஹ்வின் தற்கால அற்புதங்களும், குர்-ஆனின் அறிவியலும்" என்ற தலைப்பில் உமரோடு பேசப்போகிறார். உண்மையிலேயே குர்-ஆனில் அறிவியல் உண்டா? அல்லாஹ் தற்காலத்தில் செய்யும் அற்புதங்கள் என்னென்ன? இஸ்லாமிய அறிஞர்கள் குர்-ஆன் சொல்லாத ஒன்றை கற்பனை செய்துக்கொண்டு மக்களை மயக்குவதற்கு "குர்-ஆனில் அறிவியல் உண்டு" என்று சொல்லிக்கொண்டு இருக்கிறார்களா? இவைகளை இந்த ரமளான் மாத தொடர் கட்டுரைகளை படித்து தெரிந்துக் கொள்ளுங்கள். ஒவ்வொரு விவரத்தையும், வசனத்தையும் படித்து, ஆய்வு செய்து உங்கள் முடிவிற்கு வாருங்கள்.

வாருங்கள்... ரமளான் மாதத்தின் முதல் நாளுக்குள் செல்வோம்....

## 2014 ரமளான் பாகம் 1: அழுகிப்போன தக்காளியில் தத்தளிக்கும் அல்லாஹ்

[அமைதியான மாலை நேரம், ரமளானின் முதல் நாள், உமர் வீட்டில் உட்கார்ந்துக்கொண்டு, தேனீரை ருசித்துக்கொண்டு இருக்கிறார். அவரின் மொபைளுக்கு ஒரு அழைப்பு வருகிறது. உமர் ஒரு கையில் தேனீர் கோப்பையை பிடித்தபடியே, இன்னொரு கையில் மொபைளை எடுத்து பேச ஆரம்பிக்கிறார்].

**உமர்:** ஹலோ தம்பி

**தம்பி:** ஹலோ அண்ணா, அஸ்ஸலாமு அலைக்கும்

**உமர்:** வா அலைக்கும் ஸலாம் தம்பி. நீ எப்படி இருக்கிறாய்?

**தம்பி:** நான் சுகமாக இருக்கிறேன், நீங்க எப்படி இருக்கீங்க? பிள்ளைகள் மற்றும் அண்ணி, அம்மா அப்பா எப்படி இருக்கிறாங்க?

**உமர்:** கர்த்தரின் கிருபையால் எல்லாரும் சுகமாக இருக்காங்க. சௌதியில் ரமளான் மிகவும் கோலாகளமாக கொண்டாடப்படப்போகிறது என்று நினைக்கிறேன். இன்று நோன்பின் முதல் நாள் இல்லையா?

**தம்பி:** ஆம் அண்ணா, இன்று தான் ரமளான் முதல் நோன்பு ஆரம்பிச்சுது.

**உமர்:** நல்ல விஷயம் தான். இந்த ஆண்டும் நீ 30 நாட்கள் நோன்பு இருப்பாய் அல்லவா?

**தம்பி:** இதில் என்ன சந்தேகம்? இதற்காகத் தான் நான் ஆண்டு முழுவதும் ஆவலாக காத்திருந்தேன்.

**உமர்:** உன் நோன்பு சிறக்க என் வாழ்த்துக்கள். சரி என்ன விஷயம் சொல்? காரணமில்லாமல் நீயாக அழைக்கமாட்டாயே!

**தம்பி:** ம்ம்ம்... புரிந்துக்கொண்டால் சரி. நான் விஷயத்துக்கு வருகிறேன். இந்த ஆண்டு ரமளான் மாதத்தில் உங்களுக்கு சில அல்லாஹ்வின் அற்புதங்களையும், குர்-ஆனின் விஞ்ஞான முன்னறிவிப்புகளையும் காண்பித்து, இஸ்லாமின் அருமை பெருமைகளைப் பற்றி பேசலாம் என்று விரும்புகிறேன். குர்-ஆனுக்கு வெளியே, ஏதாவது ஆதாரம் உண்டா என்று அடிக்கடி நீங்கள் என்னிடம் கேட்கிறீர்கள் இல்லையா? இதோ இந்த மாதம் என்னால் முடிந்தவரை உங்களுக்கு சில விவரங்களை எடுத்துச் சொல்கிறேன்.

**உமர்:** வா...வ். என்னே ஒரு அருமையான ஐடியா! எனக்கு இது பிடிச்சுருக்கு. நீ சொல்வதைப் பார்த்தால், இதற்காக அதிகமாக ஆய்வு செய்து, பெரிய அளவில் தயாரான நிலையில் இருக்கிறாய் என்று நினைக்கிறேன்.

**தம்பி:** பொறுத்திருந்து பாருங்கள், உங்களுக்கே புரியும். உங்களுக்கு இப்போது நேரமிருந்தால், ஸ்கைப்பில் (Skype) வருகிறீர்களா? நாம் பேசுவோம்.

**உமர்:** மொபைளிலேயே பேசலாமே!

**தம்பி:** இல்லை.. இல்லை.. நான் சில இணைய தொடுப்புக்களை, படங்களை அனுப்புவேன், அவைகளை நீங்கள் பார்க்கவேண்டும். அவைகள் நம் உரையாடலுக்கு உதவியாக இருக்கும்.

**உமர்:** சரி, எனக்கு ஐந்து நிமிடங்கள் கொடு, நான் ஸ்கைப்பில் லாகின் ஆகிவிடுகிறேன்.

**தம்பி:** ரொம்ப நல்லது, நான் ஸ்கைப்பில் லாகின் ஆகி உங்களுக்காக காத்திருக்கிறேன்.

[இருவரும் சில நிமிடங்களுக்கு பிறகு ஸ்கைப்பில் லாகின் ஆகி, பேச ஆரம்பிக்கிறார்கள்]

**தம்பி:** அண்ணா, நான் ஒரு முக்கியமான அற்புதத்தை காட்டப்போகிறேன். தற்காலத்தில் அல்லாஹ் செய்துவரும் அற்புதங்கள் ஏராளம்.

**உமர்:** அப்படியா தம்பி! தன்னுடைய இறைத்தூதர் முஹம்மது வாழ்ந்த காலத்தில் அற்புதங்களைச் செய்து தன் இறைத்தூதருக்கு உதவி செய்யாத அல்லாஹ்வா? தற்காலத்தில் அதிகமாக அற்புதங்களைச் செய்துக் காட்டுகிறார்?

**தம்பி:** அண்ணா, வேடிக்கைவேண்டாம். நான் சொல்வதைக் கேளுங்கள். இதோ இந்த தொடுப்புகளை ஒரு முறை சொடுக்கிப் பாருங்கள்.

- http://www.youtube.com/watch?v=jx8mVX0WMuk
- http://www.miraclesofislam.com/tomato.shtml

- http://datastore02.rediff.com/h1500-w1500/thumb/6656705829292A2C695E676B/6ji56otcqw5shwql.D.0.pics--miracles-of-Allah-tomato-01.jpg
- http://i1.ytimg.com/vi/jx8mVX0WMuk/hqdefault.jpg





**உமர்:** அப்படி என்ன இந்த தொடுப்புகளில் உள்ளது. இதோ சொடுக்கிப் பார்க்கிறேன்.

**தம்பி:** பார்த்தீங்களா? நன்றாக கவனித்துப் பாருங்கள்.

**உமர்:** ம்ம்ம் பார்த்தேன்.. அழுகிப்போன தக்காளிகளைப் பார்த்தேன். நீயே கொஞ்சம் விளக்கிச் சொல்லேன்.

**தம்பி:** உங்களுக்கு புரியவில்லையா? அல்லது தெரியாதவர் போல நடிக்கிறீர்களா?

**உமர்:** சில விஷயங்கள் அவரவர் வாயாலே கேட்டால் தான் நன்றாக இருக்கும். நீயே விளக்கிவிடு.

**தம்பி:** அல்லாஹ் தன் பெயரை தக்காளியில் பதித்து இருக்கிறார். இது தான் அற்புதம். இது போல, வேறு எந்த ஒரு இறைவனுடைய பெயரையாவது பார்க்கமுடியுமா?

**உமர்:** ஓ அந்த அழுகிப்போன தக்காளியில் நாம் காண்பது அற்புதமா?

**தம்பி:** இஸ்லாமின் அற்புதத்தை ஏற்றுக்கொள்ள மனமில்லை என்பதற்காக, வாய்க்கு வந்தபடியெல்லாம் பேசாதீர்கள்.

**உமர்:** சரி, தக்காளியில் தன் பெயரை பதித்ததின் மூலமாக, அல்லாஹ் உலகிற்கு எதனைச் சொல்லவருகிறார் என்பதை நீ விளக்கமுடியுமா?

**தம்பி:** அல்லாஹ் தான் உலகத்தின் அதிபதி மற்றும் படைப்பாளி என்பது இந்த அற்புதத்தின் மூலம் விளங்குகிறது அல்லவா?

**உமர்:** ஓ நீ அந்த வழியில் வருகிறாயா?

**தம்பி:** என் வழி தனி வழி...

**உமர்:** பார்த்து தம்பி, யாருமே போகாத வழியில் போனால், எங்கு போகிறோம் என்று தெரியாமல் வழி தவறி சென்றுவிடுவோம்.

**தம்பி:** போதும் அண்ணே! போதும். விளையாட்டுத்தனமாக பேசியது போதும். நான் சீரியஸாக கேள்வி கேட்டால் .. நீங்க வேடிக்கையாகவே பேசிக்கிட்டு இருக்கீங்க...

**உமர்:** சரி, நானும் சீரியஸாக இந்த விஷயத்தை எடுத்துக்கொள்கிறேன். உனக்கு சில அடிப்படை விஷயங்களை முதலாவது சொல்லிவிடுகிறேன், அப்போது தான் இப்படிப்பட்ட தற்கால இஸ்லாமிய அற்புதங்களின் உண்மை நிலை உனக்குப் புரியும்.

### 1) தற்கால அற்புதமும், ஏழாம் நூற்றாண்டு அற்புதமின்மையும்:

உங்கள் முஹம்மது வாழ்ந்த காலத்தில், அனேகர் முஹம்மதுவிடம் வந்து இப்போது அற்புதங்கள் செய்துக்காட்டுங்கள் அப்போது நீர் ஒரு இறைத்தூதர் என்று நம்புவோம் என்று கேள்வி கேட்டனர். ஆனால், அல்லாஹ்வினால் எந்த வெளிப்படையான அற்புதமும் முஹம்மதுவின் நபித்துவத்தை நிரூபிப்பதற்காக செய்து காட்டப்படவில்லை. நான் கொண்டு வந்த அற்புதம் குர்-ஆன் மட்டும் தான் என்றுச் சொல்லி முஹம்மது மழுப்பினார். இயேசுவைப்போல மரித்தவர்களை எழுப்பி, வியாதியுள்ளவர்களை குணமாக்கியிருந்திருந்தால், இன்னும் அனேகர் முஸ்லிம்களாக மாறியிருப்பார்கள்.

குறைந்த பட்சம், அந்த காலத்திலாவது அல்லாஹ் இப்படிப்பட்ட "தக்காளி அற்புதங்களை" செய்து இருந்திருந்தால், அக்கால மக்கள் ஒருவேளை இவரை நம்பியிருப்பார்கள். தன் இறைத்தூதர் உயிரோடு இருக்கும் போது அற்புதங்களைச் செய்யாத அல்லாஹ், 14 நூற்றாண்டுகளுக்கு பிறகு, இப்போது வந்து தக்காளியில் அற்புதங்கள் செய்கிறார் என்றுச் சொல்வது, அல்லாஹ்வை மட்டுப்படுத்துவதாகும்.

எந்த நேரத்த்தில் அற்புதங்கள் தேவையோ, அப்போது செய்யாமல், தேவையில்லாத இக்காலத்தில் அற்புதம் செய்வது என்பது சர்வ ஞானியான அல்லாஹ்விற்கு ஏற்றதல்ல, இதனை சராசரி மனிதர்கள் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்.

### 2) அழுகிப்போன தக்காளியில் அல்லாஹ்வின் பெயர் – இது அல்லாஹ்விற்கு மேன்மையா?

உன்னைப்போன்ற முஸ்லிம்கள் செய்யும் மிகப்பெரிய தவறு என்னவென்றால், "இஸ்லாம் பற்றி எந்த ஒரு தகவல் கிடைத்தாலும், அதனை சரி பார்க்காமல், சிந்திக்காமல் மற்றவர்களுக்கு அவைகளை அனுப்பிவிடுவதாகும்". நீ கொஞ்சமாவது சிந்தித்து இருந்திருந்தால், இந்த பரிதாப நிலைக்கு அல்லாஹ் தள்ளப்பட்டு இருந்திருக்கமாட்டார்.

- ஒரு அழுகிப்போன தக்காளியிலா அல்லாஹ் தன் பெயரை பதிப்பார்? அல்லது

- ஓரிரு நாட்களில் அழுகிப்போகும் ஒரு பழத்திலா அல்லாஹ் தன் பெயரை பதிப்பார்?

- அழுகும் ஒரு பொருளின் மூலமாக உலகிற்கு எதனை தெரிவிக்க விரும்புகிறார் அல்லாஹ்?

உலகில் எப்போதும் நிலைத்து இருக்கும் ஒரு பொருளில் தன் பெயரை பதித்து இருந்திருந்தால், ஓரளவிற்கு சொல்லிக்கொள்வதற்கு முஸ்லிம்களுக்கும் தெம்பு வரும், ஆனால், இப்படி வாடி வதங்கி அழுகும் ஒரு பொருளிலா ! அற்புதம் செய்வார் அல்லாஹ்? அந்தோ பரிதாபம்.

**தம்பி:** இதை அதைச் சொல்லி, முக்கியமான விஷயத்தை மறைக்க முயலாதீர்கள்? தக்காளி அழுகியதோ, இல்லையோ! தக்காளியில் அல்லாஹ்வின் பெயரைப் பார்த்தீர்களா? இல்லையா?

**உமர்:** நீ கணினிக்காலத்தில் வாழ்ந்துக்கொண்டு, கம்பியூட்டர் கிராபிக்ஸ் போடும் அட்டகாசத்தை கண்டு களித்துக்கொண்டு இருக்கும் இந்த காளத்தில் ஒரு படத்தைக் காட்டி, இதில் அல்லாஹ்வின் பெயரை பார்த்தீர்களா இல்லையா? என்று கேட்பது, முட்டாள் தனமாக இருக்கிறது தம்பி.

நீ காண்பித்த முதலாவது படத்தில், வரும் "அல்லாஹ்" என்ற வார்த்தை கிராபிக்ஸில் செய்யப்படவில்லை என்று உன்னால் நிரூப்பிக்கமுடியுமா?

தம்பி நீ விரும்பினால், உன் பெயரையும் தக்காளியில் கிராபிக்ஸில் போட்டு படத்தை தயார் படுத்தமுடியும். என்னிடம் சொன்னது போல வெளியே முஸ்லிமல்லாதவர்களிடம் சொல்லிவிடாதே உன்னை ஒரு மாதிரியாக பார்த்து சிரிப்பார்கள். ஆக, முதலாவது படம் ஒரு "இட்டுக்கட்டப்பட்ட" தக்காளியாகும் அல்லது அல்லாஹ்வாகும்.

**தம்பி:** இதை நான் நம்பமாட்டேன்.

**உமர்:** நீ முஸ்லிமாக மாறிவிட்டபிறகு நல்ல விஷயங்களை எதைத் தான் நம்பியிருக்கிறாய் சொல்லு, இதனை நம்புவதற்கு? கிராபிக்ஸில் பிரமிப்பூட்டும் விஷங்களை உலகம் செய்துக் காட்டிக்கொண்டு இருக்கும் போது, அழுகிப்போன தக்காளி படத்தில் எவனோ ஒருவன் (கண்டிப்பாக அவன் முஸ்லிம்காகத் தான் இருப்பான்) செய்த கயமைத் தனத்தை பிடித்துக்கொண்டு இது அல்லாஹ்வின் அற்புதம் என்றுச் சொல்கிறாயே உனக்கு வெட்கமாக தெரியவில்லை? நீ படித்த படிப்பிற்கும், அறிவிற்கும் இது அடுக்காது தம்பி.

**தம்பி:** ஆனால், அடுத்த படத்தில் தெளிவாக அல்லாஹ்வின் பெயர் தெரிகின்றதே! இதற்கு என்ன சொல்லப்போகிறீர்கள்?

**உமர்:** அடேய், என் அருமை தம்பி, உனக்கு எவ்வளவு எடுத்துச் சொன்னாலும், மறுபடியும் நீ பழைய நிலைக்கே வருகிறாயே! நீ எப்போ தான் திருந்தப்போகிறாய்.

சரி, இந்த இரண்டாவது படத்தைப் பற்றிச் சொல்கிறேன் கேள். உலகில் காணும் அனேக விஷயங்களில் சில வடிவங்கள் நமக்கு தெரிந்த உருவங்களாகத் தெரியும். சில கோடுகளைக் காட்டி இது தான் அல்லாஹ் செய்த அற்புதம் என்றுச் சொல்வது அடிமுட்டாள் தனமாகும்.

**தம்பி:** இப்போது மாட்டிக்கிட்டீங்க பார்த்தீங்களா? இதற்கு உங்களால் பதில் சொல்லமுடியவில்லை. அது கிராபிக்ஸ் இல்லை என்று புரிந்துக்கொண்டீங்களா?

**உமர்:** சிலருக்கு சூடாக பதில் கொடுத்தால் தான் புத்தி வரும், மென்மையாகச் சொன்னால் புரியாது. இன்னும் அல்லாஹ்வின் பெயர் அதிகமாக அடிபட்டால் தவிர நீ விடமாட்டாய் போல் இருக்கிறது. உனக்கு புரியும்படி சொல்கிறேன் கேள், இல்லை இல்லை சில கேள்விகளை கேட்கிறேன் பதில் சொல்லு:

**முதல் கேள்வி:**

உன் அல்லாஹ் ஒரு மொழிக்கு மட்டும் சொந்தமானவரா? அல்லது உலக மொழிகள் அனைத்திற்கும் உரியவரா?

**தம்பி:** உலக மொழிகள் அனைத்தும் அவருக்குத் தெரியும், அவர் இறைவன், ஆகையால் எல்லா மொழிக்கும், நாடுகளுக்கும் சொந்தமானவர்.

**உமர்:** அப்படியானால், மேற்கண்ட "அரபி தக்காளி" போலவே

- தமிழ் தக்காளி
- ஹிந்தி தக்காளி
- பஞ்சாபி தக்காளி

என்று நம் நாட்டில் இருப்பவர்களுக்கு புரியும் படி, அவரவர் மொழிகளில் ஏன் அல்லாஹ்வின் பெயர் வருவதில்லை?

தமிழ் நாட்டு மக்கள் தங்கள் வீட்டில் தக்காளிகளை அறுத்துப் பார்த்தால் "தமிழில் அல்லாஹ்" என்ற எழுத்துக்களை அவர்களால் பார்க்கமுடியுமா?

உன் அல்லாஹ் அரபி மக்கள் பேசுபவர்கள் அறுக்கும் தக்காளியில் மட்டுமே அற்புதங்கள் செய்வாரா? தமிழிலே, ஹிந்தியிலே இன்னும் உலக மொழிகளில் அல்லாஹ் அற்புதம் செய்யமாட்டாரா?

**தம்பி:** நீங்க டாபிக்கை மாற்றி பேசுறீங்க!

**உமர்:** நான் இன்னும் தக்காளிக்குள்ளேயே இருக்கிறேன், அதை விட்டு வெளியே வரவில்லை. உன்னால் பதில் சொல்லமுடியவில்லை என்றுச் சொல்லு.

**இரண்டாவது கேள்வி:**

• இந்த தக்காளி அற்புத்தை, இப்போது தான் அல்லாஹ் செய்ய ஆரம்பித்தாரா? அல்லது முஹம்மதுவின் காலத்திலிருந்தே செய்துக்கொண்டு இருக்கிறாரா? அப்படியானால், முஹம்மதுவிற்கு இதனை ஏன் அவர் வெளிப்படுத்தவில்லை?

• மேலும், முஹம்மதுவின் காலத்துக்கு முன்னே, மற்றும் பைபிளின் பழைய ஏற்பாட்டுக் காலத்தில் இருந்த தக்காளியில் அல்லாஹ்வின் பெயர் இல்லையா?

• கடைசியாக, அரபி மொழி உருவாகாமல் இருந்த கால கட்டத்தில் இருந்த தக்காளிகளில் இந்த கோடுகள் (அல்லாஹ்வின் பெயர்) இல்லாமல் இருந்ததா? அல்லது இஸ்லாம் வந்த பிறகு வளர்ந்த தக்காளிகளில் மட்டுமே இந்த அல்லாஹ்வின் அற்புதம் வெளிப்பட்டதா?

**தம்பி:** ம்ம்ம்.....

**உமர்:** என்ன தம்பி தலை சுத்துதா? ஒரு தக்காளி சூப் போட்டு சூடாக ஒரு கப் குடித்துப் பார், உனக்கு உண்மை விளங்கும்.

**மூன்றாவது கேள்வி:**

ஸ்பானிஸ் தக்காளி திருவிழா என்ற பெயரில் திருவிழா நடைப்பெறுகிறது. தக்காளிகளை ஒருவர் மீது ஒருவர் வீசி கொண்டாடுகிறார்கள். தம்பி, இந்த தக்காளிகளில் மக்களின் கால்களின் கீழே நசுக்கப்படுகின்றது, இந்த தக்காளிகளிலும் நாம் அல்லாஹ்வின் பெயரை பார்க்கமுடியுமா?

http://en.wikipedia.org/wiki/La_Tomatina

இது மாத்திரமல்ல, கடைத்தெருக்களில் அழுகிப்போன தக்காளிகளை குப்பைகளில் கொட்டுவார்கள், அந்த தக்காளிகளிலும் அல்லாஹ்வின் பெயரை பார்க்கமுடியுமா தம்பி?

**தம்பி:** உங்களால் அல்லாஹ்வின் அற்புதத்தை மறுக்கமுடியாது.

**உமர்:** இவ்வளவு எடுத்துச் சொல்லியும், மறுமடியும் நீ ஆரம்பத்திற்கே வருகிறாயே! இப்படிப்பட்ட அற்புதங்கள் அல்லாஹ்வின் பெயரை கெடுக்கிறதே தவிர அவருக்கு பெருமையைக் கொண்டு வராது.

[இப்படி இவர்கள் பேசிக்கொண்டு இருக்கும் போது, இவர்களின் தாய் உமரின் அறைக்குள்ளே வருகிறார்கள்.]

**அம்மா**: என்ன ஒரே சத்தமாக பேசிக்கொண்டு இருக்கிறாய்? யாரிடம் பேசுகிறாய்?

**உமர்:** அம்மா, ஸ்கைப்பில் நான் தம்பியோடு பேசிக்கொண்டு இருக்கிறேன்.

**அம்மா**: தம்பியா! இதோ நானும் பேசறேன். நீ எழுந்திரு.

[உமர் அடுத்த நாற்காலியில் உடகாருகிறார், அவரின் தாய் பேச ஆரம்பிக்கிறார்கள்]

**அம்மா**: ஹலோ… எப்படி இருக்கே நீ, சுகமாக இருக்கிறாயா?

**தம்பி**: அம்மா, நான் நன்றாக இருக்கிறேன், நீங்க எப்படி இருக்கீங்க.

**அம்மா**: கர்த்தரின் கிருபையால் சுகமாக இருக்கிறேன். நான் உன் நண்பனிடம் கொடுத்து அனுப்பிய தக்காளி ஊறுகாய் கிடைச்சுதா? உனக்கு ரொம்ப பிடிக்கும் என்பதற்காக ஸ்பெஷலா செஞ்ஜி அனுப்பினேன். வந்து சேர்ந்துச்சா?

**தம்பி**: அம்மா…. தக்காளி ஊறுகாய் பற்றி இப்போது தான் பேசனுமா? இதைப் பத்தி பேச உங்களுக்கு வேறு நேரமே கிடைக்கலையா? எல்லாம் வந்து சேர்ந்திச்சு போங்க.

**அம்மா**: ஏன் இப்படி கோபமா பேசறே? எனக்கு ஒன்றும் புரியலையே!

**உமர்:** அம்மா, உங்களுக்கு புரியாது. அது அவ்வளவு தான், தம்பிக்கு தக்காளி என்றுச் சொன்னா, இன்றிலிருந்து அலர்ஜி. நீங்க போங்க நான் சீக்கிரமாக பேசிட்டு வரேன்.

[அம்மா அறையை விட்டுச் செல்கிறார்கள்]

தம்பி, அல்லாஹ்வின் பெருமையை உயர்த்த "தக்காளி அற்புதம்" உனக்கு பயன்படாது. தக்காளிக்கு வெளியே ஏதாவது அற்புதம் அல்லாஹ் செய்து இருந்திருதால், அதைப் பற்றி எனக்குச் சொல்லு, நாம் பேசுவோம்.

**தம்பி:** ம்ம்ம்... இன்னும் அனேக அற்புதங்கள், விஞ்ஞான உண்மைகள் என்று அனேக விஷயங்கள் கொட்டுக்கிடக்குது. நாளைக்கு இதே நேரத்தில் நான் ஸ்கைப்பில் வந்து உங்களிடம் பேசறேன். இப்போது நான் தொழுகைக்குப் போகணும். நாளைக்கு சந்திப்போம்.

**உமர்:** தம்பி, தக்காளி சாப்பிடுவதை நிறுத்திவிடாதே, அது உடலுக்கு நல்லது. உன்னுடைய அடுத்த அற்புதத்தைக் காண நான் ஆவலோடு காத்திருப்பேன், நாளைக்கு சந்திப்போம்.

மூலம்: **http://isakoran.blogspot.in/2014/06/2014-1.html**

**உமரின் ரமளான் கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/ramalan2014part1.html

# 26. வானத்தில் வலம் வரும் அல்லாஹ்

**முன்னுரை:** 2014ம் ஆண்டின் ரமளான் மாத முதல் நாளில் "தக்காளியில் அல்லாஹ்வின் பெயர் காணப்படுகிறது, இது அல்லாஹ் செய்த அற்புதம்" என்றுச் சொல்லி, உமரின் தம்பி முன்வைத்த அற்புதமான கேள்விக்கு, உமர் பதில் அளித்துள்ளார். அதனை கீழ்கண்ட தொடுப்பில் படிக்கலாம்.

2014 ரமளான் பாகம் 1: **அல்லாஹ்வின் தற்கால அற்புதங்களும், குர்-ஆனின்அறிவியலும் - அழுகிப்போன தக்காளியில் தத்தளிக்கும் அல்லாஹ்**

அதன் பிறகு இன்று, உமரின் தம்பி "அல்லாஹ்வின் மேலதிக அற்புதங்கள்" என்றுச் சொல்லி, அனேக படங்களை உமருக்கு மெயிலில் அனுப்பியுள்ளார். இந்த படங்களில் அல்லாஹ்வின் அற்புதங்கள் காணப்படுகின்றனவா? உண்மையாகவே அல்லாஹ் தற்காலத்தில் இப்படிப்பட்ட அற்புதங்களைச் செய்கிறாரா? இவைகளை அறிய, கீழ்கண்ட பதிலை படியுங்கள். இவைகளை படிக்கும்போது, ஒரு கணம் நீங்கள் உங்களின் சிறுவயது அனுபவங்களுக்குச் சென்றுவிடுவீர்கள். எப்படி என்று கேட்கிறீர்களா? தொடர்ந்து படியுங்கள்.

---

அன்புள்ள தம்பிக்கு,

உன் மெயில் கிடைத்தது, அதில் நீ அனேக படங்களை எனக்கு அனுப்பியிருந்தாய். அவைகள் அனைத்தும் அல்லாஹ்வின் தற்கால அற்புதங்கள் என்றுச் சொல்லியிருந்தாய். இப்போது நீ அனுப்பிய அல்லாஹ்வின் அற்புதங்களில் ஒன்றைப் பற்றி சிறிது அலசுவோம்.

### 1) மேகத்தில் அல்லாஹ்:

நீ அனுப்பிய முதல் படம், மேகத்தில் "அல்லாஹ்" என்ற பெயர் வருகின்ற ஒரு படமாக இருக்கின்றது. இது அல்லாஹ்வின் அற்புதமல்லவா? என்று கேள்வி கேட்டு இருந்தாய்.



உன்னைப்போல இருக்கும் முஸ்லிம்கள் இப்படிப்பட்ட படங்களை மெயில் மூலமாக அனேகருக்கு சிந்திக்காமல் அனுப்பிக்கொண்டு இருக்கிறார்கள். இப்படிப்பட்ட அற்புதங்களை இறைவன் செய்வானா? என்று சிந்திப்பதில்லை. நான் இதனை அற்புதமாக கருதவேண்டும் என்று நீ விரும்புகிறாய். ஆனால், ஒரு சராசரி மனிதன் இப்படிப்பட்டவைகளை பார்க்கும் போது அவைகளை, வேடிக்கையாக பார்ப்பானே தவிர அற்புதமாக பார்க்கமாட்டான்.

### வானங்களில் காணப்படும் சில கற்பனை வடிவங்கள்:

பொதுவாக நீ வானத்தை பார்க்கும் போது அனேக உருவங்கள் தெரிவதை பார்க்கமுடியும். இது உன்னுடைய கற்பனையைப் பொறுத்தது. நீ என்ன பார்க்கவேண்டும் என்று விரும்புகிறாயோ அல்லது கற்பனை செய்கிறாயோ, அந்த வடிவங்கள் உனக்குத் தெரியும்.

நீ அனுப்பிய படத்தை பார்க்கும் போது, உனக்கு அரபி எழுத்துக்களில் "அல்லாஹ்" என்று தெரிந்தால், மற்றவர்களுக்கு அது போலவே தெரியாது. அதற்கு பதிலாக வேறு ஒரு உருவம் தெரியும். நீ அனுப்பிய படத்தையே நாம் எடுத்துக்கொண்டு கூர்ந்து கவனித்தால், கீழ்கண்ட படம் போல தெரிவதை காணமுடியும்.





பனிப்படர்ந்து காணப்படும் நாடுகளில் பனியில் சருக்கி விளையாடுவதற்கு பயன்படும் பலகையில் (Toboggan) ஒரு பையன் உட்கார்ந்து சருக்குவது போல காணப்படுகின்றது நீ அனுப்பிய "வானத்தில் அல்லாஹ்" படம். மேற்கண்ட இரண்டு படங்களையும் ஒப்பிட்டுப் பார், இது அற்புதமா அல்லது கற்பனையா? என்று உனக்கு விளங்கும். ஒருவேளை அந்த சருக்கும் சிறுவன் அல்லாஹ்வாக இருப்பானோ?

தம்பி நீ ஒன்று செய், மொட்டை மாடியில் சென்று ஒரு நார்காலியில் உட்கார்ந்துக்கொண்டு, அல்லது ஒரு பாயை விரித்து, மல்லாக்கு படுத்துக்கொண்டு, வானத்தையே பார்த்துக்கொண்டு இரு. காலையிலிருந்து மாலை வரை நீ இப்படி செய்தால், அல்லாஹ் மட்டுமல்ல, இன்னும் அனேக உருவங்களை நீ பார்க்கலாம். வானத்தில் உருவங்களைப் பார்க்கும் அனுபவம் என்பது அனைவருக்கும் உண்டு. இப்படிப்பட்ட ஒன்றை எடுத்துக்கொண்டு, இதனை அல்லாஹ் என்றுச் சொல்வது அல்லாஹ்விற்கு அவமானமாகும்.

### தில்லுமுல்லு செய்யும் முஸ்லிம்கள், மற்றும் தற்கால கிராபிக்ஸ்:

நமக்கு வானத்தில், மலைகளில் இயற்கையாக அனேக உருவங்கள் தெரிவது ஒருபக்கமிருந்தால், முஸ்லிம்களில் சில அறிவா(லி)ளிகள், கம்பியூட்டர் கிராபிக்ஸ்ஸை பயன்படுத்தி, இப்படி தில்லுமுல்லு செய்து "அல்லாஹ்வின் அற்புதங்களை" உருவாக்குகிறார்கள் என்பது மறுக்கமுடியாத இன்னொரு உண்மையாகும்.

**கிராபிக்ஸ் மூலமாக வானத்தில் எவைகளை வேண்டுமென்றாலும் காண்பிக்கமுடியும். கீழ்கண்ட இரண்டு படங்களைப் பார்:**






ஒருவேளை இந்த படங்கள் கிராபிக்ஸ் மூலமாக உருவாக்கப்பட்ட படங்கள் இல்லை என்றுச் சொன்னாலும், இவைகளுக்கும் இறைவனுக்கும் எந்த சம்மந்தமும் இல்லை.

மேற்கண்ட படங்களில், முதலாவது படத்தில் காதல் சின்னம் என்றுச் சொல்லக்கூடிய "இதயச் சின்னம்" காணப்படுகின்றது. உன்னுடைய இஸ்லாமிய அறிவின் படி, இந்த சின்னத்தை வானத்தில் காண்பித்து, அல்லாஹ் உலக மக்களுக்கு எவைகளை போதிக்கிறார் என்று உன்னால் சொல்லமுடியுமா?

இரண்டாவது படத்தில், ஒரு முயல் நம்மை பார்ப்பது போல இருக்கிறது. ஆக, அல்லாஹ் தான் வானத்தில் முயலின் உருவத்தில் காணப்பட்டான் என்று முஸ்லிம்கள் சொல்வார்களா?

அல்லாஹ்வின் அற்புதம் என்றுச் சொல்லி, உப்பு சப்பு இல்லாத விஷயங்களை எனக்கு அனுப்புவதை விட்டுவிட்டு, குர்-ஆனின் அறிவியல் என்ற தலைப்பிற்கு சம்மந்தப்பட்டு ஏதாவது விவரங்களை நீ அனுப்பமுடியுமா?

இணையத்தில் தேடிப்பார்த்து, இன்னும் இதோ அற்புதம் என்றுச் சொல்லி எனக்கு படங்களை அனுப்புவதை நிறுத்து, இதனால் ஒரு நன்மையும் இல்லை. இதனால் உன் நேரமும் என் நேரமும் வீணாகின்றது.

அடுத்த முறை உன்னுடைய மெயில் வரும் போது, அது குர்-ஆனின் விஞ்ஞானம் சம்மந்தப்பட்ட விஷயமாக இருந்தால் மிகவும் நன்றாக இருக்கும்.

இவ்வளவு சொல்லியும் நீ திருந்தாமல், இந்த தற்கால அல்லாஹ்வின் அற்புதங்கள் பற்றியே பேசிக்கொண்டு இருந்தால், இன்னும் சூடாக கேள்விகள் கேட்கவேண்டிவரும் என்பதை அன்புடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.

இப்படிக்கு

உன் அண்ணன்

உமர்

மூலம்: **http://isakoran.blogspot.in/2014/07/2014-2.html**

**உமரின் ரமளான் கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/ramalan2014part2.html

# 27. முஹம்மதுவின் கடைசி ஆசையை நிறைவேற்ற முடியாதபடி தடுத்த அல்லாஹ்

உமருக்கும் அவரது தம்பிக்கும் இடையே "2015ம் ஆண்டு ரமளான் மாதத்தில்" கடித உரையாடல்கள் நடைபெற்றுக்கொண்டு இருக்கின்றன. அவைகளை படிக்க **இங்கு** சொடுக்கவும்.

இதுவரை ஏழு கடிதங்கள் எழுதப்பட்டுள்ளன. இந்த எட்டாவது கடிதத்தில் உமரின் தம்பி முன்வைத்த வாதம் "முஹம்மதுவின் கடைசி ஆசை நிறைவேறாமல் போனதால் தான் இந்த குழப்பங்கள் எல்லாம் வந்தன" என்பதாகும். உண்மையாகவே இது மட்டும் தான் காரணமா? அல்லது அல்லாஹ் இதற்கு காரணமா? இக்கேள்விகளுக்கு இக்கடிதம் பதில் அளிக்கும்.

---

**முஹம்மதுவின் கடைசி ஆசையை நிறைவேற்ற முடியாதபடி தடுத்த அல்லாஹ்**

அன்புள்ள தம்பிக்கு,

உன் அண்ணன் உனக்கு இயேசுவின் பெயரில் சமாதானம் கூறி எழுதிக்கொள்வது. உனக்காக நாங்கள் அனுதினமும் ஜெபிக்கிறோம். நீ மனம் திறந்து உன் கேள்விகளை, சந்தேகங்களை எனக்கு எழுதுகின்றபடியால், நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். இது மட்டுமல்ல, என் மீது நீ வைக்கும் குற்றச்சாட்டுகளையும் நான் ஒரு ஆரோக்கியமான உரையாடலின் ஒரு அங்கம் என்றே கருதுகிறேன்.

**முஸ்லிமல்லாதவர்கள், இஸ்லாம் மீது குற்றச்சாட்டுகளை வைக்கும் போது, ஒவ்வொரு முஸ்லிமும் வெவ்வேறு வகையாக அதற்கு பதில்(அடி) கொடுக்கிறார்கள்:**

• சில முஸ்லிம்கள், கண்டும் காணதவர் போல இருந்துவிடுவதுண்டு.

• சில முஸ்லிம்கள், கெட்ட வார்த்தைகளால் திட்டுவிட்டு, வேறு ஒன்றையும் செய்ய திராணியில்லாதவர்களாக, திட்டியதே போதும், உள்ளத்திலிருந்த பாரமெல்லாம் இறங்கிவிட்டது என்றுச் சொல்லி திருப்தியாக இருந்துவிடுகிறார்கள்.

• சில முஸ்லிம்கள் அல்லாஹ்வின் சாபத்தைக் கூறுகிறார்கள், கெட்ட வார்த்தைகளை பயன்படுத்தாமல், நீ நாசமடைவாய், அல்லாஹ் உன்னை தண்டிப்பான், நீ நரகத்துக்குச் செல்வாய் என்றுச் சொல்லிவிட்டு, அமைதியாக ஜகா வாங்கிக் கொண்டு சென்றுவிடுவார்கள்.

• சில முஸ்லிம்கள், ஒரு படி மேலே சென்று விமர்சனம் செய்தவனின் குடும்ப நபர்களை முக்கியமாக பெண்களை படுப்பதற்கு அழைப்பார்கள். எதிரிகளாக பாவிப்பவர்களின் குடும்ப பெண்களை படுப்பதற்கு அழைக்கும் ஆசையை இவர்கள் உள்ளத்தில் போட்டவர்கள்/வளர்த்தவர்கள் யார் என்பதை எல்லாரும் ஆய்வு செய்யவேண்டும்.

• கடைசியாக, சில முஸ்லிம்கள் இஸ்லாம் மீது வைக்கப்படும் விமர்சனங்களை ஆய்வு செய்து, அனேக ஆதார நூல்களில் பதில்களைத் தேடிப்பார்த்து, உண்மை எதுவென்று கண்டுபிடிப்பார்கள். மேலும், இஸ்லாமிய

அறிஞர்களிடமும் இதர மேதாவிகளிடமும் கேள்விகள் கேட்டு, தங்கள் சந்தேகங்களை தீர்த்துக்கொண்டு, ஒரு ஆரோக்கியமான பதிலை தங்களால் முடிந்தவரை கொடுக்க முயற்சி எடுப்பார்கள். ஒரு வேளை இவர்களின் ஆய்வின் முடிவு, இஸ்லாமுக்கு எதிராக இருந்தால், தைரியமாக இஸ்லாமை விட்டு வெளியேறவும் தயங்கமாட்டார்கள்.

**தம்பி, நீ கடைசியாக சொன்ன வகையைச் சார்ந்தவன் என்று நான் நம்புகிறேன்.**

இப்போது உன் கடிதத்தில் நீ சுட்டிக்காட்டிய "முஹம்மதுவின் கடைசி ஆசை" பற்றிய விவரத்தையும், ஹதீஸையும் காண்போம்.

**முதலாவது நீ எழுதிய வரிகளை இங்கு பதிக்கிறேன்:**

"முஹம்மது தாம் மரிப்பதற்கு முன்பாக ஒரு எழுதுகோலையும், எழுதுவதற்கு பயன்படும் காகிதம் போன்ற ஒன்றையும் கேட்டார், அதில் அவர் சிலவற்றை எழுதவேண்டும் என்றும் விரும்பினார். அவர் தன் கடைசி ஆசையை எழுதியிருந்தால், இஸ்லாமிய சமுதாயம் குழப்பத்திற்குள்ளாக செல்லாது" என்றும் கூறினார். ஆனால், பல தடைகளினால் அது முடியாமல் போனது. ஆகையால் தான் ஆரம்ப கால முஸ்லிம்களிடையே சில சலசலப்புக்கள் காணப்பட்டது.

ஆனால், உமரண்ணா, நீங்கள் அனைத்திற்கும் இஸ்லாம் தான் காரணம் என்று குற்றம் சாட்டுகிறீர்கள், இது சரியான விமர்சனம் அல்ல. ஆரம்ப கால சஹாபாக்கள் எதை செய்தாலும், இஸ்லாமிய இறையியலை குற்றப்படுத்துவது ஏற்றுக்கொள்ளப்படாது.

சஹாபாக்களைப் போலவே இயேசுவிற்கு பிறகு, அவரின் சீடர்கள் மத்தியிலேயேயும் இப்படிப்பட்ட சலசலப்புக்களும், வாக்குவாதங்களும், பிரச்சனைகளும் காணப்பட்டது என்பதை நீங்கள் மறந்துவிடவேண்டும்.

தம்பி, உன்னுடைய மேற்கண்ட வாதத்தில் நியாயம் இல்லை. இறைவன் செய்கின்ற எதுவும் தவறிப்போகாது, அது முழுமையடையும். இதனை கீழ்கண்ட தலைப்புகளில் உனக்கு விளக்குகிறேன். இந்த கடிதத்தில், சஹாபாக்களும், முஹம்மதுவின் கடைசி ஆசையும் என்பதைப் பற்றிய விவரங்களை மட்டுமே ஆய்விற்கு எடுத்துக் கொள்கிறேன்.

இயேசுவின் சீடர்கள் பற்றி நீ எழுதியவைகள் பற்றி தனி தலைப்பிலே உனக்கு இன்னொரு கடிதத்தை நான் எழுதுவேன்.

1) முஹம்மதுவின் கடைசி ஆசை - புகாரி ஹதீஸ்

2) உமரின் கவனக்குறைவா? அல்லது உள்ளார்ந்த அர்த்தம் ஏதாவது உள்ளதா?

3) முஹம்மதுவின் கடைசி ஆசையை நிறைவேற்ற தவறிய அல்லாஹ்

4) முடிவுரை

---

## முஹம்மதுவின் கடைசி ஆசையை நிறைவேற்ற முடியாதபடி தடுத்த அல்லாஹ்

### 1) முஹம்மதுவின் கடைசி ஆசை - புகாரி ஹதீஸ்

தம்பி, உன் கடிதத்தில் "முஹம்மதுவின் கடைசி ஆசை பல தடைகளினால் நிறைவேறாமல் போனது" என்று சொல்லியுள்ளாய். ஆனால், உண்மையாக அன்று என்ன நடந்தது என்று ஆதாரத்தோடு சொல்லவில்லை. உனக்காக, இந்த விஷயத்தைப் பற்றி வரும் புகாரி ஹதீஸை இங்கு பதிக்கிறேன்.

புகாரி 7366. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்கு இறப்பு நெருங்கிவிட்டபோது, அவர்களின் இல்லத்தில் உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அவர்கள் உள்பட பலர் இருந்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் 'வாருங்கள்; உங்களுக்கு நான் ஒரு மடலை எழுதித் தருகிறேன். அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழிதவறமாட்டீர்கள்' என்றார்கள். உமர்(ரலி) அவர்களை (நோயின்) வேதனை மிகைத்துவிட்டது. (எழுதித் தருமாறு அவர்களை தொந்தரவு செய்யாதீர்கள்.) உங்களிடம் தான் குர்ஆன் இருக்கிறதே! நமக்கு (அந்த) இறைவேதமே போதும்' என்றார்கள். வீட்டிலிருந்தவர்கள் கருத்து வேறுபட்டு சச்சரவிட்டுக் கொண்டார்கள். அவர்களில் சிலர், '(நபியவர்கள் கேட்ட எழுது பொருளை அவர்களிடம்) கொடுங்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உங்களுக்கு ஒரு மடலை எழுதித் தருவார்கள். அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழிதவறமாட்டீர்கள்' என்றார்கள். வேறு சிலர் உமர்(ரலி) அவர்கள் சொன்னதையே சொன்னார்கள். நபி(ஸல்) அவர்களுக்கு அருகே மக்களின் கூச்சலும் குழப்பமும் சச்சரவும் மிகுந்தபோது நபி(ஸல்) அவர்கள், 'என்னைவிட்டு எழுந்து செல்லுங்கள்' என்றார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் (இந்த ஹதீஸை அறிவித்துவிட்டு), 'மக்கள் கருத்து வேறுபட்டு கூச்சலிட்டுக் கொண்டதால் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் அவர்கள் எழுதித்தர நினைத்த மடலுக்கும் இடையே குறுக்கீடு ஏற்பட்டதுதான் சோதனையிலும் பெரும் சோதனையாகும்' என்று கூறுவார்கள்.

**இந்த நிகழ்ச்சியில் நடந்தவற்றை சுருக்கமாக நான் உனக்கு தருகிறேன்.**

அ) முஹம்மது மரண படுக்கையில் இருக்கிறார்

ஆ) உமர் உட்பட சிலர் அங்கு இருக்கிறார்கள்.

இ) இந்த கூட்டத்தைக் கண்டு, "ஒரு மடலை நான் எழுதித் தருகிறேன், இதன் மூலமாக நீங்கள் வழிதவறிப் போகமாட்டீர்கள் என்று" முஹம்மது சொல்கிறார்.

ஈ) எங்களுக்கு குர்-ஆனே போதும், இப்போது எதுவும் எழுதத்தேவையில்லை என்று உமர் மறுக்கிறார்.

உ) ஒரு சிலர் முஹம்மது கேட்டதை கொடுப்போம், அவர் முக்கியமான ஒன்றை எழுதித்தருவதாகச் சொல்கிறார் எனவே தடை செய்யவேண்டாமென்றுச் சொல்கிறார்கள்.

ஊ) வேறு சிலர், உமரின் வார்த்தைகளுக்கு இணங்க, கொடுக்க மறுக்கிறார்கள்.

எ) கூச்சல் அதிகமாவதைக் கண்ட முஹம்மது அனைவரையும் வெளியே போகும் படி கட்டளையிடுகிறார்.

ஏ) உமர் எண்ணியதுபோலவே நடந்தது.

**2) உமரின் கவனக்குறைவா? அல்லது உள்ளார்ந்த அர்த்தம் ஏதாவது உள்ளதா?**

என் அருமை தம்பி, புகாரி ஹதீஸை படித்தாயா?

23 ஆண்டு ஊழியம், ஆறு ஆயிரத்துக்கும் அதிகமான குர்-ஆன் வசனங்கள்(6236), பல வழிப்பறி கொள்ளைகள், பல போர்கள், பல கொலைகள், பல பெண்களின் கற்பு பாலைவன சூட்டில் சூரையாடப்பட்டது அதாவது, போரில் பிடிபட்ட பெண்கள் கற்பழிக்கப்பட்டார்கள், அடிமைகளாக விற்கப்பட்டார்கள். எத்தனை முறை ஜிப்ராயீல் தூதன் இறங்கி வந்து வசனத்தை இறக்கினானோ, எண்ணிக்கை முஹம்மதுவிற்குத் தான் தெரியும். மேற்கண்ட அனைத்து காரியங்களுக்கும் வெளிப்பாடுகளைப் பெற்ற முஹம்மது இன்று மரணப் படுக்கையில் கிடக்கிறார்.

இவர் கேட்டுக்கொண்டதெல்லாம் ஒரு பேனாவையும், ஒரு பேப்பரையும் தான். அதுவும் அவருக்கு கிடைக்கவில்லை. நான் உங்களுக்கு பயன்படும் ஒன்றை எழுதித் தருகிறேன் என்றார். நீங்கள் எழுதுவது எங்களுக்கு தேவையில்ல என்று மறுத்துவிட்டார். கூச்சலும் குழப்பமும் தொடங்கிவிட்டது. (முஹம்மதுவிற்கு எழுதவோ, படிக்கவோ தெரியாது என்று தானே முஸ்லிம்கள் இன்றுவரை சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள், இங்கு எப்படி இவர் பேனாவையும், பேப்பரையும் கேட்கிறார்…? இதைப் பற்றி மற்றொரு நேரத்தில் சிந்திப்போம்).

**உமர் ஏன் தடை செய்யவேண்டும்? உமர் அறியாமையில் இதனைச் செய்தாரா? அல்லது இதற்கு உள்ளார்ந்த அர்த்தம் ஏதாவது இருக்கின்றதா?**

**சஹாபாக்களின் மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசைகளை தீர்த்துவைத்த முஹம்மதுவின் கடைசி (பெண்) ஆசை அலட்சியம் செய்யப்பட்டுவிட்டது. பாவம் முஹம்மது, ஒரு கைதிக்கு கூட உன் கடைசி ஆசை என்னவென்று கேட்டு நிறைவேற்ற முயற்சி எடுப்பார்கள், ஆனால் இவருக்கு வந்த நிலை வேறு எவருக்கும் வரக்கூடாது.**

உங்கள் மூலமாக கொடுக்கப்பட்ட குர்-ஆன் எங்களுக்கு உண்டு, அதுவே போதும் என்று உமர் கூறினார். குர்-ஆன் போதுமென்று முஹம்மதுவிற்குத் தெரியாதா? உமர் முஹம்மதுவிற்கு புதிதாக ஏதாவது கற்றுக்கொடுக்க முடியுமா என்ன?

ஒரு வேளை, முஹம்மதுவிற்கு அடுத்தபடியாக, யார் தலைவராக வரவேண்டும் என்று முஹம்மது எழுதிக் கொடுத்துவிட்டுச் சென்றுவிட்டால், என்ன செய்வது? மதினாவின் முஸ்லிம்களாகிய அன்சாரிகளுக்கு அந்த நாற்காலி சென்றுவிட்டால் என்ன செய்யமுடியும்? முஹம்மது ஒரு முறை எழுதிவிட்டால், அதனை யாரும் மாற்றமுடியாது அல்லவா? இந்த சூழல் வருவதற்கான வாய்ப்பை ஏன் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும்? தானாக வாய்ப்பு வந்தாலும் அதனை எப்படியாவது கெடுத்துவிடலாம் என்ற எண்ணம் உமரின் உள்ளத்தில் தோன்றியதோ?

அண்ணே! ஆட்சியை பிடிக்கவேண்டுமென்கிற இப்படிப்பட்ட கீழ்தரமான கேடுகெட்ட எண்ணங்கள் சஹாபாக்களுக்கு வராது என்றுச் சொல்லத்தோன்றுகிறதா தம்பி?

நீ கட்டாயம் இந்த ஹதீஸை படித்தே ஆகவேண்டும்.

**புகாரி 4447. முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அறிவித்தார்**

அப்துல்லாஹ் இப்னு கஅப் இப்னு மாலிக் அல் அன்சாரி(ரலி) - (இவருடைய தந்தை) கஅப்பின் மாலிக்(ரலி) (தபூக் போரில் கலந்துகொள்ளத் தவறியதற்காக) பாவமன்னிப்பு வழங்கப்பட்டவர்களில் ஒருவராயிருந்தார். அன்னார் எனக்கு அறிவித்தார்கள்:

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) எனக்குத் தெரிவித்தார்கள்.

இறைத்தூதர்(ஸல்) எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது அவர்களிடமிருந்து அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) (அவர்களை நலம் விசாரித்துவிட்டு) வெளியேறினார்கள். உடனே மக்கள், 'அபுல் ஹசனே! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எப்படியுள்ளார்கள்?' என்று (கவலையுடன்) விசாரிக்க, அதற்கு அவர்கள், 'அல்லாஹ்வின் அருளால் நலமடைந்துவிட்டார்கள்" என்று கூறினார்கள். உடனே அப்பாஸ் இப்னு அப்தில் முத்தலிப்(ரலி), அலீ(ரலி) அவர்களின் கையைப் பிடித்துக்கொண்டு அவர்களிடம், 'அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் மூன்று நாள்களுக்குப் பிறகு, (பிறரின்) அதிகாரத்திற்குப் பணிந்தவராக ஆம்விடப்போகிறீர்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் விரைவில் தம் இந்த நோயின் காரணத்தால் இறந்துவிடப் போகிறார்கள் என்றே கருதுகிறேன். மரணத்தின்போது அப்துல் முத்தலிபுடைய மக்களின் முகங்களை(ப் பார்த்து மரணக் களையை) அடையாளம் கண்டுகொள்பவன் நான். எனவே, எங்களை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அழைத்துச் செல்லுங்கள். 'இந்த ஆட்சியதிகாரம் (அவர்கள் இறந்த பிறகு) யாரிடமிருக்கும்?' என்று கேட்டுக் கொள்வோம். நம்மிடம்தான் இருக்கும் என்றால் அதை நாம் அறிந்துகொள்வோம். அது பிறரிடம் இருக்கும் என்றால் அதையும் நாம் அறிந்துகொள்வோம். (தமக்குப் பின் யார் பிரதிநிதி என்பதை அறிவித்து) அவர்கள் நமக்கு இறுதி உபதேசம் செய்வார்கள்" என்று கூறினார்கள். அதற்கு அலீ(ரலி), 'நமக்கு அதைத் தர மறுத்துவிட்டால் அவர்களுக்குப் பிறகு மக்கள் நமக்கு (ஒருபோதும்) அதைத் தரமாட்டார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அதை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்கமாட்டேன்" என்று பதிலளித்தார்கள். Book :64

இறைத்தூதரிடம் ஒரு முக்கியமான கேள்வியை கேட்டுவிடுவோம் என்று சிலர் சொல்லும் போது, அலி அவர்கள் மறுத்துவிட்டார்கள். அவருக்கு அடுத்தபடியாக யார் நாற்காலியை பிடிப்பது என்பதைப் பற்றி கேட்பது இந்த சூழலில் மிகவும் முக்கியமான விஷயமாக உள்ளது. எனவே கேட்போம் என்றுச் சொன்னபோது, இதனை அலி மறுத்துவிட்டார். முஹம்மது மீது அலி அவர்களுக்கு நம்பிக்கையில்லை, ஒருவேளை ஆட்சி அதிகாரம் அன்சாரிகளுக்கு (மதினா முஸ்லிம்களுக்கு) என்று முஹம்மது சொல்லிவிட்டால், அதன் பிறகு தனக்கு அதிகாரம் வராது என்பதால், அலி மறுத்துவிட்டார்.

முஹம்மது சொன்னது கூட வஹி தான் என்று ஓயாமல் சொல்லிக்கொண்டும், நம்பிக்கொண்டும் இருக்கிறார்கள் முஸ்லிம்கள். அப்படிப்பட்ட வஹி மூலமாக வரும் செய்தி எங்களுக்கு வேண்டாம் என்று உதறி தள்ளிவிட்டார், ஒரு சஹாபா அலி, இவர் முஹம்மதுவின் அன்பான மகளின் கணவராவார். அல்லாஹ் எடுக்கும் முடிவு, தங்களுக்கு சாதகமாக இல்லாமல் போய்விட்டால் என்ன செய்வது? எனவே, வாய்ப்பையை உருவாக்கக்கூடாது என்றுச் சொல்லி, அல்லாஹ்வையே ஜெயித்துவிட்டார் அலி.

அலி அவர்களுக்கு ஆட்சி அதிகாரம் செல்லக்கூடாது என்று ஆயிஷா அவர்கள் விரும்பியதாக, இன்னொரு ஹதீஸும் சொல்கிறது. முஹம்மது தனக்கு அடுத்து ஆட்சியை நடத்த அலியை தெரிவு செய்தாராமே என்று கேட்டதற்கு, அப்படியெல்லாம் ஒன்றும் நடக்கவில்லை என்று ஆயிஷா அவர்கள் மறுத்தார்கள். இதனையும் நாம் புகாரி ஹதீஸில் காண்லாம்.

புகாரி 4459. அஸ்வத் இப்னு யஸீத்(ரஹ்) அறிவித்தார்

"நபி(ஸல்) அவர்கள் அலீ(ரலி) அவர்களிடம் (தமக்குப் பின் ஆட்சியாளராக இருக்கும்படி) இறுதிவிருப்பம் (வஸிய்யத்) தெரிவித்துவிட்டார்களாமே" என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் கூறப்பட்டது. அதற்கவர்கள், 'இதைச் சொன்னவர் யார்?' என்ற கேட்டுவிட்டு, '(நபி(ஸல்) அவர்களின் இறுதி வேளையில்) நான் அவர்களை என் நெஞ்சோடு அணைத்துக்கொண்டிருந்தேன். அப்போது அவர்கள் (எச்சில் துப்புவதற்காகப்) பாத்திரம் கொண்டு வரும்படி கூறிவிட்டு அப்படியே ஒரு பக்கம் சரிந்து இறந்துபோய்விட்டார்கள். (அவர்கள் இறந்ததைக் கூட) நான் உணரவில்லை. (நடந்தது இவ்வாறிருக்க) அலீ அவர்களுக்கு (ஆட்சிப் பொறுப்பை) எப்படி அவர்கள் சாசனம் செய்திருப்பார்கள்?' என்று கேட்டார்கள். Book :64

**சஹாபாக்கள் - பொறுக்கி எடுத்த இஸ்லாமிய முத்துக்கள்:**

அ) அலி அவர்கள் நல்ல வாய்ப்பை உருவாக்க மறுத்துவிட்டார்.

ஆ) உமர் அவர்கள், முஹம்மதுவினால் உண்டான வாய்ப்பையே தட்டிக் கழித்துவிட்டார்.

வாழ்க இஸ்லாம், வாழ்க இஸ்லாமிய ஆரம்ப கால முஸ்லிம்கள். பாவம் முஹம்மது, அல்லாஹ்வே தனக்கு எதிராக சூழ்ச்சி செய்யும் போது, இவரால் என்ன செய்யமுடியும்? அல்லாஹ் சூழ்ச்சி செய்வதில் வல்லவராமே!

"அல்லாஹ்வா! சூழ்ச்சி செய்தான்! இல்லை இல்லை, சஹா பாக்கள் செய்த குழப்பத்தினாலும், ஆட்சி அதிகாரத்தின் மீது அவர்கள் கொண்டிருந்த அசையினாலும் இப்படி எங்கள் இறைத்தூதருடைய கடைசி ஆசை நிறைவேறவில்லை" என்று தம்பி நீ சொல்லுவாய். ஆனால், இது தவறு, உனக்கு இஸ்லாம் தெரியாது, குர்-ஆன் தெரியாது, அல்லாஹ்வைத் தெரியாது. இவைகள் எல்லாம், அல்லாஹ்வின் அனுமதிக்கு உட்பட்டுத் தான் நடந்தது. புரியவில்லையா! அடுத்த தலைப்பில் தரப்படும் குர்-ஆன் வசனங்களைப் பார். உண்மை புரியும்.

## 3) முஹம்மதுவின் கடைசி ஆசையை நிறைவேற்ற தவறிய அல்லாஹ்

மேலோட்டமாக, மேற்கண்ட ஹதீஸ்களை பார்த்தால், உமரின் செயலினால் தான் முஹம்மதுவின் கடைசி ஆசை நிறைவேறாமல் போய்விட்டது என்று சொல்லத்தோன்றும். ஆனால் உண்மையில், அல்லாஹ் நாடவில்லை, அதனால், முஹம்மதுவின் ஆசை நிறைவேறவில்லை என்பதை உணர்ந்துக் கொள்ளலாம்.

அ) உச்சு சப்பு இல்லாத அற்பமான விஷயங்களுக்கு அல்லாஹ் வசனங்களை இறக்குவார்.

ஆ) முஹம்மதுவின் ஆசைகளை பூர்த்திசெய்ய அல்லாஹ்விடமிருந்து ஈமெயில் சீக்கிரமாக வரும்.

இ) வளர்ப்பு மகனின் மனைவியை எடுத்து முஹம்மதுவிற்கு கொடுப்பதற்கு அல்லாஹ்வின் வஹி இறங்கிவரும்.

ஆனால், 23 ஆண்டுகள் உழைத்த உழைப்பின் கனி கனிந்துவரும் நேரத்தில், சஹாபாக்கள் செய்யப்போக்கும் கூச்சல் குழப்பம், அதிகார துர்பியரோகம், கொலைகள், அவமானங்கள் போன்றவைகள் நடக்கப்போகின்ற நேரத்தில் "அந்த சமுதாயத்துக்கு தேவையான வஹி அல்லாஹ்விடமிருந்து வராது". ஒரு வேளை வந்திருந்தாலும், அதனை உமர் போன்ற ஒரு மனிதரால் தடை செய்யமுடியும் என்றுச் சொல்லத்தோன்றுகிறது.

அடுத்த தலைவர் யார் வரவேண்டும் என்ற ஒரு தெளிவான வசனம் குர்-ஆனில் இல்லை, ஹதீஸில் இல்லை, சாவதற்கு முன்பாக யாரோ ஒருவரை விரல் நீட்டி காட்டிவிட்டுச் செல்லலாம் என்று விரும்பினாலும், அல்லாஹ் நாடவில்லை.

**குறைந்தபட்சம் ஒரு காகிதத்தில் எழுதி கொடுக்கலாம் என்று விரும்பினாலும், இஸ்லாமிய உம்மா மக்கள் சும்மாவே சண்டை போட்டுக்கொள்கிறார்கள்.**

ஒலி வடியில் தான் எங்கள் குர்-ஆன் பாதுகாக்கப்பட்டு இருக்கிறது என்றுச் சொல்கின்ற முஸ்லிம்கள், ஏன் முஹம்மது ஒலிவடியில் தன் கடைசி ஆசையை சொல்லிவிட்டுச் சென்று இருக்கக்கூடாது என்று சிந்திக்கவேண்டும். கடைசி ஆசையைச் சொல்ல ஏன் கடைசி வரைக்கும் முஹம்மது காத்திருக்கும் படி அல்லாஹ் செய்தார்? ஒரு வாரம் அல்லது மாதத்துக்கு முன்பாகவே சொல்லிவிட்டுச் சென்று இருக்கலாம் அல்லவா? தம்பி, நீ இவைகளை ஆராய்ந்துப் பார்.

ஒட்டு மொத்த குற்றமும் அல்லாஹ்வுடையது தம்பி. உமரும் அலியும், ஆயிஷாவும் இதர சஹாபாக்களும் வெறும் நடிகர்கள் தான், அவர்களை நடிக்க வைப்பவன் யார் - அல்லாஹ் தான்.

**தம்பி, இதுவரை முன்வைத்த விவரங்களுக்கு ஆமீன் என்றுச் சொல்லும் குர்-ஆன் வசனங்கள்:**

**அல்லாஹ்வின் சித்தமில்லாமல், எதுவும் உலகில் சிந்தாது:**

குர்-ஆன் 9:51. "ஒருபோதும் அல்லாஹ் விதித்ததைத் தவிர (வேறு ஒன்றும்) எங்களை அணுகாது; அவன் தான் எங்களுடைய பாதுகாவலன்" என்று (நபியே!) நீர் கூறும்; முஃமின்கள் அல்லாஹ்வின் மீதே பூரண நம்பிக்கை வைப்பார்களாக!

**முஹம்மதுவின் கடைசி ஆசை, ஆசையாகவே நின்றுவிடும் என்று அல்லாஹ்வின் ஏட்டில் அல்லாஹ்வே முன்குறித்துள்ளான்:**

குர்-ஆன் 57:22. பூமியிலோ, அல்லது உங்களிலோ சம்பவிக்கிற எந்தச் சம்பவமும் - அதனை நாம் உண்டாக்குவதற்கு முன்னரே (லவ்ஹுல் மஹ்ஃபூள்) ஏட்டில் இல்லாமலில்லை; நிச்சயமாக அது அல்லாஹ்வுக்கு மிக எளிதானதேயாகும்.

குர்-ஆன் 57:23. உங்களை விட்டுத் தவறிப்போன ஒன்றின் மீது நீங்கள் துக்கப்படாமல் இருக்கவும், அவன் உங்களுக்கு அளித்தவற்றின் மீது நீங்கள் (அதிகம்) மகிழாதிருக்கவும் (இதனை உங்களுக்கு அல்லாஹ் அறிவிக்கிறான்); கர்வமுடையவர்கள், தற்பெருமை உடையவர்கள் எவரையும் அல்லாஹ் நேசிப்பதில்லை.

**நன்றும் தீதும் பிறர் தரவாரா! – அல்லாஹ்வே கொடுப்பார் (தன் நபி விஷயத்திலும்):**

குர்-ஆன் 6:17. "(நபியே!) அல்லாஹ் உமக்கு ஏதாவதொரு துன்பத்தை ஏற்படுத்திவிட்டால் அவனைத் தவிர (வேறு யாரும்) அதை நீக்க முடியாது. இன்னும் அவன் ஒரு நன்மையை உண்டாக்கிவிட்டால், (அதை எவரும் தடுக்க முடியாது.) அவன் எல்லாப் பொருட்கள் மீதும் பேராற்றலுடையவனாக இருக்கின்றான்.

குர்-ஆன் 6:18. அவனே தன் அடியார்களை அடக்கியாள்பவன், இன்னும் அவனே பூரண ஞானமுள்ளவன்; (யாவற்றையும்) நன்கறிந்தவன்.

குர்-ஆன் 76:30. எனினும், அல்லாஹ் நாடினாலன்றி, நீங்கள் நாட மாட்டீர்கள்; நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தவன், ஞானம் மிக்கவன்.

### 4) முடிவுரை

எனக்கன்பான தம்பியே, உனக்காக எவ்வளவு நேரத்தை ஒதுக்கி எழுதுகிறேன் என்று பார்த்தாயா? என் எழுத்துக்களால், ஒரே ஒரு ஆத்துமா பரலோகம் சென்றால், தூதர்கள் முன்பு மிகுந்த சந்தோஷம் அதனால் உண்டானால்,அதுவே எனக்கு போதும். அந்த ஆத்துமா என் தம்பியாக ஏன் இருக்கக்கூடாது?

முஹம்மதுவிற்கு அடுத்து, சஹாபாக்கள் அனாதைகளாக ஆக்கப்பட்டார்கள். வஹி இல்லா அனாதைகள், வழி தெரியாமல் தவிக்கும் பிள்ளைகள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு வழியில் சென்றார்கள். இவர்களை வழிநடத்த ஜிப்ராயீல் வரவில்லை, வஹி வரவில்லை, இவர்களை சரியான வழியில் நடத்த குர்-ஆனில் தெளிவான வசனங்கள் இல்லை, அவ்வளவு ஏன், இவர்கள் மத்தியிலே ஒரு சகோதர அன்பு இல்லை.

குர்-ஆனின் இறையியல், இவர்களை மாற்றவில்லை, இவர்களை மற்ற போதுமானதாகவும் இல்லை. குர்-ஆன் வசனங்களுக்கு இவர்களை மாற்ற சக்தி இல்லை. தம்பி, இந்த வரிகளை நான் எழுதிக்கொண்டு இருக்கும் போதே, தாக்குதல்கள் தொடர்ந்து நடந்துக்கொண்டே இருக்கின்றன.

• குவைத் ஷியா மசூதியில் நடந்த தற்கொலைப்படை தாக்குதலில் 25 பேர் பலியாகினர்.

• துனிசியாவில் நடந்த துப்பாக்கிச்சூட்டில் 27 பேர் உயிரிழந்தனர். (மூலம்)

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்.

இப்படிக்கு

உன் அண்ணன்

உமர்

தேதி: 27 ஜூன் 2015

---

**உமரின் ரமளான் கட்டுரைகள்**

**உமரின் இதர கட்டுரைகள்/மறுப்புக்கள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/ramalan2015day8.html

# 28. இயேசுவின் பிறப்பு விஷயத்தில் அல்லாஹ்வை நிர்பந்தித்தது யார்

[கிறிஸ்துமஸ் 2013: பாகம் 1ஐ, பாகம் 2ஐ சொடுக்கி படிக்கவும்]

[உமரும் அவரது தம்பி அப்துல்லாஹ்வும் ஸ்கைப்பில் (Skype) பேச மறுபடியும் உட்கார்ந்தார்கள், உரையாடல் தொடர்கிறது]

**அப்துல்லாஹ்:** அண்ணே! எப்படி இருக்கீங்க

**உமர்**: கர்த்தரின் கிருபையால் நான் நலமாக உள்ளேன், நீ எப்படி இருக்கிறாய்?

**அப்துல்லாஹ்:** அல்லாஹ்வின் அருளால் நலமாக இருக்கிறேன். கடந்த முறை நாம் பேசும் போது, மர்யம் அவர்களுக்கு அல்லாஹ் செய்த அற்புதத்தை நீங்கள் விமர்சித்தீர்கள். ஒரு சரியான காரணம் இல்லாமல் அல்லாஹ் அற்புதம் செய்தார் என்று குற்றம் சாட்டினீர்கள். இப்போது நான் ஒரு கேள்வியை உங்களிடம் கேட்கிறேன், அதற்கு பதில் சொல்லுங்கள்.

**உமர்**: சரி தம்பி, உன் கேள்வியை கேள்.

**அப்துல்லாஹ்**: இயேசு அற்புதமாக பிறந்தவர், தந்தையில்லாமல் பிறந்தவர் என்று பைபிள் சொல்கிறது அல்லவா?

**உமர்**: குர்ஆன் கூட இப்படித்தானே சொல்கிறது

**அப்துல்லாஹ்**: இப்போது என் கேள்வி என்னவென்றால், ஏன் பைபிளின் தேவன் இயேசுவை அனுப்பும் போது, அற்புதம் செய்து அனுப்பினார்? இயற்கையான முறையில் ஒரு தம்பதிகள் மூலமாக அனைவரும் பிறப்பது போல பிறக்கச்செய்து இருக்கலாம் அல்லவா? ஏன் கணவர் இல்லாமல் ஒரு கன்னியின் மூலமாக இயேசுவை பிறக்கச் செய்யவேண்டும்?

அல்லாஹ் மர்யம் அவர்களுக்குச் செய்த அற்புதம் பற்றி எந்த கேள்வியை நீங்கள் கேட்டீர்களோ, அதே கேள்வி இப்போது உங்களுக்கு வருகிறது, இதற்கு பதில் சொல்லுங்கள். பைபிளின் தேவன் எந்த ஒரு சரியான காரணமும் இல்லாமல், ஏன் அற்புதமான முறையில் மர்யம் கருத்தரிக்கச் செய்து இயேசுவை இவ்வுலகில் அனுப்பினார்?

**உமர்**: தம்பி, நீ உன்னை மித மிஞ்சிய அறிவாளி என்று நினைத்துக்கொள்கிறாய். உண்மையில் இந்த கேள்வியை கேட்கவேண்டியவர்கள் கிறிஸ்தவர்கள் ஆவார்கள். நான் உன்னிடம் கேட்கவேண்டும் என்று நினைத்திருந்த கேள்வியை நீயே கேட்கிறாய்.

**அப்துல்லாஹ்**: நீங்கள் தலைப்பை மாற்றி பேசாதீங்க. என் கேள்விக்கு பதில் சொல்லுங்க?

**உமர்**: இயேசு இவ்வுலகில் வரும் போது, ஏன் ஒரு தம்பதிகளுக்கு இயற்கையான முறையில் பிறக்காமல், ஒரு கன்னிகைக்கு அற்புதமாக பிறந்தார் என்பதற்கு எங்களிடம் பதில் உண்டு. ஆனால், உங்கள் இஸ்லாமில்

அதற்கு பதில் உண்டா? இந்த ஒரு கேள்விக்கு தரப்படும் பதில் தான் இஸ்லாமுக்கும் கிறிஸ்தவத்திற்கும் இடையே இருக்கும் மிகப்பெரிய பிளவு ஆகும்.

இயேசு வெறும் ஒரு தீர்க்கதரிசியாக மட்டுமே இருந்திருந்தால், தேவன் அவரை இயற்கையான முறையில் பிறக்கவைத்திருப்பார். ஆனால், அவர் தீர்க்கதரிசிகளைக் காட்டிலும் மேலானவர் என்பதால் அவர் அற்புதமாக பிறந்தார். ஒரு ஆணின் துணையில்லாமல் மரியாள் கர்ப்பம் தரிக்கச் செய்து, தேவன் இயேசுவை அனுப்பினார்.

ஆதியாகமம் 3:15ல் தேவன், இயேசுவின் எப்படி பிறப்பார் என்பதை தெளிவாக கூறினார். ஒரு ஸ்திரியின் வித்தின் மூலமாக பிறக்கப்போகின்றவர் சாத்தானை ஜெயிப்பார் என்று கூறினார்.

ஆதியாகமம் 3:15 உனக்கும் ஸ்திரீக்கும், உன் வித்துக்கும் அவள் வித்துக்கும் பகை உண்டாக்குவேன்; அவர் உன் தலையை நசுக்குவார், நீ அவர் குதிங்காலை நசுக்குவாய் என்றார்.

இயேசு ஆதியிலிருந்து இருந்தபடியினாலே, அவர் கணவன் மனைவி உறவின் மூலமாக பிறக்கவில்லை. இன்னும் அனேக வசனங்களை நான் சொல்லமுடியும். ஆனால், இப்போது கேள்வி என்னவென்றால், "அல்லாஹ் ஏன் இயேசுவை அற்புதமான முறையில் பிறக்கச்செய்யவேண்டும்?" என்பதாகும். [மற்றவர்களைப் பார்த்து காப்பி அடித்தால், இப்படித் தான் முழிக்கவேண்டி வரும்]

**அப்துல்லாஹ்**: அது அல்லாஹ்வின் விருப்பம். அவரை கேள்வி கேட்க யாராலும் முடியாது.

**உமர்**: இறைவனை கேள்வி கேட்கமுடியாது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் காரணம் இல்லாமல் ஏன் இயேசுவை ஒரு கன்னிப்பெண் கர்ப்பம் தரிக்கச் செய்து அதன் மூலமாக பிறக்கச் செய்யவேண்டும்? என்பது தான் கேள்வி

**அப்துல்லாஹ்**: நான் தான் சொன்னேனே, அது அவரது விருப்பம் என்று?

**உமர்**: தம்பி, சரியாக புரிந்துக்கொள். இறைவன் செய்யும் அனைத்தையும் பற்றி நாம் கேள்வி கேட்கமுடியாது. இதனை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால், ஏன் இறைவன் இப்படி செய்யவேண்டும் என்ற கேள்வியை நாம் கேட்கலாம் இல்லையா? நாம் சிந்திக்கலாம் அல்லவா?

இறைவன் நம்மைப்போல ஞானமில்லாதவர் அல்ல, அவர் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் ஒரு காரணம் இருக்கும்.

**அப்துல்லாஹ்**: இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? ஆதாமை எப்படி படைத்தார்? தாய் இல்லாமல் படைத்தார் அல்லவா? அது போல இயேசுவை தந்தையில்லாமல் பிறக்கச் செய்தார் அவ்வளவு தான். இருவரையும் தம் வார்த்தையினால் பிறப்பித்தார் அல்லாஹ்

**உமர்**: இப்போது தான் நீ என் வழிக்கு கொஞ்சம் கொஞ்சமாக வருகிறாய். ஆதாம் தாய் இல்லாமல் பிறந்தார் என்றுச் சொல்கிறாய். இதற்கு காரணம் என்ன? ஆதாம் தான் முதல் மனிதன், எனவே இறைவனுக்கு வேறு வழியே இல்லை, தாய் இல்லாமல் தான் ஆதாமை இறைவன் உருவாக்கமுடியும்.

ஆனால், ஆதாமைத் தவிர உலகில் வேறு எந்த மனிதனாக இருந்தாலும் சரி, அவன் ஆண் பெண் உறவு மூலமாகத்தான் பிறக்கவேண்டும். இது தான் இயற்கை நியதி, மனித இனம் பெருகுவதற்கு இது தான் இறைவன் உருவாக்கிய திட்டம்.

ஆனால், இயேசுவின் பிறப்பு விஷயத்தில் மட்டும் ஏன் இறைவன் தான் உருவாக்கிய இயற்கை திட்டத்தை புறக்கணித்துவிட்டு வித்தியாசமாக செயல்படவேண்டும்?

உன் அல்லாஹ்விற்கு தன் நபியை அனுப்ப கி.பி. முதல் நூற்றாண்டில் "மர்யம்" என்ற ஒரு பெண் கிடைத்த போது, ஏன் அவருக்கு ஒரு ஆண் கிடைக்கவில்லை? மரியமை யாரும் திருமணம் செய்துக்கொள்ளமாட்டார்கள் என்று சொல்லிவிட்டார்களா?

இயேசுவை ஒரு விசேஷித்த முறையில் அனுப்ப அல்லாஹ்வை நிர்பந்தித்தது யார்?

ஒரு சாதாரண நபியை அனுப்ப, இயற்கை விதியை ஏன் அல்லாஹ் மீறினார்?

அப்துல்லாஹ்: இதெல்லாம் ஒரு கேள்வியா?

உமர்: ஆமாம், இது நல்ல கேள்வி தான். அல்லாஹ் எது செய்தாலும் சும்மா செய்துவிடுவாரா? ஏதோ எடுத்தோம் கவிழ்த்தோம் என்பது போல, ஞானமில்லாமல் அல்லாஹ் செயல்படுவாரா? பல கோடி மக்களை இயற்கையான முறையில் பிறக்கச் செய்த அல்லாஹ், இயேசுவின் விஷயத்தில் மட்டும் ஏன் இயற்கைக்கு முரண்பட்டு செயல்படவேண்டும்?

உங்கள் இறைத்தூதர் முஹம்மதுவை ஒரு கணவன் மனைவியின் உறவின் மூலமாக பிறக்கச் செய்த அல்லாஹ், ஏன் இயேசுவை மட்டும் இதே பாணியில் பிறக்கச் செய்து இருக்கக்கூடாது?

அல்லாஹ்வை யாரோ நிர்பந்தித்தார்களா? அல்லது அல்லாஹ்வை ஏதோ ஒன்று இப்படி செயல்பட செய்ததா?

இதற்கு உலகில் எந்த முஸ்லிமிடமும் பதில் இல்லை, உங்கள் முஹம்மதுவிடமும் பதில் இல்லை. ஆனால், இதற்கு ஒரு சாதாரண கிறிஸ்தவனிடம் பதில் உள்ளது.

அப்துல்லாஹ்: அது என்ன பதில்?

உமர்: தம்பி இதற்கு பதில் கிறிஸ்தவத்தில் தான் உள்ளது, இஸ்லாமில் இல்லை.

அப்துல்லாஹ்: அந்த பதில் தான் என்ன? சொல்லுங்கள்.

உமர்: ஆதாமின் கீழ்படியாமையினால் உண்டான தண்டனையிலிருந்து உலகை மீட்க, தேவனால் தான் முடியும், அதுவும் பரிசுத்தராகிய அவர் பரிசுத்தராகவே உலகில் வரவேண்டும். அற்புதராகிய அவர் அற்புதமான வகையில் உலகில் வந்து, பாவிகளாகிய நம்முடைய தண்டனையை அவர் சுமந்துக்கொண்டு நமக்கு மீட்பை கொண்டுவரவேண்டும்.

ஒரு புது மனிதன் உருவாக, ஆண் பெண் இருவரும் தேவை. ஆனால், ஏற்கனவே இருக்கிறவர் இவ்வுலகில் வரவேண்டுமென்றால், இன்னொரு ஆணின் துணை அவருக்கு தேவையில்லை. மட்டுமல்ல, ஒரு கருவாக மாறி அது குழந்தையாக வளருவதற்கான ஒரு இடம் தான் மர்யம் அல்லது மர்யமின் கர்ப்பம், அவ்வளவு தான்.

இறைவனே மனிதனாக வரவேண்டும் என்ற திட்டத்தை அதே இறைவன தீட்டியதால், அவர் கன்னியின் வயிற்றில் கருவாக வந்தார். இது தான் கிறிஸ்தவம் கொடுக்கும் பதில்.

ஆனால், இதற்கு இஸ்லாம் என்ன பதில் சொல்லும்? இதற்கு அல்லாஹ்விடம் பதில் உண்டா?

என்ன தம்பி பதிலைக்காணோம்.

உலகில் இயேசுவைத் தவிர, வேறு எந்த இறைத்தூதரையாவது அல்லாஹ் இப்படி விசேஷித்த முறையில் பிறக்கச் செய்தாரா?

**அப்துல்லாஹ்**: இல்லை...

**உமர்**: அப்படியானால், இயேசுவை மட்டும் ஏன் இப்படி தம்முடைய ஆவியைக் கொண்டு, ஒரு தூதனை அனுப்பி, அல்லாஹ் அற்புதமான முறையில் கருவை உருவாக்கினார்? அல்லாஹ்வை நிர்பந்தப்படுத்தியது எது?

**அப்துல்லாஹ்**:. . . .

**உமர்**: உன்னால் மட்டுமல்ல தம்பி, உலகில் எந்த ஒரு இஸ்லாமிய அறிஞனாலும், இதற்கு பதில் சொல்லமுடியாது.

முஸ்லிம்கள் "அல்லாஹ் சும்மா செய்தார் என்றோ, இதற்கான காரணம் அவருக்கு மட்டுமே தெரியும் என்றோ" சொல்லிக்கொள்ளலாம். இந்த பதிலைத் தவிர வேறு பதில் முஸ்லிம்களால் கூறமுடியாது.

ஆனால், இதற்கு கிறிஸ்தவமும், பைபிளும், சுலபமாக பதில் சொல்லிவிடும். இயேசு ஆதியிலிருந்து இருந்தவர், ஆபிரகாமுக்கு முன் இருந்தவர், எருசலேம் தேவாலயத்தை விட பெரியவர், சாலொமோனை விட பெரியவர், அவர் சாவாமை உள்ளவர், இருந்தவர், இருக்கிறவர், வரப்போகிறவர், நம்மை நியாயம் தீர்க்கப்போகிறவர் அவரே. எனவே, இப்படிப்பட்டவர் உவ்வுலகில் ஏழ்மை கோலம் பூண்டு வந்தார் ஆனால் அற்புதமாக வந்தார்.

தம்பி, இனிமேல் கிறிஸ்துவின் பிறப்பு பற்றி என்னிடம் கேள்விகள் கேட்கமாட்டாய் என்று நினைக்கிறேன்.

[தமிழ் நாட்டு முஸ்லிம்களுக்கு ஒரு சவால்: இயேசு ஒரு நபி மட்டுமே என்று முஸ்லிம்களாகிய நீங்கள் நம்புகிறீர்கள். குர்ஆன் சொல்வது எல்லாம் உண்மை என்று நம்புகிறீர்கள். அப்படியானால், ஏன் அல்லாஹ் இயேசு என்ற ஒரு நபியை இயற்கைக்கு அப்பாற்பட்ட முறையில் பிறக்கச் செய்தார் என்று உங்களால் பதில் சொல்லமுடியுமா? அல்லாஹ் அனுப்பிய எந்த ஒரு நபிக்கும் இல்லாத சிறப்பு இந்த ஒரு நபிக்கு மட்டும் அல்லாஹ் கொடுக்க காரணம் என்ன? இயேசு செய்த அற்புதங்கள் பற்றி கேள்வி கேட்கப்படவில்லை, இயேசு ஏன் அற்புதமாக பிறந்தார் என்பது தான் கேள்வி. இயேசுவின் பிறப்பு விஷயத்தில் அல்லாஹ் ஏன் இயற்கை விதியை புறக்கணித்தார்? இப்படிச் செய்ய அல்லாஹ்வை நிர்பந்தித்தது யார்? முஸ்லிம்களால் இதற்கு பதில் சொல்லமுடியுமா?]

**அப்துல்லாஹ்**: அண்ணே, நான் எங்கள் இஸ்லாமிய அறிஞர்களிடம் கேட்டு உங்களுக்கு பதில் சொல்கிறேன்.

**உமர்**: நல்லது தம்பி. நீயும் சிந்தித்துப்பார். வெறுமனே தினமும் ஐந்து வேளை குனிந்து உட்கார்ந்து எழுந்தோமானால் அந்த நாளின் கடமை முடிந்துவிட்டது என்ற கண்ணோட்டத்தில் வாழாமல், கொஞ்சம் சிந்தித்துப் பார். ஏன் எப்படி என்ற கேள்விகளை கேட்டுப்பார், அப்போது உனக்கு உண்மை புரியும். கேளுங்கள் தரப்படும், தட்டுங்கள் திறக்கப்படும், தேடுங்கள் அப்போது கண்டடைவீர்கள்.

தம்பி உனக்கு கிறிஸ்மஸ் வாழ்த்துக்கள்.

தேவதூதன் அவர்களை நோக்கி: பயப்படாதிருங்கள்; இதோ, எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தியை உங்களுக்கு அறிவிக்கிறேன். இன்று கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்குத் தாவீதின் ஊரிலே பிறந்திருக்கிறார். (லூக்கா 2:10,11)

**மூலம்**

**உமரின் 2013 கிறிஸ்மஸ் தொடர் கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/xmas2013/xmas2013part3.html

## 29. குர்-ஆனும் விஞ்ஞானமும்: பீஜேவிற்கு கேள்வி - இயேசு குளோனிங் முறையில் கருத்தரிக்கப்பட்டாரா? இயேசு அல்லாஹ்வின் DNA வாக இருந்தாரா?

**முன்னுரை:** உலகின் மிகவும் முக்கியமான கண்டுபிடிப்புக்களின் விவரங்களை நாம் குர்-ஆனில் காணலாம். இது என் கூற்று அல்ல, இது இஸ்லாமிய அறிஞர்களின் நம்பிக்கை. இதற்காக, சில ஒற்றுமைகளை குர்-ஆன் வசனங்களில் காண்பித்து, "இதோ, குர்-ஆன் விஞ்ஞானம் பற்றி பேசுகிறது" என்று இஸ்லாமிய பெருமக்கள் யேசு குழந்தையாக இருக்கும் போது பேபெருமையாக பேசிக்கொள்வார்கள். ஆனால், உண்மையில் குர்-ஆனில் விஞ்ஞானம் உண்டா? கீழ்கண்ட தொடுப்புக்களை சொடுக்கி சில விவரங்களை படித்துக்கொள்ளுங்கள்.

1. **குர்-ஆனும் விஞ்ஞானமும்: பீஜேவிற்கு கேள்வி - மரியாள் இயேசுவை நீருக்குள் பெற்றெடுத்தார்களா?**

2. **நவீன விஞ்ஞானம் குர்-ஆனில் காணப்படுமா?** ('குர்-ஆனில் விஞ்ஞானம்' காணப்படுகிறது என்பவர்களுக்கு பொதுவான மறுப்பு)

3. குர்-ஆனின் கட்டுக்கதைகளும், பழங்கதைகளும் - சாலொமோனின் பறக்கும் பாய்!

4. குர்-ஆன் சம்மந்தப்பட்ட கட்டுரைகள்

## பீஜே அவர்களும் குளோனிங் முறையும்

பீஜே அவர்கள் தன் பங்கிற்கு, குர்-ஆன் வசனங்களில் விஞ்ஞானம் உண்டு என்று சொல்லிக்கொண்டு இருக்கிறார். நீருக்குள் பிரசவம் என்ற தலைப்பில் இவர் விவரித்த விஞ்ஞானம் பற்றி நான் ஒரு பதிலை கொடுத்து இருந்தேன், அதனை நீங்கள் மேலே தரப்பட்ட தொடுப்பில் படிக்கலாம்.

மேலும், இயேசுவின் பிறப்பை சம்மந்தப்படுத்தி, அவர் குளோனிங் முறைப் பற்றி கொடுத்த இன்னொரு விஞ்ஞான விளக்கத்திற்கு பதிலை இப்போது காண்போம். இப்படி தனக்கு தோன்றியபடி பீஜே அவர்கள் எழுதுவதினால், சில நேரங்களில் தனக்கே தெரியாமல் இஸ்லாமை கதிகலங்க வைக்கும் சில விபரீதமான விஷயங்களையும் அவர் சொல்லிவிடுவதுண்டு. இயேசுக் கிறிஸ்து என்பவர் இறைவனின் (அல்லாஹ்வின்) DNA மரபணுவாக இருக்கிறார் என்பதை இவர் தனக்கே தெரியாமல் ஒப்புக்கொண்டுள்ளார்.

இயேசு அல்லாஹ்வின் மரபணு மூலமாக உருவாக்கப்பட்டார் என்றுச் சொன்னால், "இயேசு தான் அல்லாஹ்" என்று பொருள் வந்துவிடுகிறது. எவ்வளவு பெரிய தவறை பீஜே செய்துவிட்டார்! குர்-ஆனில் விஞ்ஞானத்தை கண்டுபிடித்தவர், உண்மையில் அஞ்ஞானியாகிவிட்டாரே! அந்தோ பரிதாபம்.

சரி, இப்போது அவரது குளோனிங் விஞ்ஞான விளக்கத்தை கவனிப்போம்.

### 1) பீஜே அவர்களின் குர்-ஆன் விளக்கக் குறிப்பு: 415 – குளோனிங் சாத்தியமே!

பீஜே அவர்கள் தன் குர்-ஆன் தமிழாக்கத்தின், 415வது விளக்கத்தில் "குளோனிங் சாத்தியமே!" என்ற தலைப்பில், இயேசுவின் பிறப்பை சம்மந்தப்படுத்தி, குளோனிங் பற்றி விவரித்துள்ளார். இந்த விளக்கத்தில் சில விபரீதமான விஷயங்களை அவர் கூறியுள்ளார். இஸ்லாமுக்கு எதிராகவும், குர்-ஆனுக்கு விரோதமாகவும், அல்லாஹ்வின் தெய்வீகத்திற்கு (ஏகத்துவத்திற்கு) விரோதமாகவும் அவர் கூறியுள்ளார். பீஜே அவர்கள் சிறிது தீர்க்கமாக சிந்தித்து இருந்திருந்தால், இப்படியெல்லாம் எழுதியிருக்கமாட்டார். அடுத்த குர்-ஆன் பதிப்பின் போது, அவர் இந்த தலைப்பு பற்றி சிறிது சிந்திப்பார் என்று நாம் எதிர்ப்பார்க்கலாம்.

அவர் கொடுத்த விளக்கத்தில் மிகவும் முக்கியமானவைகளை மட்டும் நான் இங்கு மேற்கோள் காட்டுகிறேன். அவரது குர்-ஆன் தமிழாக்கம் உள்ளவர்கள் இந்த 415வது குறிப்பை முழுவதுமாக படித்துக்கொள்ளலாம், மேலும் இணையத்திலும் (http://www.onlinepj.com/) சொடுக்கி படித்துக்கொள்ளலாம்.

**//பீஜே அவர்கள் எழுதியது:**

415. குளோனிங் சாத்தியமே!//

பீஜே அவர்களே, குளோனிங் சாத்தியம் தான் என்றுச் சொல்லி உங்கள் சொந்த விளக்கத்தை கொடுத்து இருந்திருந்தால், பிரச்சனை இல்லை. ஆனால், நீங்கள் குர்-ஆனை இதற்காக வம்புக்கு இழுத்ததாலும்,

இயேசுவின் பிறப்பையும் இதற்குள் நுழைத்ததாலும் இப்போது பிரச்சனையில் மாட்டியுள்ளீர்கள். உங்களின் விஞ்ஞான விளக்கம் எவ்வளவு பெரிய தவறாக உள்ளது என்பதை வெளிச்சத்திற்கு கொண்டு வருகிறேன்.

**//பீஜே அவர்கள் எழுதியது:**

ஈஸா நபியவர்கள் ஆணின் உயிரணுவின்றி கன்னித் தாய் மூலம் இறைவனின் தனிப் பெரும் ஆற்றலால் பிறந்தார்கள். இந்த நிகழ்ச்சியை வெறும் வரலாறாக மட்டும் திருக்குர்ஆன் கூறாமல் இது ஓர் அத்தாட்சியாக உள்ளது' என்றும் கூறி, இது குறித்து சிந்திக்கத் தூண்டுகிறது.

மனிதர்கள் முயற்சி செய்தால், இது சாத்தியமாகும் என்பது இல்லாவிட்டால் இதைச் சிந்திக்கத் தூண்டுவதில் பொருள் இருக்காது. //

இயேசுக் கிறிஸ்து ஆணின் உயிரணுவின்றி கன்னித்தாய் மூலம் இறைவனின் தனிப்பெரும் ஆற்றலால் பிறந்தார், இது ஒரு அற்புதம் என்றுச் சொல்லி நீங்கள் எழுதியிருந்தால், உங்கள் மீது தவறில்லை. ஆனால், ஒரு விஞ்ஞான முலாம் பூசி உங்கள் லாஜிக்கை இங்கே நுழைக்கப் பார்த்தீர்களே, அது தான் நீங்கள் செய்த தவறு.

"இது ஒரு அத்தாட்சியாக உள்ளது, இதைப் பற்றி சிந்தியுங்கள்" என்று குர்-ஆன் சொல்வது, மனிதர்கள் சிந்தித்து, குளோனிங் முறையை கண்டுபிடியுங்கள் என்று அல்லாஹ் சொல்கிறார் என்று நீங்கள் சொல்ல வருகிறீர்களா?

நீங்கள் சொல்வது உண்மையானால், ஏன் கடந்த 1400 ஆண்டுகளாக ஒரு இஸ்லாமியரும் இதைப் பற்றி சிந்திக்கவில்லை? ஏன் ஒரு இஸ்லாமிய அறிஞரும் இதைப் பற்றி சிந்திக்கவில்லை?

ஏதோ, ஒரு இஸ்லாமியரல்லாதவர் (குர்-ஆனை படிக்காமல்) சொந்தமாக சிந்தித்து ஒரு அறிய கண்டுபிடிப்பை கொண்டுவந்தால், அதை நீங்கள் சொந்தம் கொண்டாட நினைக்கிறீர்களோ?

பீஜே அவர்களே, இன்னும் நிறைய காலம் இருக்கிறது, நீங்கள் உட்கார்ந்து எங்கேயெல்லாம் குர்-ஆன் சிந்திக்கச்சொல்கிறதோ, அத்தாட்சியாக உள்ளது என்றுச் சொல்கிறதோ, அங்கேயெல்லாம் இன்னும் என்னென்ன கண்டுபிடிப்புக்களை அல்லாஹ் மறைத்துள்ளான் என்பதை ஆய்வு செய்து இன்னும் 100 ஆண்டுகளுக்குள் என்னென்ன விஞ்ஞான கண்டுபிடிப்புக்கள் உலகில் வரவேண்டுமோ, அவைகளை இப்போது சிந்தித்து உங்களால் சொல்லமுடியுமா?

நீங்கள் மட்டுமல்ல, ஒட்டுமொத்த தமிழ் இஸ்லாமிய அறிஞர்கள் அனைவரும் உட்கார்ந்து (சண்டைப்போடாமல், ஒருவரை ஒருவர் திட்டிக்கொள்ளாமல்) குர்-ஆனின் அடிப்படையில் புதிய கண்டுபிடிப்புக்களை சிந்தித்துச் சொல்லுங்கள். இப்படி நீங்கள் செய்தால், உங்கள் குர்-ஆனில் விஞ்ஞானம் உண்டு என்பதை அப்போது ஒப்புக்கொள்கிறோம்.

**//பீஜே அவர்கள் எழுதியது:**

இன்றைய நவீன உலகில் உயிரினங்களின் உயிரணுவுக்கு மாற்றாக மரபணுவைப் பயன்படுத்தி உயிரினங்களை உண்டாக்கலாம் என்று கண்டுபிடித்துள்ளனர். . . . . . . . சாதாரண குழந்தையைப் பெற்றெடுப்பது போல் அக்குழந்தை பெற்றெடுக்கப்படுகிறது.

. . . . .

மனிதனிடம் இது சோதித்துப் பார்த்து நிரூபிக்கப்படாவிட்டாலும் ஆடு, எருமை, பன்றி போன்ற உயிரினங்களில் இதைச் சோதித்து விஞ்ஞானிகள் வெற்றி கண்டிருக்கிறார்கள்.//

மேற்கண்ட மேற்கோளில், நான் பீஜே அவர்களின் சில வரிகளை மட்டுமே கொடுத்துள்ளேன். ஏனென்றால், அவைகளில் பீஜே அவர்கள் "குளோனிங்" பற்றி ஒரு பொதுவான விவரத்தை கொடுத்துள்ளார்.

சில இடங்களில் பீஜே அவர்கள் சிறிது குழம்பியுள்ளார்கள், அதாவது "சோதனைக் குழாய் குழந்தை (Test Tube Baby)" மற்றும் "குளோனிங் முறை (Cloning)" இந்த இரண்டிற்கும் இடையே இருக்கும் வித்தியாசத்தை சரியாக புரிந்துக்கொள்ளாமல் எழுதியுள்ளார். இந்த கட்டுரையின் நோக்கம் அவரது குழப்பம் பற்றி ஆராய்வதல்ல என்பதால், மேலதிக விளக்கத்திற்கு நான் செல்லவிரும்பவில்லை. குளோனிங் முறை என்பது மிகவும் சிக்கலான விஷயம், எனவே கீழ்கண்ட தொடுப்புக்களை சொடுக்கி மேலதிக விவரங்களை அறிந்துக்கொள்ளுங்கள்:

1) சோதனைக் குழாய் குழந்தை - Test Tube Baby

2) குளோனிங் முறை - Cloning and Human Cloning

அடுத்ததாக, அவர் என்ன எழுதியுள்ளார் என்பதை பார்ப்போம்.

**//பீஜே அவர்கள் எழுதியது:**

மனிதனைப் பொறுத்த வரை அவனைக் குளோனிங் செய்தால் என்ன விளைவு ஏற்படும் என்பதை விஞ்ஞானிகள் கணித்திருக்கிறார்கள். 25 வயதுடைய ஒருவரது மரபணுவை எடுத்து குளோனிங் செய்து ஒரு குழந்தையை உருவாக்கினால் அது வடிவத்தில் குழந்தையாக இருந்தாலும் அதன் மரபணுவைப் பொறுத்த வரை அதன் வயது 25 ஆகும். எனவே 25 வயதுடையவனின் அறிவும் சிந்தனையும் அந்தக் குழந்தைக்கு இருக்கும் என்பது விஞ்ஞானிகளின் கணிப்பு.//

பீஜே அவர்களே, விஞ்ஞானிகளின் கணிப்புப் படி, 25 வயதுடைய மரபணு(DNA) மூலமாக உருவாக்கப்படும் குழந்தை, 25 வயதுடைய அந்த மனிதனின் அறிவும், சிந்தனையும் கொண்டு இருக்கும்.

அதே போல, அல்லாஹ்வின் மரபணு(DNA) மூலமாக உருவாக்கப்படும் குழந்தை (இயேசுக் கிறிஸ்து) பிறக்கும் போதே, அல்லாஹ்விற்கு இருக்கும் அறிவுடனும், சிந்தனையுடனும் இருப்பார் என்றுச் சொல்லலாம் இல்லையா?

**//பீஜே அவர்கள் எழுதியது:**

இந்த விபரங்களைக் கவனத்தில் வைத்து, ஈஸா நபியின் பிறப்பு பற்றிக் குர்ஆன் கூறுவதைச் சிந்தித்துப் பார்ப்போம்.

தந்தையில்லாமல் ஒரு குழந்தையை இறைவன் உருவாக்க நாடினால், ஆகு என்று சொல்லியே அவனால் உருவாக்க முடியும். அப்படியிருந்தும் ஒரு வானவரை மனித வடிவில் அனுப்பி, அந்த வானவர், ஈஸாவின் நபியின் தாயாரான மர்யமிடம் ஊதினார் எனக் கூறப்படுகிறது. இதன் மூலம் இறைவனின் ஆற்றலால்

உருவாக்கப் பட்ட ஒரு மரபணுவை அந்த வானவர் மர்யம் (அலை) அவர்களிடம் ஊதியிருக்கலாம் என்பதையும், எந்த முறையில் குழந்தை உருவாவதாக இருந்தாலும் முடிவில் தாயின் கருவறை அவசியம் என்பதையும் இந்நிகழ்ச்சி நமக்குக் காட்டுகின்றது.//

பீஜே அவர்களே, நீங்கள் விஞ்ஞானத்தை விளக்கிவிட்டு, இப்போது குர்-ஆனுக்கு வந்துள்ளீர்கள்.

ஒன்றை சரியாக நீங்கள் புரிந்துக்கொள்ளுங்கள். இறைவன் அற்புதம் செய்தால், அது அற்புதம் தான், அதனுள் விஞ்ஞானத்தை நீங்கள் பார்க்க விரும்பினால், விளைவுகள் உங்களுக்கு சில நேரங்களில் சாதகமாக அமையாது. இறைவன் "ஆகு" என்று சொல்லிவிட்டால், அவ்வளவு தான், அது உண்டாகிவிடும். மேலும இறைவன் எப்படி அற்புதம் செய்கிறார் என்பதை ஆராய்ச்சி செய்து, அதற்கு ஒரு விஞ்ஞான உடையை உடுத்த முயற்சிக்கிறீர்கள் நீங்கள். இதனால் உண்டான விளைவு என்ன? இப்போது காண்போம்.

**2) அல்லாஹ்வின் ஆற்றலினால் உண்டான மரபணு:**

வானவர் ஊதினது, மரபணு என்று உங்களுக்கு கூறியது யார்? உங்களுக்கு எப்படித் தெரியும் அது மரபணு என்று? உங்களுக்கே சந்தேகமாக இருக்கும் பொது, ஏன் இந்த வேண்டாத ஆராய்ச்சிகள்? "ஊதியிருக்கலாம்" என்ற வார்த்தையிலிருந்து உங்களுக்கே சந்தேகம் இருக்கிறது என்று தெரியவருகிறது, அப்படியிருக்கும் போது, ஏன் "குளோனிங் சாத்தியமே" என்ற விளக்கம்?

நீங்கள் அல்லாஹ்வின் ஆற்றலினால் உண்டான மரபணு என்கிறீர்கள், ஆனால், நீங்கள் மேற்கோள் காட்டிய வசனம், அந்த உயிர் அல்லாஹ்வினுடையது என்றுச் சொல்கிறதே!

குர்-ஆன் 21:91ஐ இப்போது படிப்போம்:

தனது கற்பைக் காத்துக் கொண்ட பெண்ணிடம் **நமக்குரிய உயிரை ஊதினோம்** 90. அவரையும், அவரது புதல்வரையும் அகிலத்தாருக்குச் சான்றாக்கினோம்.415

மேற்கண்ட வசனத்தில், "**நமக்குரிய உயிரை ஊதினோம்**" என்று அல்லாஹ் சொல்கிறார். நீங்கள் விளக்கும் பொது, அல்லாஹ் ஒரு மரபணுவை உருவாக்கி, வானவர் மூலம் ஊதவைத்தார் என்றுச் சொல்கிறீர்கள். இப்போது இதனை நாம் எப்படி விளங்கிக்கொள்வது?

1) அல்லாஹ் ஊதியது தன்னுடைய உயிரையா? அல்லது

2) பீஜே அவர்கள் விளக்கியது போல, அவர் உருவாக்கின ஒரு மரபணுவையா?

3) அல்லாஹ் உருவாக்கியது ஒரு மரபணு என்றுச் சொன்னால், அந்த மரபணு யாருடையது? ஏதாவது ஒரு மனிதனின் உடலிலிருந்து எடுத்த மரபணுவா? அல்லது அல்லாஹ்வின் சொந்த மரபணுவா?

4) இல்லை, அல்லாஹ் ஊதியது ஒரு உயிர் தான், அது மரபணு அல்ல என்றுச் சொன்னால், பீஜே அவர்களின் விளக்கம் குர்-ஆனுக்கு எதிரான ஒன்றாக அமையவில்லையா? அல்லாஹ் சொல்லாத ஒன்றை பீஜே அவர்கள் சொந்தமாக இட்டுக்கட்டி கூறியதாக ஆகிவிடாதா?

**இப்படி அனேக கேள்விகள் எழுகின்றன, இவைகளுக்கு பீஜே அவர்கள் விளக்கம் அளிப்பாரா?**

[மேற்கண்ட வசனத்தில், 90வது குறிப்பு ஒன்று உள்ளது, அது ஆதாமுக்குள் அல்லாஹ் ஊதிய உயிர் பற்றி பேசுகிறது. இதைப் பற்றி விவரமாக நாம் அடுத்த பதிலில் கர்த்தருக்கு சித்தமானால் காண்போம். எப்படி பீஜே அவர்களின் ஒரு விளக்கம் இன்னொரு விளக்கத்தோடு மோதுகிறது என்பதை அக்கட்டுரையில் காண்போம். ஆதாமையும் இயேசுவையும் படைத்தவிதம் ஒரே விதம் என்று குர்-ஆன் கூறுவது பற்றி விவரமாக பார்ப்போம்.]

[வானவர் ஊதிய நிகழ்ச்சி சம்மந்தப்பட்ட குர்-ஆன் வசனம் பற்றி ஒரு கட்டுரையை தனியாக காண்போம். அதாவது, குர்-ஆன் வசனத்தை தமிழாக்கம் செய்யும் போது, சிலர் மரியாளின் உடைக்குள் வானவர் ஊதினார் என்று மொழியாக்கம் செய்கிறார்கள். ஆனால், மூல அரபியில் வேறு விதமாக உள்ளது. அப்படியானால், ஏன் மொழியாக்கம் செய்யும் போது இவர்கள் மாற்றி மொழியாக்கம் செய்கிறார்கள், இதைப் பற்றி நாம் இன்னொரு புதிய கட்டுரையில் காண்போம். இப்போது இந்த கட்டுரையின் தலைப்பை விட்டு வெளியே செல்லாமல் நாம் ஆராய்வோம்]

**//பீஜே அவர்கள் எழுதியது:**

அடுத்ததாக நாம் சிந்திக்க வேண்டிய விஷயம், ஈஸா நபியவர்கள் பிறந்தவுடனே பேசியதாகவும் இதில் கூறப்படுகின்றது. தந்தையில்லாமல் பிறந்ததால் அற்புதம் என்ற அடிப்படையில் பிறந்தவுடன் சில வார்த்தைகளைப் பேசி விட்டு அதன் பிறகு குழந்தைத் தன்மையுடையவராக அவர் இருந்திருப்பார் என்று நினைக்கலாம். இது தவறாகும். ஏனெனில், அவர் குழந்தையாக இருக்கும் போது பேசினார் என்பதுடன் அவரை அப்போதே இறைத் தூதராகவும் ஆக்கியதாக இங்கு கூறப்படுகிறது.

இறைத் தூதர் என்றால், இறைச் செய்திகளைச் சரியாக விளங்க வேண்டும், அதை மக்களிடம் எடுத்துச் சொல்ல வேண்டும் என்பதை அறிவோம்.

பிறந்தவுடனேயே ஈஸா நபியவர்கள் பேசியதுடன், இறைச் செய்திகளை விளங்கி, மக்களிடம் எடுத்துச் சொல்லும் அளவுக்கு முதிர்ச்சி உடையவர்களாக இருந்தது மனிதக் குளோனிங் பற்றிய விஞ்ஞானிகளின் கருத்துக்கு ஒத்ததாக இருக்கின்றது.

இக்குறிப்புக்குரிய வசனங்கள்: 3:46, 19:21, 19:29,30, 21:91, 23:50//

பீஜே அவர்களே, உங்கள் விளக்கம் பிரச்சனையை அதிகமாக்குகிறதே தவிர, இஸ்லாமை காப்பாற்றுவதாக இல்லை. உங்களின் விளக்கத்தின் படி:

- இயேசு குழந்தையாக இருக்கும் போது பேசினார்.
- அவரது அந்த பேச்சுத்திறமை, அவரை அல்லாஹ் எடுத்துக்கொண்டது வரை இருந்தது.
- குழந்தையாக இருந்த நாளிலிருந்தே, பேச்சு மட்டுமல்ல, ஒரு முதிர்ந்த இறைத்தூதர் போல அவர் இறைச் செய்தியை புரிந்துக்கொண்டு, அதனை மக்களுக்கு விளக்கும் அளவிற்கு முதிர்ச்சியுள்ளவராக இருந்தார்.
- உதாரணத்திற்குச் சொல்லவேண்டுமென்றால், நாற்பது வயதில் எப்படி முஹம்மது இருந்தாரோ, அந்த அளவிற்கு பிறந்த குழந்தையாகிய இயேசு இருந்தார், பேசினார், சிரித்தார், வாதம் புரிந்தார், இறைச் செய்தியை விளக்கினார்.

இது தான் உங்களுடைய விளக்கத்தின் சுருக்கம், இதனை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள் என்று நம்புகிறேன் (ஒப்புக்கொள்ளாத பட்சத்தில், உங்கள் விளக்கத்தில் நீங்கள் சொன்னதின் அர்த்தமென்ன என்பதை விளக்கவும்).

**பீஜே அவர்களின் விளக்கம் உண்டாக்கிய பிரச்சனைகள்:**

ஏதோ விஞ்ஞானம் பற்றி எழுதவேண்டும், குர்-ஆனில் விஞ்ஞானம் உண்டு என்பதை உலகத்திற்கு காட்டவேண்டும் என்ற நப்பாசையில், தனக்கு வந்தபடி எழுதியுள்ளார் பீஜே. இப்போது கீழ்கண்ட பிரச்சனைகளுக்கு அவர் பதில் அளிக்கட்டும்:

**1) ஒரு குழந்தை பிறந்தது முதல்,** இறைச்செய்தியை சொல்லி, மக்களை நல்வழிப்படுத்தினால், இது என்ன சாதாரண அற்புதமா? உலக மகா அற்புதம்.

**2) இவ்வளவு பெரிய அற்புதத்தை,** அல்லாஹ் இயேசுவிற்கு மட்டும் செய்ய முக்கிய காரணமென்ன? அனேக நபிகள் (தீர்க்கதரிசிகள்) வந்தார்கள், ஒருவருக்கும் இல்லாத ஒரு சிறப்பான அற்புதம் இயேசுவிற்கு மட்டும் செய்ய காரணம் என்ன? ஒரு காரணமும் இல்லாமல் "சும்மா செய்தேன்" என்றுச் சொல்ல அல்லாஹ் சாதாரண மனிதன் அல்லவே!

**3) ஆதாமுக்கு அப்பா இல்லை**, காரணம் அவர் தான் முதல் மனிதர், எனவே அப்பா இல்லை, அல்லாஹ் மண்ணினால் அவனை படைத்தார். ஆனால், இயேசுவின் விஷயத்தில் ஏன் ஒரு இயற்கைக்கு அப்பாற்பட்ட முறையில் அல்லாஹ் செய்யவேண்டும்? யோசேப்பு என்பவரோடு மரியாளுக்கு திருமணம் நிச்சயிக்கப்பட்டு இருந்தது. ஒருவேளை யோசேப்பு இல்லாவிட்டாலும், வேறு ஒரு ஆணை திருமணம் செய்துக்கொண்டு, இயற்கையான முறையில் (ஆண், பெண் உறவுடன்) இயேசு பிறந்திருக்கலாம். ஏன் அல்லாஹ் ஒரு இயற்கைக்கு எதிராக இயேசுவின் விஷத்தில் செயல்பட வேண்டும்?

**4) இயேசு குழந்தையாக இருக்கும் போதே**, வாலிபனான ஒரு ஆணுக்கு இருக்கும் அறிவும், சிந்தனையும் இருக்கிறது என்று பீஜே கூறினால், இயேசு ஒரே சமயத்தில் ஒரு முதிர்ச்சியான மனிதனாகவும், அதே நேரத்தில் ஒரு குழந்தையாகவும் எப்படி அவரால் இருக்கமுடிந்தது? அதாவது தான் பிறந்து சில நாட்கள் கடந்த குட்டி இயேசு இறைச்செய்தியை மக்களுக்கு சொல்லிவிட்டு, மிகப்பெரிய சொற்பொழிவை செய்துவிட்டு, மறுபடியும் தன் அம்மாவிடம் வந்து அந்த குட்டி இயேசு பால் குடித்தாரா?

**5) குழந்தையாக இயேசு இருந்துக்கொண்டு**, அல்லாஹ்வின் இறைச் செய்தியை மக்களுக்கு சொல்லிவிட்டு, அதன் பிறகு தான் படுத்திருந்த இடத்திலேயே மலஜலம் கழித்தாரா? அவரை மரியாள் சுத்தம் செய்தார்களா?

**6) நான் என்ன சொல்ல வருகிறேன்** என்று பீஜே அவர்களுக்கு புரிகின்றதா? இயேசு பிறந்தது முதல் ஒரு இறைத்தூதராக இருந்தால், அவர் ஒரு முதிர்ச்சியடைந்த மனிதன் சிந்திப்பது போல சிந்தித்தால், எப்படி அவரால் குழந்தையைப் போல நடந்துக்கொள்ளமுடியும்? அக்காலத்து மக்களுக்கும் இது அதிக பிரச்சனையை உண்டாக்கியிருக்கும் இல்லையா?

**7) தன் நிஜாரிலேயே மலஜலம் செய்யும் ஒரு குழந்தை**, உலக மக்களுக்கு இறைச்செய்தியை சொல்லி, விவரமாக விளக்கினால், மக்கள் அதனைக் கண்டு பிரமிப்பார்கள். ஆனால், உண்மையில் வேறு சில குர்-ஆன் வசனங்களை காணும்போது, மக்கள் அவரை ஏற்றுக்கொள்ளாமல், அவரை கொலை செய்ய முயன்றதாக

காண்கிறோம். பீஜே அவர்களே, எங்கேயோ இடிக்கிறதே! உங்கள் குளோனிங் விஞ்ஞான அற்புதத்தில் ஏதோ குறைபாடு இருப்பதாக தெரிகின்றதே!

**8) இயேசு பிறந்தது முதல்**, வாலிபனாகும் வரைக்கும் (தோராயமாக 33 ஆண்டுகள்) அவர் இறைத்தூதராக இருந்தால், அவர் குழந்தையாக இருக்கும் போது செய்த அற்புதங்கள் எங்கே? ஒரு பறவையை அவர் உண்டாக்கியது ஒரு பாலகனாக இருக்கும் போது என்றால், இதர அற்புதங்கள் பற்றி அல்லாஹ் ஏதாவது கூறியுள்ளாரா?

**9) பீஜே அவர்கள் சொன்னது போல** உண்மையில் நடந்து இருந்தால், உலக வரலாறு அதனை பதிவு செய்து இருக்கும். இயேசு குழந்தையாக இருக்கும் போதே, அக்காலத்தில் இருந்த நாடுகளில் அவரது கீர்த்தி பரவியிருக்கும். அவரைக் காண பல நாடுகளிலிருந்து, ஊர்களிலிருந்து மக்கள் அலையலையாய் வந்து அவரை கண்டு இருந்திருப்பார்கள். ஆனால், உண்மையில் அவர் ஒரு தச்சனின் மகன் என்று தான் உலகம் அவரை அறிந்திருந்தது. எனவே, பீஜே அவர்களே, உங்களின் கூற்று மிகப்பெரிய பொய் மூட்டையாகும்.

பீஜே அவர்களே, நீங்கள் எழுதிய விளக்கம், நகைப்பிற்கு உரியது. அதில் கொஞ்சமும் சத்தும் இல்லை, சத்தியமும் இல்லை.

### 3) மனித குளோனிங் என்பது அல்லாஹ்விற்கு விரோதமல்லவா?

மனிதர்களை செயற்கையாக படைப்பது என்பது இறைவன் உருவாக்கிய இயற்கை முறைக்கு எதிரானதாகுமல்லவா? உலக மக்கள் பெருக்கத்திற்கு இறைவன் உண்டாக்கிய ஒரு வழிமுறை திருமணமாகும். அதாவது ஒரு ஆணும் பெண்ணும் திருமணத்தால் இணைந்து, உடலுறவினால் ஒன்று சேர்ந்து, மக்களை பெறவேண்டும் என்பதாகும். ஆனால், குளோனிங் முறையினால், மனிதர்களை உண்டாக்கினால் இதனால் அனேக சமூக சீர்கேடுகள் உண்டாக வாய்ப்பு இருக்கின்றது. எனவே, அனேக அமைப்புக்கள், முக்கியமாக மத அமைப்புக்கள் இதற்கு எதிர்ப்பை தெரிவிக்கின்றன. குளோனிங் முறையினால் நன்மைகளை விட தீமைகள் அதிகமாக விளையும் என்று நம்பப்படுகின்றது. இவைகளையெல்லாம் கண்டுக்கொள்ளாமல், ஒரு மார்க்க தலைவர், இந்த குளோனிங் முறையை அல்லாஹ் தன் நபி ஒருவரின் வாழ்வில் நிகழ்த்திக்காட்டினார், எனவே, இது சாத்தியமே, மற்றும் நல்லதே என்ற தோரணையில் எழுதுகிறார். (சோதனைக் குழாய் குழந்தை என்பது வேறுவகையான ஒன்றாகும்)

பீஜே அவர்களே, ஒரு கேள்வியைக் கேட்கட்டுமா? இதை ஒரு எடுத்துக்காட்டுக்காகச் சொல்கிறேன், தவறாக நினைக்கவேண்டாம். இந்த குளோனிங் முறையை நீங்கள் ஆதரிப்பதாக தெரிகின்றது. ஒரு வேளை உங்கள் உடலிலிருந்து ஒரு மரபணுக்களை எடுத்து, உங்களைப் போலவே இன்னும் நான்கு பீஜேக்களை விஞ்ஞானிகள் உருவாக்குகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். மேலும், விஞ்ஞானத்தின் அதீத வளர்ச்சியினால், ஒரு வருடத்திலேயே அவர்கள் உங்கள் வயதுக்கு சமமான பீஜேக்களை உருவாக்கிவிட்டால். உங்கள் நிலை என்னவாகும்? மொத்தம் 5 பீஜேக்கள் இருப்பார்கள். இந்த நான்கு குளோனிங் பீஜேக்கள், உங்கள் வீட்டிற்கு வந்து, இதோ இவன் என் மகன் என்று உங்கள் மகனை உரிமை பாராட்டுவார்கள். இதோ இவர் என் மனைவி என்று உங்கள் மனைவியை உரிமை பாராட்டுவார்கள். இப்போது நீங்கள் என்ன செய்வீர்கள்? இவர்கள் மீது வழக்கு தொடருவீர்களா? இவர்கள் வேறு யாருமில்லை, இவர்கள் நீங்கள் தான். நீங்கள் சொன்னதுபோல, இவர்கள் உங்கள் தற்போதையை மனைவியை தங்களின் மனைவி என்றுச் சொல்வார்கள், இது இவர்கள் மீதுள்ள குற்றமல்ல, இது தான் குளோனிங் முறை.

மனித குளோனிங் முறையினால் உண்டாகும் அனேக பிரச்சனைகளில் இது ஒரு பிரச்சனையாகும். இப்படி அனேக பிரச்சனைகள் நடைமுறையில் உண்டாகும். உங்கள் மீது எடுத்துக்காட்டு சொன்னதற்காக என்னை மன்னிக்கவும், ஆனால், உண்மை என்னவென்று உங்களுக்கு புரியவைக்கவேண்டும் என்பதால் இப்படிச் சொன்னேன்.

இப்படி சமுதாய சீர்கேடு விளைவிக்கும் ஒரு நவீன கண்டுபிடிப்பை அல்லாஹ் அங்கீகரிப்பானா? இப்போது சொல்லுங்கள், இயேசுவின் பிறப்பு ஒரு அற்புதமா? அல்லது குளோனிங் முறை விஞ்ஞானமா?

[மறுபடியும் ஒரு சின்ன கேள்வி: உதாரணத்திற்கு உங்களைப்போல நான்கு பேரை குளோனிங் முறையில் உண்டாக்குகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். மறுமை நாளில் உங்களின் தற்போதைய மனைவி, யாருக்கு மனைவியாக இருப்பார்கள், அல்லாஹ் எந்த பீஜேவிற்கு அவரை மனைவியாக தருவார், கவனத்தில் வைத்திருக்கவும், மீதமுள்ள நான்கு பீஜேக்களும் நீங்களே, உங்கள் DNA தான் அவர்களும், எனவே நீங்கள் ஐந்து பேரும் வேறு வேறு நபர்கள் அல்ல, நீங்கள் ஐந்தில் ஒன்று Five in One]

**முடிவுரை:** அன்பான வாசகர்களே, இஸ்லாமையும், அதன் அறிவுஜீவிகளின் விளக்கங்களை கண்டீர்களா? குர்-ஆனும் விஞ்ஞானமும் நடைமுறையில் எப்படி ஒன்றையொன்று முரண்படுகின்றது என்பதைக் கண்டீர்களா?

அல்லாஹ் அற்புதம் செய்தான், இயேசு குழந்தையாக இருக்கும் போது பேசவைத்தான் என்றுச் சொல்வதை விட்டுவிட்டு, குளோனிங் முறைப் பற்றி குர்-ஆன் சொல்கிறது, இயேசு அப்படித் தான் பிறந்தார் என்று பீஜே அவர்கள் அள்ளிவீசிய பொய் மூட்டைகள் அனைத்தையும் நான் அழித்துவிட்டேன்.

உண்மையாகவே, பீஜே அவர்களுக்கோ அல்லது அவரது குழுவில் இருக்கும் இஸ்லாமியர்களுக்கோ, குறிப்பு 415ல் சொல்லப்பட்டது போல இயேசு குளோனிங் முறையில் பிறந்தார் என்ற நம்பிக்கை இருந்தால், இந்த கட்டுரையில் கேட்கப்பட்ட கேள்விகளுக்கும், பிரச்சனைகளுக்கும் பதிலைச் சொல்லுங்கள். உங்களால் முடியாவிட்டால், அவரது குர்-ஆன் தமிழாக்கத்திலிருந்து அடுத்த முறை, 415வது குறைப்பை நீக்கிவிடுங்கள்.

மேலும், இயேசு அல்லாஹ்வின் DNA என்று நீங்கள் ஏற்றுக்கொள்வீர்களானால், இது இஸ்லாமின் அடிப்படையை தகர்த்தெரிந்துவிடும் என்பதை கவனிக்கவும்.

கடைசியாக, பீஜே அவர்களே, உங்கள் விஞ்ஞானத்தை இன்னும் சோதிக்கப் போகிறேன். உங்களால் முடிந்தால், பதில்களை தயாராக வைத்துக்கொள்ளவும்.

உலகத்தின் ஞானிகளின் (தங்களை ஞானிகள் என்று எண்ணிக்கொள்பவர்களை) ஞானத்தை அடக்கும் படி, உலகத்தின் அஞ்ஞானிகளை (என்னைப்போல சாதாரண மனிதர்களை) பயன்படுத்தும் தேவனுக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக.

அன்பான இயேசுவே, உம்முடைய உலக வாழ்வு பற்றிய சத்தியங்களை அறியாமல், தங்கள் கற்பனைகளை உலக மக்களுக்கு போதிக்கும் பீஜே போன்றவர்களுக்கு அறிவைத் தாரும். உம்மைப் பற்றி வாய்க்கு வந்தபடி பேசும் பீஜே அவர்கள் சத்தியத்தை அறிந்துக்கொள்ளட்டும். அவரையும், அவரது போதனைகளையும் கண்மூடித்தனமாக பின் பற்றும் முஸ்லிம்கள், சத்தியத்தை அறிந்துக்கொள்ள அவர்களுக்கு கேட்கக்கூடிய காதுகளையும், காணக்கூடிய கண்களையும், உணர்ந்துகொள்ளக்கூடிய இருதயத்தையும் தாரும். முஸ்லிம்கள் விடுதலையடையட்டும், மெய்த்தேவனாகிய உம்மை அறிந்துக்கொள்ளட்டும். ஆமென்.

குர்-ஆன் பற்றிய கட்டுரைகள்

- குர்ஆன் பாதுகாக்கப்பட்டதா? (Is the Quran Preserved?)
- பைபிளையும் குர்ஆனையும் சரியாக ஒப்பிடுவது எப்படி? COMPARING THE BIBLE AND THE QUR'AN (How to do it Accurately)
- ஒரு குர்ஆனா அல்லது பல குர்ஆன்களா?! (Quran or Qurans?!)
- குர்ஆனில் உள்ள எழுத்துப்பிழைகள் (Scribal Errors in the Quran)
- பல விதமான அரபி குர்ஆன்கள் (THE DIFFERENT ARABIC VERSIONS OF THE QUR'AN)
- ஆயிஷா அவர்களின் ஹதீஸின் படி குர்ஆன் 2:238 முழுமையானதல்ல
- விபச்சார குற்றத்திற்கு கல்லெறிதல் தண்டனை பற்றிய வசனம் குர்ஆனில் இல்லை ஏன்?
- இன்றைய குர்ஆனில் இல்லாத "பால் கொடுக்கும்" வசனம்
- அரபி குர்ஆனின் தாறுமாறான மேற்கோள்கள்?(Mis-Quotations in the Arabic Text of the Qur'an?)
- மூல குர்ஆன் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பு (Quran Text)
- பலவகையான குர்ஆன் மொழிப்பெயர்ப்புக்கள் (Quran Versions)
- குர்ஆன் முரண்பாடுகளை படிக்கவும் (Quran Contradictions)
- குர்ஆன் ஓர் அற்புதமா? என்ற தலைப்பில் இதர கட்டுரைகளை படிக்கவும்
- குர்-ஆன் விரியுரை கட்டுரைகள் - A different kind of Tafsir
- குர்-ஆனின் கட்டுக்கதைகளும், பழங்கதைகளும் - கட்டுரைகள்
- பைபிளை குர்-ஆன் எப்படி காண்கிறது? (அனேக கட்டுரைகள்)

சமர்கண்ட் மூல குர்ஆன் (MSSவுடன்) இன்றைய குர்ஆன் (1924 எகிப்திய வெளியீடு) ஒப்பீடு

- பின் இணைப்பு A - பாகம் 1 (Appendix A1)
- பின் இணைப்பு A - பாகம் 2 (Appendix A2)
- பின் இணைப்பு A - பாகம் 3 (Appendix A3)
- பின் இணைப்பு A - பாகம் 4 (Appendix A4)

மூலம்: http://isakoran.blogspot.in/2013/04/dna.html

**பீஜே அவர்களுக்கு மறுப்புக்கள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/answerpj/jesus_cloning.html

# 30. மரியாளுக்கு அல்லாஹ் செய்த அற்புதம், ஏன் பைபிளில் காணப்படவில்லை?

[கிறிஸ்துமஸ் 2013: பாகம் 1ஐ இங்கு சொடுக்கி படிக்கவும்]

[உமரும் அவரது தம்பி அப்துல்லாஹ்வும் ஸ்கைப்பில் (Skype) பேச மறுபடியும் உட்கார்ந்தார்கள், உரையாடல் தொடர்கிறது]

அப்துல்லாஹ்: உமரண்ணா, எப்படி இருக்கீங்க?

உமர்: கர்த்தரின் கிருபையால் நன்றாக இருக்கிறேன், நீ எப்படி இருக்கின்றாய்?

அப்துல்லாஹ்: அல்லாஹ்வின் அருளால் நன்றாக இருக்கிறேன். இன்று ஒரு முக்கியமான கேள்வியை நான் கேட்கவேண்டும், இப்போது கேட்கட்டுமா?

உமர்: தாராளமாக கேட்கலாம்.

அப்துல்லாஹ்: குர்-ஆன் 3:37 ல் அல்லாஹ் இயேசுவின் தாய் மரியாள் அவர்களுக்கு அற்புதமாக உணவை கொடுத்தார் என்று கூறுகிறது. இந்த அற்புதம் ஏன் பைபிளில் சொல்லப்படவில்லை? இயேசு செய்த அனைத்து அற்புதங்களையும் தெரிவிக்கும் சுவிசேஷ நூல்கள், இயேசுவின் தாய்க்கு இறைவன் செய்த இந்த அற்புதத்தை மட்டும் ஏன் மறைத்துவிட்டது?

இயேசுவின் தாய்க்கு நீங்கள் கொடுக்கும் கௌரவம் இது தானா?

**குர்-ஆன் 3:37ம் வசனத்தை ஒரு முறை படியுங்கள்:**

3:37. அவளுடைய இறைவன் அவள் பிரார்த்தனையை அழகிய முறையில் ஏற்றுக் கொண்டான்; அக்குழந்தையை அழகாக வளர்த்திடச் செய்தான்; அதனை வளர்க்கும் பொறுப்பை ஜகரிய்யா ஏற்றுக்கொள்ளும்படி செய்தான். ஜகரிய்யா அவள் இருந்த மிஹ்ராபுக்குள் (தொழும் அறைக்குப்) போகும் போதெல்லாம், அவளிடம் உணவு இருப்பதைக் கண்டார், "மர்யமே! இ(வ்வுணவான)து உனக்கு எங்கிருந்து வந்தது?" என்று அவர் கேட்டார்; "இது அல்லாஹ்விடமிருந்து கிடைத்தது - நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவர்களுக்குக் கணக்கின்றி உணவளிக்கின்றான்" என்று அவள்(பதில்) கூறினாள்.

என்னுடைய இந்த கேள்விக்கு உங்கள் பதில் என்ன?

உமர்: நல்ல அருமையான கேள்வியை கேட்டு இருக்கின்றாய்!

அப்துல்லாஹ்: தொடர்ந்து பார்த்துக்கொண்டே இருங்கள், கிறிஸ்மஸ் ஏவுகனைகள் உங்களை நோக்கி வந்துக்கொண்டே இருக்கும். நீங்கள் கலங்கப்போகிறீர்கள்!

உமர்: தம்பி உனக்கு அவசரம் அதிகம், இன்னும் நான் பதிலே சொல்லவில்லை, அதற்குள் அவசரப்பட்டு ஏதேதோ சொல்கிறாய். சரி, உன் கேள்விக்கு இப்போது பதிலைச் சொல்கிறேன், கேள்.

**முதலாவது ஒரு விஷயத்தை தெரிந்துக்கொள்,** அதாவது இயேசு செய்த எல்லா அற்புதங்களும் புதிய ஏற்பாட்டில் சொல்லப்படவில்லை. எனவே, "இயேசு செய்த அனைத்து அற்புதங்களையும் தெரிவிக்கும் சுவிசேஷ நூல்கள்" என்றுச் சொல்லாதே. சுவிசேஷ நூல்கள் சில அற்புதங்களை மட்டுமே சொல்கிறது (பார்க்க யோவான் 21:25).

**இரண்டாவதாக,** உங்கள் முஹம்மதுவிற்கு கதைகள் சொல்லவேண்டுமென்றால் மிகவும் பிடித்தமான விஷயம் என்று நினைக்கிறேன், அதுவும் இதர புத்தகங்களிலிருந்து விஷயங்களை எடுத்து, அவைகளை தனக்கு விருப்பமான படி மாற்றிச் சொல்வது அவரது வழக்கம் போல தெரிகிறது.

மரியாளுக்கு அல்லாஹ் கொடுத்த அற்புதம் ஏன் பைபிளில் இல்லை என்று கேட்கிறாய்? முதலாவது, அற்புதங்களை ஏன் இறைவன் செய்கின்றான் என்று உனக்குத் தெரியுமா?

மக்களை சந்திக்கும் பெரும்பான்மையான நேரங்களில் கையிலிருந்து வீபூதியை தந்திரமாக கொண்டு வந்து, மக்களுக்கு எல்லாம் வழங்கும் சாய்பாபா போல இறைவன் நடந்துக்கொள்வார் என்று நீ நினைப்பது தவறு.

அற்புதம் என்பது விளையாட்டாய் செய்யும் செயலல்ல, ஒரு முக்கியமான நோக்கத்திற்காக, மக்களுக்கு நம்பிக்கை வருவதற்காக, தேவைப்படும் போது செய்வது தான் அற்புதம்.

**இயேசு கூட அற்புதம் செய்தார்.** மக்களின் தேவைக்காகவும், தன்னுடைய செய்தியின் நம்பகத்தன்மையை நிருபிப்பதற்காகவும் இயேசு அற்புதம் செய்தார். ஆயிரக்கணக்கான மக்களுக்கு அற்புதமாக உணவு அளித்த இயேசு, தண்ணீரை திராட்சை இரசமாக மாற்றிய இயேசு, தனக்கு பசி உண்டாகும் போது, சீடர்களை அனுப்பி உணவை வாங்கிக்கொண்டு வரும் படி அனுப்பினார். அவர் நினைத்து இருந்திருந்தால், அற்புதம் செய்து தன் பசியை போக்கிக்கொண்டு இருக்கமுடியும், ஆனால் அவர் அப்படி செய்யவில்லை. நாற்பது நாட்கள் உபவாசம் இருந்து பசியின் உச்சக்கட்டத்தை அடைந்த பிறகும், சாத்தான் சோதிக்கும்போது அவர் தனக்காக அற்புதம் செய்யவில்லை. [வெறும் கற்களை ரொட்டிகளாக மாற்றும் வல்லமை இயேசுவிற்கு இருக்கிறது என்று சாத்தான் அறிந்திருந்தான்]. மேலும் அவர் வாழ்ந்த காலத்தில் மரித்த அனைவரையும் அவர் உயிரோடு எழுப்பவில்லை என்பதை கவனத்தில் வைத்துக்கொள்.

**பழைய ஏற்பாட்டிலும்,** மோசேவுடன் தேவன் பேசும் போது, எகிப்தில் இருந்த யாக்கோபின் சந்ததியான இஸ்ரவேல் மக்கள் மோசேயை ஒரு நபி என்று நம்பமாட்டார்கள் என்பதால் அற்புதங்களை கொடுத்து அனுப்பினார். மோசேயினால் செய்யப்பட்ட அற்புதங்களைக் கண்டு தான் மக்கள் அவரை நபி என்று நம்பி ஏற்றுக்கொண்டார்கள்.

எனவே, அற்புதம் என்பது தேவையில்லாமல் செய்யும் செயல் அல்ல. அல்லாஹ் மரியாளுக்கு (தேவையில்லாமல்) அற்புதம் செய்ததாக குர்-ஆன் சொல்கிறது. இந்த அற்புதம் உண்டாக்கும் பிரச்சனைகளை பார்ப்போமா?

அப்துல்லாஹ்: இல்லை.. இல்லை... நீங்கள் சொல்வது தவறு. அல்லாஹ் தன் அடியார்களுக்கு அற்புதங்களைச் செய்கிறார், இதனை நீங்கள் எப்படி மறுக்கமுடியும்?

உமர்: நான் சொல்வதை முழுவதுமாக கவனி, அவசரப்படாதே! தன் அடியார்களுக்கு இறைவன் அற்புதம் செய்யமாட்டார் என்று நான் சொன்னேனா? இல்லையல்லவா? இறைவன் அற்புதம் செய்யும் போது, ஒரு

முக்கியமான காரணத்தை முன்னிட்டுத்தான் அற்புதம் செய்வார், வேண்டாத விஷயத்திற்கு அற்புதம் செய்யமாட்டார் என்றுச் சொல்கிறேன், அவ்வளவு தான்.

**உனக்கு புரியும் படி ஒரு எடுத்துக்காட்டைச் சொல்கிறேன் கேள்:** இயேசு சுகமளிக்கிறார் என்று எல்லா கிறிஸ்தவர்களும் அறிந்திருக்கிறார்கள். ஒரு கிறிஸ்தவன் தன் அலுவலகத்தில் முக்கியமான வேலை செய்துக்கொண்டு இருக்கும் போது, அவனுக்கு சின்ன தலைவலி வருகிறது என்று வைத்துக்கொள்வோம், இப்போது இந்த தலைவலியை நீக்க அவனுக்கு இரண்டு வழிகள் உண்டு, முதலாவதாக, அவன் ஒரு தலைவலி மாத்திரையை எடுத்துக்கொண்டு சூடான டீ அல்லது காபியை குடித்துவிட்டு, சில நிமிடங்கள் ஓய்வு எடுத்துக்கொண்டால் பெரும்பான்மையான சாதாரண தலைவலிகள் நீங்கிவிடும்.

**ஆனால், அந்த கிறிஸ்தவன் மேற்கண்ட** வழியை பின்பற்றாமல், கர்த்தர் எனக்கு பரிகாரியாக இருக்கிறார் என்றுச் சொல்லி, கர்த்தர் சுகமாக்கும்வரை நான் மருந்து எடுத்துக் கொள்ளமாட்டேன் என்று அடம்பிடித்துகொண்டு, தன் அலுவலகத்தில் தன் கடமையைச் செய்யும் நேரத்தை வீணடித்துக்கொண்டு, ஒரு அறையில் உட்கார்ந்துகொண்டு மணிக்கணக்கில் ஜெபித்துக்கொண்டு இருந்தால் இயேசு சுகத்தைக் கொடுப்பாரா?

சரியான மருந்து நம் கையில் இருக்கும் போது "நீங்கள் அற்புதம் செய்தால் தான் நான் ஒப்புக்கொள்வேன்" என்றுச் சொல்லி அற்புதத்திற்காக அடம்பிடிப்பது தவறானதாகும். ஆனால், இதே தலைவலி தொடர்ந்து அனுதினமும் வந்துக்கொண்டு இருந்தால், மருத்துவரை காண்பது சிறந்தது. அதே நேரத்தில் கர்த்தரிடத்திலும் ஜெபிப்பது சரியானது.

**"அற்புதம்" தேவைப்படாத விஷயத்தில் கர்த்தரிடமிருந்து அற்புதம் வேண்டுமென்று மனிதன் அடம்பிடிப்பது முட்டாள்தனமாகும். இதே போல, "அற்புதம்" தேவைப்படாத நேரத்தில் காரணமில்லாமல் அற்புதம் செய்வது இறைவனின் முட்டாள்தனமாகும்.**

நான் மேலே சொன்ன கிறிஸ்தவனுக்கு, அல்லாஹ்விற்கும் எந்த ஒரு வித்தியாசத்தையும் நான் காணவில்லை.

தேவையில்லாமல் தான் அல்லாஹ் மரியாளுக்கு அற்புதம் செய்து இருக்கிறார்.

அப்துல்லாஹ்: ஏன் இப்படி சொல்கிறீர்கள்?

உமர்: மரியாளுக்கு 'உணவு' கொடுத்து அற்புதம் செய்ததினால் அல்லாஹ் எதனை நிருபித்துள்ளார்? இதனால் அவர் என்ன சொல்ல வருகிறார்?

அப்துல்லாஹ்: "அல்லாஹ் தான் நாடியவர்களுக்குக் கணக்கின்றி உணவளிக்கின்றான்" என்று மரியாள் சொல்கிறார்கள் அல்லவா?

உமர்: மரியாள் சொல்வது இறைவனின் பொதுவான குணமாகும். உலக படைப்பு அனைத்திற்கும் உணவு அளிப்பது இறைவனே. அதை அவன் கணக்கின்றி செய்கிறான். மரியாளுக்கு அற்புதம் செய்ய இது ஒரு காரணமா?

இந்த அற்புதத்தினால் வரும் பிரச்சனைகளை அல்லாஹ் அறிவாரா?

**சரி, இதற்கு பதில் சொல்:**

- மரியாளுக்கு உணவு அற்புதமாக வழங்கித்தான் ஆகவேண்டும் என்ற நிலையில் ஜகரிய்யா ஏழ்மையில் இருந்தாரா?
- மூன்று பேருக்கு உணவு வழங்கும் அளவிற்கு ஜகரியாவின் பொருளாதார நிலை மிகவும் கேவலமாக இருந்ததா? அல்லது
- தன்னால் மரியாளை பராமரிக்க முடியவில்லை என்று இவர் அல்லாஹ்விடம் வேண்டினாரா?

இந்த அற்புதம் மரியாளை எப்படி ஆபத்துக்குள்ளாக தள்ளுகிறது என்று உனக்குத் தெரியுமா? அதாவது, ஒரு பெண்ணுக்கு அனுதினமும் உணவை அற்புதகமாக அல்லாஹ் கொடுத்தால், அது அந்த ஊரில் உள்ளவர்கள் மத்தியில் ஒரு அதிசமான நிகழ்வாக இருந்திருக்கும். மரியாள் மிகவும் புகழ்பெற்ற பெண்ணாக கருதப்பட்டிருப்பார்கள் அல்லது ஊரில் உள்ள அனைவருக்கும் தெரிந்த ஒரு பெண்ணாக இந்த அற்புதத்தினால் மாறியிருந்திருப்பார்கள். விஷயம் இப்படியிருக்கும் போது:

- மரியாள் கர்ப்பம் தரித்தவிஷயம் யாருக்கும் தெரியாமல் போனதெப்படி?
- அனைவருக்கும் அறிமுகமான பெண் கர்ப்பம் தரித்து யாருக்கும் தெரியாத இடத்திற்கு சென்றுவிட்டார் என்று குர்-ஆன் சொல்கிறது. இது எப்படி சாத்தியமாகும்? ஜகரியா மரியாளை தேடவில்லையா?
- ஊர் மக்கள் மரியாளை தேடவில்லையா?
- ஒரு பெண் 9 மாதம் எப்படி தன் கர்ப்பத்தை மறைக்கமுடியும்? மூன்று மாதம் மறைக்கலாம், ஆனால், 9 மாதம் மறைக்கமுடியுமா?
- மேலும் ஜகரிய்யா மற்றும் எலிசபெத் அவர்கள் முதிர்ந்த வயதை அடைந்த பின்னும் ஒரு குழந்தையை பெற்றெடுத்ததால், இவர்கள் குடும்பம் அனைவரும் அறிந்த குடும்பமாக இருந்திருக்கும். இன்னும் இவர்கள் வீட்டில் வளரும் மரியாளுக்கு அல்லாஹ் உணவை அற்புதமாக கொடுத்ததால், இன்னும் இவர்களின் புகழ் அதிகமாக பரவியிருக்கும். இந்நிலையில் மக்கள் எப்படி மரியாளை மறந்திருக்கமுடியும்?

ஆக, தம்பி, அல்லாஹ் செய்த அற்புதம், மரியாளை புகழ்பெற்ற பெண்ணாக மாற்றியிருக்கும். குறைந்தபட்சம் ஊரில் உள்ள அனைவரும் தெரிந்த பெண்ணாக மாற்றியிருக்கும். இப்படிப்பட்ட பெண், 9 மாதம் குழந்தையை மறைத்துவைத்து, பிள்ளை பெற்றவுடன் மக்களிடம் கொண்டுச் செல்வது என்பது, நடைமுறையில் சாத்தியமில்லாத விஷயமாகும். நடைமுறையில் சாத்தியமில்லாதவைகளைத் தான் குர்-ஆன் அதிகமாகச் சொல்கிறது.

இதற்கு உன் பதில் என்ன?

அப்துல்லாஹ்: நான் கேட்ட கேள்வி என்ன? ஏன் இந்த அற்புதம் பைபிளில் சொல்லப்படவில்லை என்பதாகும். ஆனால், நீங்கள் இதற்கு பதில் சொல்லவில்லை?

உமர்: முதலில், நீ சொன்ன அற்புதமே ஒரு இட்டுக்கட்டப்பட்ட கதை என்று தெளிவாக தெரியும் போது, ஏன் இதர விஷயங்களை சிந்திக்கவேண்டும்?

தள்ளுபடி ஆகமங்களிலிருந்து:

மேலும், பைபிளில் இல்லாத இந்த அற்புதம் எப்படி முஹம்மதுவிற்கு தெரிந்தது என்று நீ கேட்கலாம்? இரண்டாம் நூற்றாண்டிலிருந்து அனேகர் அனேகவிதமான கதைகளை

எழுதினார்கள். இயேசுவின் இளமைப்பருவம் தொடங்கி, அவர் மரிக்கும் வரையில், பைபிளில் சொல்லாத அனேக விஷயங்களை மக்கள் கற்பனை செய்து சுயமாக எழுதினார்கள். இவைகளை அறிஞர்கள் தள்ளுபடி ஆகமங்கள் என்று வரையறுத்துள்ளார்கள். இந்த வரிசையில் தான் "யாக்கோபின் சுவிசேஷம் – Gospel of James" என்ற தள்ளுபடி ஆகமத்தில் குர்-ஆனில் சொல்லப்பட்ட அற்புதம் எழுதப்பட்டுள்ளது. இப்புத்தகத்திலிருந்து ஒரு வசனத்தை உனக்கு படிக்க தருகிறேன்:

8.1 . . . .And Mary was in the temple of the Lord as a dove that is nurtured: and **she received food from the hand of an angel**.

(Source: **www.gnosis.org/library/gosjames.htm** and http://en.wikipedia.org/wiki/Gospel_of_James)

இரண்டாம் நூற்றாண்டு முதற்கொண்டு மக்கள் மத்தியில் நிலவிய இப்படிப்பட்ட கதைகளை கேட்டு, முஹம்மது குர்-ஆனில் அவைகளை புகுத்தியுள்ளார். இவைகள் எல்லாம் பைபிளில் காணப்படவேண்டும் என்று எதிர்ப்பார்ப்பது முட்டள்தனமாகும், தம்பி. இன்னும் அனேக கட்டுக்கதைகள முஹம்மது குர்-ஆனில் இறைவசனங்களாக சேர்த்துள்ளார், அவைகளை நேரம் வரும் போது உனக்கு விளக்குகிறேன்.

அப்துல்லாஹ்: எவைகளைச் சொன்னாலும், ஏதோ ஒரு பதிலை தருகிறீர்கள், இது சரியானதல்ல.

உமர்: இதற்கு நான் என்ன முடியும்? உன் குர்-ஆனில் உள்ள குளறுபடிகளை இப்படிப்பட்ட சரித்திர பிழைகளை சொல்லாமல் இருக்கமுடியாதே! நீ தானே கேள்வி கேட்டாய்! உனக்கு பதில் சொல்லவேண்டியது என் கடமையாகும்.

இயேசுவின் பிறப்பின் விஷயத்திலும், அவரின் சிலுவை மரண விஷயத்திலும், குர்-ஆன் பெரிய தவறுகளை செய்துள்ளது. மக்கள் மத்தியிலே நிலவும் கட்டுக்கதைகளை சொல்லிவிட்டால் மக்கள் நம்பிவிடுவார்கள் என்று முஹம்மது நினைத்துவிட்டார். தள்ளுபடி ஆகமங்களில் உள்ள விவரங்களை உண்மை என்று எண்ணிவிட்டார். இன்னும் அனேக விஷயங்களை நான் சொல்லமுடியும்.

அப்துல்லாஹ்: அண்ணே, போதும்..போதும். நீங்கள் சொன்ன அந்த தள்ளுபடி ஆகமத்தை படித்துவிட்டு, நாளைக்கு நான் வருகிறேன் அப்போது பார்ப்போம்.

உமர்: சரி தம்பி. நான் சொன்ன விஷயங்களை சிந்தித்துப்பார். நாளைக்கு பார்க்கலாம்.

**மூலம்**

**உமரின் 2013 கிறிஸ்மஸ் தொடர் கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/xmas2013/xmas2013part2.html

# 31. அஹமத் தீதத்துக்கு மறுப்பு: பைபிளில் "அல்லாஹ்", அஹமத் தீதத் கொடுத்த "அல்வா"

**இது அஹமத் தீதத் அவர்களின் அறியாமையா? அல்லது மக்களை ஏமாற்றும் யுக்தியா?**

**முன்னுரை:** காலஞ்சென்ற இஸ்லாமிய அறிஞர் அஹமத் தீதத் அவர்களை (இஸ்லாமிய வட்டாரங்களில்) தெரியாதவர்கள் இருக்கமாட்டார்கள் என்றுச் சொல்லலாம். இவருக்கு இஸ்லாமியர்களிடையே அதிக செல்வாக்கு இருக்கிறது. இஸ்லாமியர்களுக்கே உரித்தான பாணியில் உண்மையை மாற்றி திருத்திச் சொல்வதில் இவர் மன்னர் என்றால் மிகையாகாது. இவரது இடத்தை எனக்குத் தெரிந்தவரை திரு ஜாகிர் நாயக் அவர்களும், தமிழ் பேசும் மக்களின் மத்தியில் திரு பீஜே அவர்களும் நிறப்பிக்கொண்டு இருக்கிறார்கள். இவர்களைப் பற்றி இப்படி விமர்சிக்க எனக்கு (உமருக்கு) தகுதி உண்டு, ஏனென்றால் பீஜே மற்றும் ஜாகிர் நாயக் அவர்களின் எழுத்துக்களில் இருக்கும் ஏமாற்றுத் தன்மையை மக்களுக்கு எடுத்துச் சொல்லிக்கொண்டு இருக்கிறேன். இவர்களுக்கு நான் கொடுத்த மறுப்புக்களை இங்கு (http://isakoran.blogspot.com) படிக்கவும்.

இந்த கட்டுரையில் திரு அஹமத் தீதத் அவர்கள் எப்படி மக்களை ஏமாற்றுகிறார் என்பதை பார்க்கப்போகிறோம். இது இவரது அறியாமையா அல்லது வஞ்சிக்கும் திறமையா? அனேக நாடுகளுக்குச் சென்று இஸ்லாமுக்காக உழைத்தவர், அனேக அறிஞர்களை சந்தித்து பேசியவர், அதிக ஞானமுள்ளவர் என்று பெயர் பெற்ற ஒருவர் இப்படி ஒரு "ஆங்கில வாக்கியத்திற்கு என்ன பொருள்" என்பதையும் தெரியாமல் புத்தகம் எழுதுவாரா என்ற சந்தேகம் வருகிறது. இது அறியாமை அல்ல, இது ஒரு ஏமாற்று வேலை.

அஹமத் தீதத் தன்னுடைய "Is the Bible God's Word?" என்ற புத்தகத்தில் எழுதியவைகளை படத்தோடு கீழே தருகிறோம், அதன் பிறகு அதற்கான மறுப்பை பார்ப்போம்.

**கிறிஸ்தவ பைபிளில் அல்லாஹ்**

5. ALLAH IN THE CHRISTIAN BIBLE

The Rev. C. I. Scofield, D. D. with a team of 8 Consulting Editors, also all D.D.'s in the "Scofield Reference Bible" thought it appropriate to spell the Hebrew word "**Elah**" (meaning God) alternatively as "**Alah**" The Christians had thus swallowed the camel — they seemed to have accepted at last that the name of God is Allah — but were still straining at the gnat by spelling Allah with one "L"! (Photographic reproduction of the Bible page showing the word "**ALAH**" is preserved here for posterity below). ...




(Ahmed Deedat, Is the Bible God's Word?, ch. 4, pp. 21-22) **மூலம்**

இந்த பக்கத்தை/படத்தை முழுவதுமாக பார்க்க **இந்த தொடுப்பை சொடுக்கவும்.**

***அஹமத் தீதத் அவர்கள் கூறுவது:***

1) எபிரேய வார்த்தை "**Elah**" என்பதை "Alah" என்று உச்சரிக்கலாமாம்.

2) கிறிஸ்தவர்கள் முழு ஒட்டகத்தை (முழு பூசணிக்காயை) விழுங்கிவிட்டார்களாம், கடைசியாக, தங்கள் தேவனின் பெயர் "Allah - அல்லாஹ்" என்பதை ஒப்புக்கொண்டார்களாம்.

3) இப்படி கிறிஸ்தவர்கள் ஒப்புக்கொண்டாலும், “ALLAH” என்று உச்சரிக்காமல், அதிலிருந்து "L" என்ற ஒரு எழுத்தை எடுத்துவிட்டு “ALAH” என்று உச்சரிக்கிறார்களாம்.

4) அவரது ஆராய்ச்சிக்கு அவர் ஆதாரமாக காட்டுவது "Scofield Reference Bible" என்ற ஆங்கில பைபிள் மொழியாக்கத்தில் கொடுக்கப்பட்ட விளக்கவுரையாகும்.

## அஹமத் தீதத் அவர்களுக்கு மறுப்பு:

"**Scofield Reference Bible**" என்ற பைபிள் மொழியாக்கத்தின் விளக்கவுரை படத்தை இவர் தன்னுடைய புத்தகத்தில் பதித்தார், மற்றும் அதன் மீது "**The word ALLAH in the Christian Bible in the Latest SCOFIELD VERSION, THE WORD “ALLAH” IS NOW OMITTED**" என்ற வரிகளையும் அச்சிட்டு வெளியிட்டுள்ளார், அதனை நாம் மேலே காணலாம்.

தீதத் அவர்கள் வட்டமிட்டு மேற்கோள் காட்டிய வரிகளை கீழே தருகிறேன், அதனை படிக்கவும், அப்படத்தில் உள்ளது போலவே நான் எழுதியுள்ளேனா என்பதை சரி பார்க்கவும்.

“**Elohim** (sometimes El or Elah), English form "God", the first of the three primary names of Deity, is a uni-plural noun formed from El - strength, or the strong one, and **Alah, to swear, to bind oneself by an oath, so implying faithfulness.**”

ஓரளவிற்கு ஆங்கிலம் தெரிந்தவர் மேலே உள்ள வரிகளை படித்தால், பைபிளில் இறைவனின் பெயர் "அல்லாஹ்" என்று உள்ளது என்றுச் சொல்வாரா?

“சொல்லமாட்டார்” என்பது தான் பதிலாக வரும். ஆனால், இஸ்லாமிய மேதையாகிய அஹமத் தீதத் அவர்கள் மட்டும் "பைபிளில் இறைவனின் பெயர் "அல்லாஹ்" என்று கிறிஸ்தவர்கள் ஒப்புக்கொண்டார்கள்" என்று கூறுகிறார். இவருக்கு குறைந்த பட்சம் ஆங்கில அறிவு இருக்கிறதா என்று கேட்கத் தோன்றுகிறது, ஆனால், உண்மை இதுவல்ல, அஹமத் தீதத் ஒரு ஏமாற்றுக்காரர், வஞ்சிக்கிறவர், எப்படியாவது இஸ்லாமுக்கு நல்லபெயர் கொண்டு வர எவ்வளவு கீழ்தரமாக செயல்படமுடியுமோ அவ்வளவு செயல்படுவார் என்பது இதன் மூலம் அறியலாம். இவர் மட்டுமல்ல, எல்லா இஸ்லாமிய அறிஞர்களின் நிலையும் இதுதான்.

**சரி, மேற்கண்ட ஆங்கில வரிகளை அலசுவோம்:**

**1) “Elohim- எலோஹிம்”** (தேவன்/இறைவன்/கடவுள்) என்ற வார்த்தை இரண்டு வார்த்தைகளின் கூட்டு என்று இந்த விளக்கவுரையில் ஆசிரியர் எழுதுகிறார். (யூசுப் அலி அவர்களும், பீஜே அவர்களும் தங்கள் குர்ஆன் மொழியாக்கத்தில் பின்குறிப்பு மற்றும் விளக்கவுரைகளை எழுதுவது போல, இவர்களும் எழுதியிருந்தார்கள்.)

**2) அந்த இரண்டு வார்த்தைகள்** "EL" மற்றும் "ALAH” என்பதாகும்.

**3) "EL" என்றால்,** வலிமை அல்லது வலிமை உள்ளவன் என்று பொருள் (El - strength, or the strong one)

**4) "ALAH" என்றால் சத்தியம் செய்தல்**, வாக்குறுதி கொடுத்தல், செய்த சத்தியத்திற்கு கட்டுப்பட்டு இருத்தல் என்று பொருள் (Alah, to swear, to bind oneself by an oath, so implying faithfulness).

## இந்த விளக்கத்தில் எந்த இடத்தில் "Alah" என்றால் "God" என்று பொருள் என்று விளக்கவுரை கூறுகிறது?

அஹமத் தீதத் அவர்களுக்கு மட்டும் எப்படி வேறு மாதிரியாக தெரிகிறது?

ஏமாற்றுபவர்களுக்கு உண்மையை திருத்திக் கூறவேண்டும் என்று விரும்புகிறவர்களுக்கு எல்லாமே அவர்களுக்கு சாதகமாகவே தெரியும், இந்த இலட்சணத்தில் "கிறிஸ்தவர்கள் முழு ஒட்டகத்தை விழுங்கிவிட்டார்கள்" உண்மையை மறைத்துவிட்டார்கள் என்று கூறுகிறார்.

## ஓ அஹமத் தீதத் அவர்களே, உங்கள் வயதுக்கும், அறிவிற்கும் இப்படிப்பட்ட கிண்டர்கார்டன் விளக்கங்களை நீங்கள் கொடுப்பது உங்களுக்கு ஏற்புடையதாக இருக்கிறதா?

அஹமத் தீதத் அவர்கள் "பைபிள் விளக்கவுரையில் 'Alah' " என்று இருப்பதை மேற்கோள் காட்டினார், பொருள் தவறாக கூறியுள்ளார். நான் "அலாஹ்", "அல்லா" மற்றும் "அல்லாஹ்" என்ற வார்த்தைகள் எபிரேய மற்றும் கிரேக்க மூல மொழிகளில் என்ன பொருளோடு பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை கீழ்கண்ட கட்டுரையில் தெளிவாக விளக்கியுள்ளேன்.

**ஜியா அவர்களுக்கு பதில் - "அல்லாஹ்" என்றால் "கர்வாலி மரம்" என்று பொருள்**

| பழைய ஏற்பாடு | | | | | |
|---|---|---|---|---|---|
| Sl.no | Hebrew No | Hebrew Word | Transliteration | Meaning | பொருள் |
| 1 | H421 | אָלָה | *'alah* | to lament, wail | புலம்பல்/ஒப்பாரி |
| 2 | H422 | אָלָה | *'alah* | to swear, curse | சத்தியம் செய்தல், சபித்தல் (சாபம்) |
| 3 | H423 | אָלָה | *'alah* | curse, cursing, execration, oath, swearing | சத்தியம் செய்தல், சபித்தல் (சாபம்) |
| 4 | H424 | אֵלָה | *'elah* | Oak, terebinth tree & valley where David killed Goliath. | கர்வாலி மரம், பெரிய மரம் |
| 5 | H427 | אַלָּה | *'allah* | oak, terebinth | கர்வாலி மரம், பெரிய மரம் |
| புதிய ஏற்பாடு | | | | | |
| Sl.no | Greek No | Greek Word | Transliteration | Meaning | பொருள் |
| 1 | G235 | ἀλλά | *alla* | but, nevertheless, notwithstanding, an objection, an exception, a restriction, nay, rather, yea, moreover, forms a transition to the cardinal matter | ஆனால், இல்லை... |

**இனி எந்த இஸ்லாமியரும், "விளக்கவுரையில்" கொடுக்கப்பட்ட விவரங்களில் "அல்லாஹ்" இருக்கிறார் என்பதை தேடி அலையவேண்டாம், பைபிள் வசனங்களிலேயே "அல்லாஹ்" என்ற வார்த்தை இருக்கிறது என்பதை தெரிந்துக்கொள்ளட்டும். ஆனால், அவ்வார்த்தைக்கு பொருள் கர்வாலி மரம், சாபம், சத்தியம் செய்தல் மற்றும் ஒப்பாறி வைத்து புலம்புதல் என்பதாகும் என்பதை எல்லா இஸ்லாமியர்களும் அறிந்துக்கொள்ளட்டும்.**

Scofield Version குழுவினர் தங்களுடைய அடுத்த பதிவில் தாங்கள் கொடுத்த விளக்கம் (Commentary) சரியானது அல்ல என்பதை அறிந்து அவர்கள் திருத்திவிட்டார்கள்.

முடிவுரை: இஸ்லாமிய அறிஞர்களே, நீங்கள் கிறிஸ்தவர்களை ஏமாற்றியது போதும், அல்வா கொடுத்தது போதும். இனி இப்படி செய்யாதீர்கள். மூத்த அறிஞர்கள் என்ற பெயர் பெற்ற அஹமத் தீதத் முதற்கொண்டு, நெற்று முளைத்த இஸ்லாமிய அறிஞர்கள் வரை, மாற்று மத அன்பர்களை "ஏமாற்றுவதை" ஒரு கலையாக பாவித்து நடந்துக்கொள்கிறார்கள். அஹமத் தீதத் அவர்கள் செய்தது போல பொய்யான தகவலை கொடுக்கவேண்டாம் என்று உங்களை எச்சரிக்கிறேன், நாங்கள் கேட்கமாட்டோம் என்றுச் சொல்வீர்களானால், அதனால் விளையும் விளைவை நீங்கள் அறுக்க தயாராகிவிடுங்கள்.

மூலம்: http://isakoran.blogspot.in/2011/02/answering-ahmad-deedat.html

**அஹமத் தீதத் அவர்களுக்கு உமரின் மறுப்புக்கள்**

**உமரின் இதர மறுப்புக்கள்/கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/answer_ahmad_deedat/deedat_elah_allah.html

# 32. ஆபிரகாமின் சந்ததி – அல்லாஹ் ஏன் ஆபிரகாமின் சந்ததி பட்டியலை தாறுமாறாக கூறுகிறார்

கீழ்கண்ட குர்-ஆன் வசனங்களை ஒரு குறிப்பிட்ட வகையில் பதித்துள்ளேன். இக்கட்டுரையில் சொல்லப்படும் விவரங்கள் தெளிவாக புரியவேண்டும் என்பதற்காக இப்படி பதிக்கப்பட்டுள்ளது.

**குர்-ஆன் ஸூரா 6:83-89**:

83. இவை நம்முடைய ஆதாரங்களாகும், நாம் இவற்றை **இப்ராஹீமுக்கு** அவருடைய கூட்டத்திற்கு எதிராகக் கொடுத்தோம்; நாம் விரும்புவோருக்கு பதவிகளை (மேலும் மேலும்) உயர்த்துகிறோம்; நிச்சயமாக உம்முடைய இறைவன் பூரண ஞானமும் பேரறிவும் உள்ளவன்.

84. நாம் **அவருக்கு இஸ்ஹாக்கையும், யஃகூபையும்** (சந்ததியாகக்) கொடுத்தருளினோம், இவர்கள் அனைவரையும் நாம் நேர்வழியில் செலுத்தினோம்;

**இதற்கு** முன்னர் நாம் **நூஹையும்**

**அவருடைய** சந்ததியிலிருந்து

**தாவூது, ஸுலைமான், அய்யூப், யூஸுஃப், மூஸா, ஹாரூன்**

ஆகியோரையும் நேர்வழியில் செலுத்தினோம்;

இப்படியே நாம் நன்மை புரிவோருக்கு நற்கூலி வழங்குகிறோம்.

6:85. இன்னும், **ஜகரிய்யா, யஹ்யா, ஈஸா, இல்யாஸ்** -

இவர்கள் யாவரும் (நேர் வழிசார்ந்த) ஸாலிஹானவர்களில் நின்றுமுள்ளவர்களே.

6:86. இன்னும் **இஸ்மாயீல், அல்யஸவு, யூனுஸ், லூத்** -

இவர்கள் யாவரையும் உலகத்திலுள்ள அனைவரிலும் மேன்மையாக்கினோம்.

6:87. இவர்களுடைய மூதாதையர்களிலிருந்தும், இவர்களுடைய சந்ததிகளிலிருந்தும், இவர்களுடைய சகோதரர்களிலிருந்தும் (பலரை) நாம் தேர்ந்தெடுத்து, அவர்களை நேர் வழியில் செலுத்தினோம்.

6:88. இதுவே அல்லாஹ்வின் நேர் வழியாகும், தன் அடியார்களில் அவன் யாரை விரும்புகிறானோ, அவர்களுக்கு இதன்மூலம் நேர்வழி காட்டுகிறான்; (பின்னர்) அவர்கள் இணைவைப்பார்களானால், அவர்கள் செய்து வந்ததெல்லாம், அவர்களை விட்டு அழிந்துவிடும்.

6:89. இவர்களுக்குத்தான் நாம் வேதத்தையும், அதிகாரத்தையும், நபித்துவத்தையும் கொடுத்தோம்; ஆகவே இவற்றை இவர்கள் நிராகரித்தால் இதனை நிராகரிக்காத ஒரு சமுதாயத்தினரை இதற்கு நாம் நிச்சயமாக பொறுப்பாக்குவோம். (குர்-ஆன் 6:83-89)

அல்லாஹ், பெயர்களின் பட்டியலை கொடுக்கும் போது அவைகளை தாறுமாறாக மாற்றி கொடுக்க காரணம் என்ன? ஏன் குர்-ஆனில் பெயர்கள் ஒரு வரிசை கிரமமாக கொடுக்கப்படாமல் இருக்கின்றது?

மேற்கண்ட நபர்கள் வாழ்ந்த காலங்களின் படி, அவர்களை வரிசைப் படுத்தவேண்டுமென்றால், அவைகளை கீழ்கண்ட விதமாக வரிசைப்படுத்தி பட்டியலிடவேண்டும்.

**ஆபிரகாமின் சந்ததியிலிருந்து:**

இஸ்மாயில், ஈசாக்கு, யாக்கோபு, யோசேப்பு, ஆரோன், மோசே, தாவீது, சாலொமோன், எலியா, எலிஷா, யோனா, ஜகரிய்யா, யோவான் ஸ்நானகன் மற்றும் இயேசு.

இது குர்-ஆனின் மிகப்பெரிய பிழை என்று சொல்லமுடியாது, ஆனால், சர்வத்தையும் அறிந்த அல்லாஹ்விற்கு எப்படி இந்த குழப்பம் வந்தது என்பது தான் கேள்வி?

**குர்-ஆனின் இவ்வசனங்கள் பற்றி பல கேள்விகள் எழுகின்றன:**

முதலாவதாக, லோத்தும் யோபுவும் ஆபிரகாமின் சந்ததி இல்லை என்பதை கவனிக்கவும். லோத்து ஆபிரகாமின் சகோதரனுடைய மகன் ஆவார், தனக்கு பிறந்தவரல்ல. ஆபிரகாம் இஸ்ரவேல் நாட்டிற்கு சென்ற போது, அவரோடு கூட சென்றவர் தான் லோத்து. இந்த நேரத்தில் ஆபிரகாமுக்கு பிள்ளைகள் பிறக்கவில்லை (பார்க்க ஆதியாகமம் 11:27-30, 12:4-5).

அடுத்தபடியாக, யோபுவைப் பற்றி பார்ப்போம். இவரைப் பற்றி அதிகமாக விவரங்கள் கொடுக்கப்படவில்லை என்றாலும், இவர் வேறு ஒரு நாட்டில் / இடத்தில் வாழ்ந்தவராவார். இவர் ஆபிரகாமின் சந்ததியில் பிறந்தவர் அல்ல. குர்-ஆனின் வசனங்கள் அமைக்கப்பட்டுள்ள வகையை கூர்ந்து கவனித்தால், அவைகள் ஆபிரகாமைப் பற்றியும், அவரது சந்ததியில் வந்தவர்கள் பற்றியும் பட்டியலிட்டுத் தருகின்றது. இந்த பட்டியலில் உள்ளவர்களோடு ஆபிரகாமுக்கு ஒரு உறவுமுறை இருப்பது போன்று அமைக்கப்பட்டுள்ளது.

நோவா மட்டுமே ஆபிரகாமுக்கு முன்பு வந்தவர். மற்ற பெயர்கள் அனைத்தும் ஆபிரகாமுக்கு பிறகு வந்தவர்கள் என்றும், அவரது சந்ததி என்ற வகையிலும் குர்-ஆன் பேசுகின்றது.

இதுமட்டுமல்ல, குர்-ஆன் 89ம் வசனம், "இவர்களுக்குத் தான் நாம் வேதத்தையும், அதிகாரத்தையும், நபித்துவத்தையும் கொடுத்தோம்" என்று சொல்கிறது.

இவ்வசனம் குறிப்பிடும் "**வேதம்**" (the Book) எது? இதற்கு பதிலாக, "இவர்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக **ஒரு வேதம் (a Book)** கொடுக்கப்பட்டது" என்று சொல்லியிருந்தால் சரியாக இருந்திருக்கும் அல்லவா? இவர்கள் அனைவருக்கும் எப்படி ஒரே வேதம் கொடுக்கப்பட்டிருக்க முடியும்? அது எந்த புத்தகம்?

குர்-ஆனின் இதர இடங்களில் வாசிக்கும் போது மோசேக்கு தோரா கொடுத்ததாகவும், தாவீதுக்கு ஜபூர் கொடுத்ததாகவும், இயேசுவிற்கு இன்ஜில் கொடுத்ததாகவும் தனித்தனியாக சொல்லப்படுகின்றது. ஆனால்,

மேற்கண்ட வசனத்தை படித்தால், இவர்கள் அனைவருக்கும் கொடுக்கப்பட்டது "ஒரே வேதத்தை தானா?" என்ற கேள்வி எழுகின்றது.

இஸ்லாமிய நபி முஹம்மதுவிற்கும் "**ஒரு வேதம்/புத்தகம்**" கொடுக்கப்பட்டது. அப்படியானால், இந்த கணக்கு சரியாக இருக்குமா?

இவைகள் அனைத்தையும் ஒரு வேதம்/புத்தகம் என்று அழைக்கமுடியுமா?

**தோரா = ஜபூர் = இன்ஜில் = குர்-ஆன்?**

அதாவது தோரா என்றுச் சொன்னாலும், ஜபூர் என்றுச் சொன்னாலும், இன்ஜில் என்றுச் சொன்னாலும், கடைசியாக குர்-ஆன் என்றுச் சொன்னாலும் அது ஒரு புத்தகத்தையே குறிக்கும் என்று கருதமுடியுமா?

(சிலர் ஆம், மேற்கண்ட கணக்கு சரியானது என்றுச் சொல்கிறார்கள், இதைப் பற்றி அறிய இங்கு சொடுக்கி படிக்கவும் - http://www.answering-islam.org/Quran/Versions/004.159.html).

குர்-ஆன் சொல்வது போல "எல்லோருக்கும் ஒரே வேதம் கொடுக்கப்பட்டது" என்று குர்-ஆனுக்கு முன்பு வந்த பைபிளில் சொல்லப்படவில்லையே! வேதக்காரர்களிடம் இருக்கும் தோராவும், ஜபூரும்(சங்கீதம்), இன்ஜிலும் (சுவிசேஷங்கள்) தனித்தனி வேதங்களாகவும், புத்தகங்களாகவும் இருக்கின்றன, அதே போல குறிப்பிடப்பட்டும் இருக்கின்றன.

யோவான் ஸ்நானகனின் தந்தை ஜகரியாவிற்கு எந்த வேதம் கொடுக்கப்பட்டது? இதுமட்டுமல்ல, யோவான் ஸ்நானகனுக்கு கொடுக்கப்பட்ட வேதம் எது? அதன் பெயர் என்ன? இஸ்மாயிலுக்கு கொடுக்கப்பட்ட வேதம் எது? அதன் பெயர் என்ன? தேவனுடைய உண்மையான வெளிப்பாடாக இருக்கும் பைபிளின் படி பார்க்கும் போது, குர்-ஆனின் இவ்விதமான கூற்றுக்கள் அனைத்தும் ஒன்றையொன்று முரண்படுகின்றதை காணமுடியும். இது மட்டுமல்ல, குர்-ஆனின் ஒரு வசனம், இதர வசனங்கள் சொல்லும் விவரங்களோடும் மற்றும் இதர இஸ்லாமிய ஹதீஸ்களோடும் மோதுகின்றன / முரண்படுகின்றன. இந்த ஹதீஸ்கள் அல்லாஹ்விடம் இருக்கும் "**தாய் புத்தகத்திலிருந்து**" கொடுக்கப்பட்ட வெளிப்பாடுகள் அல்ல என்பதை கவனத்தில் கொள்ளவும்.

இதே போல ஒரு வசனத்தை நாம் குர்-ஆன் 29:27ல் காணலாம், இதிலும் ஒரு தவறு உள்ளது.

மேலும், அவருக்கு இஸ்ஹாக்கையும், யஃகூபையும் அளித்தோம்; இன்னும் அவருடைய சந்ததியிலே, நபித்துவத்தையும், வேதத்தையும் ஏற்படுத்தினோம்; அவருக்கு அவருடைய கூலியை இவ்வுலகத்திலும் கொடுத்தோம்; நிச்சயமாக மறுமையில் அவர் நல்லவர்களில் ஒருவராவார். (குர்-ஆன் 29:27)

மேற்கண்ட வசனத்தில் வரும் "**அவருடைய சந்ததியிலே**" என்ற சொற்றொடர் பற்றி பலர் பலவிதமாக கருத்து கூறுகின்றனர்:

- சிலர், கடைசியாக பெயர் குறிப்பிடப்பட்ட "யாக்கோபு உடைய சந்ததியிலிருந்து நபித்துவமும், வேதமும் வரும் என்று பொருள் கொள்ளவேண்டும்" என்று கூறுகிறார்கள்.
- வேறு சிலர் "ஆபிரகாமின் சந்ததி அனைவரிலிருந்தும் நபித்துவமும், வேதமும் வரும்" என்று பொருள் கொள்ளவேண்டும் என்று கூறுகின்றனர்.

நபித்துவம் என்பது ஆபிரகாமின் சந்ததிக்கு உரியது என்று இவ்வசனம் சொல்கிறது. இவ்வசனத்திற்கு முன்புள்ள (29:26) மற்றும் பின்புள்ள (29:28) வசனங்களை கவனித்தால், அதில் லோத்தைப் பற்றி குர்-ஆன் பேசுகின்றது. லோத்து ஆபிரகாமின் சந்ததியும் அல்ல, யாக்கோபின் சந்ததியும் அல்ல என்பதை கவனிக்கவும். இதே போல, யோபுவும், நோவாவும் ஆபிரகாமின் சந்ததிகள் அல்ல. இதனைப் பற்றி மேலும் அறிய படிக்கவும்: குர்-ஆன் 16:36ன் முரண்பாடு (**எல்லா நாடுகளிலிருந்தும் நபிகளா? அல்லது ஆபிரகாமின் சந்ததியிலிருந்து மட்டும் நபிகளா?**)

**இன்னொரு பிரச்சனை:** இக்கட்டுரையில் பார்த்த வசனத்தின் படி, புத்தகம் (அல் கிதாப் – வேதம்) கொடுக்கப்பவர்களின் பட்டியலில் இஸ்மாயிலும் இருக்கிறார். ஆனால், குர்-ஆன் 6:156-157ன் படி, "வேதம்" என்பது இவருக்கு முன்பு இரண்டு சமுகத்தாருக்குத் தான் கொடுக்கப்பட்டது, இவர்களில் அரபியர்களின் சமூகம் இல்லை.

6:156. **நமக்கு முன் இரு கூட்டத்தினர் மீது மட்டுமே வேதம் இறக்கப்பட்டது** - ஆகவே நாங்கள் அதனைப் படிக்கவும் கேட்கவும் முடியாமல் பாராமுகமாகி விட்டோம் என்று நீங்கள் கூறாதிருக்கவும்;

6:157. **அல்லது மெய்யாகவே எங்கள் மீது ஒரு வேதம் அருளப்பட்டிருந்தால், நிச்சயமாக நாங்கள் அவர்களைவிட மிக்க நேர்மையாக நடந்திருப்போம் என்று நீங்கள் கூறாதிருக்கும் பொருட்டும்** (இவ்வேதத்தை அருளினோம்);ஆகவே உங்களுடைய இறைவனிடமிருந்தும் மிகத்தெளிவான வேதமும், நேர்வழியும், அருளும் வந்துவிட்டது - எவனொருவன் அல்லாஹ்வின் வசனங்களைப் புறக்கணித்து, அவற்றைவிட்டு விலகிவிடுகின்றானோ அவனைவிட அதிக அநியாயக்காரன் யார்? நம்முடைய வசனங்களை விட்டுவிலகிக் கொள்கிறவர்களுக்கு, அவர்கள் விலகிக் கொண்ட காரணத்தால் கொடிய வேதனையைக் கூலியாகக் கொடுப்போம்.

இது எப்படி சாத்தியமாகும்? இதன்படி பார்த்தால், குறைஷிகள் இஸ்மாயிலின் சந்ததியிலிருந்து வந்தவர்கள் இல்லையா? இஸ்மாயிலின் சந்ததிக்கு கொடுக்கப்பட்ட வேதத்தை குறைஷிகள் பெறவில்லையா? இவ்வசனங்களில் உள்ள பிரச்சனைகளை தனிக் கட்டுரையாக பிறகு காண்போம்.

மூலம்: **http://www.answering-islam.org/Quran/Contra/qb012.html**

**குர்-ஆன் முரண்பாடுகள் பற்றிய கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/quran/contra/qb012.html

# 33. குர்ஆன் 35:8 - அல்லாஹ்வின் பிழையை சரி செய்யும் பீஜே போன்ற இஸ்லாமியர்கள்

**முன்னுரை:** பீஜே போன்ற இஸ்லாமிய அறிஞர்கள், குர்ஆன் பற்றி கூறும் போது, "குர்ஆன் ஒரு அற்புதம், அரபி இலக்கிய நூல்களில் குர்ஆன் போன்றதொரு புத்தகம் இல்லை" என்பார்கள். இன்னும் ஒரு படி மேலே சென்று, குர்ஆன் போன்ற ஒரு புத்தகம் உலகில் வேறு எதுவும் இல்லை என்றும், குர்ஆனின் ஒவ்வொரு வசனமும், வார்த்தையும் எழுத்தும் அல்லாஹ்வினால் கொடுக்கப்பட்டுள்ளது. குர்ஆனில் ஒரு பிழையையும் நாம் காணமுடியாது என்று பலவாறு கூறுவார்கள்.

இவைகளை கேட்கின்ற பாமர இஸ்லாமியர்கள் பெருமிதம் கொள்வார்கள், அதே சமயத்தில் இஸ்லாமியரல்லாதவர்கள் "அப்படியா" என்று ஆச்சரியப்படுவார்கள். ஆனால், இந்த இஸ்லாமிய அறிஞர்கள் சொல்வது உண்மையா? குர்ஆன் மாற்றப்படாமல் அப்படியே உள்ளதா? குர்ஆனில் பிழைகள் எதுவும் இல்லையா? என்று நாம் கேட்டு, சிறிது நேரம் எடுத்து ஆராயும் போது, பீஜே போன்றவர்கள் சொல்வது உண்மையல்ல, அவைகள் பொய்கள் என்பது புரியும்.

சரி, இந்த தற்போதைய கட்டுரையில், இஸ்லாமிய அறிஞர்கள், குர்ஆனில் உள்ள பிழைகளை எப்படி திருத்துகிறார்கள் அல்லது சரி செய்ய முயற்சி எடுக்கிறார்கள் என்பதை "குர்ஆன் 35ம் அதிகாரம், 8ம் வசனத்தைக் கொண்டு" நாம் பார்க்கலாம்.

## 1) குர்ஆனை தமிழாக்கம் செய்யும் போது, மேற்கொள்ளவேண்டிய ஏற்பாடுகள்:

குர்ஆனை ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்கு மொழியாக்கம் செய்யும் போது, வசனத்தின் பொருள் சரியாக இருக்கவேண்டும் என்பதற்காக, மொழியாக்கம் செய்பவர்கள் அல்லது தமிழாக்கம் செய்பவர்கள், வசனங்களின் மத்தியில் சில அடைப்புக்குறிகள் "()" இட்டு, அதில் சில சொந்த வார்த்தைகளை எழுதுவார்கள், இதனால் தமிழில் நாம் குர்ஆன் வசனத்தை படிக்கும் போது, பொருள் விளங்கும். இப்படி செய்வது தவறு அல்ல. இப்படி அடைப்புகுறிகள் கொடுத்து விளக்குவது வசனங்களின் பொருளை சரியாக உணர உதவும்.

ஆனால், இந்த கட்டுரையில் நாம் பார்க்கப்போவது என்னவென்றால், "அல்லாஹ் ஒரு வாக்கியத்தை சரியாக முடிக்காமல், அதாவது பாதியிலேயே அந்த வாக்கியத்தை அறைகுறையாக விட்டுவிட்டு, அடுத்த வாக்கியத்திற்குச் சென்றுள்ளார்" என்பதாகும். அல்லாஹ்வின் இந்த பிழையை சரி செய்ய மொழியாக்கம் செய்பவர்கள் என்ன செய்துள்ளார்கள் என்பதைக் காண்போம்.

## 2) குர்ஆன் 35:8ம் வசனம் பீஜே தமிழாக்கத்திலிருந்து:

இந்த குர்ஆன் வசனத்தை நாம் அனேக (ஒன்பது) தமிழாக்கங்களில் படிக்கப்போகிறோம். அதற்கு முன்பாக பீஜே அவர்கள் எப்படி இந்த வசனத்தை மொழியாக்கம் செய்துள்ளார் என்பதை பார்ப்போம்.

**குர்ஆன் 35:8**

யாருக்கு தனது தீய செயல் அழகாகக் காட்டப்பட்டு, அதை அழகானதாக கருதினானோ அவனா **(சொர்க்கவாசி)**? தான் நாடியோரை அல்லாஹ் வழி கேட்டில் விடுகிறான். தான் நாடியோருக்கு நேர் வழி

காட்டுகிறான். (முஹம்மதே!) அவர்களுக்காகக் கவலைப்பட்டு உமது உயிர் போய்விடவேண்டாம். அவர்கள் செய்வதை அல்லாஹ் அறிந்தவன். (**பீ. ஜைனுல் ஆபிதீன் தமிழாக்கம்**)

**மேற்கண்ட வசனத்தை நாம் மூன்றாக பிரிக்கலாம்:**

1) யாருக்கு தனது தீய செயல் அழகாகக் காட்டப்பட்டு, அதை அழகானதாக கருதினானோ அவனா (சொர்க்கவாசி)?

2) தான் நாடியோரை அல்லாஹ் வழி கேட்டில் விடுகிறான். தான் நாடியோருக்கு நேர் வழி காட்டுகிறான்.

3) (முஹம்மதே!) அவர்களுக்காகக் கவலைப்பட்டு உமது உயிர் போய்விடவேண்டாம். அவர்கள் செய்வதை அல்லாஹ் அறிந்தவன்

மேலே நாம் காண்பது போல, முதல் வாக்கியம் ஒரு கேள்வியாக உள்ளது, அதாவது ஒரு மனிதன் தான் செய்யும் தீய செயல்கள் நல்லவைகளாக காண்கிறானோ, அவன் எப்படி ஒரு சொர்க்கவாசியாக இருக்கமுடியும்? என்பது போல கேள்வி கேட்கப்பட்டுள்ளது. இரண்டாவது பாகம், அல்லாஹ் எப்படி நேர்வழி காட்டுகிறார், எப்படி வழி கேட்டில் விடுகிறார் என்பதைச் சொல்கிறது. மூன்றாவதாக, முஹம்மதுவிற்கு அறிவுரை கொடுக்கப்படுகிறது.

இப்போது, மேற்கண்ட மூன்று விவரங்களில், இரண்டாவது மற்றும் மூன்றாவது பாகம் பற்றி நாம் அலசப்போவதில்லை. ஆனால், முதல் பாகத்தைப் பற்றி பார்க்கப்போகிறோம்.

முதல் பாகத்தை பீஜே அவர்கள் கீழ்கண்டவிதமாக மொழியாக்கம் செய்துள்ளார்கள்:

"யாருக்கு தனது தீய செயல் அழகாகக் காட்டப்பட்டு, அதை அழகானதாக கருதினானோ அவனா **(சொர்க்கவாசி)**?"

## 3) அறைகுறை வாக்கியம்:

இந்த வசனத்தில் முதல் பாகத்தில் ஒரு தீயவனை பற்றி பேசி, அவனை நல்லவவோடு/நல்லவற்றோடு ஒப்பிட்டு வாக்கியத்தை முடிக்கவேண்டும். ஆனால், அல்லாஹ் முதல் வாக்கியத்தில் பாதியை அடைந்தவுடன், நல்லவனை ஒப்பிட்டு பேசுவதை மறந்துவிட்டார். இதனால், வாக்கியத்தை "அவனா?" என்ற வார்த்தையோடு அறைகுறையாக விட்டுவிட்டு, "தான் நாடியோரை நல்லவழியில் செலுத்துவார்..." என்ற வாக்கியத்தை ஆரம்பித்துவிட்டார்.

### இதனால் மொழியாக்கம் செய்பவர்கள் அல்லாஹ் செய்த பிழையை சரி செய்கிறார்கள். அல்லாஹ் சொல்ல தவறிய விவரத்தை இவர்கள் மொழியாக்கத்தில் சேர்கிறார்கள்.

இந்த வசனத்தில் பீஜே சேர்த்த "**(சொர்க்கவாசி)**" என்ற வார்த்தையை நீக்கிவிட்டு வாசியுங்கள். இந்த வாக்கியம் அறைகுறையாக முழுமையடையாமலிருப்பதை காணலாம்.

**குர்ஆன் 35:8**

யாருக்கு தனது தீய செயல் அழகாகக் காட்டப்பட்டு, **அதை அழகானதாக கருதினானோ அவனா?**

தான் நாடியோரை அல்லாஹ் வழி கேட்டில் விடுகிறான். தான் நாடியோருக்கு நேர் வழி காட்டுகிறான்.

(முஹம்மதே!) அவர்களுக்காகக் கவலைப்பட்டு உமது உயிர் போய்விடவேண்டாம். அவர்கள் செய்வதை அல்லாஹ் அறிந்தவன். (பீ. ஜைனுல் ஆபிதீன் தமிழாக்கம்)

பீஜே அவர்கள் அல்லாஹ்வின் வார்த்தையில் இருக்கும் பிழையை "சொர்க்கவாசி" என்ற வார்த்தையை அடைப்பிற்குள் எழுதி, வாக்கியத்தை முழுமை படுத்தினார்.

பீஜே "(சொர்க்கவாசி)?" என்று சேர்க்கவில்லையானால், அந்த வசனம் "அவனா?...." என்பதோடு நின்றுவிடும். அவ்வாக்கியத்திற்கு பொருள் இருக்காது அல்லது அறைகுறையான வாக்கியமாக இருக்கும். அல்லாஹ்வின் இந்த பிழையை சரி செய்ய பீஜே அவர்கள் "சொர்க்கவாசி" என்ற வார்த்தையை சேர்த்தார். இதே போல தமிழில் குர்ஆனை மொழியாக்கம் செய்த இதர இஸ்லாமிய அறிஞர்கள் இந்த குர்ஆனின் பிழையை எப்படி சரி செய்து, அல்லாஹ்விற்கு உதவினார்கள் என்பதை அவர்களின் மொழியாக்கங்களிலிருந்து குர்ஆன் 35:8ம் வசனத்தை இப்போது காண்போம்.

### 4) இஸ்லாமிய நூல்கள் மலிவுப்பதிப்பு பப்ளிக்கேஷர்ஸ் & புக் செல்லர்ஸ்:

இந்த தமிழாக்கத்தை செய்தவர்கள், அல்லாஹ்வின் பிழையை சரி செய்ய "**(இதை தவிர்த்தவருக்கு சமமாவார்?)**" என்று சேர்த்துள்ளார்கள். (பீஜே ஒரே வார்த்தையை பயன்படுத்தி சரி செய்துள்ளார்கள்). இவர்களும் தங்கள் வார்த்தைகளை அடைப்புகுறிக்குள் எழுதியுள்ளார்கள், ஏனென்றால், அந்த விளக்கம் குர்ஆனில் இல்லை.

எனவே எவருக்கு அவருடைய செயலின் தீமை அலங்காரமாக காண்பிக்கப்பட்டு, அவர் அதை அழகாக காண்கிறாரோ அவரா?**(இதை தவிர்த்தவருக்கு சமமாவார்?)**ஆகவே நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியோரை வழி தவறச் செய்கிறான் இன்னும் தான் நாடியோரை நேர் வழியில் செலுத்துகிறான்.எனவே அவர்களின் மீதுள்ள கவலைகளால் உம்முடைய உயிர் போய்விடவேண்டாம்-நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் செய்கின்றவற்றை அறிந்தவன்.

### 5) குர்ஆன் தர்ஜுமா, திரியெம் பிரிண்டர்ஸ்:

இவர்கள் தங்கள் தமிழாக்கத்தில் "**(நற்செயல் புரிந்தவனுக்கு சமமாவான்**?)" என்று எழுதி குர்ஆனின் பிழையை சரி செய்துள்ளார்கள்.

எனவே, எவனொருவனுடைய தீயசெயல் அவனுக்க்கு அழகாக்கப்பட்டு அதை(ச் செய்வதை)அவனும் அழகானதாகவும் கண்டானே அவனா? (**நற்செயல் புரிந்தவனுக்கு சமமாவான்?**) நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியோரை வழி தவறச் செய்கிறான் இன்னும் தான் நாடியோரை நேர் வழியில் செலுத்துகிறான்.எனவே அவர்களின் மீதுள்ள கவலைகளால் உம்முடைய உயிர் போய்விடவேண்டாம்-நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் செய்கின்றவற்றை முற்றும் அறிந்தவன்.

### 6) தர்ஜுமா அல்குரானில் கரீம் வெளியீடு பஷரத் பப்ளிக்கேஷன்:

இவர்கள் தங்கள் தமிழாக்கத்தில் "**(நற்செயல் புரிந்தவனுக்கு சமமாவான்)**" என்று எழுதி குர்ஆனின் பிழையை சரி செய்துள்ளார்கள்.

எனவே எவனொருவன் அவனுடைய செயலின் தீமை அவனுக்கு அழகாக்கப்பட்டு அதை அவனும் அழகானதாகவும் கண்டானோ அவனா?(**நற்செயல் புரிந்தவனுக்கு சமமாவான்**).நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவர்களை வழிதவறச்செய்கிறான்.தான் நாடியவர்களை நேரான வழியில் நடத்துகிறான்.ஆகவே (நபியே) அவர்கள் மீதுள்ள கவலைகளால் உம்முடைய உயிர் போய்விடவேண்டாம்.நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் செய்பவற்றை நன்கறிந்தோனாக இருக்கின்றான்.

### 7) திருக்குரான் ,இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (ஐ எஃப் டி):

இந்த தமிழாக்கத்தை தந்தவர்கள், சிறிது மாற்றி "**அந்த மனிதனின் வழிக்கேட்டிற்கு எல்லை ஏதும் உண்டா?** " என்று எழுதியுள்ளார்கள். மற்ற நல்ல மனிதனோடு ஒப்பிடாமல், பீஜேயைப் போன்று, எழுதியுள்ளார்கள். இவைகளை நாம் கவனித்தால், அல்லாஹ் பிழையாக செய்து வைத்துச் சென்றதை, ஒவ்வொரு மொழிப்பெயர்ப்பாளரும், தங்கள் சொந்த கருத்தை சொல்லி, அந்த குர்ஆன் பிழையை சரி செய்துள்ளார்கள் என்பது தெரியவருகிறது.

எந்த மனிதனுக்கு அவனுடைய தீயச்செயல் அலங்காரமாக்கப்பட்டிருக்கிறதோ, மேலும் அதனை அவன் நல்லதென்று கருதிக்கொண்டிருகின்றானோ(**அந்த மனிதனின் வழிக்கேட்டிற்கு எல்லை ஏதும் உண்டா?**) திண்ணமாக அல்லாஹ் தான் நாடுவோரை நெறிபிறழச்செலுத்துகிறான்.மேலும் தான் நாடுவோரை நேர்வழியில் செலுத்துகிறான்.எனவே (நபியே)இவர்களுக்காகத் துக்கமும் வேதனையும் அடைந்தே உமது உயிர் உருகிப் போய்விட வேண்டாம்.

### 8) திருக்குரான்,இஸ்லாம் இண்டர்நேஷனல் பப்ளிக்கேஷன்ஸ் லிட்:

இவர்களின் குரானில் இது ஒன்பதாவது வசனம். பிஸ்மில்லாவையும் ஒரு வசனமாக கணக்கிட்டு எண்கள் போடப்பட்டுள்ளது. இது "**அஹமதியா**" என்ற இஸ்லாமிய பிரிவினரால் தமிழாக்கம் செய்யப்பட்ட குர்ஆன் என்பது குறிப்பிடத்தக்கது. இவர்களும் "(**நம்பிக்கை கொண்டு நற்செயலாற்றுபவனைப் போன்றவனாவானா?**)" என்று எழுதி அல்லாஹ்வின் பிழையை திருத்த முயற்சி செய்துள்ளார்கள்.

35:9 தனது செயலின் தீமை தனக்கு கவர்ச்சிமிக்கதாக ஆக்கப்பட்டு தானும் அதனை அழகானதென்று காண்பவன் (**நம்பிக்கை கொண்டு நற்செயலாற்றுபவனைப் போன்றவனாவானா?**) நிச்சயமாக அல்லாஹ் தான் விரும்புபவனை வழிக்கேட்டில் செல்ல விடுகிறான்.தான் விரும்புபவனை நேர்வழியில் நடத்துகின்றான்.எனவே அவர்களுக்காக வருந்தி உமது உயிர் அழிந்துவிட வேண்டாம்.நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் செய்பவற்றை நன்கு அறிபவனாவான்.

### 9) மதினாவிலுள்ள மன்னர் ஃப்ஹ்து புனித முஸ்ஹஃப் அச்சக வளாகத்தில் ஹிஜ்ரீ 1425ம் ஆண்டு அச்சிடப்பட்டது:

இந்த குர்ஆன் சௌதியில் உள்ள மதினாவில் அரசாங்கத்தால் பதிக்கப்படுகிற குர்ஆன் தமிழாக்கமாகும். இதில் கூட அடைப்பிற்குள் "**(இதைத் தவிர்த்தவருக்கு சமமாவார்**?)" என்ற வார்த்தைகளை சேர்த்து அல்லாஹ்வின் அறியாமையை போக்கியுள்ளார்கள்.

எனவே, எவருக்கு அவருடைய செயலின் தீமை அலங்காரமாகக் காண்பிக்கப்பட்டு, அவர் அதை அழகாகக் காண்கிறாரோ அவரா? (**இதைத் தவிர்த்தவருக்கு சமமாவார்?**)ஆகவே, நிச்சயமாக அல்லாஹ், தான் நாடியவர்களைத் தவறான வழியில் விட்டுவிடுகிறான்; தான் நாடியவர்களை நேரான வழியிலும் செலுத்துகிறான்; ஆகவே, (நபியே) அவர்கள் மீதுள்ள கவலைகளால் உம்முடைய உயிர் போய்விடவேண்டாம்; நிச்சயமாக , அல்லாஹ் அவர்கள் செய்பவற்றை நன்கறிகிறவன்

### 10) சங்கைமிகு குர்ஆன் - ஆ.கா. அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:

இந்த மொழிப்பெயர்ப்பாளர், கொஞ்சம் வார்த்தைகளை தாராளமாகவே பயன்படுத்தியுள்ளார். அதாவது "**(எவன் தீய காரியங்களைத் தீயனவாகவே கண்டு அதிலிருந்து விலகிக் கொள்கின்றானோ அவனும் சமமாவார்களா? ஒரு போதும் ஆக மாட்டார்கள்)**" என்று எழுதியுள்ளார். அதாவது 'அல்லாஹ் கேள்வி கேட்பது போல' வசனம் உள்ளது, அதில் முதல் பாகத்தில் பாதி கேள்வியோடு அல்லாஹ் விட்டுவிட்டார், ஆனால், இந்த மொழிப்பெயர்ப்பாளர், அல்லாஹ்வின் கேள்வியை பூர்த்தி செய்து, அதற்கான பதிலையும் தானே கொடுத்து காரியத்தை கச்சிதமாக முடித்துள்ளார்.

எவனுக்குத் தீய காரியங்கள் அழகாகக் காண்பிக்கப்பட்டு அவனும் அதனை அழகாகக் காண்கிறானோ அவனும், (**எவன் தீய காரியங்களைத் தீயனவாகவே கண்டு அதிலிருந்து விலகிக் கொள்கின்றானோ அவனும் சமமாவார்களா? ஒரு போதும் ஆக மாட்டார்கள்**) நிச்சயமாக அல்லாஹ் தான் விரும்பியவர்களைத் தவறான வழியில் விட்டுவிடுகிறான். தான் விரும்பியவர்களை நேரான வழியில் செலுத்துகிறான். ஆகவே, (நபியே!) அவர்களுக்காக உங்கள் உயிரையே மாய்த்துக் கொள்ளும் அளவுக்கு நீங்கள் கவலைப்படாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் செய்பவைகளை நன்கறிந்தவனாக இருக்கின்றான்.

### 11) முஹம்மது ஜான் தமிழாக்கம்:

இந்த தமிழாக்கத்தில் "**(நேர் வழி பெற்றவனைப் போலாவானா?)**" என்று எழுதி வாக்கியத்தை சரி செய்துள்ளார்கள்.

எவனுக்கு அவனுடைய செயலின் கெடுதியும் அழகாகக் காண்பிக்கப்பட்டு, அவனும் அதை அழகாகக் காண்கிறானோ, அவன் (**நேர் வழி பெற்றவனைப் போலாவானா?**)அன்றியும், நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவரை வழிதவறச் செய்கிறான்; மேலும் தான் நாடியவரை நேர்வழியில் சேர்க்கிறான்; ஆகவே, அவர்களுக்காக உம்முடைய உயிர் போகும் அளவுக்கு நீர் விசாரப்படவேண்டாம், நிச்சயமாக, அல்லாஹ் அவர்கள் செய்வதை நன்கறிபவன்.

### 12) ஒன்பது தமிழ் குர்ஆன் மொழியாக்கங்களிலிருந்து மேற்கோள்கள்:

இதுவரை நாம் ஒன்பது தமிழ் குர்ஆன்களிலிருந்து வசனங்களை மேற்கோள் காட்டியுள்ளோம். எல்லாரும் தங்கள் சொந்த கருத்தை சொல்லியுள்ளார்கள். எல்லாரும் தங்கள் சொந்த கருத்தை அடைப்புகுறிக்குள் கொடுத்துள்ளார்கள். இவர்கள் எல்லாருக்கும் அரபியில் உள்ள வசனத்தின் பிழை தெரிந்துள்ளது, அதனை சரி செய்ய, பிழையான அறைகுறை வாக்கியத்தை சரி செய்ய இவர்கள் முயன்றுள்ளார்கள்.

**இந்த ஒன்பது பேர் அடைப்பிற்குள் எவைகளை சேர்த்து பிழையான வாக்கியத்தை சரி செய்துள்ளார்கள் என்பதை கீழ்கண்ட அட்டவனை சுருக்கமாக காட்டும்:**

| எண் | குர்-ஆன் தமிழாக்கம் | அல்லாஹ்வின் பிழையை சரி செய்வதற்கு, முஸ்லிம்கள் குர்-ஆனில் சேர்த்த வார்த்தைகள் |
|---|---|---|
| 1. | பீ. ஜைனுல் ஆபிதீன் தமிழாக்கம் | (சொர்க்கவாசி)? |
| 2. | இஸ்லாமிய நூல்கள் மலிவுப்பதிப்பு பப்ளிக்கேஷர்ஸ் & புக் செல்லர்ஸ் | (இதை தவிர்த்தவருக்கு சமமாவார்?) |
| 3. | குர்ஆன் தர்ஜுமா,திரியெம் பிரிண்டர்ஸ் | (நற்செயல் புரிந்தவனுக்கு சமமாவான்?) |
| 4. | தர்ஜுமா அல்குரானில் கரீம் வெளியீடு பஷரத் பப்ளிக்கேஷன் | (நற்செயல் புரிந்தவனுக்கு சமமாவான்) |
| 5. | திருக்குரான் ,இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (ஐ எஃப் டி) | அந்த மனிதனின் வழிக்கேட்டிற்கு எல்லை ஏதும் உண்டா? |
| 6. | திருக்குரான்,இஸ்லாம் இண்டர்நேஷனல் பப்ளிக்கேஷன்ஸ் லிட் | (நம்பிக்கை கொண்டு நற்செயலாற்றுபவனைப் போன்றவனாவானா?) |
| 7. | மதினாவிலுள்ள மன்னர் ஃப்ஹ்து புனித முஸ்ஹஃப் அச்சக வளாகத்தில் ஹிஜ்ரீ 1425ம் ஆண்டு அச்சிடப்பட்டது | (இதைத் தவிர்த்தவருக்கு சமமாவார்?) |
| 8. | சங்கைமிகு குர்ஆன் - ஆ.கா. அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம் | (எவன் தீய காரியங்களைத் தீயனவாகவே கண்டு அதிலிருந்து விலகிக் கொள்கின்றானோ அவனும் சமமாவார்களா? ஒரு போதும் ஆக மாட்டார்கள்) |
| 9. | முஹம்மது ஜான் தமிழாக்கம் | (நேர் வழி பெற்றவனைப் போலாவானா?) |

நான் இக்கட்டுரையின் ஆரம்பத்தில் விளக்கியுள்ளபடி, குர்ஆன் தமிழாக்கத்தில் இவர்கள் புதிதாக சேர்த்த வார்த்தைகள், ஏற்கனவே இருக்கும் அரபி வார்த்தைகளுக்கு அதிகபடியான விளக்கம் தருவதற்காக அல்ல, அதற்கு மாறாக, பிழையாக உள்ள வாக்கியத்தில் அல்லது அறைகுறையாக விடுபட்ட வாக்கியத்தை சரி செய்ய

இவர்கள் எடுத்த முயற்சி தான் இந்த குறிப்பிட்ட (35:8) வசனத்தின் இடையில் போடப்பட்ட மேற்கண்ட வார்த்தைகளாகும். ஒவ்வொரு மொழிப்பெயர்ப்பாளரும் தனக்கு தோன்றியபடி, விளக்கம் கொடுத்துள்ளார்கள். எல்லாருடைய விளக்கமும் ஒரே மாதிரியாக இல்லை என்பதை கவனிக்கவும்.

**முடிவுரை:**

பீஜே கூறுவது போல குர்ஆன் ஒரு பிழையற்ற வேதமல்ல. அல்லாஹ் செய்த பிழையை மனிதன் திருத்தும்படி அல்லாஹ் தம் வேதத்தை விட்டுவிட்டார். இது ஒன்று மட்டுமல்ல இது போல அனேக பிழைகள், இலக்கண பிழைகள் குர்ஆனில் (மூல குர்ஆனில்) உண்டு. கர்த்தருக்கு சித்தமானால் நாம் அவைகளை பிறகு காண்போம்.

**குர்ஆன் பற்றிய இதர தமிழ் கட்டுரைகள்:**

1) **வர்ஷ் மற்றும் ஹப்ஸ் குர்ஆனில் உள்ள வித்தியாசங்களின் சிறிய பட்டியல்**

2) **ஒரு குர்ஆனா அல்லது பல குர்ஆன்களா?!**

3) **குர்ஆனில் உள்ள எழுத்துப் பிழைகள்**

4) **குர்ஆன் பாதுகாக்கப்பட்டதா?**

5) **பல விதமான அரபி குர்ஆன்கள்** (THE DIFFERENT ARABIC VERSIONS OF THE QUR'AN)

6) **ஆயிஷா அவர்களின் ஹதீஸின் படி குர்ஆன் 2:238 முழுமையானதல்ல**

7) **விபச்சார குற்றத்திற்கு கல்லெறிதல் தண்டனை பற்றிய வசனம் குர்ஆனில் இல்லை ஏன்?**

8) **இன்றைய குர்ஆனில் இல்லாத "பால் கொடுக்கும்" வசனம்**

9) **அரபி குர்ஆனின் தாறுமாறான மேற்கோள்கள்?**

**சமர்கண்ட் மூல குர்ஆன் (MSSவுடன்) இன்றைய குர்ஆன் (1924 எகிப்திய வெளியீடு) ஒப்பீடு**

10) பின் இணைப்பு A - பாகம் 1 (Appendix A1)

11) பின் இணைப்பு A - பாகம் 2 (Appendix A2)

12) **பின் இணைப்பு A - பாகம் 3 (Appendix A3)**

13) **பின் இணைப்பு A - பாகம் 4 (Appendix A4)**

மூலம்: **http://isakoran.blogspot.in/2011/09/358.html**

**பீஜே அவர்களுக்கு மறுப்புக்கள்**

**உமரின் மறுப்புக்கள்/கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/answerpj/pj_and_quran358.html

# 34. பாகம் 1 - சென்னையில் பேருதவி புரிந்த முஸ்லிம்களை முஹம்மதுவும் அல்லாஹ்வும் மன்னிப்பார்களா?

2015ம் ஆண்டின் டிசம்பர் மாதத்தை சென்னைவாசிகள் ஒருபோதும் மறக்கமாட்டார்கள். பல நாட்கள் தொடர்ந்து பெய்த கனமழையினால் பல பகுதிகள் தண்ணீரில் மூழ்கின, மக்கள் என்னசெய்வதென்று அறியாமல் கண்ணீரில் மூழ்கினர். பல நாட்கள் அடிப்படை வசதிகள் கூட கிடைக்காமல் அவதிப்பட்டனர். கோடிக்கணக்கில் பணமுள்ளவர்கள் கூட தெருக்கோடிக்குச் சென்று தங்கள் அடிப்படை தேவைகளை பூர்த்தி செய்துக் கொள்ளமுடியாத நிலையில் இருந்தனர். இந்த நேரத்தில் இந்துக்களும், முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும் இன்னும் இதர மக்களும், "ஜாதி மத பேதம்" பார்க்காமல் உதவிகள் செய்தனர். மனித நேயத்தின் உண்மை வடிவம், முழு பௌர்ணமி நிலவு போல பலிச்சென்று சென்னையில் தெரிந்தது. உதவி செய்த அனைத்து பிரிவினருக்கும் என் மனமார்ந்த நன்றிகளை தெரிவித்துக் கொள்கிறேன். அரசாங்கமும் தன் கடமையை செய்தது.

### முஸ்லிம்களின் மனித நேய உதவிகள்:

இந்த முறை முஸ்லிம்கள் செய்த உதவியை யாரும் மறுக்கவோ மறைக்கவோ முடியாது. ஒவ்வொரு இஸ்லாமிய பிரிவினரும் போட்டி போட்டுக் கொண்டு உதவிகள் செய்தனர். மக்களுக்கு உதவி புரியச்சென்றவர்களில் இரண்டு முஸ்லிம் சகோதரர்கள் மரித்துவிட்டதாகவும் நாம் இணையத்தில் வாசிக்கிறோம். இவர்களின் இவ்வுதவிகள் பற்றி மேலும் அறிய அவரவர்களின் இணைய தளங்களுக்குச் சென்று படித்துக் கொள்ளலாம்.

பதிநான்கு நூற்றாண்டுகளாக பூட்டிவைத்திருந்த மனித நேயத்தின் கதவுகளை முஸ்லிம்கள் ஒரே நேரத்தில் திறந்துவிட்டது போல் இருந்தது. சென்னையில் முஸ்லிம்கள் செய்த உதவிகளில் முஸ்லிமல்லாதவர்களும் இருந்தார்கள் என்பது தான் கவனிக்கவேண்டிய ஒன்று.

- "**இவர்கள் இந்துக்கள் ஆயிற்றே!**" என்றுச் சொல்லி நீட்டிய கைகளை முஸ்லிம்கள் சொடுக்கென்று திரும்ப எடுத்துக் கொள்ளவில்லை.

- **"இவர்கள் கிறிஸ்தவர்கள் ஆயிற்றே!"** என்றுச் சொல்லி உதவி செய்ய ஓடும் தங்கள் கால்களுக்கு முஸ்லிம்கள் தடை விதிக்கவில்லை.

தடைகளையும், ஆபத்துக்களையும் பாராமல் உதவி செய்தனர். எனவே முஸ்லிம்களை மெச்சிக்கொள்ளாமல் நம்மால் இருக்கமுடியாது. முஸ்லிம்கள் என்றால் தீவிரவாதிகளாக இருப்பார்கள் என்று முஸ்லிமல்லாதவர்கள் நம்புகிறார்கள். ஆனால், இந்த முறை வானத்திலிருந்து வந்த தண்ணீரால் "சென்னை கழுவப்பட்டபோது", அதோடு கூட முஸ்லிம்களின் இந்த அவப்பெயரும் சிறிது கழுவப்பட்டது என்றுச் சொல்லமுடியும். வாழ்க தமிழ் முஸ்லிம்கள்! வளர்க அவர்களின் மனித நேயம்! இக்கட்டுரையின் கருப்பொருள் முஸ்லிம்களின் இவ்வுதவிப் பற்றியது தான். மேற்கொண்டு படியுங்கள்.

**கிறிஸ்தவர்களின் மனித நேய உதவிகள் பற்றி ஏன் இக்கட்டுரையில் அதிகமாக எழுதவில்லை?**

நான் முஸ்லிம்களை அதிகமாக புகழுவதைக் கண்டு, கிறிஸ்தவர்கள் என் மீது கோபம் கொள்ளலாம். இக்கட்டுரையில் கிறிஸ்தவர்களின் உதவிகள் பற்றி ஏன் அதிகமாக எழுதவில்லை என்பதைப் பற்றி அறிய **அடிக்குறிப்பு [1] ஐ பார்க்கவும்.**

முஸ்லிம்களின் உதவிகள் பற்றிய ஆய்விற்கு நாம் வெள்ளத்தை இப்போது திருப்பிவிடுவோம்.

### சில முத்துச்சிதரல்கள்:

மழை நீரில் சென்னை மிதந்த போது, குறிப்பிடும்படி சில நிகழ்வுகள் நடந்ததாக இணையத்தில் படிக்கலாம். அவைகளில் நான்கு செய்திகளை மட்டும் பார்த்துவிட்டு, நம் கருப்பொருளைத் தொடுவோம்.

1) ஒரு இந்து சகோதரி பிரசவ வேதனையில் துடித்துக் கொண்டு இருந்தபோது, மழை நீரால் மருத்துவமனைக்கும் செல்லமுடியாத நிலையில் தவித்துக் கொண்டு இருந்தபோது, ஒரு முஸ்லிம் சகோதரர் அந்த பெண் மருத்துவ மனையில் பத்திரமாக சேர்ப்பதற்கு உதவி செய்தாராம். இதனால், அந்த இந்து பெற்றோர்கள் பிறந்த குழந்தைக்கு, தங்களுக்கு உதவி செய்த முஸ்லிம் சகோதரரின் பெயரையே சூட்டினார்களாம்.

2) முஸ்லிம்கள் உதவி செய்வதை படமாக போட்டு, "இப்படிப்பட்ட உதவி செய்யும் எங்களையா பாகிஸ்தானுக்கு போகச்சொல்கிறீர்கள்? நாங்கள் பாகிஸ்தானுக்கு போகட்டுமா?" என்ற கேள்வியை முஸ்லிம்கள் பெருமிதத்துடன் கேட்டு இருந்தார்கள்.

3) ஒரு முஸ்லிம் தன் கையில் செருப்பை எடுத்துக் கொண்டு சென்றுக் கொண்டு இருக்கிறார், இந்த படத்தைப் போட்டு, "பாருங்கள், மாற்று மதங்களின் வணக்க ஸ்தலங்களுக்கு மதிப்பு கொடுக்கும் வண்ணமாக, ஒரு முஸ்லிம் தன் செருப்பை கையில் எடுத்துக் கொண்டுச் செல்கிறார்" என்று எழுதி இருந்தார்கள். மாற்று மத கோயில்களுக்கு நாங்கள் எவ்வளவு மதிப்பு தருகிறோம் என்பதை பாருங்கள்!?! என்று கேள்வி கேட்டு இருந்தார்கள்.

4) இதே போல, இந்துக்களும் ஒரு படத்தைப் போட்டு, ஒரு முஸ்லிம் சகோதரி பிரசவத்திற்கு ஒரு விநாயகர் கோயிலை இந்துக்கள் திறந்து கொடுத்தார்களாம், அதனால், அந்த முஸ்லிம் பெற்றோர்கள் தங்களுக்கு பிறந்த குழந்தைக்கு "கணேசன்" என்று பெயர் சூட்டினார்களாம்.

இப்படி அனேக விஷயங்களை இணையத்தில் நாம் காணலாம். இவ்விவரங்கள் உண்மையா இல்லையா என்று ஆய்வு செய்வது இக்கட்டுரையின் நோக்கமல்ல.

**இக்கட்டுரையின் நோக்கம் இது தான்:**

## சென்னையில் பேருதவி புரிந்த முஸ்லிம்களை முஹம்மதுவும் அல்லாஹ்வும் மன்னிப்பார்களா?

பாகம் 1

இக்கட்டுரையின் கருப்பொருள் கீழ்கண்ட கேள்விகளுக்கு விடை காண விழைவதாகும்:

1) இந்துக்களிடமும், கிறிஸ்தவர்களிடமும் முஸ்லிம்கள் பாராட்டின இந்த மனித நேய அன்பை, தங்கள் வேதமாகிய குர்-ஆனின் அடிப்படையில் செய்தார்களா? அல்லது இவ்வுதவிகளுக்கு பின்னணியில் ஏதாவது உள்ளார்ந்த அர்த்தமிருக்கின்றதா?

2) நம் கண்முன்னே முஸ்லிம்கள் செய்த இந்த பேருதவிகளை முஹம்மதுவும், அல்லாஹ்வும் அங்கீகரிப்பார்களா?

3) அல்லாஹ் காஃபிர்களை (முஸ்லிமல்லாதவர்களை) வெறுக்கிறார், ஆனால் முஸ்லிம்கள் காஃபிர்களுக்காக உயிரை பணயம் வைத்து உதவி செய்தார்கள், இதனை இஸ்லாமும் குர்-ஆனும் அனுமதிக்குமா?

4) காஃபிர்களுக்கு பேருதவி செய்யச் சொல்லி குர்-ஆன் முஸ்லிம்களுக்கு கட்டளையிடுகின்றதா? இதற்கு குர்-ஆன் வசன ஆதாரமிருக்கின்றதா?

5) முஸ்லிமல்லாதவர்களிடம் முஹம்மது எப்படி நடந்துக்கொண்டார்? முஸ்லிம்கள் காஃபிர்களிடம் எப்படி நடந்துக்கொள்ளவேண்டும் என்று முஹம்மது கட்டளையிட்டார்?

6) நம் தமிழ் முஸ்லிம்கள் செய்தது போலவே, இஸ்லாமிய நாடுகளில் வாழும் சிறும்பான்மை காஃபிர்களுக்காக (இந்துக்கள், கிறிஸ்தவர்கள், யூதர்கள் . . .) உயிரை பணயம் வைத்து முஸ்லிம்கள் உதவி புரிகின்றார்களா? அல்லது காஃபிர்களின் உயிரை பணயமாக எடுத்துக் கொண்டு இருக்கிறார்களா? முஸ்லிம்கள் இஸ்லாமிய நாடுகளில் ஒருவகையிலும், இந்தியா போன்ற ஜனநாயக நாடுகளில் வேறுவகையிலும் நடந்துக் கொள்கிறார்களே? இதற்கு காரணமென்ன?

7) இஸ்லாமிய ஷரியா சட்டத்தில் காஃபிர்களின் நிலை என்ன? ஷரியா சட்டம் முஸ்லிம்களுக்கும் முஸ்லிமல்லாதவர்களுக்கும் இடையே வேறுபாட்டை காட்டுகின்றதா? அல்லது சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்ற கோட்பாட்டை ஆதரிக்கின்றதா?

8) கடைசியாக, இந்த சென்னையின் வெள்ளம் நமக்கு கற்றுக் கொடுக்கும் பாடங்கள் எவைகள்?

போன்ற கேள்விகளுக்கு இந்த தொடர் கட்டுரைகளில் பதில்களைக் காண்போம். ஒருவேளை தமிழ் முஸ்லிம்கள் கூட மேற்கண்ட கேள்விகளுக்கு பதில்களைக் கொடுக்க முன்வரலாம். சென்னையில் தமிழ் முஸ்லிம்கள் செய்த உதவிகளை யாரும் மறுக்கமுடியாது, ஆனால், இவ்வுதவிகளின் பின்னணி என்ன? ஏன்

இஸ்லாமிய நாடுகளில் முஸ்லிம்கள் இதே போல உதவிகள் செய்வதில்லை? இதற்கு மூலக் காரணங்கள் என்னவென்பதைத் தான் இக்கட்டுரை ஆய்வு செய்கிறது.

### முஸ்லிமல்லாதவர்களின் மிகப்பெரிய எதிரி - இஸ்லாம் பற்றிய அறியாமை

இஸ்லாம் பற்றிய அறியாமை மிகப்பெரிய ஆபத்தை இஸ்லாமியரல்லாதவர்களுக்கு கொண்டுவரும் என்பதை நாம் மனதில் பதித்துக் கொள்ளவேண்டும். இந்துக்கள் பகவத் கீதையை தெரிந்துவைத்திருக்கிறார்களோ இல்லையோ, ஆனால் குர்-ஆனையும், முஹம்மதுவின் வாழ்க்கை வரலாற்றையும் படித்து புரிந்துக்கொள்ள வேண்டும். இயேசுவின் போதனைகளை கிறிஸ்தவர்கள் அரைகுறையாக புரிந்துக் கொண்டாலும் பரவாயில்லை, முஹம்மதுவின் போதனைகளை மட்டும் முழுவதுமாக புரிந்துக் கொள்ளவேண்டும்.

(இப்போது சில இந்துக்கள் "குர்-ஆனை நாங்கள் படித்து இஸ்லாமிய போதனைகளை தெரிந்துக் கொள்வது போல, பைபிளையும் படித்து அதன் போதனைகளையும் தெரிந்துக் கொள்ளக்கூடாதா?" என்று என்னிடம் கேள்வி கேட்கலாம். எல்லோரும் பைபிளை படிக்கவேண்டும் என்று தான் நாங்கள் இலவசமாக பைபிளைத் தருகிறோம். எபிரேய கிரேக்க மொழிகளில் கொடுக்காமல், நீங்கள் படிப்பது உங்களுக்கு புரியவேண்டும் என்பதற்காக உங்கள் தாய் மொழிகளில் பைபிளை மொழியாக்கம் செய்து தருகிறோம். இந்துக்கள் பைபிளையும் படிக்கவேண்டும், இயேசுவின் போதனைகளையும் அறிந்துக் கொள்ளவேண்டும், எனவே, எல்லோரும் தாராளமாக பைபிளை படிக்கலாம். நான் இஸ்லாம் பற்றி எவைகளை எழுதுகிறேனோ, அவைகள் அனைத்தும் பைபிளுக்கும் பொருந்தும். நாம் குர்-ஆனை கேள்வி கேட்டால், அதே கேள்வியை பைபிளுக்கும் கேட்கலாம், இதர மார்க்க வேதங்களுக்கும் கேட்கலாம். பதில் உள்ளவர்கள் பதில் சொல்லட்டும், பதில் இல்லாதவர்கள் அமைதியாக ஜகா வாங்கிக்கொண்டுச் செல்லட்டும்.)

தமிழ் முஸ்லிம்களின் மனித நேய செயல்களை சென்னைவாசிகள் கண்டார்கள், இப்போது இந்த முஸ்லிம்களின் வேதம் இதைப் பற்றி என்ன சொல்கிறது என்று பார்ப்போம். முஹம்மதுவும், அல்லாஹ்வும் முஸ்லிமல்லாதவர்களிடம் எப்படி நடந்துக் கொள்ளவேண்டும்? என்று சொல்லியுள்ளார்கள் என்பதை ஆய்வு செய்வோம். இவ்விவரங்களுக்கு ஆதாரமாக முஸ்லிம்களின் வேதமாகிய குர்-ஆனையும், ஹதீஸ்களையும் மேற்கோள் காட்டியுள்ளோம். இஸ்லாமிய வேதம் சொல்கின்றபடி தானே முஸ்லிம்கள் நடந்துக் கொண்டு இருப்பார்கள்? என்று முஸ்லிமல்லாதவர்கள் நினைக்கலாம், இதற்கான பதிலை இக்கட்டுரையில் கொடுத்திருக்கிறேன், வாசகர்கள் கொடுத்திருக்கும் ஆதாரங்களை சுயமாக ஆய்வு செய்து பார்த்துக் கொள்ளட்டும்.

இந்த கட்டுரையில் எடுத்துவைக்கும் குர்-ஆன் மற்றும் ஹதீஸ்கள் பற்றி முஸ்லிம்கள் தங்கள் விளக்கங்களை பதில்களை பின்னூட்டமிட்டால் அதற்கான பதில் தரப்படும்.

## 1) முஸ்லிம்கள் முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிரான செயல்களைச் செய்யவேண்டும், இது தான் முஸ்லிம்களின் தனித்துவம்:

முஹம்மது என்பவரை முஸ்லிம்கள் தீர்க்கதரிசியாக நம்புகிறார்கள். இஸ்லாமை கி.பி. ஏழாம் நூற்றாண்டில் மக்காவில் தோற்றுவித்தவர் இவர். முஹம்மதுவின் ஒவ்வொரு வாக்கையும் முஸ்லிம்கள் வேதவாக்காக பாவித்து கீழ்படிகிறார்கள். ஒவ்வொரு முஸ்லிமும் முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிரான காரியங்களைச் செய்யவேண்டும் என்று முஹம்மது கட்டளையிட்டுள்ளார். சென்னையில் முஸ்லிம்கள் செய்த உதவிகளை

எண்ணிப்பார்த்து நாம் வியக்கிறோம். ஆனால், அவைகளை விட பெரிய வியப்பு நமக்கு இப்போது காத்திருக்கிறது.

### முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிரான மாறுபாடு 1: தாடிகளுக்கும், தலைமுடிக்கும் சாயமிடுங்கள்

யூதர்களும் கிறிஸ்தவர்களும் தங்கள் தாடிகளுக்கும் தலைமுடிக்கும் சாயமிட்டுக் கொள்வதில்லையாம், எனவே முஸ்லிம்கள் தங்கள் தாடிக்கும் தலைமுடிக்கும் சாயமிட்டுக் கொள்ளவேண்டுமாம். இப்படி செய்வது எதற்கு? “முஸ்லிம்கள் முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிராக நடந்துக் கொள்கிறார்கள்” என்று காட்டிக் கொள்வதற்காக.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: யூதர்களும் கிறிஸ்தவர்களும் (தம் தாடிகளுக்கும் தலைமுடிக்கும்) சாயமிட்டுக் கொள்வதில்லை. எனவே, நீங்கள் (அவற்றிற்குக் கருப்பு அல்லாத சாயமிட்டு) **அவர்களுக்கு மாறு செய்யுங்கள்**.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

ஆதாரம்: புகாரி 3462, மேலும் பார்க்க புகாரி எண் 5899 மற்றும் முஸ்லிம் 4271

### முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிரான மாறுபாடு 2: தாடியை வளரவிடுங்கள், மீசையை ஒட்ட நறுக்குங்கள்

ஒருவரது மீசையும், தாடியும் அவருக்கே சொந்தம், அவைகளை அவர் என்னவாவது செய்யலாம் தவறில்லை. இதே போல, ஒரு மார்க்கத்தின் அடிப்படையில் நம் வெளிப்புற தோற்றத்தை நாம் மாற்றிக் கொள்ளலாம், இதிலும் தவறில்லை. ஆனால், மற்ற மதத்தவர்களுக்கு எதிராக நாங்கள் நடந்துக் கொள்கிறோம் என்று காட்டிக்கொள்ள இப்படி செய்வது, கேவலமானதாகும். அமைதி மார்க்கம் என்றுச் சொல்லிக்கொள்ளும் இஸ்லாமின் இறைத்தூதர் இப்படி கேவலமான கட்டளைகளை கொடுத்துள்ளார். சமுதாயத்தின் ஒற்றுமையை குலைக்க, சமுதாய மக்களிடையே ஏற்றத்தாழ்வு மனப்பான்மையை உருவாக்க, மற்ற மதத்தவரிடம் வெறுப்புணர்வை வெளிப்படையாக காட்டிக் கொள்ள வித்திட்டவர் இஸ்லாமிய இறைத்தூதர் முஹம்மது ஆவார். இவைகளை இஸ்லாமின் புனித நூல்கள் புகாரி, முஸ்லிம் மற்றும் அஹ்மத் போன்றவைகளில் காணலாம், இதோ அந்த ஆதாரங்கள்:

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

**இணைவைப்பாளர்களுக்கு மாறு செய்யுங்கள்**: தாடிகளை வளரவிடுங்கள். மீசையை ஒட்ட நறுக்குங்கள். என இப்னு உமர்(ரலி) அறிவித்தார். (ஸஹீஹ் புகாரி எண்: 5892)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

**இணைவைப்பாளர்களுக்கு மாறு செய்யுங்கள்**: மீசையை ஒட்ட நறுக்குங்கள். தாடியை வளரவிடுங்கள்.-இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 434)

நாங்கள், அல்லாஹ்வின் தூதரே, வேதமுடையவர்கள் தங்களது தாடிகளை (ஒட்ட) கத்தரித்துக் கொள்கிறார்கள்; மீசைகளை வளர விடுகிறார்கள் என்று கூறினோம். அதற்கு நபி (ஸல்) அவர்கள், உங்களது

மீசைகளை நீங்கள் கத்தரியுங்கள். தாடிகளை வளர விடுங்கள். **வேதமுடையவர்களுக்கு மாறு செய்யுங்கள் என்று கூறினார்கள்.**

அறிவிப்பவர்: அபூ உமாமா (ரலி),

நூல்: அஹ்மது (21252)

இதர மார்க்க மக்களின் "தீய பழக்கவழக்கங்களை செய்யாமல் இருங்கள்" என்று முஹம்மது கட்டளையிட்டிருக்கவேண்டும். மீசையை வளரவிடுவதில் என்ன தவறு இருக்கிறது? தாடியை ஒட்ட கத்தரிப்பதில் (ட்ரிம் செய்வதில்) என்ன தவறு இருக்கிறது? இதில் அல்லாஹ்விற்கு எதிரான பாவம் என்ன இருக்கிறது? முஹம்மதுவின் ஒரே நோக்கம், முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிராக செயல்படவேண்டும் அவ்வளவு தான். இதைத் தான் முஸ்லிம்கள் இன்றும் செய்துக் கொண்டு இருக்கிறார்கள். என்னே அறியாமை! முஸ்லிம்களின் மனதில் மாற்று மதத்தவரைப் பற்றிய விஷ வெறுப்புணர்வை இப்படிப்பட்ட கட்டளைகள் விதைத்துவிடுமல்லவா?

### முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிரான மாறுபாடு 3:

**அவன் வேட்டி அணிவதில்லையா? முஸ்லிமே! நீ வேட்டி அணிந்து அவனுக்கு மாறு செய். அவன் செருப்பு அணிவதில்லையா? முஸ்லிமே! நீ செருப்பு அணிந்து அவனுக்கு மாறு செய்.**

வேட்டியையும் செருப்பையும் விட்டுவைக்கவில்லை இஸ்லாமிய இறைத்தூதர். இதர மார்க்க மக்களுக்கு எதிராக நடப்பதே முஸ்லிம்களின் முக்கிய நோக்கமாக மாற்றியிருக்கிறார் முஹம்மது. கீழ்கண்ட ஹதீஸ்களை படிக்கும் முஸ்லிம்களின் உள்ளத்தில் எப்படிப்பட்ட எண்ணங்கள் ஓடும் என்பதை கற்பனை செய்துப் பாருங்கள். கீழ்கண்ட ஹதீஸில் எத்தனை முறை "அவர்களுக்கு மாறு செய்யுங்கள்" என்று முஹம்மது கூறியுள்ளார் என்பதை கவனியுங்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மூத்த அன்சாரிகளைக் கடந்து சென்றனர். அவர்களின் **தாடிகள்** வெண்மையாக இருந்தன. அப்போது "அன்சார்களே (உங்கள் முடிகளை) மஞ்சளாகவோ, சிவப்பாகவோ ஆக்கிக் கொள்ளுங்கள். **வேதக்காரர்களுக்கு மாறு செய்யுங்கள்**" எனக் கூறினார்கள். "அப்படியானால் வேதக்காரர்கள் கால்சட்டை அணிகின்றனர். வேட்டி அணிவதில்லையே" என்று நாங்கள் கேட்டோம். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "நீங்கள் கால்சட்டையும் அணியுங்கள். **வேட்டியும்** அணியுங்கள் **வேதக்காரர்களுக்கு மாறு செய்யுங்கள்**" எனக் கூறினார்கள்.

"அல்லாஹ்வின் தூதரே வேதக்காரர்கள் காலுறை அணிகின்றனர். **செருப்பு** அணிவதில்லையே" என்று நாங்கள் கேட்டோம். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "நீங்கள் காலுறைகளும் அணியுங்கள். செருப்பும் அணியுங்கள். **வேதக்காரர்களுக்கு மாறு செய்யுங்கள்**" எனக் கூறினார்கள். "அல்லாஹ்வின் தூதரே வேதக்காரர்கள் தங்கள் தாடிகளைக் கத்தரித்து மீசைகளை முழுமையாக வைக்கின்றனரே" எனக் கேட்டோம். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "நீங்கள் உங்கள் தாடிகளை முழுமையாக வைத்து **மீசையைக்** கத்தரியுங்கள்" எனக் கூறினார்கள்.

நூல் : அஹ்மத் (21252)

குருவிற்கு ஏற்ற சீடர்கள் தப்பாமல் கிடைத்துள்ளார்கள் முஹம்மதுவிற்கு. அவர் ஏதோ ஒரு விஷயத்தில் மாறு செய்யுங்கள் என்றுச் சொன்னால், எல்லாவற்றையும் நோண்டி நோண்டி ஏன் கேட்கவேண்டும்? இப்படியெல்லாம் கேட்கும் தோழர்கள் கீழ்கண்டவிதமாகவும் கேட்டு இருக்கவேண்டியது தானே! ஒருவேளை அதற்கும் முஹம்மது பதில் சொல்லியிருப்பார்.

இதோடு கூட, வேதக்காரர்கள் தினமும் சாப்பாடு சாப்பிடுகிறார்கள் என்று நாங்கள் கேட்டோம், அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "நீங்கள் சாப்பாடும் சாப்பிடுங்கள், ஒட்டகங்கள் சாப்பிடுவது போல இலைகளையும், வைக்கோளையும் சாப்பிட்டு வேதக்காரர்களுக்கு மாறு செய்யுங்கள்" எனக் கூறினார்கள்.

### இஸ்லாமிய அறிஞர்களின் அங்கீகாரம்:

மேற்கண்ட விவரங்கள் அனைத்தும் எங்கள் இஸ்லாமிய நூல்களில் இருந்தாலும், அவைகளை பின்பற்றும் படி இஸ்லாமிய அறிஞர்கள் எங்களுக்கு போதிப்பதில்லை, அவைகளை நாங்கள் பின்பற்றுவதும் இல்லை என்று முஸ்லிம்கள் சொல்லமுடியாது. ஏனென்றால், முஹம்மது சொன்னவைகளில் நியாயம் இல்லாவிட்டாலும், அறிவுடமைக்கு எதிராக இருந்தாலும், கேவலமான கட்டளைகளாக இருந்தாலும், முஸ்லிம்கள் அவைகளை முழுமூச்சோடு பின்பற்றுகிறார்கள். கேள்வி கேட்காமல், முஹம்மது சொன்னதை கடைபிடித்தால் முஸ்லிம்களுக்கு அதிக நன்மைகளை அல்லாஹ் கொடுப்பான் என்பது இஸ்லாமிய நம்பிக்கை.

ஆன்லைன் பீஜே தளத்திலும், பத்திரிக்கைகளிலும் மேற்கண்ட ஹதீஸ்களை மேற்கோள் காட்டி, முஸ்லிம்கள் அவைகளை பின்பற்றுங்கள் என்று உற்சாகப்படுத்தியுள்ளார்கள். முஸ்லிம்களின் அடையாளமே, மற்ற மதத்தவருக்கு மாறு செய்யும் படி தங்கள் வெளிப்புற தோற்றத்தை காட்டிக்கொள்வதாகும் என்று எழுதியுள்ளார்கள். முஹம்மது சொன்னது போல செய்யாத முஸ்லிம்கள் தங்கள் தனித்துவத்தை இழந்து விடுகிறார்களாம். அதனை நீங்களே படியுங்கள்:

இந்த செய்திகளுக்கு மாற்றமாக, முழுக்க முழுக்க வெள்ளை வெளேரென்று தலைமுடியும் தாடியும் வைத்திருப்பது, அல்லது கருப்பு சாயம் பூசுவது, ஒட்டு முடி வைப்பது, பர்தாவை பெண்கள் பேணாமல் இருப்பது போன்ற காரியங்களை முஸ்லிம்கள் மக்களிடம் பார்க்க முடிகிறது. **வெறும் பெயரை மட்டும் வைத்துத் தான் முஸ்லிம் என்று அடையாளம் கண்டு கொள்ளும் வகையில் தங்களது தனித்துவத்தை தொலைத்துவிட்டு பெயரளவிற்கு முஸ்லிம்களாக இருக்கிறார்கள்.**

மூலம்: http://www.onlinepj.com/egathuvam/2015-ega/-2015-/

### 2) தமிழ் முஸ்லிம்களின் மனித நேய செயல்களும் முஹம்மதுவும்:

இதுவரை நாம் இரண்டு விஷயங்களை அறிந்துக் கொண்டோம். முதலாவது, முஸ்லிம்களின் சென்னை உதவிகள் பற்றி அறிந்துக் கொண்டோம், இரண்டாவதாக, இஸ்லாமிய ஆதார நூல்களிலிருந்து "முஸ்லிமல்லாதவர்களுக்கு எப்படியெல்லாம் முஸ்லிம்கள் மாறு செய்யவேண்டும் என்று முஹம்மது கட்டளையிட்டுள்ளார் என்பதை" அறிந்துக் கொண்டோம்.

**இதன் அடிப்படையில் முஸ்லிம்களுக்கு சில கேள்விகளை முன்வைத்து, இந்த முதலாவது பாக கட்டுரையை முடிக்க விரும்புகிறேன்.**

அ) முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிராக செயல்படுங்கள் என்று முஹம்மது முஸ்லிம்களுக்கு கட்டளையிட்டுள்ளார். ஆனால், முஸ்லிம்கள் இந்துக்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் தங்கள் உயிரை பணயம் வைத்து உதவி செய்துள்ளார்கள்.

ஆ) சென்னையில் இந்துக்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் உதவிகள் செய்து, முஸ்லிம்கள் முஹம்மதுவின் கட்டளைகளுக்கு எதிராக நடந்துக் கொண்டார்கள் என்று நாம் கருதலாமா? அல்லது முஸ்லிம்களின் இந்த உதவிகளுக்கு பின், ஒரு மாய்மாலமான செயல் உள்ளதா?

இ) முஹம்மதுவின் மேற்கண்ட ஹதீஸ்களில் சொல்லிய கட்டளைகளை இந்துக்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் முஸ்லிம்கள் விளக்க கடமைப்பட்டுள்ளார்கள். இதனை செய்வார்களா?

ஈ) முஸ்லிமல்லாதவர்களின் அற்பமான தாடி மற்றும் தலைமுடி விஷயத்தில், ஒரு மிகப்பெரிய இஸ்லாமிய தீர்க்கதரிசி முஸ்லிம்களுக்கு கீழ்தரமாக அறிவுரை கூறுவாரா? இப்படி முஹம்மது கட்டளையிடுவதிலிருந்து, இஸ்லாமிய மார்க்கம் எந்த தரத்தில் செயல்பட்டுக்கொண்டு இருக்கிறது என்பதை நாம் எடை போடலாம்.

உ) தமிழ் நாட்டில் வாழும் இந்துக்களே, கிறிஸ்தவர்களே! உங்கள் பகுதியில் வாழும் முஸ்லிம்கள் தங்கள் தாடிகளுக்கும் தலைமுடிகளுக்கும் மருதானி போன்ற சாயம் போட்டுக்கொண்டு, வெள்ளை முடிகளை சிகப்பாக மாற்றிக்கொண்டுச் செல்வதை பார்த்து இருப்பீர்கள். இதன் மூலம் முஸ்லிம்கள் தெரிவிப்பது என்ன? “எங்கள் இறைத்தூதர் சொல்லியபடி, நாங்கள் எங்கள் தாடிகளுக்கும் தலைமுடிக்கும் சிகப்பு சாயம் போட்டுக்கொண்டு, உங்களுக்கு எதிராக நடந்துக் கொண்டு இருக்கிறோம்” என்று அவர்கள் சொல்கிறார்கள் என்று அர்த்தம், அப்படித்தானே! நீங்கள் கருப்பு சாயம் போட்டால், நாங்கள் சிகப்பு போடுவோம்! நீங்கள் வேட்டி கட்டவில்லையானால், நாங்கள் வேட்டி கட்டுவோம்! நீங்கள் மீசையை வளரவிட்டால், நாங்கள் அதனை ஒட்ட வெட்டுவோம்! நாங்கள் எதைச் செய்தாலும், அது அற்பமான விஷயமாகிய தாடி மிசை செருப்பு போன்றவைகளாக இருந்தாலும் சரி, உங்களுக்கு எதிராக செய்வது தான் எங்கள் இறைத்தூதர் கற்றுக்கொடுத்த பாதை. இஸ்லாமிய ஆதாரங்கள் இப்படித் தான் சொல்கின்றன. முஸ்லிம்களே! இதற்கு என்ன சொல்லப்போகிறீர்கள்?

ஊ) ஒரு கேவலமான விஷயத்தில் கூட முஹம்மதுவை அணுவணுவாக அப்படியே பின்பற்றும் முஸ்லிம்கள், எப்படி இப்படிப்பட்ட உதவிகளை அதுவும் முஸ்லிமல்லாதவர்களுக்கு செய்தார்கள்? இதில் இருவர் மரித்தும் விட்டார்களாம். இவர்களை முஹம்மது மன்னிப்பாரா?

எ) சென்னையில் உதவி செய்த முஸ்லிம்கள் அனைவரும் ”பெயரளவு முஸ்லிம்கள்” என்று சொல்லமுடியாது, அதாவது முஹம்மதுவின் மேற்கண்ட கட்டளைகளை அறியாதவர்கள் அல்ல இந்த முஸ்லிம்கள். இவர்கள் இஸ்லாமை நன்கு அறிந்திருக்கும் முஸ்லிம்கள். ஆக, முஸ்லிம்கள் இந்துக்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் உதவி செய்து, முஹம்மதுவிற்கு மாறு செய்தார்களா? அல்லது இதில் உள்ளர்த்தம் ஏதாவது உண்டா?

ஏ) முஸ்லிமல்லாதவர்களுக்கு மாறு செய்யவேண்டுமென்றால் வேறு விஷயங்களில் செய்யவேண்டியது தானே! ஒரு இனம் அல்லது மக்கள் செய்யும் தீய காரியங்களைச் செய்யாமல் இருக்க முஹம்மது கட்டளை கொடுத்திருந்தால் அதனை ஏற்றுக் கொள்ளலாம். உதாரணத்திற்கு, பிறக்கும் பெண் பிள்ளைகளை கொல்லும் பழக்கமுடைய மக்களின் செயல்களுக்கு மாறு செய்ய முஸ்லிம்களுக்கு கட்டளையிட்டால், அதனை ஏற்கலாம். மக்காவினரின் பழமைவாய்ந்த இப்படிப்பட்ட செயல்களை முஹம்மது கண்டித்துள்ளார். இவைகளை ஏற்கலாம். ஆனால், அற்பமான தாடியையும், தலை முடியையும் பிடித்துக் கொண்டு ஆட்டினால் என்ன நன்மை?

## முடிவுரை:

முஸ்லிம்களே! மேற்கண்ட ஹதீஸ்களை நீங்கள் பொய் என்றுச் சொல்வீர்களா? முஹம்மது இப்படியெல்லாம் சொல்லவில்லை, புகாரி மற்றும் முஸ்லிம் ஹதீஸ்கள் சொல்லும் இவ்விவரங்கள் பொய்யானவை என்று அவைகளை ஒதுக்குவீர்களா? எங்கள் மார்க்கம் மனித நேய மார்க்கமாகும், இந்துக்களையும், கிறிஸ்தவர்களையும், யூதர்களையும் மற்ற எல்லோரையும் நேசிக்கச்சொல்லும் மார்க்கம் என்று நீங்கள் சொன்னால், மேற்கண்ட ஹதீஸ்களின் நிலை என்ன?

இந்த பாகத்தை இதோடு முடித்துக் கொள்கிறேன். இஸ்லாம் எப்படியெல்லாம் மற்ற மார்க்க மக்களிடம் நடந்துக் கொள்கிறது என்பதை அடுத்த பாகத்தில் இன்னும் மேலதிக ஆதாரங்களை குர்-ஆன் மற்றும் ஹதீஸ்களிலிருந்து பார்க்கலாம்.

## அடிக்குறிப்புக்கள்:

**[1] கிறிஸ்தவர்களின் மனித நேய உதவிகள் பற்றி ஏன் இக்கட்டுரையில் எழுதவில்லை.**

கிறிஸ்தவர்களின் உதவிகள் பற்றி அதிகமாக எழுதாமல், ஏன் முஸ்லிம்களின் உதவிப் பற்றி அதிகமாக உமர் எழுதுகிறார்? என்ற கேள்வி கிறிஸ்தவர்களுக்கு எழும். ஆனால், கிறிஸ்தவர்கள் ஒன்றை சரியாக புரிந்துக் கொள்ளவேண்டும். இயற்கையாக நடப்பதைக் கண்டு யாரும் ஆச்சரியப்படமாட்டார்கள், அதிசயமாக நடப்பதைக் கண்டு தான் மக்கள் ஆச்சரியப்படுவார்கள். மீன்கள் நீந்துவதைக் கண்டு யாராவது ஆச்சரியப்படுவார்களா? கழுகுகள் உயர பறப்பதைக் கண்டு யாராவது மெச்சிக்கொள்வார்களா? மீனின் நீந்தும் திறமையைப் பார்த்து, கழுகின் பறக்கும் திறமையைப் பார்த்து மக்களின் புருவங்களும் உயராது. இதே போலத்தான் கிறிஸ்தவர்களின் சேவையும், உதவிகளும். கிறிஸ்தவர்கள் இயற்கையாகவே உதவிகள் செய்பவர்கள், தொன்றுதொட்டு அவர்கள் செய்துவருவது ஒன்றும் புதிதல்லவே! இதனை நான் பெருமைக்காக அதிகப்படுத்திச் சொல்லவில்லை, உண்மையைத் தான் சொல்கிறேன்.

கிறிஸ்தவர்களின் உதவிகளை நாம் அதிகமாக புகழ்ந்தால், அது அவர்களை அவமானப்படுத்துவதற்கு சமமாகும், கடமையை செய்பவர்களுக்கு அதிக புகழ்ச்சி தேவையில்லை, சத்தியத்திற்கு விளம்பரம் தேவையில்லை. கிறிஸ்தவர்களின் உதவிகளை மைக் வைத்து ஊரறிய சொல்லவேண்டிய அவசியமில்லை, ஏனென்றால், ஆபத்து காலத்தில் மட்டுமல்ல, எல்லா காலத்திலும் கிறிஸ்தவர்கள் உதவி செய்கிறார்கள். கிறிஸ்தவர்கள் உதவி செய்ய ”சென்னை தண்ணீரில் மூழ்கி மிதக்கவேண்டிய அவசியமில்லை”. இக்கட்டுரையின் நோக்கத்தை முழுவதுமாக அறிந்துக் கொள்ள முழு கட்டுரையையும் படிக்கவும். அதன் பிறகு இப்படிப்பட்ட கேள்வியை என்னிடம் கேட்க விரும்பமாட்டீர்கள்.

இந்துக்களும் பேருதவியை செய்தார்கள், வேற்றுமையில் ஒற்றுமை என்பதை இப்படிப்பட்ட ஆபத்தான காலத்தில் இந்தியாவில் அபரிதமாக காணமுடிகின்றது.

**[2] ஆன்லைன் பீஜே தள கட்டுரைகள்**

அ) **தனிமனித ஒழுங்குகளில் மாற்றம்**

ஆ) **பிரவுன், மெஜன்தா நிற முடியுடையவர்களின் முடி நரைத்துவிட்டால் கருப்பு நிற சாயம் பூசலாமா?**

இ) பாடம் : 25 - (நரைமுடிக்கு) சாயமிட்டுக்கொள்வதில் யூதர்களுக்கு மாறு செய்தல்

ஈ) தலை முடிக்குச் சாயம் அடிக்கலாமா ஆண்,பெண் தலைக்கு டை அடிக்கலாமா? மார்க்கத்தில் அனுமதி உண்டா?

[3] இதர இஸ்லாமிய தள கட்டுரை - அழகுக்காக மொட்டையடித்துக் கொள்ளலாமா? அழகுக்காக தலையில் கறுப்பு அல்லாத வேறு கலர் சாயம் பூசிக் கொள்ளலாமா?

[4] இதர இஸ்லாமிய தள கட்டுரை - தலை நரைக்குச் சாயம் பூசுவதற்கு இஸ்லாத்தில் அனுமதி இருக்கிறதா? சிலர், மருதாணி அல்லாத நிறப்பூச்சுக் கூடாது என்கின்றனர். விளக்கம் தரவும்.

[5] உமரின் முந்தைய கட்டுரை - 101 காரணங்கள் - முஹம்மது ஒரு கள்ளத்தீர்க்கதரிசி என்று கிறிஸ்தவர்கள் கருதுவது ஏன்? பாகம் 5 (காரணம் 48. தாடிக்கும் தலைமுடிக்கும் சாயமிட்டு யூதர்களுக்கு மாறு செய்யுங்கள்)

---

உமரின் இதர கட்டுரைகள்/மறுப்புக்கள்

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/chennai_muslims/chennai_muslims_part1.html

# 35. பாகம் 2 - சென்னையில் பேருதவி புரிந்த முஸ்லிம்களை முஹம்மதுவும் அல்லாஹ்வும் மன்னிப்பார்களா?

**முன்னுரை:**

இத்தொடர் கட்டுரைகளின் அறிமுகத்தை முதல் பாகத்தில் படித்துவிட்டு, இந்த இரண்டாம் தொடரை படிக்கவும்.

பாகம் 1 - சென்னையில் பேருதவி புரிந்த முஸ்லிம்களை முஹம்மதுவும் அல்லாஹ்வும் மன்னிப்பார்களா?

முதல் பாகத்தில் "தாடி, தலைமுடி, மீசை, வேட்டி மற்றும் செருப்பு" போன்ற அற்பமான விஷயங்களில் முஸ்லிம்கள் எப்படி முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிராக நடந்துக்கொள்ளவேண்டும் என்று முஹம்மது கற்றுக்கொடுத்தார் என்பதை ஆய்வு செய்தோம்.

இந்த இரண்டாம் தொடரில் இன்னும் எந்தெந்த விஷயங்களில் முஸ்லிம்களின் மனதில் முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிரான விஷ வாயுவை இஸ்லாம் செலுத்தியுள்ளது என்பதைக் காண்போம். இந்த விவரங்களை முஸ்லிம்கள் படிப்பதினால் அவர்களது மனது புண்படலாம், ஆனால் அதற்கு காரணம் இஸ்லாம் தான். நீங்கள் மேற்கொண்டு ஏதாவது உறுப்படியாக செய்யவேண்டுமென்று விரும்பினால், இந்த

தொடர்களில் கொடுக்கப்படும் இஸ்லாமிய ஆதாரங்களை ஆய்வு செய்து, உங்கள் இஸ்லாமிய அறிஞர்களிடம் கேள்வி கேட்டுப் பாருங்கள்.

பாகம் 2

சென்னையில் முஸ்லிம்கள் செய்த உதவிகளை பார்க்கும் போது, "இந்துக்களிடமும், கிறிஸ்தவர்களிடமும் அதாவது முஸ்லிமல்லாதவர்களிடம்" மனித நேயத்தோடு நடந்துக் கொள்ளுங்கள் என்று முஸ்லிம்களுக்கு இஸ்லாம் போதிக்கிறது என்று நாம் எண்ணிக்கொள்கிறோம். ஆனால், உண்மை வேறுவிதமாக உள்ளது.

முஸ்லிமல்லாதவர்களுக்கு உதவி செய்யும் படி இஸ்லாம் போதிக்கின்றது என்றுச் சொல்பவர்கள் அதற்கான ஆதாரங்களை குர்-ஆனிலிருந்து காட்டவேண்டும். ஆனால், இதற்கு எதிராக அனேக ஆதாரங்களை இஸ்லாமில் காணலாம். முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிராக நடந்துக் கொள்ளுங்கள் என்று முஹம்மது அனேக கட்டளைகளை கொடுத்துள்ளார். இக்கட்டுரையில் இதைப் பற்றிய இன்னொரு ஹதீஸைக் காண்போம்.

## முஸ்லிமல்லாதவர்களிடம் காட்டும் வெறுப்புணர்வின் வெளிப்பாடு

### முஸ்லிம்களே! முஸ்லிமல்லாதவர்களுக்கு முதலில் முகமன் (ஸலாம்) சொல்லாதீர்கள்

ஒருவர் இன்னொருவரைக் காணும் போது, ஹலோ அல்லது வணக்கம் என்றுச் சொல்வது சாதாரண விஷயம். ஒரு முஸ்லிம் இன்னொரு முஸ்லிமை காணும் போது, "அஸ்ஸலாமு அலைக்கும் – உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும்" என்றுச் சொல்வார். ஒரு முஸ்லிம், ஒரு இந்துவையோ, கிறிஸ்தவனையோ வழியில் காணும் போது, எப்படி முகமன் (வணக்கம்) சொல்லவேண்டும்? இதைப் பற்றி முஸ்லிம்களின் வழிகாட்டி முஹம்மது என்ன சொல்கிறார் என்பதைக் காண்போம்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

**யூதர்களுக்கும் கிறித்தவர்களுக்கும் நீங்கள் முதலில் முகமன் கூறாதீர்கள்**. அவர்களில் ஒருவரை நீங்கள் சாலையில் சந்தித்தால், சாலையின் நெருக்கடியான பகுதியில் அவரை ஒதுங்கிப்போகச் செய்யுங்கள். - இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஆதாரம்: ஸஹீஹ் முஸ்லிம் நூல், எண் 4376

மேற்கண்ட ஹதீஸில் முஹம்மது இரண்டு (அருமையான!) அறிவுரைகளை முஸ்லிம்களுக்கு கொடுத்துள்ளார். இவ்விரண்டு அறிவுரைகளும் மாற்று மதத்தவர்களுக்கு எதிராக முஸ்லிம்கள் எப்படி நடந்துக் கொள்ளவேண்டும் என்பதைப் பற்றி பேசுகின்றன. இவ்விரண்டு அறிவுரைகளும் முஸ்லிம்களின் மனதில் வெறுப்புணர்வைத் தூண்டக்கூடியவைகளாக உள்ளன. இக்கட்டுரையில் முதல் அறிவுரையைப் பற்றி ஆய்வு செய்வோம்.

**குறிப்பு:** யூதர்கள் முஹம்மதுவிற்கு ஸலாம் சொல்லும் போது, "உங்கள் மீது மரணமுண்டாகட்டும் – அஸ்ஸாமு அலைக்கும்" என்று சொல்வார்கள், அதற்கு முஹம்மதுவும் "உங்கள் மீதும்" என்றும் சொல்வார். பதிலுக்கு பதில் சரியாக அமைந்துவிடும். யாராவது இப்படி வாழ்த்து கூறினால், நீங்கள் இப்படியே சொல்லுங்கள் என்று அவர் கற்றுக்கொடுத்துள்ளார். ஆனால், இந்த தொடரில் நாம் ஆய்வு செய்யப்போவது இந்த விவரமல்ல, முதலாவது முஸ்லிம்கள் முஸ்லிமல்லாதவர்களுக்கு ஸலாம் சொல்லலாமா இல்லையா என்பது தான்.

**முஸ்லிமல்லாதவர்களுக்கு முதலில் முகமன் கூறாதீர்கள் - நல்ல மனிதர்களை கெடுக்க முயலும் இறைத்தூதர்:**

ஒரு சமுதாயத்தில் வாழும் மக்கள் ஏற்கனவே தங்கள் நம்பிக்கைகளினால் பலவகையாக பிரிந்து கிடக்கிறார்கள். என் இறைவன் தான் பெரியவன், உன் இறைவன் அப்படி இல்லை, என் மதம் தான் சரியானது, உன் மதம் தவறானது என்று மக்கள் நினைத்துக் கொண்டு வாழுகிறார்கள்.

இந்த நிலையில் மக்கள் இருக்கும் போது, நீங்கள் மாற்று மதத்தவர்களுக்கு முதலில் வணக்கம் சொல்லாதீர்கள் என்று "முஹம்மது" கட்டளையிடுவது எவ்வளவு கீழ்தரமானது? நண்பர்களும், உறவினர்களும் பல காரணங்களுக்காக சில காலம் பிரிந்து இருந்தாலும், இவர்களில் யாராவது ஒருவர் சுயமாக முன்வந்து, மற்றவருக்கு வணக்கம் சொல்லி, நலம் விசாரித்தால், பழைய பகையையெல்லாம் மறந்து மறுபடியும் நட்பு கொண்டு ஒற்றுமையாக வாழ்வதை நாம் அவ்வப்போது நிஜவாழ்க்கையில் காண்கிறோம். இதேயே முஹம்மது முஸ்லிம்களுக்கும் கட்டளையிட்டுள்ளார், அதாவது முஸ்லிம்களில் இருவர் மனஸ்தாபம் கொண்டு பிரிந்து இருந்தால், அதிகபட்சம் மூன்று நாட்களுக்கு மேல் அவர்களின் பிரிவு இருக்கக்கூடாது. இவர்களில் யார் அடுத்தவரை முதலில் சந்தித்து ஸலாம் கூறுகிறாரோ, அவர் தான் சிறந்தவர் என்று முஹம்மது முஸ்லிம்களுக்கு கட்டளையிட்டுள்ளார் (பார்க்க ஸஹீஹ் புகாரி நூல் எண் 6077). இந்த கட்டளை முஸ்லிம்களுக்கு மட்டுமே, முஸ்லிமல்லாதவர்களுக்கு இல்லை, இதனை இஸ்லாமிய அறிஞர்கள் மறுத்தால் விளக்கம் தரவும்.

தங்கள் மார்க்கம் அமைதி மார்க்கம் என்று சொல்லிக்கொள்ளும் முஸ்லிம்களின் நிரந்தர வழிகாட்டியாகிய முஹம்மது சொல்லும் அறிவுரையை நன்றாக கவனித்துப் பாருங்கள்.

இப்படிப்பட்ட அறிவுரைகளை படிக்கும் முஸ்லிம்களின் உள்ளத்தில் மாற்று மத மக்களைப் பற்றி எப்படிப்பட்ட எண்ணங்கள் உண்டாகும்?

- எங்கள் உயிரினும் மேலான இறைத்தூதர் ஒன்றைச் சொன்னால், அது சரியாகத் தான் இருக்கும்.
- முஹம்மது "ஆம்" என்றால் "ஆம்", அவர் "இல்லை" என்றால் "இல்லை" – இது தான் முஸ்லிம்களின் உயிர் மூச்சு.
- முஸ்லிமல்லாதவர்கள் மீது முஹம்மதுவிற்கு எவ்வளவு வெறுப்புணர்வு இருந்தால், இப்படி முதலாவது நீங்கள் முகமன் சொல்லாதீர்கள் என்றுச் சொல்வார்?
- இஸ்லாமிய தீவிரவாதிகள் ஏன் ஈவு இரக்கமில்லாமல், முஸ்லிமல்லாதவர்களை கொல்கிறார்கள் என்பதற்கு இப்படிப்பட்ட இஸ்லாமிய கட்டளைகளே காரணம் என்பதை புரிந்துக் கொள்ள முடிகின்றதா?
- முதலாவது ஒரு முஸ்லிம், முஸ்லிமல்லாதவனுக்கு வணக்கமோ, ஸலாமோ சொன்னால், அவனுக்கு என்ன குறைந்துவிடும்? அவன் வாயிலிருந்து முத்துக்கள் உதிர்ந்துவிடுமா? இதனால் அல்லாஹ்விற்கு என்ன தீமை நடந்துவிடும்?
- சக மனிதனுக்கு ஜாதி பார்க்காமல், "முதலாவது வாழ்த்துக்கள் சொல்வதற்கும்" தடைவிதிக்கும் இஸ்லாமை பின்பற்றும் அதே முஸ்லிம்கள், தங்கள் உயிரை பணயம் வைத்து சென்னையில் ஜாதி மதம் பார்க்காமல் எப்படி உதவி செய்தார்கள்? இது எப்படி சாத்தியம்? இவர்கள் முஹம்மதுவையும் அவரது போதனைகளையும் புறக்கணித்தவர்களா?

இந்த வாழ்த்துதல் சொல்வதைப் பற்றி இதர இஸ்லாமிய விவரங்களை இப்போது காண்போம். படிக்கும் போது சிரிப்பு வந்துவிட்டால், சிரித்துவிடுங்கள், அதன் பிறகு இஸ்லாம் பற்றி சிந்தியுங்கள், நம் தமிழ் முஸ்லிம்களின் நிலைப்பற்றியும் சிந்தியுங்கள்.

## 1) என் வாழ்த்துதலை எனக்கு திருப்பி கொடுத்துவிடு:

ஆரம்ப கால முஸ்லிம்களின் மனநிலை எப்படி இருக்கின்றது என்பதை கவனியுங்கள். சிறு பிள்ளைகள் சண்டையிட்டுக் கொண்டால், 'நான் நேற்று கொடுத்த சாக்லெட் திரும்ப கொடுத்துவிடு' என்று கேட்பது போல் இருக்கிறது.

அப்துர்ரஹ்மான் கூறினார்: "இப்னு உமர் ஒரு கிறிஸ்தவரை கடந்துச் சென்றார். அந்த கிறிஸ்தவர் இப்னு உமருக்கு வாழ்த்து கூறினார், உடனே இப்னு உமரும் அவருக்கு திரும்ப வாழ்த்து கூறினார். அதன் பிறகு இப்னு உமருக்கு 'அந்த நபர் ஒரு கிறிஸ்தவர்' என்று அறிவிக்கப்பட்டபோது, உடனே இப்னு உமர் திரும்பச் சென்று அந்த கிறிஸ்தவரிடம் "**என்னுடைய வாழ்த்துதலை திரும்ப கொடுத்துவிடு**" என்று கேட்டார். (இமாம் புகாரியின் 'அல்-அதப் அல்-முஃப்ரத்' எண்: 1115)

521. When someone greets a Christian whom he does not recognise

1115. 'Abdu'r-Rahman said, "Ibn 'Umar passed by a Christian who greeted him and Ibn 'Umar returned the greeting He was told that the man was a Christian. When he learned that, he went back to him and said, 'Give me back my greeting.'" (Al-Adab Al-Mufrad - Imam Al-Bukhari (Rahimullaah) - Translation by Ustadah Aisha Bewley)

## 2) ஒரு கிறிஸ்தவனுக்கு எப்படி வாழ்த்து கூறுவது? சொல்லிய வாழ்த்தை மாற்றுவது ஏன்?

முஸ்லிம்களின் மனதில் எப்படிப்பட்ட விஷவாயு பரவியிருந்தது என்பதை எடுத்துக் காட்டும் இன்னொரு உதாரணம். ஆனால் நம் தமிழ் முஸ்லிம்களைப் பாருங்கள், எவ்வளவு மனித நேயத்தோடு நமக்கு உதவி செய்துள்ளார்கள்! இந்த கீழ்கண்ட ஹதீஸில், ஒரு முஸ்லிம் ஒரு கிறிஸ்தவருக்கு வாழ்த்தை கூறுகிறார், அவர் கிறிஸ்தவர் என அறிந்து, தான் கூறிய வாழ்த்தை திரும்ப பெற்றுக்கொண்டு, புதிய வாழ்த்தைக் கூறினார்.

520. ஒரு திம்மி (கிறிஸ்தவனுக்கு) எப்படி வாழ்த்து கூறுவது?

1112. "உக்பா இப்னு அமிர் அல் ஜுஹானி" ஒரு மனிதரைக் கடந்துச் சென்றார். ஒரு முஸ்லிமைப்போல தோற்றமளித்த இவர் உக்பாவிற்கு வாழ்த்து கூறினார். உடனே உக்பா மறுமொழியாக "உங்கள் மீதும் சமாதானம் உண்டாவதாக, இன்னும் அல்லாஹ்வின் அருளும் ஆசீர்வாதமும் உங்கள் மீது உண்டாகட்டும்" என்று வாழ்த்து கூறி சென்றுவிட்டார். உக்பாவின் அடிமை "அவர் ஒரு கிறிஸ்தவர்" என்று உக்பாவிற்கு அறிவித்தார். உடனே உக்பா எழுந்து அந்த கிறிஸ்தவரை சந்திக்கும் வரை வந்த வழியே சென்றார். **அவர் அந்த கிறிஸ்தவரை சந்தித்ததும் "அல்லாஹ்வின் அருளும் ஆசீர்வாதமும் முஸ்லிம்களுக்கு மட்டும் உரியது. எனவே உனக்கு கூறிய வாழ்த்தை திரும்ப பெற்றுக்கொண்டு, வேறு வகையான வாழ்த்தைக் கூறுகிறேன், "உங்களுக்கு அல்லாஹ் நீடித்த ஆயுளும், பிள்ளைச் செல்வங்களும், இதர செல்வங்களும் கொடுப்பானாக" என்றுச் சொன்னார்.**

520. How to make supplication for a dhimmi

1112. 'Uqba ibn 'Amir al-Juhani passed by a man who looked like a Muslim who greeted him. 'Uqba answered him, saying, "And on you and the mercy of Allah and his blessings." His slave said to him, "He is a Christian." 'Uqba got up and followed him until he caught up to him. He said, "The mercy of Allah and His blessings are for the believers, but may Allah make your life long and give you much wealth and many children." (Al-Adab Al-Mufrad - Imam Al-Bukhari (Rahimullaah) - Translation by Ustadah Aisha Bewley)

மேற்கண்ட விவரம் பல கேள்விகளை எழுப்புகிறது.

ஏன் உக்பாவின் அடிமை “அவர் ஒரு கிறிஸ்தவர்” என்றுச் சொன்னார்? கிறிஸ்தவர்களுக்கு அல்லாஹ்வின் அருள் பற்றிய வாழ்த்துச் சொல்லக்கூடாது என்று இந்த அடிமைக்கு ஏற்கனவே தெரிந்திருந்ததா? அப்படியானால், இதனை முஹம்மது சொல்லாமல் எப்படி அவருக்கு தெரிந்திருக்கும்? அவர் கிறிஸ்தவர் என்று தெரிந்தவுடன், உக்பா விஷயத்தை (தன் தவறை) புரிந்துக்கொண்டு, உடனே திரும்பிச் சென்று வேறு வகையான வாழ்த்தைச் சொன்னதிலிருந்து, இஸ்லாம் எப்படிப்பட்ட எண்ணங்களை முஸ்லிம்களின் மனதில் விதைத்திருக்கிறது என்பதை அறிந்துக் கொள்ளமுடிகின்றது! இஸ்லாமின் இறையியல் முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிராக இருந்தால், எப்படி அவர்கள் அல்லாஹ்வை தெய்வமென்று அறிந்து அவரை தொழுதுக் கொள்ளமுடியும்? அல்லாஹ்வின் அருள் இல்லாமல், எப்படி கிறிஸ்தவர்கள் அல்லாஹ்வை விசுவாசிக்கமுடியும்? ஏன் இப்படியெல்லாம் முஹம்மது போதனை செய்து முஸ்லிம்களின் மனதில் முஸ்லிமல்லாதவர்கள் பற்றி தீய எண்ணங்களை விதைத்திருக்கிறார்?

**தற்கால தமிழ் இஸ்லாமிய அறிஞர்கள், ”ஸலாம்” பற்றி என்ன சொல்லியுள்ளார்கள்?**

### அ) புறக்கணிக்கப்பட்ட சலாம்

புறக்கணிப்பட்ட சலாம் என்ற பெயரில் ஒரு கட்டுரை சுவனத்தென்றல் என்ற தளத்தில் பதிக்கப்பட்டுள்ளது (அதன் தொடுப்பு).

இந்த கட்டுரையில் ஏன் முஸ்லிம்கள் ஸலாம் சொல்லவேண்டும் என்று விவரிக்கப்பட்டுள்ளது. ஆனால், முஸ்லிமல்லாதவர்களுக்கு ஸலாம் சொல்வது பற்றிய தலைப்பு வரும் போது, ஆசிரியர் கீழ்கண்ட விதமாக கூறி நழுவிவிட்டார். மேலும், நான் மேலே காட்டிய ஹதீஸ் பற்றி முச்சு விடவில்லை.

**இக்கட்டுரையின் முன்னுரை இவ்விதமாக உள்ளது:**

இந்த உலகத்தைப் படைத்து அதில் பலவகையான உயிரினங்களைப் உருவாக்கி அவற்றிலே மிகச்சிறந்த படைப்பாக மனிதனைப் படைத்த இறைவன் அவர்கள் எவ்வாறு வாழவேண்டும் என்ற அழகிய வழிமுறைகளையும் அவனது இறுதிதூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் மூலமாகத் தந்துள்ளான். அவற்றில் ஒன்று தான் முகமன் (சலாம்) கூறுதல் ஆகும்.

**அடுத்தது. . . முஸ்லிம் அல்லாதவர்களுக்கு சலாம் கூறுவது பற்றி இவ்விதமாகச் சொல்லப்பட்டுள்ளது:**

முஸ்லிம் அல்லாதவர்களுக்கு சலாம் கூறுதல்: -

முஸ்லிம் அல்லாதவர்களுக்கு சலாம் கூறலாமா அல்லது அவர்களுடைய சலாத்திற்கு பதில் கூறலாமா? என்பதில் ஒரு சில அறிஞர்களுக்கிடையே கருத்து வேறுபாடு இருந்தாலும், பெரும்பாலான அறிஞர்கள் மாற்றுமத சகோதர, சகோதரிகளுக்கும் சலாம் கூறுவதை ஆதரிக்கின்றார்கள்.

அத்தியாயம் 4, ஸூரத்துன்னிஸாவு (பெண்கள், வசனம் 86 ல் அல்லாஹ் கூறுகிறான்: -

உங்களுக்கு ஸலாம் கூறப்படும் பொழுது, அதற்குப் பிரதியாக அதைவிட அழகான (வார்த்தைகளைக் கொண்டு) ஸலாம் கூறுங்கள்; அல்லது அதையே திருப்பிக் கூறுங்கள் - நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பொருட்களின் மீதும் கணக்கெடுப்பவனாக இருக்கிறான்.

இந்த வசனத்தில் முஸ்லிம்களுக்கு மட்டும் என்று அல்லாஹ் குறிப்பிடவில்லை. மேலும் மாற்று மத சகோதர, சகோதரிகளுக்கும் சலாம் கூறுவதன் மூலம் அவர்கள் இஸ்லாத்தின் பால் நல்லெண்ணம் கொண்டவர்களாக ஆகுவதற்குரிய சந்தர்ப்பமும் சகோதரத்துவமும் அதிகரிக்கும்.

**இவ்விவரங்களை படிப்பவர்களுக்கு எழும் கேள்விகள்:**

- 14 நூற்றாண்டுகள் தாண்டியும், இன்னும் முஸ்லிமல்லாதவர்களுக்கு ஸலாம் கூறலாமா வேண்டாமா? என்ற ஆய்வு நடந்துக்கொண்டே இருக்கிறது! ஒரு சின்ன விஷயத்தில் கூட இன்னும் நீங்கள் ஒருமித்த கருத்துக்கு வரவில்லையா?
- ஸஹீஹ் முஸ்லிம் எண் 4376ஐ பற்றி, ஏன் இக்கட்டுரையில் விவரிக்கவில்லை?
- குர்-ஆன் 4:86ம் வசனத்திற்கு நீங்கள் சொல்லும் விளக்கத்திற்கு எதிராக, முஹம்மது கூறியுள்ளார் (முஸ்லிம் ஹதீஸில் எண் 4376). குர்-ஆன் சொல்வது தவறா அல்லது முஹம்மது சொல்வது தவறா?

## ஆ) பீஜே குர்-ஆன் தமிழாக்கத்தின் விளக்கம் 159 - ஸலாம் கூறும் முறை:

பீஜே அவர்களின் குர்-ஆன் தமிழாக்கத்தின் விளக்கம் 159ல், பீஜே அவர்கள் ஸலாம் பற்றி பல விவரங்களைக் கொடுத்துள்ளார். அதில் முஸ்லிமல்லாதவர்களுக்கும் ஸலாம் சொல்லலாம் என்றும் அவர் கூறியுள்ளார். ஆனால், முஸ்லிம் ஹதீஸ் எண் 4376ஐ பற்றி அவர் ஒன்றும் கூறவில்லை.

முஸ்லிமல்லாதவர்களுக்கு ஸலாம் கூறக் கூடாது என்று கட்டளையிருந்தால் அதைக் கண்டிப்பாக நடைமுறைப்படுத்த வேண்டும் என்பதில் இரு வேறு கருத்து இல்லை. ஆனால் அல்லாஹ்வும், அவனது தூதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் நமக்கு இவ்வாறு கட்டளையிடவில்லை. மாறாக முஸ்லிம் அல்லாதவர்களுக்கு ஸலாம் கூறுவதைத் தெளிவாக அனுமதித்துள்ளனர்.

மூலம்: http://www.onlinepj.com/Quran-pj-thamizakkam-thawheed/vilakkangal-new/159_salam_koorum_murai/

நம்முடைய கேள்வி என்னவென்றால், "முஸ்லிமல்லாதவருக்கு முதலாவது ஸலாம் சொல்லாதீர்கள்" என்று முஹம்மது "முஸ்லிம் ஹதீஸில்" சொல்லியுள்ளாரே, அதைப் பற்றி பீஜே அவர்கள் மூச்சுவிடவில்லையே ஏன்? மாற்று மத சகோதரர்களிடம் சகோதரத்துவத்தை இஸ்லாம் வளர்க்கிறது என்று முஸ்லிம்கள் சொல்வது பொய் அல்லவா? சின்ன விஷயமாகிய ஸலாம் சொல்வதில் முந்திக்கொள்ளக்கூடாது என்று முஸ்லிம்களுக்கு முஹம்மது கட்டளையிடுவது எவ்வளவு கீழ்தரமானது?

### இத்தொடரின் சுருக்கமும், சென்னையில் உதவி புரிந்த முஸ்லிம்களுக்கு கேள்விகளும்:

1) குர்-ஆன் 4:86, தெரிந்தவர்களுக்கும் தெரியாதவர்களுக்கும் வாழ்த்துக்கள் சொல்லுங்கள் என்று கட்டளையிடுகிறது.

2) ஆனால் முஹம்மதுவோ, யூதர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்க்கும் முதலாவது வாழ்த்துக்கள் சொல்லாதீர்கள் என்று கட்டளையிட்டார்(முஸ்லிம் எண் 4376).

3) ஆரம்ப கால முஸ்லிம்கள், சிறந்த வாழ்த்தை முஸ்லிமல்லாதவர்களுக்கு தவறுதலாக சொன்னாலும், உடனே அதனை திரும்ப பெற்றுக் கொண்டு இருந்திருக்கிறார்கள். சில சமயங்களில் வாழ்த்தை திரும்பப் பெற்றுக்கொண்டு, வேறு வாழ்த்தைச் சொல்லியுள்ளார்கள். இவைகளை முஹம்மதுவின் மூலமாகவே இவர்கள் அறிந்திருப்பார்கள். இவைகள் சிறுபிள்ளைத் தனமான செயல்களாக காணப்படுகின்றது.

4) குர்-ஆன் 4:86ம் வசனத்திற்கு எதிராக ஸஹீஹ் முஸ்லிம் 4376 உள்ளது. முஹம்மது எப்படி குர்-ஆன் 4:86க்கு எதிராக போதித்துள்ளார் என்பதை இந்த கட்டுரை ஆய்வு செய்கிறது, அதனை இங்கு படிக்கலாம்: **குர்-ஆன் மற்றும் சுன்னாவின் படி இஸ்லாமியரல்லாதவர்களுக்கு முஸ்லிம்கள் எப்படி வாழ்த்துக்கள் கூறுவது?**

5) இந்த இஸ்லாமிய ஆதாரங்கள் ஒரு புறமிருக்க, தமிழ் முஸ்லிம்கள் இவைகளை புறக்கணித்துவிட்டு, ஜாதி மதம் பேதமின்று உதவிகள் புரிந்துள்ளனர்.

6) இதனை நாம் எப்படி எடுத்துக் கொள்வது? மக்களுக்கு உதவி செய்யும் நோக்கில், தமிழ் முஸ்லிம்கள் ஒரே அடியாக இஸ்லாமை புறக்கணித்துவிட்டார்களா? அல்லது இவ்விவரங்கள் அனைத்தும் அவர்களுக்கு தெரிந்திருந்தும், அவைகளை மறைத்துவிட்டு, இஸ்லாமுக்கு வெளியுலகில் நல்லப்பெயர் கிடைக்கவேண்டுமென்று, நமக்கு உதவிகள் செய்தார்களா?

### முடிவுரை:

முஸ்லிமல்லாத அனேகருக்கு மேற்கண்ட விவரங்கள் ஆச்சரியத்தைக் கொடுத்திருக்கும்! முஹம்மதுவிற்கும், இஸ்லாமுக்கும் இப்படிப்பட்ட இன்னொரு பக்கம் இருப்பதை அறியாதவர்கள் அனேகர். இஸ்லாமிய மூல நூல்களை நாம் படித்தால், இஸ்லாமின் அடுத்தபக்கத்தை சரியாக புரிந்துக் கொள்ளலாம்.

அடுத்த தொடர் கட்டுரையில், இதே முஸ்லிம் ஹதீஸ் 4376ல் உள்ள இரண்டாவது பாகத்தைப் பற்றி ஆய்வு செய்வோம்.

**சென்னையில் முஸ்லிம்களின் பேருதவி தொடர் கட்டுரைகள்**

**உமரின் இதர கட்டுரைகள்/மறுப்புக்கள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/chennai_muslims/chennai_muslims_part2.html

# 36. பாகம் 3 - சென்னையில் பேருதவி புரிந்த முஸ்லிம்களை முஹம்மதுவும் அல்லாஹ்வும் மன்னிப்பார்களா?

**(முஸ்லிமல்லாதவர்களை சாலையின் நெருக்கடியான பாதையில் போக முஸ்லிம்கள் கட்டாயப்படுத்தவேண்டும்)**

**முன்னுரை:**

இந்த தலைப்பின் முந்தைய இரண்டு கட்டுரைகளை கீழ்கண்ட தொடுப்புகளில் படிக்கலாம்.

**பாகம் 1 - தாடி, மீசை, வேட்டி, செருப்பு விஷயங்களில் மாறு செய்தல்**

**பாகம் 2 - முஸ்லிமல்லாதவர்களுக்கு முதலாவது ஸலாம் சொல்லக்கூடாது**

இவைகளின் தொடர்ச்சியாக, இந்த மூன்றாவது பாகத்தில், முஸ்லிமல்லாதவர்களை முஸ்லிம்கள் சாலையில் எப்படி நடத்தவேண்டும்? என்ற கேள்விக்கு இஸ்லாம் என்ன பதில் சொல்கிறது என்பதை ஆய்வு செய்வோம்.

இக்கட்டுரையில் மேற்கோள் காட்டப்படும் ஆதாரங்கள் இஸ்லாமிய நூல்களிலிருந்தும், இஸ்லாமிய விரிவுரைகளிலிருந்தும் எடுக்கப்படுகின்றன என்பதை வாசகர்கள் கவனிக்கவும்.

## பாகம் 3

**முஸ்லிமல்லாதவர்களை சாலையின் நெருக்கடியான பாதையில் போக முஸ்லிம்கள் கட்டாயப்படுத்தவேண்டும்**

சென்னை மக்களுக்கு உதவிகள் தேவைப்பட்டபோது, முஸ்லிம்கள் உற்சாகமாய் உதவிகளைச் செய்தனர். இதன் பின்னணியை முழுவதுமாக அறிய மேலே கொடுக்கப்பட்ட முதலாவது பாகத்தை படிக்கவும். முஸ்லிமல்லாதவர்களிடம் முஸ்லிம்கள் அன்பாக நடந்துக் கொள்ளக்கூடாது என்று இஸ்லாம் கட்டளையிடுகிறது. முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிராக நடந்துக்கொள்ளுங்கள் என்று இஸ்லாம் வெளிப்படையாக சொல்லியிருக்கும் போது, முஸ்லிம்கள் அதனை புறக்கணித்துவிட்டு, முஸ்லிமல்லாதவர்களுக்கு தங்கள் உயிரைக் கொடுத்து உதவிகள் செய்துள்ளனர். இதனை முஸ்லிமல்லாதவர்கள் எப்படி புரிந்துக் கொள்வது? இஸ்லாம் சொல்வது சரியா? அல்லது முஸ்லிம்கள் செய்தது சரியா? இப்படிப்பட்ட கேள்விகளுக்கு விடை காண்பது தான் இக்கட்டுரைகளின் முக்கிய நோக்கம்.

முஸ்லிமல்லாதவர்களுக்கு முதலாவது வாழ்த்துதல்/ஸலாம் சொல்லாதீர்கள் என்று முஹம்மது கற்றுக்கொடுத்த விவரத்தை இரண்டாம் பாகத்தில் ஆய்வு செய்தோம். இப்போது அதே இஸ்லாமிய ஆதாரத்தின் அடுத்த பாகத்தை ஆய்வு செய்வோம்.

**முஹம்மது கீழ்கண்டவாறு கட்டளையிட்டுள்ளார் (ஸஹீஹ் முஸ்லிம் நூல், எண் 4376):**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

யூதர்களுக்கும் கிறித்தவர்களுக்கும் நீங்கள் முதலில் முகமன் கூறாதீர்கள். அவர்களில் ஒருவரை நீங்கள் சாலையில் சந்தித்தால், சாலையின் நெருக்கடியான பகுதியில் அவரை ஒதுங்கிப்போகச் செய்யுங்கள். - இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஆதாரம்: ஸஹீஹ் முஸ்லிம் நூல், எண் 4376

**யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்களை சாலையின் நெருக்கடியான பாதையில் செல்லும் படி கட்டாயப்படுத்துங்கள்:**

மேலே நாம் பார்த்த ஹதீஸ், ஆதாரபூர்வமான முஸ்லிம் தொகுப்பிலிருந்து எடுக்கப்பட்டதாகும். ஒரு சாலையில் யூதர்களோ அல்லது கிறிஸ்தவர்களோ சென்றுக்கொண்டு இருக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அதே சாலையில் முஸ்லிம்களும் சென்றுக்கொண்டு இருந்தால், அந்த நேரத்தில் முஸ்லிம்கள் சாலையில் விசாலமான பாதையில் செல்லவேண்டுமாம், அதாவது முஸ்லிமல்லாதவர்கள் முஸ்லிம்களுக்கு வழியை விட்டுவிட்டு, அவர்கள் நெருக்கடியான பாதையில் செல்லவேண்டுமாம். இதில் கவனிக்கவேண்டிய விஷயம் என்னவென்றால், முஸ்லிமல்லாதவர்கள் நெருக்கடியான பாதையில் போகும் படி “முஸ்லிம்கள்” அவர்களை கட்டாயப்படுத்தவேண்டுமாம். உலக மக்களுக்கு ஒளியாக வந்தவர் முஹம்மது என்று முஸ்லிம்கள் பெருமையாகச் சொல்லிக்கொள்வார்கள், இப்படிப்பட்டவர் தம்முடைய மக்களுக்கு "இதர மக்களிடம்" இப்படி கீழ்தரமாக நடந்துக் கொள்ள வேண்டும் என்று கட்டளையிட்டுள்ளார்.

மேற்கண்ட ஹதீஸையும், அதன் தாக்கத்தையும் அறியாத முஸ்லிம்களில் சிலர், கீழ்கண்ட விதமாக ஆட்சேபனை செய்யலாம். அவர்களுக்கு இந்த ஹதீஸின் பாதிப்பு என்னவென்பது சரியாக புரியவேண்டுமென்பதற்காக சில உதாரணங்களை இந்திய பின்னணியிலிருந்து எடுத்துக் காட்டுகிறேன்.

## முஸ்லிம்களின் ஆட்சேபனை - 1

**இந்த ஹதீஸ் பொய்யாக இருக்கலாம், ஏனென்றால் எங்கள் இறைத்தூதர் இப்படியெல்லாம் சொல்லியிருக்கமாட்டார்.**

**சுன்னி பிரிவைச்** சார்ந்த முஸ்லிம்கள் குர்-ஆனுக்கு அடுத்தபடியாக ஹதீஸ்களை நம்புகிறார்கள். புகாரி மற்றும் முஸ்லிம் ஹதீஸ் தொகுப்புக்கள் முஸ்லிம்களுக்கு அதி முக்கியமான இறைநூல்களாகும். இவ்விரண்டு தொகுப்புக்களுக்கு பிறகு தான் இதர ஹதீஸ்களின் நம்பகத்தன்மை தரம்பிரிக்கப்படுகிறது. நாம் மேலே படித்த ஹதீஸ் “முஸ்லிம்” நூலிலிருந்து எடுக்கப்பட்டதாகும். உங்களுக்கு இந்த ஹதீஸ் தொகுப்பின் மீது சந்தேகம் இருந்தால், உங்கள் இஸ்லாமிய அறிஞர்களிடமும் கேட்டுப் பாருங்கள், இஸ்லாமிய தளங்களிலும் சென்று படித்துப் பாருங்கள். முஸ்லிம்களாகிய நீங்கள் இவ்விதமான ஹதீஸ்களை புறக்கணிக்கும் அடுத்த நிமிடமே காஃபிராகி (இஸ்லாமை விட்டு வெளியேறியவராகி) விடுவீர்கள். எனவே, முஸ்லிம்களே! உங்கள் ஆதாரபூர்வமான ஹதீஸ்களை மறுக்க முயலாதீர்கள். தமிழ் நாடு தவ்ஹித் ஜமாத் என்ற முஸ்லிம் குழுவினர், இப்படிப்பட்ட ஆதாரபூர்வமான ஆனால், அதே நேரத்தில் தர்மசங்கடமான ஹதீஸ்களை மறுத்துக்கொண்டு வந்துக் கொண்டு இருக்கிறார்கள். இந்த ஹதீஸ் ஒருவேளை அவர்களது தற்போதைய பட்டியலில் இல்லாமல்

இருந்தால், வருங்காலங்களில் இந்த முஸ்லிம் ஹதீஸ் எண் 4376ஐயும் அவர்கள் தங்கள் மறுக்கப்படும் ஹதீஸ் பட்டியலில் சேர்த்துக்கொள்வார்கள் என்பதில் ஆச்சரியமில்லை. காத்திருப்போம், காலம் பதில் சொல்லும்.

**ஷியா பிரிவினர்:** இஸ்லாமின் இன்னொரு பிரிவினர் ஷியா பிரிவினராவார்கள். இவர்கள் இந்த முஸ்லிம், புகாரி ஹதீஸ் தொகுப்புக்களை முழுவதுமாக நம்புவதில்லை, ஷியா பிரிவினருக்கு தனியாக ஹதீஸ் தொகுப்புக்கள் உள்ளன. இவர்களின் ஹதீஸ்களை ஆய்வு செய்தால், மேற்கண்ட ஹதீஸ் போன்ற தர்மசங்கடமான விவரங்கள் இன்னும் அதிகமாக வெளிப்படும். ஷியா பிரிவினர் இஸ்லாமில் சிறும்பான்மையினராக இருக்கிறார்கள். என்னுடைய மறுப்புக்கள் மற்றும் கேள்விகள் அனைத்தும் பெரும்பான்மையினராகிய சுன்னி முஸ்லிம்களுக்குத் தான்.

எனவே, புகாரி, முஸ்லிம் ஹதீஸ் தொகுப்புக்களில் உள்ள விவரங்களை முஸ்லிம்கள் புறக்கணிக்கக்கூடாது. எனக்கு தெரிந்தவரை, இந்த முஸ்லிம் ஹதீஸை (எண் 4376ஐ) யாரும் இதுவரை மறுக்கவில்லை.

## முஸ்லிம்களின் ஆட்சேபனை - 2

**முஹம்மது கட்டளையிட்டதில் என்ன தவறு இருக்கிறது? பெரும்பான்மையினர் ஆட்சி செய்யும் நாட்டில் சிறும்பான்மையினர் சிறிது அடங்கிச் செல்வதில் என்ன தவறு இருக்கிறது?**

முஸ்லிம்களே! உங்களின் இந்த கருத்து தவறானது. இதே நிலையில் நீங்கள் இருந்தால், அதனை ஏற்றுக்கொள்வீர்களா? உதாரணத்திற்கு, இந்தியாவில் இந்துக்களின் சதவிகிதம் அதிகமாக இருக்கிறது, அவர்கள் பெரும்பான்மையினராக இருக்கிறார்கள். ஒரு இந்து சாது அல்லது சாமியார், உங்கள் முஹம்மது சொன்னதுபோலவே இந்துக்களுக்கு கட்டளையிட்டால், அது சரியானது என்று நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களா? இதே போல, மேற்கத்திய நாடுகளில் பெரும்பான்மையாக இருப்பவர்கள் முஸ்லிம்களை நடத்தினால், அதனை ஏற்றுக்கொள்வீர்களா?

நம் இந்தியாவிலும், சுதந்திரத்திற்கு முன்பாக, இந்துக்கள் இடையேயும் மேல் ஜாதிமக்கள், கீழ் ஜாதி மக்கள் என்று பாகுபாடு இருந்தது. இந்துக் கோயில்களில் சில பிரிவினர் வரக்கூடாது என்று கட்டுப்பாடு இருந்தது. சாலையில் செல்லும் போது மேல் ஜாதி மக்களுக்கு மதிப்பு கொடுக்கும் படி கீழ்ஜாதி மக்கள் விலகிச் செல்லவேண்டிய நிலை இருந்தது. இப்படிப்பட்டவைகள் தவறானவை என்றும், இஸ்லாம் இப்படிப்பட்ட பாகுபாடு காட்டுவதில்லை என்றும் மேடை போட்டு பேசும் முஸ்லிம்களே! உங்கள் முஹம்மது சொன்னதும் இதைத் தானே! முஹம்மதுவைப் பொறுத்தமட்டில் "முஸ்லிம்கள்" என்பவர்கள் மேல் ஜாதி மக்கள், இதர மார்க்கத்தார்கள் "கீழ் ஜாதி" மக்களாவார்களா? ஜாதிப்பிரிவினை பிரச்சனைகள், இந்து தர்மத்தில் இருந்தால் அது பாவம், இஸ்லாமில் இருந்தால் அது புண்ணியமா? அவர்களுக்கு ஒரு நியாயம், உங்களுக்கு ஒரு நியாயமா?

நாம் வாழும் இக்காலத்திலும் சில கிராமங்களில் இப்படிப்பட்ட ஜாதிவெறி செயல்கள் வெளிப்படும் போது, கொதித்து எழும் முஸ்லிம்கள், ஏன் உங்கள் முஹம்மது சொன்னதை மட்டும் ஏற்றுக்கொள்கிறீர்கள்? இஸ்லாம் என்று வந்தால் மட்டும், உங்கள் கோபமும், எழுச்சியும் ஏன் அப்படியே அமைதியாக இருந்துவிடுகிறது?

நீங்கள் ஏற்றாலும் சரி, ஏற்காவிட்டாலும் சரி முஹம்மது சொன்னது ஜாதிவெறிச்செயலாகும். ஒரு சமுதாயத்தில் சகோதரர்களாக வாழும் மக்களுக்கு இடையில் விரிசலையும், ஏற்றத்தாழ்வுகளையும் உண்டாக்கும் படி முஹம்மது போதனை செய்துள்ளார்.

## முஸ்லிம்களின் ஆட்சேபனை - 3

**இந்த ஹதீஸில், யூதர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் வழியை விடாதீர்கள் என்றுச் சொல்லப்பட்டதே தவிர, இந்துக்களுக்கு இல்லையே! ஏன் மேற்கண்ட ஹதீஸை இந்துக்களோடு சம்மந்தப்படுத்தி, இஸ்லாமை கேவலப்படுத்துகிறீர்கள்?**

யூதர்களிடமும் கிறிஸ்தவர்களிடமும் இப்படி கீழ்தரமாக முஸ்லிம்கள் நடந்துக் கொள்வது இஸ்லாமுக்கு கேவலமில்லையா? இந்துக்களிடம் நடந்துக் கொண்டால் தான் இஸ்லாமுக்கு கேவலமா?

இங்கு குறிப்பிடப்படவேண்டிய இன்னொரு முக்கியமான விஷயம் ஒன்று உள்ளது. அதாவது யூதர்களும், கிறிஸ்தவர்களும் குர்-ஆனின் படி "வேதம் அருளப்பட்டவர்கள்" ஆவார்கள். வேதம் அருளப்பட்டவர்களிடமே இஸ்லாம் இப்படி கீழ்தரமாக நடந்துக் கொள்ளுமானால், மற்றவர்களின் நிலை இதை விட அதிக கேடுள்ளதாக இருக்குமல்லவா?

எந்த மார்க்கத்தை பின்பற்றுபவர்களாக இருந்தாலும் சரி, அவர்களை இதர குடிமக்களைப்போல சரி சமமாக நடத்தவேண்டும், அப்படி நடத்தாத இஸ்லாமிய அரசைப் பார்த்து எல்லோரும் சிரிப்பார்கள்.

யூதர்களும், கிறிஸ்தவர்களும் இஸ்லாமிய நாட்டில் ஏன் சாலைகளில் ஓரமாக நடந்துச் செல்லவேண்டும்? முஸ்லிம்கள் என்ன வானத்திலிருந்து இறங்கிவந்தவர்களா? ஒரு மனிதனை மனிதனாக மதிக்காமல், அவன் நம்பிக்கையை காரணம் காட்டி, அவனது மனதை புண்படுத்துவது எந்த வகையில் நியாயம்?

நாம் மேலே கண்ட ஹதீஸில், யூதர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் வழி விடாதீர்கள் என்று முஹம்மது சொன்னதாக காண்கிறோம். ஆனால், தற்கால இஸ்லாமிய அறிஞர்களின் விரிவுரைகளின் படி, முஸ்லிமல்லாத அனைவருக்கும் முஸ்லிம்கள் விசாலமான வழியை விடக்கூடாதாம். இதனை அடுத்த பாகத்தில் விவரமாக காணலாம்.

### இஸ்லாமிய விரிவுரையாளர்கள், இந்த ஹதீஸ் பற்றி என்ன சொல்கிறார்கள்?

நாம் மேலே பார்த்த முஸ்லிம் ஹதீஸின் விளக்கவுரையை பாருங்கள்.

**Chapter 138**

**Greeting the non-Muslims and Prohibition of taking an Initiative**

866. Abu Hurairah (May Allah be pleased with him) reported: The Messenger of Allah (PBUH) said, "Do not greet the Jews and the Christians before they greet you; and when you meet any one of them on the road, force him to go to the narrowest part of it." [Muslim].

**Commentary:** This Hadith prohibits Muslims from greeting non-Muslims first. It also tells us that when the road is crowded, we should use the middle of the road and let the non-Muslims use its sides. This Hadith shows the dignity of Muslims and the disgrace and humiliation of the non-Muslims. (Riyad-us-Saliheen, compiled by Al-Imam Abu Zakariya Yahya bin Sharaf An-Nawawi Ad-Dimashqi, commentary by Hafiz Salahuddin Yusuf, revised by M.R. Murad [Darussalam Publishers & Distributors, Riyadh, Houston, New

York, Lahore, First Edition: June 1999], Five. The Book of Greetings, Chapter 138: Greeting the non-Muslims and Prohibition of taking an Initiative, Volume 2, p. 711). மூலம்: http://abdurrahman.org/2014/09/04/riyad-us-saliheen-imaam-nawawi-chapter-138/ and http://islamicstudies.info/hadith/riyad-us-saliheen/riyad.php?hadith=866&to=868

**ரியாத் அஸ் ஸாலிஹீன் - விளக்கவுரை:** இஸ்லாமியரல்லாதவர்களுக்கு முஸ்லிம்கள் முதலாவது ஸலாம் சொல்லக்கூடாது என்று இந்த ஹதீஸ் கூறுகின்றது. மேலும், சாலையில் மக்களின் நடமாட்டம் அதிகமாக இருந்தால், முஸ்லிம்களாகிய நாம் சாலையில் மத்தியில் செல்லவேண்டும். முஸ்லிமல்லாதவர்கள் சாலையில் ஓரங்களில் செல்லவேண்டும். இந்த ஹதீஸ் முஸ்லிம்களின் மேன்மையை எடுத்துக் காட்டுகிறது. அதேபோல, முஸ்லிமல்லாதவர்கள் எவ்விதமாக அவமானம் அடையவேண்டும், மேலும் முஸ்லிம்களுக்கு முன்பாக எப்படி தாழ்தப்பட்டு போகவேண்டும் என்பதை எடுத்துக் காட்டுகிறது.

**முஸ்லிமல்லாதவர்களுக்கு வழியை விடாதே:**

"இஸ்லாம் கேள்வி பதில்கள்" (islamqa) என்ற தளத்தில் இதைப் பற்றி ஒரு முஸ்லிம் கேட்ட கேள்விக்கு பதில் அளிக்கப்பட்டுள்ளது. சாலையில் செல்லும் போது, முஸ்லிமல்லாதவர்களுக்கு வழியை விடாமல், அவர்கள் சுவரின் ஓரமாகச் செல்ல கட்டாயப்படுத்துங்கள் என்றுச் சொல்வது, முஸ்லிமல்லாதவர்கள் இஸ்லாம் பற்றி தவறாக நினைக்க தூண்டுமல்லவா? என்று கேள்வி கேட்கப்பட்டது. அதற்கு இஸ்லாமிய அறிஞர்கள் கீழ்கண்ட பதிலைச் சொல்லியுள்ளார்கள்.

What it means is that just as you do not initiate the greeting of salaam, you should not make room for them. If they meet a group of you, do not split up to let them pass, rather continue on your way and leave them the narrow space if there is a narrow part of the road. This hadeeth is not meant to put people off Islam, rather it is a manifestation of the Muslim's pride and a sign that he does not humiliate himself for anyone except his Lord.

இதன் பொருள் என்னவென்றால், யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் முதலாவது ஸலாம் சொல்லாதீர்கள், மேலும் அவர்களை சாலையில் சந்தித்தால், அவர்களுக்கு வழியை விடாதீர்கள் என்பதாகும். அவர்கள் உங்களை சாலையில் சந்திக்கும் போது, அவர்களுக்கு வழி கிடைக்கவேண்டும் என்பதற்காக, நீங்கள் (முஸ்லிம்கள்) தனியாக ஒதுங்கிக்கொண்டு அவர்களுக்கு வழியை விடாதீர்கள். அதற்கு பதிலாக, உங்கள் வழியிலே நீங்கள் தொடர்ந்து சென்றுக்கொண்டே இருங்கள், அக்கம் பக்கத்தில் இடமிருந்தால், அவர்கள் அந்த நெருக்கமான வழியில் செல்லட்டும். இந்த ஹதீஸ் இஸ்லாம் பற்றி மக்கள் தவறாக நினைக்கவேண்டும் என்று சொல்வதாக இல்லை, அதற்கு பதிலாக, இது முஸ்லிம்களின் மேன்மையையும் கண்ணியத்தையும் வெளிக்காட்டக்கூடியதாக இருக்கிறது. அதாவது ஒரு முஸ்லிம் அல்லாஹ்விற்கு தவிர வேறு நபர்களுக்கு முன்பாக தாழ்ந்து போகக்கூடாது என்பதைக் காட்டுகிறது.

மூலம்: https://islamqa.info/en/26785

ஒரு கேவலமான விஷயத்தை எவ்வளவு நாசுக்காக சொல்லியுள்ளார் என்பதை கவனியுங்கள். ஒரு முஸ்லிமின் கண்ணியம், அவன் சாலையில் செல்லும் போது இதர மார்க்க மக்களுக்கு வழியை விடாமல் இருந்தால் கிடைத்துவிடுமாம். அதே நேரத்தில், முஸ்லிமல்லாதவர்கள் எவ்வளவு அதிகமாக இப்படிப்பட்ட அவமானங்களை சந்திக்கவேண்டி வரும் என்பதை பாருங்கள். மேற்கண்ட விதமாக இஸ்லாமிய அறிஞர்கள்

சொல்வது வெறும் பேச்சுக்காக அல்ல, உண்மையாகவே இதனை இஸ்லாமிய நாடுகளில் வாழும் இந்துக்களும், கிறிஸ்தவர்களும் அனுதினமும் அனுபவிக்கிறார்கள்.

**சுருக்கமும் முடிவுரையும்:**

தமிழ் முஸ்லிம்கள் மனிதாபமானத்தோடு சென்னையில் உதவி செய்தார்கள். ஆனால், முஸ்லிமல்லாதவர்களிடம் மனிதாபமானத்தோடு நடந்துக் கொள்ளக்கூடாது என்று இஸ்லாம் கூறுகிறது.

அ) இஸ்லாமிய நூல் "முஸ்லிம் ஹதீஸின்" படி, முஸ்லிம்கள் சாலையில் சென்றுக்கொண்டு இருக்கும் போது, முஸ்லிமல்லாதவர்களுக்கு வழியை விடக்கூடாது.

ஆ) முஹம்மதுவின் கட்டளையின் படி, முஸ்லிமல்லாதவர்கள் நெருக்கமான வழியில் செல்லும் படி முஸ்லிம்கள் அவர்களை கட்டாயப்படுத்தவேண்டும்.

இ) இஸ்லாமிய விரிவுரையாளர்களின் படி – இந்த ஹதீஸ் முஸ்லிம்களின் மேன்மையை வெளிப்படுத்துகிறது. அதாவது, மற்ற மார்க்க மக்களைவிட முஸ்லிம்கள் உயர்ந்தவர்கள் என்பதை இது காட்டுகிறது.

ஈ) இஸ்லாமிய விரிவுரையாளர்களின் படி - சாலையில் முஸ்லிம்கள் மற்றவர்களுக்கு வழியை விட்டால், அது அவர்கள் தாழ்ச்சி அடைந்துவிட்டதாக கருதப்படும். எனவே, முஸ்லிம்கள் முஸ்லிமல்லாதவர்களுக்கு சாலையில் வழியை விடக்கூடாது.

உ) ஒரு மனிதன் இன்னொரு மனிதனுக்கு காட்டவேண்டிய குறைந்த பட்ச உதவியை கூட செய்யக்கூடாது என்று இஸ்லாம் முஸ்லிம்களுக்கு போதிக்கிறது.

இஸ்லாம் மேற்கண்ட விதமாக முஸ்லிம்களுக்கு கட்டளையிட்டு இருக்கும்போது, நம் தமிழ் முஸ்லிம்கள் எப்படி இந்துக்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் உதவிகள் செய்தனர்? முஸ்லிமல்லாதவர்களுக்கு சாலையில் வழியை விடக்கூடாது என்று முஹம்மது சொல்லியிருக்கும் போது, தமிழ் முஸ்லிம்கள் எப்படி இந்துக்களின் தெருக்களில் சாக்கடையில் நடந்துச் சென்று, பொருட்களை சுமந்துச் சென்று உதவி செய்தனர்? கிறிஸ்தவர்களுக்கு முதலாவது ஸலாம் சொல்லக்கூடாது என்றும், அவர்களுக்கு வழியை விட்டு முஸ்லிம்கள் தாழ்ந்துவிடக்கூடாது என்றும் இஸ்லாம் கட்டளையிட்டு இருக்கும் போது, தமிழ் முஸ்லிம்கள் எப்படி கிறிஸ்தவர்களின் வீடு தேடிச் சென்று, உணவுகள், மருந்து பொருட்கள் மற்றும் இதர உதவிகள் செய்தனர்?

லாஜிக் எங்கேயோ இடிக்கிறதே! தமிழ் முஸ்லிம்கள், இஸ்லாம் சொல்வதை நம்புவதில்லையா? அல்லது இஸ்லாமின் போதனை நடைமுறைக்கு ஏற்றதல்ல என்றுச் சொல்லி இஸ்லாமை புறக்கணித்துவிட்டார்களா? இஸ்லாம் சொல்வதைப்போல தமிழ் முஸ்லிம்கள் நடந்துக் கொண்டு இருந்திருந்தால், சென்னையில் இதர முஸ்லிம்களுக்கு மட்டுமே உதவி செய்திருக்கவேண்டும், இந்துக்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் உதவி செய்திருக்கக்கூடாது. ஆனால், தமிழ் முஸ்லிம்கள், தங்கள் உயிரை துச்சமாக நினைத்து அல்லவா அனைவருக்கும் உதவினார்கள்!

இக்கேள்விகளுக்கு நம் தமிழ் முஸ்லிம்கள் பதில் சொல்வார்கள் என்று நான் நம்புகிறேன். இஸ்லாம் சொல்வதை கணக்கில் எடுத்துக்கொள்ளாமல், முஹம்மது சொன்னதை புறக்கணித்துவிட்டு, சென்னையில் உதவி புரிந்த ஒவ்வொரு முஸ்லிமுக்கும் என் மனமார்ந்த நன்றிகளை தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால்,

இந்த முஸ்லிம்களை முஹம்மதுவும், அல்லாஹ்வும் மன்னிப்பார்களா? இதற்கு முஸ்லிம்கள் தான் பதில் சொல்லவேண்டும்.

**அடுத்த கட்டுரை. . .**

அடுத்த கட்டுரையில் பீஜே அவர்கள் முஸ்லிமல்லாதவர்களுக்கு ஸலாம் சொல்வதைப் பற்றி என்ன சொல்லியுள்ளார் என்பதையும், நாம் மேலே பார்த்த முஸ்லிம் ஹதீஸ் பற்றி அவர் என்ன விளக்கம் கொடுத்துள்ளார் என்பதைப் பற்றியும் சுருக்கமாக காண்போம்.

---

**சென்னையில் முஸ்லிம்களின் பேருதவி தொடர் கட்டுரைகள்**

**உமரின் இதர கட்டுரைகள்/மறுப்புக்கள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/chennai_muslims/chennai_muslims_part3.html

# 37. பாகம் 4 - சென்னையில் பேருதவி புரிந்த முஸ்லிம்களை முஹம்மதுவும் அல்லாஹ்வும் மன்னிப்பார்களா?

(பிஜே அவர்களின் விளக்கமும், இதர இஸ்லாமிய அறிஞர்களின் விளக்கமும்)

**முன்னுரை:**

இந்த தலைப்பின் முந்தைய மூன்று கட்டுரைகளை கீழ்கண்ட தொடுப்புகளில் படிக்கலாம்.

- **பாகம் 1 - தாடி, மீசை, வேட்டி, செருப்பு விஷயங்களில் முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிராக மாறு செய்தல்**
- **பாகம் 2 - முஸ்லிமல்லாதவர்களுக்கு முதலாவது ஸலாம் சொல்லக்கூடாது**
- **பாகம் 3 - முஸ்லிமல்லாதவர்களை சாலையின் நெருக்கடியான பாதையில் போக முஸ்லிம்கள் கட்டாயப்படுத்தவேண்டும்**

இவைகளின் தொடர்ச்சியாக, பிஜே அவர்கள் "முஸ்லிமல்லாதவர்களுக்கு ஸலாம்" சொல்லுதல் பற்றி என்ன கூறியுள்ளார் என்று பார்ப்போம். மேலும், இவரது விளக்கமும் இதர இஸ்லாமிய அறிஞர்களின் விளக்கங்களும் ஒன்றாக இருக்கின்றதா அல்லது எதிர்மறையாக இருக்கின்றதா என்பதையும் இக்கட்டுரையில் காண்போம். கடைசியாக, பிஜே அவர்கள் மேற்கோள் காட்டிய "முஸ்லிம் ஹதீஸ்" பற்றி சில கேள்விகளை பிஜே அவர்களிடம் கேட்போம்.

**இந்த தொடர் கட்டுரைகளின் பின்னணி:** இந்த தொடர் கட்டுரைகள் எழுதுவதற்கு ஒரு முக்கியமான காரணமுண்டு. சென்னை தண்ணீரில் மிதந்த போது, எப்போதும் இல்லாத வகையில் இந்த முறை முஸ்லிம்கள் முஸ்லிமல்லாதவர்களுக்கு பேருதவி புரிந்தனர். ஆனால், இவர்களின் இறைவேதமாகிய குர்-ஆனும், இறைத்தூதராகிய முஹம்மதுவும் இவர்களின் இச்செயல்களை அங்கீகரிக்கமாட்டார்கள். இதனை நாம் இஸ்லாமிய நாடுகளில் வாழும் சிறும்பான்மை முஸ்லிமல்லாதவர்களுக்கு எதிராக நடக்கும் வன்முறைகளில் காணலாம். ஆனால், இந்தியாவில், முக்கியமாக தமிழ்நாட்டில் வாழும் முஸ்லிம்கள் தங்கள் உயிரை பணயம் வைத்து, பணம் செலவு செய்து முஸ்லிமல்லாதவர்களுக்கு உதவி செய்தனர். நாம் கண்டது கனவா அல்லது நிஜமா? இதனை மாற்று மதத்தவர்கள் எப்படி புரிந்துக் கொள்வது? இதனை நமக்கு புரியவைக்கவேண்டியது தமிழ் முஸ்லிம்களின் கடமையாக உள்ளது. முஸ்லிம்கள் நமக்கு இதனை புரியவைப்பதற்கு உதவியாக இருக்கும்படியாக, சில இஸ்லாமிய ஆதாரங்களை நான் இத்தொடர் கட்டுரைகளில் முன்வைக்கிறேன். முஸ்லிம்கள் தங்கள் நிலைப்பாட்டை விளக்கும் போது இவ்விவரங்கள் அவர்களுக்கு பேருதவியாக இருக்கும் என்று நம்புகிறேன்.

## 1) முஸ்லிமல்லாதவர்களுக்கு ஸலாம் முதலில் சொல்வது பற்றி பிஜே அவர்களின் நிலைப்பாடு

முஸ்லிமல்லாதவர்களுக்கு முதலாவது ஸலாம் சொல்வது பற்றி பிஜே அவர்களின் நிலைப்பாடு இது தான்.

அ) தற்காலத்தில் முஸ்லிமல்லாதவர்களுக்கு (காஃபிர்களுக்கு) முதலில் முஸ்லிம்கள் “ஸலாம்” சொல்லலாம்.

ஆ) முஸ்லிம் ஹதீஸ் எண் 4376ல் “யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும்” முதலில் ஸலாம் சொல்லக்கூடாது என்று முஹம்மது கட்டளையிட்டது உண்மை தான். ஆனால், அது அக்காலத்து யூத கிறிஸ்தவர்களுக்காக கொடுக்கப்பட்ட கட்டளையாகும். இக்காலத்தில் நம்மோடு வாழும் யூதர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் அது பொருந்தாது.

இ) முஸ்லிம் ஹதீஸ் எண் 4376ல் சொல்லப்பட்ட விவரம் அக்கால யூத கிறிஸ்தவர்களுக்கு மட்டுமே, இந்துக்களும் இதர முஸ்லிமல்லாதவர்களும் இதில் அடங்கமாட்டார்கள்.

ஈ) இதன் படி, அக்காலத்தில் யூத கிறிஸ்தவர்கள் அல்லாதவர்களுக்கு முதலாவது ஸலாம் சொல்ல முஸ்லிம்கள் அனுமதிக்கப்பட்டு இருந்தார்கள். மேலும், தற்காலத்தில் முஸ்லிம்கள் “எல்லா காஃபிர்களுக்கும் முதலாவது ஸலாம் சொல்லலாம்”. அதாவது தற்காலத்தில் ஒரு முஸ்லிம், யூதர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும், இந்துக்களும் மேலும் இதர மக்களுக்கும் முதலாவது “அஸ்ஸலாமு அலைக்கும் – உங்களுக்கு சமாதானம் உண்டாகட்டும்” என்றுச் சொல்வதில் தவறில்லை, இதனை இஸ்லாம் அனுமதிக்கிறது.

இவைகள் தான் பிஜே அவர்களின் “ஸலாம்” பற்றிய நிலைப்பாடு, இதனை கீழ்கண்ட இரண்டு கட்டுரைகள் மூலம் அறியலாம்.

1) **மாற்று மதத்தவருக்கு சலாம் கூறலாமா?** (கேள்வி பதில்)

2) **குர்-ஆன் தமிழாக்க விளக்கம் - 159. ஸலாம் கூறும் முறை**

## 2) முஸ்லிமல்லாதவர்களுக்கு ஸலாம் முதலில் சொல்வது பற்றி இதர இஸ்லாமியர்களின் நிலைப்பாடு.

குர்-ஆனின் உண்மை விளக்கத்தையும், முஹம்மதுவின் உண்மை வழிகாட்டுதலையும் நாம் பார்க்கவேண்டுமென்றால், முஸ்லிம்கள் சிறும்பான்மையாக இருக்கும் நாடுகளில் காணமுடியாது. முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கும் நாடுகளிலும், இஸ்லாமிய நாடுகளிலும் தான் அதனை நாம் காணமுடியும்.

முஸ்லிம்களின் கை (எண்ணிக்கை) குறுகியதாக இருக்கும் போது எப்படி நடந்துக் கொள்ளவேண்டும் என்று இஸ்லாம் முஸ்லிம்களுக்கு கட்டளையிட்டுள்ளது. அதே போல, முஸ்லிம்களின் கை (எண்ணிக்கை) ஓங்கி இருக்கும் போது, எப்படி இஸ்லாமை "முழுவதுமாக" பின்பற்றவேண்டும் என்று இஸ்லாம் கற்றுக் கொடுத்துள்ளது.

பிஜே போன்ற சில இஸ்லாமிய அறிஞர்கள் (இஸ்லாமியரல்லாத நாடுகளில் வாழுபவர்கள்), இஸ்லாம் சொல்லும் முதலாவது வழிகளில் செல்கிறார்கள் (வேறு வழி இல்லை என்பதால்). ஆனால், இந்தியா, "பாகிஸ்தான் போல" பெரும்பான்மை முஸ்லிம் நாடு போல மாறுமானால், இவர்களின் நிலைப்பாடே வித்தியாசமாக இருக்கும்.

இப்போது "காஃபிர்களிடம்" எப்படி நடந்துக் கொள்ளவேண்டும், அவர்களுக்கு எப்படி ஸலாம் சொல்லவேண்டும் என்று இதர இஸ்லாமிய அறிஞர்கள் போதிக்கிறார்கள் என்பதை பார்ப்போம். அதன் பிறகு, பிஜே அவர்களின் நிலைப்பாட்டை கேள்வி கேட்போம்.

islamqa.info: "இஸ்லாம் கேள்வி பதில்கள்" என்ற தளத்தில் முஸ்லிம்கள் கேட்கும் கேள்விகளுக்கு பதில் அளித்துள்ளார்கள். அவைகளிலிருந்து சில மேற்கோள்களை இப்போது காண்போம். வாசகர்கள் இக்கட்டுரையில் கொடுக்கப்பட்ட தொடுப்புக்களை சொடுக்கி, அந்த தளத்தில் நாம் மேற்கோள் காட்டிய விவரங்களை ஆங்கிலத்தில் படித்துக் கொள்ளலாம்.

**அ) முஸ்லிமே, நீ ஒரு காஃபிருக்கு முதலாவது கைகளை குலுக்காதே! அவன் நாற்காலியில் உட்கார்ந்து இருந்தால், அவனுக்கு தேனீர் கையில் கொடுக்காதே, கோப்பையை மேஜையில் வைத்துவிடு:**

ஒரு முஸ்லிமல்லாதவருக்கு முதலாவது கைகளை குலுக்க முஸ்லிம்கள் முயலக்கூடாது. அந்த காஃபிர் உங்கள் கைகளை முதலாவது பிடித்து குலுக்கினால், நீங்கள் அதன் பிறகு குலுக்கலாம்.

ஒரு காஃபிருக்கு தேனீர் கொடுப்பது பற்றி சொல்லவேண்டுமென்றால், ஒரு காஃபிர் நாற்காலியில் உட்கார்ந்து இருக்கும் போது, முஸ்லிமாகிய நீ அவருக்கு தேனீர் கோப்பையை கொடுக்கக்கூடாது, இது மக்ரூ ஆகும், இதனை தவிர்த்துக்கொள்ளவேண்டும். ஆனால், அந்த காஃபிர் உட்கார்ந்து இருக்கும்போது, தேனீர் கோப்பையை அவருக்கு முன்பாக இருக்கும் மேஜையில் வைத்துவிடுவதில் தவறு இல்லை.

மூலம்: https://islamqa.info/en/43154

**ஈஸா குர்-ஆன் உமரின் விமர்சனம்:** நட்பு மற்றும் மரியாதையின் அடிப்படையில் ஒரு முஸ்லிம், ஒரு இந்துவிற்கோ, கிறிஸ்தவருக்கோ தேனீர் கொடுப்பது மனிதர்கள் வாழும் சமுதாயத்தில் சர்வ சாதாரணமாக நடப்பது. இதே போல, தங்கள் வீடுகளுக்கு வருகை தரும் முஸ்லிம்களுக்கு இந்துக்கள் கிறிஸ்தவர்கள் தேனீர் கைகளில் ஏந்திச் சென்று கொடுப்பது "சமுதாயத்தில் மத நல்லிலக்கணத்தை உண்டாக்கும்". ஆனால், இஸ்லாமிய அறிஞர்கள் எப்படி போதனை செய்துள்ளார்கள் என்பதை கவனியுங்கள்.

**தமிழ் முஸ்லிம்களுக்கு கேள்விகள்:** குறைந்தபட்ச மரியாதையின் வெளிப்பாடாகிய "தேனீர் கோப்பையை கைகளில் கொடுப்பதை" முஸ்லிம்கள் அறிஞர்கள் இஸ்லாமை காரணம் காட்டி தடை செய்வார்கள் என்றால், "இந்துக்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் உயிரை கொடுத்து முஸ்லிம்கள் சென்னையில் உதவினார்களே, இதனை நாம் எப்படி புரிந்துக் கொள்வது? இதன் பின்னணி என்ன?".

**ஆ) முஸ்லிமல்லாதவர்களுக்கு முதலாவது "ஸலாம் – வாழ்த்து" சொல்லி, காஃபிர்களுக்கு முன்பாக முஸ்லிம்களே நீங்கள் தாழ்ந்துவிடாதீர்கள்.**

இஸ்லாம் கேள்வி பதில்கள் தளத்தில் "முஸ்லிமல்லாதவருக்கு வாழ்த்து சொல்வது எப்படி?" என்ற கேள்விக்கு கீழ்கண்ட பதில் சொல்லப்பட்டுள்ளது. அதனை தமிழில் நான் தருகிறேன்.

ஒரு முஸ்லிம், முஸ்லிமல்லாதவருக்கு முதலாவது "ஸலாம்/வாழ்த்து" சொல்வது ஹராம் (இஸ்லாமில் அனுமதிக்கப்படாதது) ஆகும். ஏனென்றால், நம் இறைத்தூதர் இப்படி சொல்லியுள்ளார்.

யூதர்களுக்கும் கிறித்தவர்களுக்கும் நீங்கள் முதலில் முகமன் கூறாதீர்கள். அவர்களில் ஒருவரை நீங்கள் சாலையில் சந்தித்தால், சாலையின் நெருக்கடியான பகுதியில் அவரை ஒதுங்கிப்போகச் செய்யுங்கள் (முஸ்லிம் ஹதீஸ்). . . .

இதே போல, ஒரு முஸ்லிம் முஸ்லிமல்லாதவருக்கு நல்வரவு (Welcome – அஹ்லன் வ ஸஹ்லன்) என்று முதலாவது சொல்லக்கூடாது. இப்படி சொன்னால், காஃபிர்களை நாம் மதிப்பதாக ஆகிவிடும். ஆனால், காஃபிர்கள் முதலாவது நமக்கு நல்வரவு சொன்னால், நாமும் அதற்கு பதில் நல்வரவு சொல்லலாம். அல்லாஹ்விற்கு முன்பாக முஸ்லிம்கள் உயர்ந்தவர்கள் என்பதை நாம் அனைவரும் அறிவோம், எனவே முஸ்லிம்கள் காஃபிர்களுக்கு முதலாவது வாழ்த்துக்கள் சொல்லி தங்களை தாழ்த்திக் கொள்ளக்கூடாது.

முடிவுரையாக, ஒரு காஃபிரை முஸ்லிம்கள் முதலாவது வாழ்த்து சொல்லக்கூடாது, ஏனென்றால் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அதனை தடுத்துள்ளார்கள். ஒரு முஸ்லிம் முஸ்லிமல்லாதவர்களை மதித்தால், அது முஸ்லிம்கள் தாழ்ச்சி அடைந்துவிட்டதாக கருதப்படும். . . .

சில நேரங்களில் வேறு வழியில்லாமல், ஒரு காஃபிருக்கு ஒரு முஸ்லிம் முதலாவது வாழ்த்து சொல்லவேண்டி வரும்போது, அப்போது வாழ்த்துச் சொல்வதில் தவறில்லை. ஆனால், இந்த வாழ்த்து "ஸலாம்" என்றுச் சொல்வதாக இருக்கக்கூடாது, அதற்கு பதிலாக "நல்வரவு" என்றோ, "எப்படி இருக்கிறீர்கள்?" என்றோ சொல்லலாம். இப்படி சொல்லும்போது, அவர்களை நாம் கனப்படுத்துவதாக ஆகாது, ஒரு காரணத்திற்காக வாழ்த்து சொல்வதாக அமையும்.

. . .

இப்னு கைய்யும் அவர்கள் (இவருக்கு அல்லாஹ் அருள் புரிவானாக), தம்முடைய ஜாஅத் அல் மஆத்(2/424) புத்தகத்தில் காஃபிருக்கு முதலாவது வாழ்த்து சொல்வது பற்றி இவ்விதம் கூறியுள்ளார்:

இஸ்லாமிய அறிஞர்களின் குழு சொன்னதாவது: "ஒரு முஸ்லிம் ஒரு காஃபிருக்கு முதலாவது வாழ்த்து சொல்வது அனுமதிக்கப்பட்டது, ஆனால், அதற்கு கீழ்கண்ட ஏதாவது ஒரு அழுத்தமான காரணம் இருக்கவேண்டும்: அதாவது முஸ்லிமின் நோக்கம் இதன் மூலம் நிறைவேறவேண்டும், அல்லது முஸ்லிம் மீது

வன்முறை தாக்குதல் நடைப்பெறும் என்று பயமிருந்தால் அல்லது உறவினராக இருந்தால் அல்லது ஏதாவது ஒரு முக்கியமான காரணத்திற்காக, ஒரு முஸ்லிம் முதலாவது வாழ்த்து கூறலாம்".

மூலம்: https://islamqa.info/en/48966

**ஈஸா குர்-ஆன் உமரின் விமர்சனம்:** வாசகர்கள் நன்றாக கவனியுங்கள். பேச்சுத்திறன் கொண்ட மனிதர்கள் ஒரு சமுதாயத்தில் ஒருவருக்கு ஒருவர் சொல்லிக்கொள்ளும் வாழ்த்தைக் கூட இஸ்லாம் தடை செய்கிறது. ஒரு முஸ்லிமுக்கு ஒரு காரியம் நடைப்பெறவேண்டும் என்றால், உள்ளத்திலிருந்து அல்லாமல், வெளிவேஷம் போட்டு வாழ்த்து சொல்லலாம் என்று இஸ்லாமிய அறிஞர்கள் போதிக்கிறார்கள். சில வேளைகளில் தர்மசங்கடமான நிலையில் முஸ்லிம்கள் முதலாவது வாழ்த்து சொல்வதாக இருந்தால் கூட "ஸலாம்" என்று சொல்லக்கூடாதாம், "நல்வரவு" என்றோ, "எப்படி இருக்கிறீர்கள்?" என்றோ சொல்ல வேண்டுமாம். என்ன ஒரு கீழ்தரமான கோட்பாடுகள்? இப்படி பெரும்பான்மை மக்கள் நினைத்தால், அச்சமுதாயத்தில் வாழும் சிறும்பான்மையின் நிலை என்னவாக இருக்கும்?

**தமிழ் முஸ்லிம்களுக்கு கேள்விகள்:** முஹம்மது முஸ்லிம் ஹதீஸில் சொன்னது வெறும் யூதர்கள் கிறிஸ்தவர்களுக்கு மட்டுமல்ல, எல்லா "முஸ்லிமல்லாதவர்களுக்கும்" என்று இதர இஸ்லாமிய அறிஞர்கள் நம்புகிறார்கள். ஆனால், பிஜே மட்டும் அந்த ஹதீஸை மாற்றிச் சொல்கிறார்? இதில் எது உண்மை?

### 3) பிஜே அவர்கள் மேற்கோள் காட்டிய முஸ்லிம் ஹதீஸ் 4376

பிஜே அவர்கள் "மாற்று மதத்தவருக்கு ஸலாம் கூறலாமா?" என்ற கேள்விக்கு பதில் அளிக்கும் போது, முஸ்லிம் ஹதீஸ் எண் 4376ஐ குறிப்பிட்டார். இந்த ஹதீஸில் வரும் ஸலாம் பற்றிய பகுதிக்கு பதில் அளித்தார். ஆனால், யூத கிறிஸ்தவர்களை சாலையில் நெருக்கடியான பாதையில் ஒதுங்கிப்போகச் செய்யுங்கள் என்ற பகுதிக்கு பதில் தரவில்லை.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

யூதர்களுக்கும் கிறித்தவர்களுக்கும் நீங்கள் முதலில் முகமன் கூறாதீர்கள். அவர்களில் ஒருவரை நீங்கள் சாலையில் சந்தித்தால், சாலையின் நெருக்கடியான பகுதியில் அவரை ஒதுங்கிப்போகச் செய்யுங்கள்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல்: முஸ்லிம் (4376)

இங்கு கவனிக்கவேண்டிய முக்கியமான விவரங்கள் உள்ளன. முஹம்மதுவும் அவரது சகாக்களும் மக்காவில் சிறும்பான்மையாக இருந்தபோது, இந்த கட்டளையை முஹம்மது கொடுத்திருக்க வாய்ப்பு இல்லை. மேலும் மக்காவில் யூத கிறிஸ்தவர்கள் குறைவாகவே இருந்தனர், மதினாவில் அவர்கள் அதிகமாக இருந்தனர். மதினாவிற்கு ஹிஜ்ரா செய்த பிறகு ஆரம்ப காலக் கட்டத்திலும் முஹம்மது மேற்கண்ட கட்டளையை கூறியிருக்கமுடியாது, காரணம் அப்போதும் அவரிடம் ஆள்பலம் குறைவாகவே இருந்தது. ஆனால், முஹம்மது வழிப்பறி கொள்ளைகளை செய்து, அக்கம் பக்கம் இருப்பவர்கள் மீது போர் தொடுத்து ஆள்பலமும் பண பலமும் பெருகிவிட்ட பிறகு தான் மேற்கண்ட கட்டளையை கொடுத்திருக்கமுடியும். முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கும் போது தான், யூத கிறிஸ்தவர்கள் அல்லது முஸ்லிமல்லாதவர்கள் சாலையில் செல்லும் போது, நெருக்கடியான பாதையில் செல்ல அவர்களை கட்டாயப்படுத்தமுடியும். உதாரணத்திற்கு,

இந்தியாவில் முஸ்லிம்கள் இப்படி நெருக்கடியான பாதையில் செல்லும் படி, கிறிஸ்தவர்களையோ, இந்துக்களையோ கட்டாயப்படுத்தினால், அவர்களின் வால் முழுவதுமாக வெட்டப்படும். ஆனால், பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான் போன்ற இடங்களில் இப்படி செய்தால், கிறிஸ்தவர்களால் ஒன்றுமே செய்யமுடியாது.

பாகிஸ்தானில் / ஆப்கானிஸ்தானில் ஒரு கிறிஸ்தவன் ஒரு முஸ்லிமை பார்க்கும் போது, "அஸ்ஸாமு அலைக்கும் - உங்களுக்கு மரணமுண்டாகட்டும்" என்று சொல்கிறார் என்று வைத்துக் கொள்வோம். முஹம்மது சொன்னது போல முஸ்லிம்கள் "வா அலைக்கும் – உங்கள் மீதும்" என்று சொல்லிவிட்டு, அமைதியாக சென்றுவிடுவார்களா? நிச்சயமாக இல்லை, அப்போதே அந்த கிறிஸ்தவர் மீது மரணம் உண்டாகிவிடும். ஒன்றுமே செய்யாமல் இருந்தாலே, பாகிஸ்தான் போன்ற நாடுகளில் வாழும் கிறிஸ்தவர்கள் மீது பொய்யான வழக்கைப்போட்டு, சித்திரவதை செய்கிறார்கள். இந்த இலட்சனத்தில் "அஸ்ஸாமு அலைக்கும்" என்று சொல்வதற்கே இடமில்லை.

பிஜே அவர்களே! மேற்கண்ட ஹதீஸின் இரண்டாம் பாகம் பற்றிய உங்கள் கருத்து என்ன?

என்ன தான் இஸ்லாமிய நாடாக இருந்தாலும், சாலையில் செல்லும் இதர மார்க்கத்தாருக்கு எதிராக இப்படி நடந்துக் கொள்ளுங்கள் என்று கீழ்தரமாக உங்கள் இறைத்தூதர் கூறியிருப்பது எந்த வகையில் நியாயம்? சாலையில் செல்லும் கிறிஸ்தவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் முன்பகை எதுவும் இல்லாத நேரத்திலும், பெரும்பான்மை மக்களின் உள்ளத்தில் இப்படிப்பட்ட வெறுப்புணர்வின் விஷத்தை உங்கள் இறைத்தூதர் விதைத்திருப்பது சரியா?

நம் நாட்டில் பெரும்பான்மை மக்களாக இந்துக்கள் இருக்கிறார்கள். சில சமயங்களில் இவர்களின் தலைவர்களில் சிலர் (முஹம்மதுவைப் போல) தவறான போதனை செய்துவிடுகிறார்கள். இந்த போதனையின் விஷத்தன்மையை சரி பார்க்காமல், பாமர தொண்டர்கள் (முஸ்லிம்களைப்போல), இந்தியாவில் வாழும் சிறும்பான்மையினருக்கு எதிராக நடந்துக் கொள்கிறார்கள். இதனை நீங்கள் நன்றாகவே அறிவீர்கள். உங்கள் இறைத்தூதருக்கும், இவர்களுக்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது? தற்காலத்தில் இப்படிப்பட்ட போதனைகளைச் செய்து, பாமர மக்களுக்கு மூளைச்சலவை செய்பவர்களுக்கு நீங்கள் என்ன பெயரைச் சூட்டுவீர்கள்? இவர்களை "இறைத்துதர்கள்" என்று அழைப்பீர்களா அல்லது "இழிவான தூதர்கள்" என்று அழைப்பீர்களா? இவர்களுக்கு என்ன பெயர் வைப்பீர்களோ, அதே பெயரைத் தான் உங்கள் முஹம்மதுவிற்கும் முஸ்லிமல்லாதவர்கள் சூட்டுவார்கள். முஸ்லிமல்லாதவர்கள் உங்கள் பதிலுக்காக எதிர்ப்பார்த்துக் கொண்டு இருக்கிறார்கள்.

**முடிவுரை:** பிஜே அவர்களே, சென்னையில் முஸ்லிம்கள் செய்த உதவிகளைக் கண்டு நான் வியக்கிறேன். ஆனால், முஹம்மதுவை முஸ்லிம்கள் பின்பற்றுகிறார்களே என்று வேதனைப்படுகிறேன். "சென்னையில் பேருதவி புரிந்த முஸ்லிம்களை முஹம்மதுவும் அல்லாஹ்வும் மன்னிப்பார்களா?" என்ற தலைப்பில் இதுவரை நான்கு கட்டுரைகளை எழுதியுள்ளேன், சில இஸ்லாமிய ஆதாரங்களை முன்வைத்துள்ளேன். முஹம்மது காஃபிர்களுக்கு எதிராக நடந்துக் கொள்ளுங்கள் என்று சொல்லியிருக்கும் போது, முஸ்லிம்கள் காஃபிர்களுக்கு உதவியாக கரம் நீட்டினர். இதனை எப்படி புரிந்துக் கொள்வது, உங்கள் பாணியில் விளக்குங்களேன், பிளீஸ்.

---

**சென்னையில் முஸ்லிம்களின் பேருதவி தொடர் கட்டுரைகள்**

**உமரின் இதர கட்டுரைகள்/மறுப்புக்கள்**

**ஆங்கில கட்டுரைகள்:**

- **ஒரு இஸ்லாமிய நாட்டில் "முஸ்லிமல்லாதவர்களுக்கு" இருக்கும் உரிமைகள் என்னென்ன?** (Rights of Non-Muslims in an Islamic State)
- **இஸ்லாமிய நாடுகளில் "முஸ்லிமுக்கும்" முஸ்லிமல்லாதவனுக்கு இடையே வேறுபாடு காட்டுவது ஏன்?** (Discrimination Between a Muslim and a Non–Muslim)

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/chennai_muslims/chennai_muslims_part4.html

# 38. ஜியாவிற்கு பதில் - அல்லேலூ "யா" வும் "அல்லாஹ்" படும் அல்லல்களும் - பாகம் 1

தமிழ் முஸ்லிம் தளம் கிறிஸ்தவர்கள் அதிகமாக பயன்படுத்தும் "அல்லேலூயா" என்ற வார்த்தைக்கு சொந்தமாக ஒரு விளக்கத்தை கொடுத்து இருந்தது. இஸ்லாமியர்கள் பொதுவாக செய்யும் ஒரு ஏமாற்று வேலை என்னவென்றால், அடுத்தவர்களின் வேதங்களில் இருக்கும் வசனங்களில் இஸ்லாம் பற்றி சொல்லியுள்ளது, முஹம்மது பற்றி கூறியுள்ளது என்றுச் சொல்லி, உண்மை பொருளை மாற்றி இஸ்லாமிய பாணியில் விளக்கம் கொடுக்க முயலுவது தான.

இப்படிப்பட்ட ஒரு ஏமாற்று வேலையை தமிழ் முஸ்லிம் தளம் செய்து இருந்தது, அதற்கு நான் 2007ம் ஆண்டு அக்டோபர் மாதம் மறுப்பு தெரிவித்து இருந்தேன். இவைகள் பற்றிய என் மறுப்பையும், தமிழ் முஸ்லிம் தளம் கொடுத்த விளக்கத்தையும் கீழ்கண்ட கட்டுரையில் படிக்கலாம்:

தமிழ் முஸ்லீம் தளமும், "அல்லேலூயா" வார்த்தையும் **http://isakoran.blogspot.com/2007/10/blog-post_29.html**

என்னுடைய மறுப்பிற்கு பதில் என்றுச் சொல்லி, ஜியா என்ற இஸ்லாமிய சகோதரர் ஒரு கட்டுரையை எழுதியிருக்கிறார். இந்த கட்டுரைக்காக அவர் ஆராய்ச்சி செய்து எழுதியது போல ஒரு பாசாங்கு செய்து இருக்கிறார், ஆனால், அவரது பதிலில், உண்மையாகவே அவர் என் கட்டுரைக்கு மறுப்பை எழுதினாரா என்பதை நாம் காண்போம். குறைந்தபட்சம் அவருடைய கட்டுரைக்கு உதவிய விக்கிபீடியா தொடுப்புகளையாவது கொடுத்தாரா? என்பதை இக்கட்டுரையில் காணப்போகிறோம்.

இதை படிக்கும் வாசகர்களுக்கு தெரிவித்துக்கொள்வது என்னவென்றால், இஸ்லாமியர்கள் சொல்லும் விவரங்கள் குறித்து நாம் எச்சரிக்கையாக இருக்கவேண்டும், "மக்களை ஏமாற்றவேண்டும், இஸ்லாமுக்கு நல்ல பெயரை கொண்டுவரவேண்டும்" என்ற ஒரே நோக்கத்திற்காக எவ்வளவு கீழ்தரமாக செயல்படவும், இஸ்லாமிய அறிஞர்கள் தயங்க மாட்டார்கள். (இப்படி நான் எழுதுகிறேன் என்று என் மீது யாரும் கோபம்

கொள்ளவேண்டாம், ஏனென்றால், கடந்த மூன்று வருடங்களாக இணையத்தில் எழுதும் இஸ்லாமியர்களின் நேர்மையை பார்த்துக்கொண்டு இருக்கிறேன், இதன் விளைவு தான் இந்த வரிகள்)

ஜியா அவர்களின் கட்டுரைக்கு இரண்டு பாகமாக நாம் பதிலைக் காண்போம். அவர் ஆங்கிலத்தில் முதலாவது சில விவரங்களை விகிபீடியாவிலிருந்தும், இன்னும் இதர தளங்களிலிருந்தும் எடுத்து பதித்துள்ளார், பிறகு தன் விளக்கத்தை தமிழில் எழுதியுள்ளார். நம்முடைய இந்த முதலாம் பாகத்தில் ஆங்கிலத்தில் அவர் எழுதிய சில வரிகளுக்கு பதிலைக் காண்போம். இரண்டாம் பாகத்தில் அவர் தமிழில் மொழியாக்கம் செய்து பதித்த விவரத்திற்கு பதிலைக் காண்போம்.

**இனி, சகோதரர் ஜியா அவர்கள் எழுதியவைகளை அலசுவோம்:**

**ஜியா அவர்கள் எழுதியவை:**

Source: http://isaakoran.blogspot.com/2010/11/blog-post_3573.html

அல்லேலூயாவும் ஈசா உமரும் !!!

உமரின் "தமிழ் முஸ்லீம் தளமும், " அல்லேலூயா " வார்த்தையும்" என்ற கட்டுரைக்குவாசகர் பதில்

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மான் நிர்ரஹீம்

அஸ்ஸலாமு அழைக்கும் - சாந்தியும் சமாதானமும் உங்கள் மிது உண்டாகுக யோவான் 20:21.

உமர் அவர்களே,

உங்கள் வலைத்தளத்தில் "தமிழ் முஸ்லீம் தளமும், " அல்லேலூயா " வார்த்தையும்" என்ற கட்டுரை இடம்பெற்றிருந்தது. அதற்கு விளக்கமாக அல்லேலுயா (Halleluyah) என்ற வார்த்தை இரண்டு வார்த்தைகளை உள்ளடக்கியது, Halelu – அல்லேலு என்றால் துதி அல்லது போற்றுதல் (Praise), Yah – யா "Yah" or "Jah" என்றால் "யேகோவா" தேவனின் பெயரைக்குறிக்கும் "Yahweh" என்பதின் சுருக்கமே "Yah " என்று விளக்கம் தந்திருந்தீர்கள். அதற்கு"விகிபீடியா"வை Source: en.wikipedia.org/wiki/Hallelujah ஆராய்ந்து பார்க்க சொல்லி இருந்தீர்.

**உமரின் பதில்:**

ஆமாம், என் தளத்தில் நீங்கள் குறிப்பிட்ட கட்டுரையை நான் எழுதியிருந்தேன். ஒரு கேள்வியை உங்களிடம் கேட்கவிரும்புகிறேன், என் தளத்தில் நீங்கள் படித்த கட்டுரையின் தொடுப்பு என்ன என்று உங்களுக்குத் தெரியுமா? உங்களுக்குத் தெரியும் என்று எனக்குத் தெரியும், ஆனால், உங்கள் தளத்தில் உங்கள் கட்டுரையை படிக்கும் வாசகர்களுக்கு, நீங்கள், என் கட்டுரையின் தொடுப்பை கொடுப்பது உங்கள் கடமையல்லவா? இதை அங்கீகரிக்கிறீர்களா இல்லையா?

இணையத்தில் ஆதாரங்களை வாசகர்களுக்கு கொடுப்பது மிகவும் சுலபமானது, ஒரு நொடியில் அவர்கள் சொடுக்கி ஆதாரங்களை சரி பார்த்துக்கொள்வார்கள், ஆனால், இந்த குறைந்த பட்ச பொது அறிவு கூட இல்லாமல் கட்டுரையை எழுத வந்து இருக்கிறீர்களே! மூல தொடுப்பை கொடுக்க மறுக்கும் உங்களைப்

போன்றவர்களின் கட்டுரையில் எவ்வளவு உண்மைகள் இருக்கும்? எவ்வளவு நேர்மை இருக்கும்? அய்யோ பாவம் வாசகர்கள்! அவர்களை அல்லாஹ் தான் உங்களிடமிருந்து காப்பாற்றவேண்டும்.

எனக்கு பதில் சொல்வதற்கு முன்பாக, தமிழ் முஸ்லிம் தளம் எழுதிய கட்டுரைப் பற்றி உங்கள் கருத்தைச் சொல்லியிருக்கலாம், அதாவது, அவர்கள் சொல்லிய விளக்கம் சரியானதா இல்லையா என்பதை விளக்கியிருக்கலாம்.

**ஜியா அவர்கள் எழுதியவை:**

"The word hallelujah occurring in Psalms is a Hebrew request for a congregation to join in praise. It can be translated as "Praise God", "Praise the Lord", "Praise Yahweh, you people", and is usually worded in English contexts as "Praise ye the LORD" or "Praise the LORD". This is not a direct translation, as Yah represents the first two letters of YHWH, the name for the Creator, and not the title "lord".[1] To give fuller meaning in this context, Hallelujah could rightly be translated "Praise Yahweh", or "Praise Jehovah" (signified by Jah).[2]

We don't know how could "Yahuwa" or "Yahweh" be pronounced as "Jehovah"? In the phrase "Praise Yahuwa" or "Praise Yahweh", what does "Yahuwa" or "Yahweh" means?

**உமரின் பதில்:**

நான் மேற்கோள் காட்டி, மேலதிக விவரங்களுக்காக படியுங்கள் என்று கூறிய விக்கிபீடியா தொடுப்பை நீங்கள் படித்ததாகவும், அதிலிருந்து விவரங்களை பதித்ததாகவும் "பாசாங்கு" காட்டியுள்ளீர்கள். நான் உங்களிடம் கேட்கிறேன், நான் கொடுத்த தொடுப்பை மட்டுமே படித்தீர்களா? அல்லது இன்னும் சில தொடுப்புகளை படித்து, அதிலிருந்தும் விவரங்களை எடுத்து, "ஒரே தொடுப்பிலிருந்து தான் நீங்கள் விவரங்களை சேகரித்தீர்கள்" என்பது போல ஒரு மாயையை உண்டாக்கியிருக்கிறீர்களா?

நான் கொடுத்த தொடுப்பு இது: en.wikipedia.org/wiki/Hallelujah 

உங்கள் பதிலில் முதல் பாகத்தில் நீங்கள் "விக்கிபீடியாவிலிருந்து ஆங்கிலத்தில் உள்ள விவரங்களை பதித்ததாக" கட்டியுள்ளீர்கள். பிறகு அதன் கீழே மொழிப்பெயர்ப்பு என்றுச் சொல்லி, அந்த ஆங்கில வரிகளை மொழியாக்கம் செய்ததாக காட்டியுள்ளீர்கள். உங்களிடம் நாம் கேட்கவிரும்பும் கேள்விகள்:

- ஆங்கிலத்தில் நீங்கள் பதித்த அனைத்து விவரங்களும் விக்கிபீடியாவிலிருந்தா எடுத்தீர்கள்? நான் கொடுத்த ஒரே தொடுப்பிலிருந்தா எடுத்தீர்கள்?
- அல்லது ஒரு தொடுப்பிலிருந்து வெறு தொடுப்பிற்கு தாவி அதிலிருந்து சில விவரங்களை எடுத்துக்கொண்டு, இன்னும் விக்கிபீடியா அல்லாத தளங்களிலிருந்தும் சில விவரங்களை எடுத்துக்கொண்டு, சொந்தமாக ஆங்கிலத்தில் ஒரு சில வரிகளை எழுதி, கடைசியாக, எல்லாவற்றையும் விக்கிபீடியா தொடுப்பிலிருந்து தான் எடுத்தது போல காட்டியுள்ளீர்களா?
- நீங்கள் பதித்த "We don't know…" என்று தொடரும் ஆங்கில வரிகள் உங்கள் சொந்த வரிகள் தானே.

ஒரு கட்டுரையை எழுதும் போது, மற்ற தளங்களின் மேற்கோள்களை காட்டும் போது, எந்த வரிகளை நாம் மேற்கோள்களாக காட்டுகின்றோம், எந்த வரிகள் நம்முடைய சொந்த வரிகள் என்று வித்தியாசம் தெரியும் படி

எழுதுவது தான் வாசகர்களை ஏமாற்றாமல் நேர்மையாக எழுதும் முறை, இந்த குறைந்த பட்ச அறிவு கூட இல்லாமல், வாசகர்களை ஏமாற்ற வந்துள்ளீர்கள்.

**ஜியா அவர்கள் எழுதியவை:**

….. ஒரு ஹிந்து மதத்தை சர்ர்ந்தவர் மொழிபெயர்த்த நூலைய வேத நூல் என்று கூறுகிறீர்கள் ??

**உமரின் பதில்:**

அங்கே இங்கே சுற்றி வளைத்து, கடைசியாக "எலோஹிம்" என்ற வார்த்தைக்கு வந்து, அதற்கு தமிழில் "தேவன்" என்று மொழிப் பெயர்த்துள்ளார்கள் என்றுச் சொல்லி, "ஒரு ஹிந்து மதத்தை சார்ந்தவர் மொழிப்பெயர்த்த நூலையா வேத நூல் என்றுச் சொல்கிறீர்கள்?" என்று கேள்வியோடு முடித்துள்ளீர்கள். உங்கள் வழிக்கே வருகிறேன், ஒரு ஹிந்து மதத்தை சார்ந்தவர் மொழிப்பெயர்க்க உதவினால் என்ன? ஒரு கிறிஸ்தவர் மொழிப்பெயர்க்க உதவினால் என்ன? வேறு வகையில் சொல்லவேண்டுமானால், ஒரு ஹிந்து சகோதரர் உதவிய மொழியாக்கத்தை அனேக ஆண்டுகளாக நாங்கள் பயன்படுத்திக்கொண்டு வருகிறோம், ஆனால், யாரும் சண்டையிட்டுக்கொள்ளவில்லை. ஆனால், இஸ்லாமியர்கள் என்றுச் சொல்லிக்கொள்ளும் உங்களைப்போன்ற இஸ்லாமிய அறிஞர்கள் மொழிப்பெயர்த்த குர்ஆனை வைத்துக்கொண்டு நீங்கள் போடும் கூத்து இருக்கிறதே! அடேங்கப்பா! ஒன்றுமே இல்லாத சப்ப மேட்டருக்காக ஒரு இடத்தை வாடகைக்கு வாங்கி, அதற்கு பணத்தை செலவு செய்து, இரண்டு பேரும் உடகார்ந்துக்கொண்டு, உன் குர்ஆனில் தவறு, ஆபாசம், அவங்க குர்ஆனில் தவறு ஆபாசம் என்றுச் சொல்லி, காலையிலிருந்து மாலை வரைக்கும் சளிக்காமல் சண்டைப்போட்டுக்கொண்டு இருக்கிறீர்களே இதை என்னவென்றுச் சொல்வது?

இந்த குர்ஆன் மற்றும் இஸ்லாம் ஆபாச சண்டைகளை பார்த்து இரசிக்க, பீஜே அவர்களின் தளத்தில் சென்று வீடியோக்களை ஆடியோக்களை சொடுக்கி பார்க்கவும்.

சரி, உங்க வரிகளுக்கு வருகிறேன், ஒரு ஹிந்து சகோதரர் மொழியாக்கத்திற்கு உதவிய நூலையா நீங்கள் வேதம் என்றுச் சொல்கிறீர்கள் என்று கேட்கும் சகோதரர் ஜியா அவர்களே, சிறிது நேரம் எடுத்து கீழ்கண்ட விவரங்களை படித்து பதில் சொல்வீர்களா?

1. **தான் ஒரு பொய் நபியாக இருந்தும்**, தனக்கு வெளிப்பாடு வந்தது என்றுச் சொல்லிக்கொண்ட ஒரு கள்ள நபியாகிய முஹம்மது கொண்டு வந்த நூலையா இஸ்லாமியர்களாகிய நீங்கள் வேதம் என்றுச் சொல்கிறீர்கள்?
2. **பெண் பித்து பிடித்து, அனேக திருமணங்களை செய்துக்கொண்டு**, வைப்பாட்டிகளாக பெண்களை வைத்துக்கொண்டு, சிறுமி என்றும் பாராமல் வெட்கமில்லாமல் திருமணம் செய்துக்கொண்ட உங்கள் நபி கொண்டு வந்த நூலையா நீங்கள் வேதம் என்றுச் சொல்கிறீரகள்?
3. **தன் வளர்ப்பு மகனின் மனைவியை (மகளுக்கு சமமான மருமகளை)** திருமணம் செய்துகொண்ட ஒரு காமம் நிறைந்த ஒரு நபர் கொண்டு வந்த நூலையா நீங்கள் வேதம் என்றுச் சொல்கிறீர்கள்? அந்தோ பரிதாபம் இஸ்லாமியர்கள்!
4. **தன் மதத்தை பரப்ப ஆயுதமாக வன்முறையை பயன்படுத்திக்கொண்டு**, மக்களை கொள்ளையடித்து, பெண்களை சிறைபிடித்து, அவர்களை கற்பழித்து, அனேக பாவங்களை செய்த உங்கள் முஹம்மது கொண்டு வந்த நூலையாக இஸ்லாமியர்களாகிய நீங்கள் வேதம் என்றுச் சொல்கிறீர்கள்?

சகோதரர் ஜியா அவர்களே, நீங்கள் பைபிள் "தமிழாக்கம்" பற்றி பேசுகின்றீர்கள், ஆனால், நான் மேலே கேட்ட கேள்விகள் மூல குர்ஆன் சம்மந்தப்பட்டது.

மேற்கண்ட முறையில் கீழ்தரமாக நடந்துக்கொண்ட முஹம்மது கொண்டு வந்த நூலை வேதம் என்று நீங்கள் அங்கீகரிக்கும் போது, அதற்காக உலகத்தின் அமைதியை சீர்குலைத்துக்கொண்டு இருக்கும் போது, அப்படிப்பட்ட நூலை படிக்க (இதில் இன்னொரு வேடிக்கை புரியாமல் படிக்க) வெட்கப்படாத உங்களைப்போன்ற இஸ்லாமியர்கள் இருக்கும் போது, ஒரு ஹிந்து சகோதரர் உதவிய மொழிப்பெயர்ப்பை படிக்க எங்களுக்கு ஏன் வெட்கம் சொல்லுங்கள்? இன்னும் சொல்லப்போனால், ஒரு ஹிந்து சகோதரர் உதவிய மொழியாக்கத்தைக் கொண்டு, இன்று எங்களிடம் இருக்கும் தமிழ் மொழியாக்க பைபிள் மூலமாக இலட்சக்கணக்கான மக்கள் இயேசுவை அறிந்துக்கொள்கிறார்கள் என்று நினைக்கும் போது மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. அந்த ஹிந்து சகோதரருக்கு நான் தனிப்பட்ட முறையில் நன்றி சொல்கிறேன். அவர் கிறிஸ்தவத்தை எதிர்க்கட்டும், புத்தகங்கள் எழுதட்டும், இருந்தபோதிலும், அவர் அன்று நீட்டிய உதவிக் கரத்திற்காக அவருக்கு இன்று என் நன்றிகள் உரித்தாகுக.

எனவே, குர்ஆனை இறைவேதம் என்றுச் சொல்ல இஸ்லாமியர்கள் வெட்கப்படவேண்டும், முஹம்மது எங்கள் நபி/தீர்க்கதரிசி என்றும், எங்கள் வழிகாட்டி என்றும் சொல்ல இஸ்லாமியர்கள் வெட்கப்படவேண்டும்.

ஒரு ஹிந்து சகோதரர் பைபிள் தமிழாக்கத்திற்கு உதவியதற்காக கிறிஸ்தவர்கள் வெட்கமடையத் தேவையில்லை. யார் மொழியாக்கம் செய்தார்கள்? என்பதை விட, அந்த வேதம் என்ன சொல்கிறது என்பது தான் எங்களுக்கு முக்கியம், நாங்கள் எங்கள் வேதத்தை எங்களுக்கு புரியும் மொழியில் படிக்கின்றோமா என்பது தான் எங்களுக்கு முக்கியம். (குர்ஆன் இறைவேதம் என்று பெருமைப்படும் இஸ்லாமியர்கள் அதை தனக்கு புரியாத மொழியில் படித்தால் தான் நன்மை என்றுச் சொல்லி, அதை அரபியிலேயே படிக்கிறார்களே, இதைவிட ஒரு பெரிய அறியாமை உலகில் ஏதாவது உண்டா?)

**ஜியா அவர்கள் எழுதியவை:**

So "Ya-huwa eloh" or "Ya-huwa elah" means "Oh he is Eloh" or "Oh he is elah". If the "Ya" (Oh) exclamatory is separated then it will sounds "Huwa elah" sounds similar to "Hu wallah" (he is allah)

"Hu walla hu ullazee la ilaha illa hu" (holy quran 59:22)

He is allah, besides whom there is no other god. (holy quran 59:22)

According to this "Halleluyah" means "Praise oh! He is Eloh" or "Praise oh! He is Elah" or "Praise oh! He is Alah".

Do you have any concern in pronouncing "elah" as "alah" even though they sound same? When you don't have concern in calling "Isah" as "Jesus" which he never heard on his life time? Does it make any sense when "Elah" can be spelled as "Alah" which both sounds same? Try in Wikipedia you will find more proof!! We request you to read the original transcripts and then learn Christianity which will help you in turn to understand the Christianity better…

**உமரின் பதில்:**

உங்கள் முழு கட்டுரையின் சாராம்சம் இந்த வரிகளில் காணப்படுகின்றது. உங்கள் பதிலின் முடிவுரையை இங்கு நீங்கள் கூறியுள்ளீர்கள், இந்த ஆங்கில விவரத்தை தமிழாக்கம் செய்துள்ளீர்கள், இதற்கு தான் நான் முக்கியமாக பதிலைச் சொல்லப்போகிறேன். இக்கட்டுரையின் இரண்டாம் பாகத்தில் அதற்கான பதிலைத் தருவேன்.

இஸ்லாமை காப்பாற்றுவதற்காக, வெறும் சொற்களில் அல்லது ஓசைகளில் வரும் ஒற்றுமையை வைத்துக்கொண்டு இஸ்லாமிய உலகம் வெளிப்படுத்திக்கொண்டு இருக்கும் முட்டாள் தனம் எவ்வளவு ஆபத்தானது, அறிவில்லாதது என்பதை நீங்களும் விளங்கிக்கொள்வீர்கள்.

**முடிவுரை:** இஸ்லாமியர்களாகிய நீங்கள் கட்டுரைகளை எழுதும்போது, வாசகர்களை ஏமாற்றக்கூடாது என்ற எண்ணத்தை மனதில் வைத்துக்கொள்ளுங்கள், மற்றும் மூல தொடுப்புக்களை பயமில்லாமல் தாருங்கள். எந்த வரிகளை நீங்கள் சொந்தமாக எழுதுகிறீர்கள், எந்த வரிகளை நீங்கள் மேற்கோள் காட்டுகிறீர்கள் என்பதை விளங்கும்படி பதியுங்கள்.

**உங்கள் பதிலில்:**

1) தமிழ் முஸ்லிம் தளம் கொடுத்த "அல்லேலூயா" விளக்கம் சரியானதா (அ) தவறானதா என்பதை நீங்கள் உங்கள் கருத்தைச் சொல்லவில்லை. குறைந்த பட்சம் அவர்களுக்கு நான் கொடுத்த விளக்கம் சரியா தவறா என்பதையும் கூறவில்லை.

2) அனேக தளங்களிலிருந்து விவரங்களை எடுத்துக்கொண்டு மேற்கோள் காட்டி, உங்கள் சொந்த வரிகளையும் சேர்த்துக்கொண்டு மூல தொடுப்புக்களை தராமல், வாசகர்களை சரியாக குழப்பியிருக்கிறீர்கள்.

3) ஒரு ஹிந்து சகோதரர் பைபிள் மொழியாக்கத்திற்கு உதவினார் என்பதை குறிப்பிட்டு, ஒரு ஹிந்து உதவிய மொழியாக்கத்தை எப்படி "வேதம்" என்றுச் சொல்கிறீர்கள் என்று கேட்டுள்ளீர்கள், அதற்கு நாம் பதில் அளித்துள்ளோம்.

நீங்கள் ஆங்கிலத்தில் எழுதிய வரிகளில் இருக்கும் பொதுவான விவரங்களுக்கு மட்டுமே இந்த கட்டுரையில் சிறிய பதிலை கொடுத்துள்ளேன். ஆங்கிலத்திலும், தமிழிலும் "அல்லேலூயா" வார்த்தைக்கு நீங்கள் அளித்த விளக்கத்தை மறுப்பு அடுத்த பாகத்தில் தரப்படும்.

இப்படிக்கு

உமர்

**ஜியாவிற்கு கொடுத்த இதர பதில்கள்**

**உமரின் இதர மறுப்புக்கள்/கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/answer_jiya/allah_allelujah_part1.html

# 39. ஜியாவிற்கு பதில் - அல்லேலூ 'யா' வும், அல்லாஹ் படும் அல்லல்களும் - பாகம் 2

**முன்னுரை:** ஜியா என்ற சகோதரர் எழுதிய **"அல்லேலூயாவும் ஈசா உமரும்"** என்ற கட்டுரைக்கு கீழ்கண்ட மறுப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளது.

1.0 **ஜியாவிற்கு பதில்: அல்லேலூ "யா" வும் "அல்லாஹ்" படும் அல்லல்களும் - பாகம் 1**

1.1 **ஜியாவிற்கு பதில்: "அல்லாஹ்" என்றால் "கர்வாலி மரம்" என்று பொருள்**

(இஸ்லாமியர்களின் அறியாமைக்கு வானமே எல்லை. இஸ்லாமியர்களின் ஏமாற்று வேலைக்கு எல்லையே இல்லை)

1.2 **அஹமத் தீததுக்கு பதில்: பைபிளில் "அல்லாஹ்", அஹமத் தீதத் கொடுத்த "அல்வா"**

(இது அஹமத் தீதத் அவர்களின் அறியாமையா? அல்லது மக்களை ஏமாற்றும் யுக்தியா?)

1.3 **ஜியாவிற்கு பதில்: குர்ஆனின் இறைவனின் பெயர் என்ன? அல்லாஹ்வா? அல்லது எலோஹிமா?**

**இதன் தொடர்ச்சியாக, "அல்லேலூ 'யா'வும் அல்லாஹ் படும் அல்லல்களும் - பாகம் 2" வெளியிடப்படுகிறது.**

இப்போது இரண்டாம் பாக மறுப்பைக் காணலாம்.

**ஜியா அவர்கள் எழுதியவை:**

மொழிபெயர்ப்பு:

உமர் அவர்களே, நீங்கள் அளித்த "விகிபீடியா" விலாசத்தில் "யஹுவாவை துதித்தல்"என்பதே சரி என்று இருக்கிறது. சரி "யஹுவாவை துதித்தல்" அல்லது "யஹ்வேஹ்-வை துதித்தல்" என்ற வார்த்தையில் வரும் "யஹுவா" அலலது "**யஹுவெஹ்**" என்றால் என்ன? ஹிப்ரூ மொழியில் "**யோத்**" "**ஹு**" "**வாவ்**" "**ஹு**", சரியான உச்சரிப்பு அறிய போதாதலால், அதனுடன் vowels சேர்க்கப்பெற்று "யஹுவா" என்று உச்சரித்தனர். **மூலம்**

உமரின் பதில்:

ஜியா அவர்களே, விக்கிபீடியா சொன்னதால் தான் "ஹல்லேலூயா" என்ற வார்த்தைக்கு "யஹுவாவை துதித்தல்" என்று அர்த்தமில்லை, அந்த வார்த்தை இரண்டு வார்த்தைகளின் கூட்டாக இருப்பதினால் தான் அந்த அர்த்தம். இது விக்கிபீடியா கலைக்கலைஞ்சியத்தில் பதிக்கப்பட்டுள்ளது. ஹல்லேலூயா வார்த்தையின் பொருளை இதர பைபிள் விரிவுரை தளங்களிலிருந்து மேற்கோள் காட்டலாம், ஆனால், பொதுவான கலைக்கலைஞ்சியமாக விக்கிபீடியா இருப்பதினால், அதன் தொடுப்பை கொடுத்தேன்.

சரி, நான் கொடுத்த தொடுப்பை சொடுக்கி நீங்கள் படித்து சில விவரங்களை தெரிந்துக்கொள்ள நான் வழி வகுத்து கொடுத்துள்ளேன் இல்லையா! இதே போல, நீங்களும் தொடுப்புக்களை கொடுத்தால் மற்றவர்களுக்கும் உதவியாக இருக்குமல்லவா? இஸ்லாமியர்களாகிய நீங்களும் உங்களைப் போல இணையத்தில் எழுதும் இதர இஸ்லாமியர்களும் இப்படி மூல தொடுப்புக்களைக் கொடுத்து வாசகர்களுக்கு உதவுவார்களா?

"யஹூவெஹ்" என்றால் என்ன என்று கேள்வி கேட்டு இருக்கிறீர்கள்?

ஜியா அவர்களே, நான் உங்களிடம் கேட்க விரும்பும் கேள்வி என்னவென்றால், விக்கீபீடியாவை படித்தேன் என்றுச் சொல்லியுள்ளீர்கள், அதிலிருந்து இன்னும் சில தொடுப்புக்களுக்கு தாவி அங்கிருந்தும் சிலவற்றை பதித்து இருக்கிறீர்கள். நீங்கள் பதித்த ஆங்கில விவரங்களிலேயே "யஹ்வெஹ்" என்றால் என்ன என்று சொல்லியிருக்கும்போது, மறுபடியும் எப்படி ஒன்றுமே தெரியாதவர் போல கேள்வியை கேட்கிறீர்கள்?

உங்களுடைய யுக்தி அனைத்தும் எங்களுக்குத் தெரியும். யஹ்வெஹ் என்றால் "I AM" / "He is" என்று பொருள் என்று கூறியிருந்தும், உங்களுடைய சொந்த விவரத்தை நுழைக்க, கேள்வியை கேட்பது போல கேட்டு, அதற்கு உங்கள் இஸ்லாமிய முறைப்படி பொருள் கொடுக்க முனைந்துள்ளீர்கள். ஆனால், ஜியா அவர்களே, இஸ்லாமியர்களாகிய உங்களின் இப்படிப்பட்ட யுக்தி மிகவும் ஆபத்தானது என்பதை இக்கட்டுரையை முழுவதுமாக படித்த பிறகு புரிந்துக்கொள்வீர்கள்.

## இருக்கிறவராகவே இருக்கிறேன் அல்லது "இருக்கிறேன்": (I AM THAT I AM OR I AM)

பைபிளின் தேவன் தன் பெயர் "இருக்கிறேன்" என்றுச் சொல்கிறார். தலைமுறை தலைமுறையாக எப்போதும் அவரை இந்த பெயரில் அழைக்கவேண்டும் என்று அவர் கூறுகிறார்.

God said to Moses, "I AM WHO I AM. This is what you are to say to the Israelites: 'I AM has sent me to you.'"

God also said to Moses, "Say to the Israelites, 'The LORD, the God of your fathers—the God of Abraham, the God of Isaac and the God of Jacob—has sent me to you.'

"This is my name forever, the name you shall call me from generation to generation. (Exodus 3:14, 15)

அதற்குத் தேவன்: **இருக்கிறவராக இருக்கிறேன்** என்று மோசேயுடனே சொல்லி, **இருக்கிறேன்** என்பவர் என்னை உங்களிடத்துக்கு அனுப்பினார் என்று இஸ்ரவேல் புத்திரரோடே சொல்வாயாக என்றார்.

மேலும், தேவன் மோசேயை நோக்கி: ஆபிரகாமின் தேவனும் ஈசாக்கின் தேவனும் யாக்கோபின் தேவனுமாயிருக்கிற உங்கள் பிதாக்களுடைய தேவனாகிய கர்த்தர் என்னை உங்களிடத்துக்கு அனுப்பினார் என்று நீ இஸ்ரவேல் புத்திரருக்குச் சொல்வாயாக; **என்றைக்கும் இதுவே என் நாமம்**, **தலைமுறை தலைமுறைதோறும் இதுவே என் பேர்ப்பிரஸ்தாபம்**. (யாத்திராகமம் 3:14,15)

பைபிளின் தேவன் தன் பெயர் **"இருக்கிறேன்"** என்றுச் சொல்கிறார். உலகத்தில் எந்த மனிதனும் "இருக்கிறேன்" என்று எப்போதும் சொல்லமுடியாது. உதாரணத்திற்கு, "ஜியா" என்கின்ற நீங்கள் இருக்கிறீர்கள். நீங்கள் உயிரோடு இருக்கும் வரை நீங்கள் "இருக்கிறேன்" (நிகழ்காலம்) என்றுச் சொல்லிக்கொள்ளலாம், ஆனால், மரித்துவிட்ட பிறகு நீங்கள் "இருக்கிறேன்" என்றுச் சொல்லமுடியாது, மற்றவர்கள் உங்களைப் பற்றி கூறும் போது, "இருந்தார் (இறந்த காலம்)" அதாவது ஜியா என்ற சகோதரர் இருந்தார் என்றுச் சொல்வார்கள்.

ஆக, எல்லா காலத்திற்கும் "இருக்கிறேன்" என்று நிகழ்காலத்தில் சொல்லக்கூடிய ஒருவர் இருந்தால் அவர் இறைவனாகத் தான் இருக்கமுடியும், ஆகையால் தான் பைபிளின் தேவன் "நான்" அல்லது "இருக்கிறேன்" என்று தன் பெயரைச் சொல்கிறார்.

## அல்லாஹ்வும் பைபிளின் "இருக்கிறேன்" என்கின்ற யேகோவா தேவனும் ஒருவரல்ல:

நாம் மேலே படித்த வசனங்களில் யேகோவா தேவன், தன்னை "யேகோவா" பெயரில் அழைக்கவேண்டும் என்று கட்டளையிட்டுள்ளார். பைபிளில் "யேகோவா" என்ற பெயர் 6000க்கும் அதிகமாக இடங்களில் வருகின்றது. தன் தீர்க்கதரிகளுக்கு தேவன் இந்த பெயர் மூலமாக வெளிப்பாடு அருளினார், அவர்களும் இந்த பெயரை பயன்படுத்தினார்கள். ஆனால், தன்னை பைபிளின் தேவன் தான் அனுப்பினார், தானும் ஒரு நபி என்று சுயமாக சொல்லிக்கொண்ட முஹம்மது மட்டும் "அல்லாஹ்" என்ற பெயரில் தீர்க்கதரிசனம் உரைத்தார். ஆக, யேகோவா தேவன் அனுப்பிய தீர்க்கதரிசி முஹம்மது அல்ல என்பது இதன் மூலமாக நிருபனமாகும். மற்றும் எப்படி பைபிளில் தேவன் தன் பெயரை யேகோவா என்று பல ஆயிர முறை பயன்படுத்தியுள்ளாரோ, அதே போல, தன் பெயர் அல்லாஹ் என்றுச் சொல்லி, குர்ஆனில் "அல்லாஹ்" பயன்படுத்தியுள்ளார்.

பழைய ஏற்பாட்டில் தன் பெயர் "யேகோவா" என்று சொல்லி அறிமுகப்படுத்திய தேவன், திடீரென்று ஏழாம் நூற்றாண்டில், தன் பெயர் "அல்லாஹ்" என்று மாற்றிக்கொள்ளவில்லை. இதற்கு பதிலாக, தலை முறை தோறும் "இருக்கிறேன் (யேகோவா)" என்ற பெயராலேயே தான் அழைக்கபடவேண்டும் என்று பைபிளின் தேவன் கட்டளையிட்டுள்ளார்.

**குர்ஆன் வசனங்களில் நாம் யேகோவா என்ற பெயரை நாம் காண்பதில்லை. ஆக, பைபிளின் தேவனும், குர்ஆனின் அல்லாஹ்வும் ஒருவரல்ல. [கிறிஸ்தவர்களே, இவ்விருவரும் ஒருவரே என்று பொய் சொல்லி, இஸ்லாமியர்கள் உங்களை ஏமாற்றுவார்கள் எச்சரிக்கையாக இருங்கள்]**

ஆக, இதன் மூலம் அறிவது என்னவென்றால், குர்ஆனின் அல்லாஹ்வும் பைபிளின் தேவனும் ஒருவரல்ல.

இவர் வேறு அவர் வேறு, பைபிளின் தேவன் அனுப்பிய நபி முஹம்மது அல்ல. முஹம்மது ஒரு கள்ள நபி அதாவது ஒரு பொய் நபியாவார். ஆகையால் தான் யூதர்களும், கிறிஸ்தவர்களும் முஹம்மது ஒரு நபி என்பதை அங்கீகரிக்கவில்லை.

**ஜியா அவர்கள் எழுதியவை:**

ஹிப்ரூ மொழி "**யஹுவா**"வில் உள்ள "**யா**" என்றால் "ஓ!" அன்று அர்த்தம் ஆகும் அச்சிரியத்தை வெளிபடுத்த பயன்படும் சொல்லாகும், "**ஹுவா**" என்றால் "அவன் தான்" என்று அர்த்தம். "யஹுவா" என்றால் "ஓ! அவன் தான்" என்று அர்த்தம் ஆகும்.

முதலில், அல்லேலூயா வார்த்தையில் வரும் இரண்டு வார்த்தைகளில், "யா" என்பது யேகோவா தேவனை குறிக்கும். இந்த வார்த்தைக்கு பொருள் நேரடியாக உள்ளது, அதாவது "அல்லேலு" என்றால், துதித்தல் என்றும், "யா" என்றால் "யேகோவா" தேவனை குறிக்கும் என்று தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. ஆனால், நீங்கள் மட்டும் உங்கள் இஸ்லாமிய தில்லுமுல்லை வெளிக்காட்டுவதற்கு "யா" என்றால் "ஓ" என்று அர்த்தம் என்றுச் சொல்லியுள்ளீர்கள். நான் கேட்கிறேன்: அல்லேலூயா என்ற வார்த்தையில் "யா" என்ற வார்த்தை "ஓ" என்ற பொருள் படும்படி பயன்படுத்தப்பட்டுள்ளதா? இதற்கு பதில் சொல்லமுடியுமா ஜியா அவர்களே?

உதாரணத்திற்கு கீழ்கண்ட பெயர்களை கவனிக்கவும்:

| பெயர் | தமிழில் பெயர் | பொருள் |
|---|---|---|
| Jeremiah | எரேமியா | Yahweh exalts |
| Isaiah | ஏசாயா | Yahweh is salvation |
| Obadiah | ஒபதியா | servant of Yahweh" or "worshipper" of Yahweh |
| Zacharia | சகரியா | Yahweh has remembered |
| Nehemiah | நெகேமியா | Comforted of/is the LORD (Yahweh) |
| Zaphaniah | செப்பனியா | Yahweh has concealed |

இன்னும் இப்படி அனேக பெயர்கள் உள்ளன, எடுத்துக்காட்டிற்காக சிலவற்றை மட்டுமே கொடுத்தேன். இந்த பெயர்களின் வரும் "யா" என்பது யேகோவா தேவனை குறிக்குமே ஒழிய, "ஓ" என்ற ஆச்சரியத்தை குறிக்காது. இதே போல, அல்லேலூயா என்ற வார்த்தையில் இருக்கும் "யா" என்பது யேகோவாவை குறிக்கும். எனவே, உங்கள் சொந்த விளக்கத்தை குர்ஆனை விளக்க பயன்படுத்துங்கள்.

**ஜியா அவர்கள் எழுதியவை:**

"ஓ! அவன் தான்" என்றால் யார் அவன்? அவன் பெயர் என்ன

யேகோவா என்பது தன் பெயர், இதற்கு "இருக்கிறேன்" என்பது பொருள், இந்த பெயராலேயே எல்லாரும் அழைக்கவேண்டும் என்று நான் மேலே காட்டிய வசனங்கள் தெளிவாக கூறும் போது, மறுபடியும், இதன் பொருள் என்ன என்று கேட்கிறீர்கள்? விக்கிபீடியாவிலிருந்து நீங்கள் மேற்கோள் காட்டிய விவரங்களே இதற்கு பொருள் "I AM" என்றுச் சொல்லும் போது, மறுபடியும் ஏன் இந்த கேள்வியை எழுப்புகிறீர்கள்?

ஏதோ.. உங்க இஸ்லாமிய லாஜிக்கை சொல்லபோகிறீர்கள், மூக்கை அறுத்துக் கொள்ளப்போகிறீர்கள் என்பது மட்டும் புரிகிறது... தொடருங்கள்... பார்க்கலாம்.

**ஜியா அவர்கள் எழுதியவை:**

156 முறை பைபளில் "ய ஹுவா எலா ஹிம்" (Example :Genesis 2:7) என்று சொல்ல பெற்று உள்ளது, அதற்கு அர்த்தம்

"ஓ! அவன் தான் எலா ஹிம்".

"எலா ஹிம்" என்றால் என்ன? "எலாஹ்" என்றால் கடவுளின் பெயர் "ஹிம்" என்றால் மரியாதையை குறிக்கும் சொல், நம் தமிழில் "கள்" இருபது போல "விலங்குகள்" என்றால் பல விலங்கு என்று அர்த்தம் அண்ணல் "உமர் அவர்கள்" என்றால் பல உமர் என்று அர்த்தம் கிடையாது அது மரியாதையை குறிக்கும் சொல்.

**நாம் மேலே கண்டது போல "யா" என்பது, நீங்கள் சொல்கின்ற படி "ஓ" என்று அர்த்தமில்லை. மற்றும் "யேகோவா எலோஹிம்" என்ற வார்த்தைகளின் அர்த்தம் "தேவனாகிய யேகோவா" என்பதாகும்.**

எலோஹிம் என்பது எபிரேய மொழியில் "இறைவன்" என்ற பொருள் கொண்ட பொதுப்பெயராகும். அதாவது, இறைவன் என்பது ஒரு குறிப்பிட்ட இறைவனை குறிக்காது. "இறைவன்" என்ற பொருள் படும் "எலோஹிம், எலாஹ், எல்..." போன்ற அனேக வார்த்தைகள் எபிரேய மொழியில் உண்டு, இவ்வார்த்தைகள் பைபிளில் எந்தெந்த பொருளில், யார் யாருக்கு பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை கீழ்கண்ட கட்டுரையில் விளக்கியுள்ளேன்:

**ஜியாவிற்கு பதில்: குர்ஆனின் இறைவனின் பெயர் என்ன? அல்லாஹ்வா? அல்லது எலோஹிமா?**

உதாரணத்திற்கு: "உங்கள் இறைவன் அல்லாஹ்" என்ற சொற்றொடரில், இஸ்லாமிய கடவுளின் பெயர் என்ன?

- "இறைவன்" என்பது இஸ்லாமிய கடவுளின் பெயரா?
- "அல்லாஹ்" என்பது இஸ்லாமிய கடவுளின் பெயரா?

"அல்லாஹ்" என்பது தான் பெயர், "இறைவன்" என்பது பெயர் அல்ல என்று இஸ்லாமியர்கள் பதில் கூறுவார்கள்.

இதே போலத்தான், எபிரேய மொழியில் "எலோஹிம்" என்பது தமிழில் "இறைவன்" என்ற பொருள் படும் பொதுப் பெயராகும். யேகோவா என்பது தான் பைபிள் இறைவனின் தனிப்பட்ட பெயராகும்.

எனவே, ஜியா அவர்களே, உங்கள் விளக்கம் தவறானது (உண்மையில் இந்த விளக்கத்தின் உண்மை சொந்தக்காரர் காலஞ்சென்ற திரு அஹமத் தீதத் அவர்களாவார்கள், இவரது அறியாமையை (மக்களை ஏமாற்றும் யுக்தியை) அப்படியே இஸ்லாமியர்கள் இன்றும் காபி அடித்துக்கொண்டு இருக்கிறார்கள். காபி அடிப்பது தவறல்ல ஆனால் "ஈ" அடிச்ச காபி அடிக்கக்கூடாது, சிறிது யோசிக்கனும், ஆராயனும்.)

**ஜியா அவர்கள் எழுதியவை:**

அதனால் தான் நபி ஈஷா (ஸல்) தான் இறக்கும் தருவாயில் "Eloh, Eloh, lama sabachthani? என்று அழுததாக பைபிள் கூறுகிறது (Mark 15:34)

இதுவரை நாம் கண்ட விளக்கத்தின் படி, மற்றும் "எலோஹிம், எல், எலோஹ்" போன்ற வார்த்தைகளின் பொருள் "இறைவன்" என்பதாகும், இது தனிப்பட்ட பெயர் அல்ல.

மேலதிக விவரத்திற்காக "எலோஹ்", "எல்", "எலோஹிம்" போன்ற வார்த்தையின் பயன்பாடு பைபிளிலிருந்தும், எபிரேய அகராதியிலிருந்தும் எடுத்து விளக்கப்பட்டுள்ள கீழ்கண்ட கட்டுரையை படிக்கவும்: **ஜியாவிற்கு பதில்: குர்ஆனின் இறைவனின் பெயர் என்ன? அல்லாஹ்வா? அல்லது எலோஹிமா?**

**ஜியா அவர்கள் எழுதியவை:**

"யா ஹூ வா எலொ ஹூ" என்றால் "ஓ! அவன் தான் எலா ஹூ" என்று அர்த்தமாகும்,

"யா ஹூ வா எலொ ஹூ" என்றால் "தேவனாகிய யேகோவா" (அ) "இறைவனாகிய யேகோவா" என்று பொருள்.

இதில் "யேகோவா" என்ற பெயரை உங்கள் விருப்பப்படி பொருள் கூறுவது தவறாகும்.

**உதாரணத்திற்கு:**

"இறைவன் அல்லாஹ்", என்ற வார்த்தைகளை எபிரேய மொழியில் கூறவேண்டுமானால், "இறைவன்" என்ற வார்த்தையின் மொழியாக்கம் "எல் (அ) எலோஹ் (அ) எலோஹிம்" என்பதாகும். அடுத்ததாக, அல்லாஹ் என்ற தனிப்பட்ட பெயர் அப்படியே வரும், அதாவது "அல்லாஹ் எலோஹிம்" என்று கூறலாம். "அல்லாஹ்" என்பது பெயர், "எலோஹிம்" என்பது பொதுப்பெயர். இந்த எலோஹிம், விக்கிரகங்களையும், இதர தெய்வங்களை குறிக்கவும் பயன்படுத்தலாம்.

**ஜியா அவர்கள் எழுதியவை:**

இதில் வரும் "ஓ!" என்ற அசிர்யத்தை குறிக்கும் சொல்லை பிரித்தால் "ஹூ வா எலொஹூ" என்று வரும் குர்ஆனில் உள்ளது போல "ஹூ வல்ல ஹூ உள்ளஜி ல இலஹா இல்ல ஹூ" (quran 59 :22 )

### ஏன் நீங்கள் "ஓ" என்ற எழுத்தை பிரிக்கிறீர்கள்?

(இப்படி பிரிக்கவில்லையானால், நீங்கள் சொல்ல வந்த பொய்யை ஏமாற்று வேலையை காட்டமுடியாது என்பதால், "ஓ" என்ற எழுத்தை பிரித்து விடுகிறீர்களோ)

- உங்கள் விருப்பப்படி பொருள் கொடுப்பீர்கள்,
- உங்கள் விருப்பப்படி சில எழுத்துக்களை சேர்ப்பீர்கள்,
- உங்கள் விருப்பப்படி நீங்கள் சொன்ன பொருளிலிருந்தே, சில எழுத்துக்களை பிரிப்பீர்கள்.. கடைசியாக, ஏதோ ஒரு குர்ஆன் வசனத்தில் ஒரு பகுதியின் உச்சரிப்பு போல இருப்பதைக் கண்டு, அதைச் சொல்லிவிட்டு, என்னவோ, உலகத்திலேயே ஒரு மகா பெரிய விஞ்ஞான உண்மையை கண்டுபிடித்து விட்டதுபோல, ஒரு பெருமிதம் கொள்கிறீர்கள்.

என்னே அறிவு... என்னே ஞானம்.... சபாஷ் இஸ்லாமியர்களே, சபாஷ்

ஆனால், ஒரு நன்மையும் இல்லையே ஜியா அவர்களே... உங்கள் இஸ்லாமிய மார்க்கத்தின் பொய்யையும், புரட்டையும் மக்கள் சிறிது சிறிதாக அறிந்துக்கொண்டு இருக்கிறார்களே...

ஜியா அவர்களிடம் சில கேள்விகள்:

நீங்கள் மேற்கோள் காட்டிய குர்ஆன் வசனம் 59:22ஐ முழுவதுமாக கீழே தருகிறேன்.

Huwa Allahu allathee la ilaha illa huwa AAalimu alghaybi waalshshahadati huwa alrrahmanu alrraheemu

1) குர்ஆனின் ஒரு வசனத்தில் முதல் சில வார்த்தைகளின் உச்சரிப்பு போல இருப்பதை வைத்துக்கொண்டு, பெரிய உலக மகா அரிய கண்டுபிடிப்பை கண்டுபிடித்துவிட்டது போல பெருமைப்படும் இஸ்லாமியரே, இவ்வசனத்தில் உள்ள இதர வார்த்தைகளை ஏன் விட்டுவிட்டீர்கள்?

2) இந்த முழு வசனத்திற்கும் சமமான உச்சரிப்பு உள்ள பைபிள் வசனம் கண்டுபிடித்துவிட்டீர்களா?

3) பைபிளின் சில வார்த்தைகளின் உச்சரிப்பிற்கு ஏற்றாற்போல குர்ஆன் வசனம் இருப்பதாக அதுவும் அதில் ஒரு பாகம் இருப்பதாக நீங்கள் மேற்கோள் காட்டியதால், எதை சாதிக்கலாம் என்று நினைத்துவிட்டீர்கள்? அல்லது இதன் மூலம் அல்லாஹ் தெரிவிக்கும் தத்துவமோ அல்லது பாடமோ என்ன? அல்லது இந்த அறிய கண்டுபிடிப்பினால் உலகிற்கு முக்கியமாக கிறிஸ்தவர்களுக்கு நீங்கள் தெரிவிக்க விரும்பும் தத்துவம்/பாடம் என்னவோ?

4) ஏதோ ஒரு வரியின் உச்சரிப்பு ஒரே மாதிரியாக இருப்பதை கண்டுபிடித்துவிட்டால், இஸ்லாம் உண்மையான மார்க்கமாகி விடுமா?

என்னடா இது, இப்படி முட்டாள் தனமாக நாம் (இஸ்லாமியர்களாகிய நாம்) சம்மந்தமே இல்லாமல் ஒப்பிடுகின்றோமே... பைபிளில் இருக்கும் இரண்டு வார்த்தைகளை எடுத்துக்கொண்டு, சம்மந்தமே இல்லாமல் அவ்வார்த்தைகளுக்கு பொருளைக் கூறி , அந்த இரண்டு வார்த்தைகள் குர்ஆனின் ஒரு வசனத்தில் வரும் ஒரு சில வார்த்தைகளின் உச்சரிப்பு போல வருவதை காரணங்காட்டி, அடிமுட்டாள்தனமாக கட்டுரை எழுதுகின்றோமே... யாராவது இதனை கண்டுபிடித்து... எழுதினால் மானம் போகுமே...இஸ்லாமுக்கும் கெட்டப்பெயர் வருமே என்ற எண்ணமே உங்களுக்கு வராதா?

இஸ்லாமியர்களின் லாஜிக்கின் படி, அமெரிக்கவின் முன்னாள் அதிபர் புஷ், இந்துக்களின் தெய்வம் "அம்மன்" போன்ற வார்த்தைகள் அல்லது இவைகளுக்கு சமமான உச்சரிப்புள்ள வார்த்தைகள் குர்ஆனில் உள்ளன, இதனால், இந்து தெய்வம் "அம்மன்" குர்ஆனில் உண்டு என்று இந்துக்கள் சொல்லலாமா?

இந்த தொடுப்பில், Islamic City Quran Transliteration Search, "Bush" என்றும், "Amman" என்றும் கொடுத்து குர்ஆனில் தேடிப்பருங்கள், எத்தனை வசனங்கள் வருகின்றது என்று நீங்களே பார்த்து தெரிந்துக்கொள்ளுங்கள்.

**ஜியா அவர்கள் எழுதியவை:**

இதன் அடிபடையில் "ஹல்லேளுயாஹ்" (halleluyah) என்றால் "ஓ! அவன் தான்எலொஹுஈ, அவனையெ துதி" என்று அர்த்தமாகும்.

எதன் அடிப்படையில்?

இஸ்லாமியர்கள் உச்சரிப்பு ஒரே மாதிரியாக வரும் வார்த்தைகளை காட்டி எப்படியெல்லாம் மக்களை ஏமாற்றுகிறார்கள் என்பதை கண்டோம்.

இந்த அல்லேலூயா வார்த்தைக்கு நேரடி பொருள் இருக்கும் போது, அதை திருத்தி, தங்கள் சொந்த விளக்கத்தைக் கொடுக்கும் இஸ்லாமியர்களின் யுக்தியை இக்கட்டுரையில் கண்டோம்.

| அல்லேலூயா என்பது இரண்டு வார்த்தைகளின் கூட்டு | | | | |
|---|---|---|---|---|
| | | | | |
| அல்லேலூயா | = | அல்லேலூ | + | யா |
| HalleluYah | = | Hallel | + | Yah |

இப்போது, சகோதரர் ஜியா அவர்கள் செய்த தில்லுமுல்லை சுருக்கமாக கீழ்கண்ட படத்தில்
காணலாம்.




**ஜியா அவர்கள் எழுதியவை:**

உமர் அவர்கள்லே நிங்களும் உங்கள் தோழர்களும் இஸ்லாத்திற்கு எதிராக பொய் பிரச்சாரம் செய்ய, அடுத்தவர் இணைய தளத்தை மொழிபெயர்க்க செலவிடும் நேரத்தில் சிறிதளவு உங்கள் மார்கத்தை அறிய செலவிட்டால் இப்படி கட்டுரை எழுதமாட்டீர்... அஸ்ஸலாமு அழைக்கும்

- ஜியா

சகோதரர் ஜியா அவர்களே, இஸ்லாமுக்கு எதிரான பொய் பிரச்சாரம் அல்ல, மெய் பிரச்சாரம். ஒட்டு மொத்த இஸ்லாமிய சமுதாயம் ஒன்றாகச் சேர்ந்து, இஸ்லாம் பற்றிய உண்மைகளை உலகிற்கு எடுத்துச் சொல்லாமல் பொய்களை சொல்லிக்கொண்டு இருக்கிறீர்கள். கிறிஸ்தவம் பற்றி பொய்களை அள்ளி வீசுகிறீர்கள், உங்களைப் போன்ற பொய்யர்களுக்கு சரியான பதில் தருவதும், மற்றும் இஸ்லாமின் உண்மை முகத்தை உலகத்திற்கு அடையாளம் காட்டுவதும் எங்கள் கடமையாகும்.

இஸ்லாம் பற்றி அதிக உண்மைகளை மக்கள் இப்போது அறிந்துக்கொண்டு இருக்கிறார்கள் என்பது உண்மை.

"அடுத்தவர் இணைய தளத்தை மொழிப்பெயர்க்கும் நேரம் என்றுச் சொன்னீர்கள்" அஹமத் தீதத் அவர்களின் உழைப்பை அப்படியே காபி அடித்து, அதனை எழுதி, உங்களுக்கு பெயர் வரும்படி செய்துள்ளீர்கள், குறைந்த பட்சம் அவரது எழுத்துக்களிலிருந்து இவைகளை எடுத்தேன் என்ற ஒரு வரியையாவது எழுதினீர்களா?

அடுத்ததாக, அடுத்தவர் தளத்தை மொழியாக்கம் செய்வது பற்றி குற்றம் சுமத்தியுள்ளீர்கள். என்னுடைய ஈஸா குர்ஆன் தளத்தில் உள்ள அனைத்து கட்டுரைகளையும் படித்துள்ளீர்களா? பீஜே அவர்களுக்கு கொடுத்த மறுப்புக்கள் மொழிப்பெயர்ப்புகளா? இஸ்லாம் கல்வி தளத்திற்கு கொடுத்த மறுப்புக்கள் மொழிப்பெயர்ப்புக்களா? தமிழ் முஸ்லிம் தளத்திற்கு கொடுத்த பதில்கள் மொழிப்பெயர்ப்புக்களா? இன்னும் அனேக இஸ்லாமிய தளங்களுக்கு நான் கொடுத்த மறுப்புக்கள் அனைத்தும் மொழிப்பெயர்ப்புக்களா?

எனவே, மொழிப்பெயர்ப்பு என்றுச் சொல்லி இஸ்லாமியர்கள் சாக்கு போக்கு சொல்லமுடியாது. உங்கள் இஸ்லாம் மீது நம்பிக்கை இருந்தால், என் அனைத்து கட்டுரைகளுக்கும் பதிலை அளியுங்கள். நானும் தொடர்ந்து அளித்துக்கொண்டு இருக்கிறேன், இனியும் தொடர்வேன்.

இன்னொரு முறை தமிழ் இஸ்லாமிய அறிஞர் உலகை எச்சரிக்கிறேன், நேர்மையாக எழுதுவீர்களானால், அதற்கேற்றபடி பதில் அளிக்கப்படும், பொய்களையும், அவதூறுகளையும் கிறிஸ்தவத்தின் மீது சொல்வீர்களானால், நாங்கள் வாளை எடுக்கமாட்டோம் அதை விட மிகவும் வலிமை வாய்ந்த பேனாவை எடுப்போம்... அதன் பிறகு... பாலைவன வெயிலையும், குளிரையும் தாங்க முடியாமல் தவிப்பீர்கள். எச்சரிக்கை... எச்சரிக்கை... எச்சரிக்கை.

**ஜியா அவர்கள் எழுதியவை:**

Note: இந்த கட்டுரையை ஒரு நகல் isaaquran கும் அனுப்பி உள்ளேன், உங்களில் இ -மெயில் ஐடி இல்லாமையால், எழுத்து விவாதத்திற்கு அழைக்கும் நீங்கள் அடுத்தவர் கட்டுரைகளை முழுமையாக பிரசுரிக்க மறுக்கிறீர்கள் என்பதால், அவர்களுக்கு ஒரு நகல் அனுப்பி உள்ளேன். இனியேனும் உங்கள் இ - மெயில் ஐடி தருவீர்கள் என்று நம்புகிறேன்.

முதலில், நான் விவாதத்திற்கு அழைத்த கட்டுரையில் என் மெயில் ஐடி உண்டா இல்லையா என்பதை ஒரு முறை பார்த்து எழுதுகிறீர்களா ஜியா அவர்களே. (**2007ம் ஆண்டில் நான் விடுத்த எழுத்து விவாத அழைப்பு**)

அடுத்தவர் கட்டுரையை முழுவதுமாக பிரசுரிக்க மறுக்கின்றேனா? அய்யோ பாவம் வாசகர்களுக்கு வந்த கேடுகாலத்தை பார்த்தீங்களா?

சிறிதும் வெட்கமில்லாமல், எங்கள் தொடுப்பையும் கொடுக்க பயப்படும், நடுங்கும் இஸ்லாமியர்கள் என் மீது குற்றம் சுமத்துகிறார்கள்! ஆச்சரியம் தான். முதலில் ரோஷமுள்ளவர்களாக நீங்கள் நடந்துக்கொண்டு எங்கள் தொடுப்புக்களை கொடுக்க முன்வாருங்கள்.

**என் மறுப்புக்களை பார்க்கும் போது:**

1) மூல தொடுப்புக்களை கொடுப்பேன் (இஸ்லாமியர்கள் போல, எனக்கு தொடுப்புக்களை கொடுக்க பய மில்லை)

2) இஸ்லாமியர்களின் ஒவ்வொரு பத்தியையும், வரியையும் பதித்து பதில் தருவேன். இதன் மூலம் இஸ்லாமிய ர்களின் மூல கட்டுரை என் தளத்தில் முழுவதுமாக வந்துவிடும்.

3) இதர தளங்களிலிருந்து மொழியாக்கம் செய்து இருந்தால், அதன் தொடுப்பைத் தருவேன்.

கடந்த சில ஆண்டுகளாக இஸ்லாமிய அறிஞர்கள் செய்யும் பொய்யைக் கண்டு, தில்லுமுல்லைக் கண்டு நொந்துபோய், உலகிற்கு அதனை எடுத்துச் சொல்லிக்கொண்டு இருக்கிறேன்.

நீங்கள் ஒரு கட்டுரையை புதியதாக எழுதும்போது, அதனை உங்கள் இஸ்லாமிய தளங்களில் முதலில் பதியுங்கள், அதன் தொடுப்பை எனக்கு அனுப்புங்கள். நான் பதில் அளிக்கும் சமயத்தில் உங்கள் தொடுப்பை கொடுப்பேன், அதற்கான பதிலைத் தருவேன். அதை விட்டுவிட்டு, நீங்கள் எழுதும் வீணான பிரயோஜனமற்ற கட்டுரைகளை முதன் முதலில் பதிக்கும் சாக்கடை என் தளமில்லையே. முதலில் உங்கள் தளத்தில் அவைகளை பதியுங்கள், அந்த சாக்கடையை நான் சுத்தப்படுத்தும்போது, என் தளத்தில் உங்கள் கட்டுரை அனைத்திற்கும் பதிலை அளிப்பேன். இது தான் முறையே தவிர, இஸ்லாமிய சாக்கடையை முதன் முதலில் பதிக்கும் இடம் என் தளமல்ல, அதற்கு பீஜே அவர்களின் தளமும், டிஎன்டிஜே தளமும், இஸ்லாம் கல்வி தளமும், இன்னும் அனேக இஸ்லாமிய தளங்கள் உள்ளன, அங்கே பதியுங்கள். சாக்கடையை சுத்தம் செய்வது மட்டும் என் கடமை என்பதை இந்திய கிறிஸ்தவர்களுக்கும் இஸ்லாமியர்களுக்கும் தெரிவித்துக்கொள்கிறேன். சரியாக சாக்கடையை சுத்தம் செய்யவில்லையானால், மறுபடியும் சுத்தம் செய்வேன், முழு சுத்தம் அடையும் வரை சுத்தம் செய்துக்கொண்டே இருப்பேன். நான் எப்படி சுத்தம் செய்கிறேன் என்பதற்கு இந்த தற்போதைய கட்டுரையும் ஒரு உதாரணமாகும். நீங்கள் உங்கள் கட்டுரையில் பதித்த விவரத்திற்கு மறுப்பாக நான்கு கட்டுரைகளை எழுதியுள்ளேன். இது போல, அனைத்து விவரத்திற்கும் பதில் அளிப்பேன், சிறிது கால தாமதம் ஆகலாம், ஆனால், தவறாமல் பதில் அளிப்பேன்.

உங்களை அடுத்த கட்டுரையில் சந்திக்கும் வரை....

உங்கள் சகோதரன்,

உமர்

மூலம்: **http://isakoran.blogspot.in/2011/03/answering-ziya-2.html**

**உமர் ஜியாவிற்கு கொடுத்த மறுப்புக்கள்**

**உமரின் இதர கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/answer_jiya/allah_allelujah_part2.html

# 40. ஜியாவிற்கு பதில் - "அல்லாஹ்" என்றால் "கர்வாலி மரம்" என்று பொருள்

**இஸ்லாமியர்களின் அறியாமைக்கு வானமே எல்லை. இஸ்லாமியர்களின் ஏமாற்று வேலைக்கு எல்லையே இல்லை**

**முன்னுரை:**

இஸ்லாமியர்கள் தங்கள் "அல்லாஹ்வை" பைபிளில் கண்டுபிடிக்க படாதபாடு படுகின்றனர். குர்ஆனின் படி, பைபிளின் தேவன் "யேகோவா" தான், குர்ஆனின் இறைவன் "அல்லாஹ்". ஆனால், உண்மை இதற்கு எதிர்மாறாக உள்ளது. அதாவது பைபிளின் தேவன் வேறு, அல்லாஹ் வேறு. அல்லாஹ் தன்னை பைபிளோடும், பழைய/புதிய ஏற்பாட்டு நிகழ்ச்சிகளோடும் சம்மந்தப்படுத்திக் கொண்டால், அவர் யேகோவா தேவனாகிவிடமுடியுமா?

இவ்விருவரும் வேற்வேறானவர்கள் என்பதை குர்ஆனையும், பைபிளையும் படிப்பவர்கள் இதனை சுலபமாக அறிந்துக்கொள்ளலாம். யேகோவா சொன்னதற்கு நேர் எதிராக அல்லாஹ் சொல்கிறார், செயல்படுகிறார். ஆக, இவ்விருவரும் ஒருவரல்ல என்பது உண்மை.

இது ஒரு புறமிருக்க, இஸ்லாமியர்கள் "அல்லாஹ்வை" பைபிளில் கண்டுபிடிக்க, அனேக யுக்திகளை கையாளுகின்றனர். இதில் ஒன்று "வார்த்தைகளின் ஓசை அல்லது உச்சரிப்பு சம்மந்தப்பட்டது". இதன் படி, "அல்லாஹ்", "முஹம்மது", "மக்கா" போன்ற வார்த்தைகளின் உச்சரிப்பு போலவே இருக்கும் வார்த்தைகள் இதர மார்க்க வேதங்களில் காணப்பட்டால், "இதர மார்க்க வேதங்களில் இஸ்லாம் பற்றி கூறப்பட்டுள்ளது, இதனால், இஸ்லாம் தான் உண்மையான மார்க்கம் என்று இஸ்லாமியர்கள் சொல்லிவிடுகிறார்கள்".

இதனால் விளையும் ஆபத்துக்கள் என்ன? என்று சிந்திக்கமாட்டார்கள் இஸ்லாமிய அறிஞர்கள். இஸ்லாமியர்களின் இந்த செயல்களை நாம் "அறியாமை" என்றுச் சொல்வதா அல்லது ஏமாற்றவேண்டும் என்ற நோக்கத்தோடு செயல்படுகிறார்கள் என்றுச் சொல்வதா? இது அறியாமையோ அல்லது ஏமாற்று வேலையோ, ஆனால், உண்மையை சொல்லவேண்டியது நம்முடைய கடமை, கிறிஸ்தவர்களை இப்படிப்பட்டவர்களிடமிருந்து எச்சரிக்கை செய்யவேண்டியது நம்முடைய கடமை.

இதைப் பற்றி தமிழ் முஸ்லிம் தளத்தின் கட்டுரையையும், அதற்கான எங்கள் மறுப்பையும் இங்கு படிக்கலாம்: **தமிழ் முஸ்லீம் தளமும், " அல்லேலூயா " வார்த்தையும்**

இதைப் பற்றி ஜியா என்ற சகோதரரின் கட்டுரையையும், அதற்கான எங்கள்முதல் மறுப்பையும் இங்கு படிக்கவும்: **ஜியாவிற்கு பதில் - அல்லேலூ "யா" வும் "அல்லாஹ்" படும் அல்லல்களும் - பாகம் 1**

சகோதரர் ஜியா அவர்களுக்கு கொடுத்த முதல் பதிலுக்கு மேலதிக விவரங்களுக்காக (போனஸாக) இந்த பதிலும் அளிக்கப்படுகிறது.

***ஜியா கீழ்கண்டவாறு எழுதுகிறார்:***

Do you have any concern in pronouncing "elah" as "alah" even though they sound same? When you don't have concern in calling "Isah" as "Jesus" which he never heard on his life time? Does it make any sense when "Elah" can be spelled as "Alah" which both sounds same? Try in Wikipedia you will find more proof!! We request you to read the original transcripts and then learn Christianity which will help you in turn to understand the Christianity better…

Source

இஸ்லாமியர்களில் யார் யாரெல்லாம், "அல்லாஹ்" என்ற வார்த்தை பைபிளில் இருக்கிறது என்றும், அல்லது ஓசையில் "அல்லாஹ்" என்பது போல வரும் வார்த்தைகள் பைபிளில் இருக்கிறது, அது அல்லாஹ்வையே குறிக்கிறது என்று கூறுகிறார்களோ, அவர்களுக்கு இந்த பதில் அளிக்கப்படுகிறது.

இஸ்லாமியர்கள் அதிகமாக மதிக்கும் அஹமத் தீதத் என்பவரும் இதைப் பற்றி எழுதியுள்ளார், அவருக்கு ஒரு சிறிய கட்டுரையை அடுத்த முறை பதிக்கிறேன். இந்த கட்டுரையில், பைபிளில் "அல்லாஹ்", "அலா", "அல்-லா" … என்று வரும் வார்த்தைகள் எங்கெங்கே வருகின்றது அதன் பொருள் என்ன என்பதை காண்போம்.

முக்கிய குறிப்பு: பழைய ஏற்பாட்டில் உள்ள ஒவ்வொரு எபிரேய வார்த்தைக்கும் ஒரு எண் கொடுக்கப்பட்டுள்ளது, இதனால், எபிரேய அகராதியில் பைபிள் வார்த்தைகளை தேடுவதற்கு வசதியாக இருக்கும். இதே போல புதிய ஏற்பாட்டு, கிரேக்க வார்த்தைகளுக்கும் ஒரு எண் கொடுக்கப்பட்டுள்ளது.

இதன்படி, "H421" என்று எழுதினால், இது ஒரு எபிரேய வார்த்தையை குறிக்கிறது (H - Hebrew Language), அவ்வார்த்தைக்கு இடப்பட்ட எண் 421 என்பதாகும். இதே போல, "G235" என்று எழுதினால், இது ஒரு கிரேக்க வார்த்தையை குறிக்கிறது (G - Greek Language), இவ்வார்த்தைக்கு இடப்பட்ட எண் 235 என்பதாகும்.

இந்த கட்டுரையில் பைபிளின் எபிரேய மற்றும் கிரேக்க வார்த்தைகளை தேட, "Blue Letter Bible (Bible / Dictionary Search) - http://www.blueletterbible.org/" என்ற தளத்தை பயன்படுத்துகிறோம்.

**பழைய ஏற்பாட்டில் அல்லாஹ்**

1)'alah ('அலாஹ்) - ஒப்பாறி அல்லது புலம்பல்

இஸ்லாமிய இறைவனின் பெயராகிய, ஆங்கிலத்தில் "Allah" என்று வரும் வார்த்தைக்கு ஒரு எழுத்து குறைவாக உள்ள "'alah" என்ற வார்த்தை பழைய ஏற்பாட்டில் ஒரு முறை யோவேல் 1:8ம் வசனத்தில் வருகிறது. உச்சரிப்பும் ஒரே மாதிரியாகத் தான் இருக்கும்.

இவ்வார்த்தையின் எபிரேய எண் "H421" என்பதாகும், இதன் பொருள் "ஒப்பாறி" அல்லது "புலம்பல்" என்பதாகும். அதாவது, நம்முடைய கிராமங்களில் ஒரு அசம்பாவிதம் நடந்துவிட்டால், யாராவது மரித்து விட்டால், "ஒப்பாறி" வைத்து அழுவார்கள். வேதனை அதிகமாகும் போது, தாங்க முடியாத துக்கமடையும் போது வார்த்தைகள் சிலவற்றைச் சொல்லி அழுவது தான், புலம்பல் அல்லது ஒப்பாறி என்போம். இது தான் இவ்வார்த்தையின் பொருள்.

**யோவேல் 1:8 (Joel 1:8)**

Lament[H421] like a virgin[H1330] girded[H2296] with sackcloth[H8242] for[H5921] the husband[H1167] of her youth.[H5271] (KJV)

தன் பாலியவயதின் புருஷனுக்காக இரட்டுடுத்தியிருக்கிற பெண்ணைப் போலப் புலம்பு.

**ஆங்கிலத்தில் பொருள்:**

'alah (Strong's Number: H421, verb): to bewail :- lament.

கீழ்கண்ட தொடுப்பை சொடுக்கி, எபிரேய வார்த்தையின் பொருளை தெரிந்துக்கொள்ளுங்கள்

Link: 'alah(H421) - www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm

**இஸ்லாமியர்களிடம் சில கேள்விகள்:**

1) அல்லாஹ் என்ற வார்த்தைக்கு இணையாக இந்த வார்த்தையின் உச்சரிப்பும் உள்ளது. **இதனால், ஒப்பாறி என்றால் அல்லாஹ் என்று பொருளா?**

2) உங்களுடைய லாஜிக்கின் படி, உச்சரிப்பு ஒரே மாதிரியாக இருப்பதினால், **இனி அல்லாஹ் என்ற இடத்தில் எல்லாம், "ஒப்பாறி" என்றோ அல்லது "புலம்பல்" என்றோ பொருள் கொள்வீர்களா?**

3) "அலா" என்பதை "இலா" என்று உச்சரித்தால் உங்களுக்கு ஏதாவது பிரச்சனையா? என்று கேட்டுள்ளீர்கள் இப்போது சொல்லுங்கள், **"அல்லாஹ்" என்ற வார்த்தையின் பொருள் "ஒப்பாறி/புலம்பல்" என்றுச் சொன்னால் ஏற்றுக்கொள்வீர்களா?**

இப்போது அடுத்த வார்த்தைக்கு கடந்துச் செல்வோம் (H422)

## 2) 'alah (H422) - சாபம், சபித்தல் மற்றும் சத்தியம் செய்தல்

இந்த வார்த்தையும் அல்லாஹ் என்ற வார்த்தையை போலவே உச்சரிக்கப்படுகிறது. இதன் பொருள், சத்தியம் செய்தல், சாபம் என்பதாகும், எண் H422 ஆகும்.

**இவ்வார்த்தை கீழ்கண்ட வசனங்களில் காணப்படுகிறது:**

நியாயாதிபதிகள் 17:2 (Judges)

1 சாமுவேல் 14:24 (1 Samuel)

1 இராஜாக்கள் 8:31 ( 1 Kings)

2 நாளாகமம் 6:22 (2 Chronicles)

ஓசியா 4:2 மற்றும் 10:4 (Hosea)

**ஆங்கிலத்தில் பொருள்:**

'alah (Strong's Number: H422, verb) - adjure, curse, swear.

கீழ்கண்ட தொடுப்பை சொடுக்கி, எபிரேய வார்த்தையின் பொருளை தெரிந்துக்கொள்ளுங்கள்

Link: 'alah (H422) - www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm

இஸ்லாமியர்கள் இப்போது "அல்லாஹ்" என்றால், "சாபம்" என்று பொருள் என்று அங்கீகரிப்பார்களா? அங்கீகரிக்கமாட்டார்கள். இது எப்படி சாத்தியம் என்பார்கள். எபிரேய மொழியில் உள்ள "சாபம்" என்று பொருள் தரும் வார்த்தை, அரபி மொழியின் "அல்லாஹ்" என்ற வார்த்தையைப் போலவே உச்சரிப்பு இருந்தாலும், இப்படி பொருள் கூறுவது முட்டாள் தனம் என்பார்கள்.

ஆனால், தமிழ் முஸ்லிம் தளம், "அல்லேலூா" என்ற எபிரேய வார்த்தையின் பொருள் "துதி" என்று இருக்கும் போது, இவ்வார்த்தை "அல்லாஹ்" என்ற வார்த்தையின் உச்சரிப்பைப் போலவே இருப்பதினால், கீழ்கண்ட வாறு கூறுவது முட்டாள் தனமில்லையா?

**தமிழ் முஸ்லீம் தளம் எழுதியது:**

இனி பைபிளை எடுத்துக் கொள்வோம்.

அல்லேலுயா!

இது ஒரு ஹிப்ரு சொல்லாகும். இதன் இறுதியில் இடம் பெறக்கூடிய 'யா' என்பது ஒரு விளி வேற்றுமை சொல்லாகும். ஆச்சரியத்திற்கு பயன் படுத்தக்கூடியதாக சொல்லப்படுகிறது.

அல்லேலுயா! என்பதை 'யா அல்லேலு' என்று சொன்னாலும் அதன் பொருளானது மாறுவதில்லை.

கிறிஸ்துவர்கள் 'யா அல்லேலு' என்கிறார்கள்

முஸ்லிம்கள் 'யா அல்லாஹ்' என்கிறார்கள்

அவ்வளவுதான் வித்தியாசம்!

Source: http://isakoran.blogspot.com/2007/10/blog-post_29.html

இந்த வார்த்தையைப் பற்றி இஸ்லாமிய அறிஞர் கலாஞ்சென்ற திரு அஹமத் தீதத் அவர்கள் என்ன எழுதியிருக்கிறார்கள் என்பதை ஒரு சிறிய கட்டுரையில் விளக்குவேன்.

கிறிஸ்தவர்களே, இனியும் ஏமாறாதீர்கள். யாராவது உங்களிடம் வந்து "அல்லாஹ்" என்ற வார்த்தை பைபிளில் உள்ளது என்று சொல்வார்களானால், ஆமாம், எங்களுக்கும் தெரியும், "அதன் பொருள் சாபம்" என்பதாகும் என்றுச் சொல்லுங்கள்.

இப்போது அடுத்த வார்த்தைக்குச் செல்வோம் (H423).

### 3) 'alah (H423) - சாபம், சத்தியம் செய்தல்

இந்த வார்த்தையின் பொருளும் சாபம், சத்தியம் செய்தல் போன்றவையாகும். இதன் எபிரேய எண் H423 என்பதாகும்.

**இவ்வார்த்தை கீழ்கண்ட வசனங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.**

ஆதியாகமம் 24:41; 26:28 (Genesis)

லேவியராகமம் 5:1 (Leviticus)

எண்ணாகமம் 5:21, 23, 27 (Numbers)

உபாகமம் 29:12, 14, 19, 20, 21; 30:7 (Deuteronomy)

1 இராஜாக்கள் 8:31 (1 Kings)

2 நாளாகமம் 6:22; 34:24 (2 Chronicles)

நேகேமியா 10:29 (Nehemiah)

யோபு 31:30 (Job)

சங்கீதம் 10:7; 59:12(Psalms)

நீதிமொழிகள் 29:24 (Proverbs)

ஏசாயா 24:6 (Isaiah)

எரேமியா 23:10; 29:18; 42:18; 44:12 (Jeremiah)

எசேக்கியேல் 16:59; 17:13, 16, 18, 19 (Ezekiel)

தானியேல் 9:11 (Daniel)

சகரியா 5:3 (Zechariah)

**ஆங்கிலத்தில் பொருள்:**

'alah (Strong's Number: H423, noun): an imprecation: - curse, cursing, execration, oath, swearing.

கீழ்கண்ட தொடுப்பை சொடுக்கி, இவ்வார்த்தையின் எபிரேய உச்சரிப்பு, பொருள் மற்றும் இதர விவரங்களை தெரிந்துக்கொள்ளுங்கள்.

Link: 'alah (H423) - www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm;

### 4) 'allah (H427)- "கர்வாலி மரம்" - oak tree

இந்த வார்த்தை முழுக்க முழுக்க இஸ்லாமியர்களின் இறைவனுக்கு இருக்கும் "அல்லாஹ்" என்றே உச்சரிக்கப்படுகிறது மற்றும் ஆங்கிலத்தில் நாம் கவனித்தால், இஸ்லாமியர்கள் பயன்படுத்தும் அதே எழுத்துக்களை கொண்டுள்ளது. இதன் எண் H427.

அல்லாஹ் = 'allah

இவ்வார்த்தையின் பொருள் "கர்வாலி மரம்" என்பதாகும். அல்லாஹ் என்ற எபிரேய வார்த்தையின் பொருள், "கர்வாலி மரம்" என்று உள்ளதால், இனி இஸ்லாமியர்களின் இறைவனுக்கு "கர்வாலி மரம்" என்று பொருள் என்று நாம் கூறலாமா? இஸ்லாமியர்கள் இதற்கு அனுமதி அளிப்பார்களா?

இஸ்லாமியர்கள் மற்றவர்களின் வேதங்களிலிருந்து வார்த்தைகளை எடுத்து அதை திருத்தி, மாற்றி பொருள் கூறுவது போல அல்லாமல், இந்த வார்த்தை எழுத்துக்கு எழுத்து அப்படியே "அல்லாஹ்" என்று வருகிறது, எனவே, அல்லாஹ் என்றால் கர்வாலி மரம் என்று அர்த்தம். என்ன இஸ்லாமிய அறிஞர்களே, உங்கள் லாஜிக்கின் படி இது சரி தானே!

**இந்த வார்த்தை யோசுவா 24:26ம் வசனத்தில் வருகிறது:**

**யோசுவா 24:26**

இந்த வார்த்தைகளை யோசுவா தேவனுடைய நியாயப்பிரமாண புஸ்தகத்தில் எழுதி, ஒரு பெரிய கல்லை எடுத்து, அதை அங்கே கர்த்தருடைய பரிசுத்த ஸ்தலத்தின் அருகில் இருந்த கர்வாலி மரத்தின் கீழ் நாட்டி,

Joshua 24:26 And Joshua wrote these words in the book of the law of God, and took a great stone, and set it up there under an oak, that was by the sanctuary of the LORD. (KJV)

**KJV with Hebrew numbers:**

Joshua 24:26 And Joshua[H3091] wrote[H3789] these[H428] (H853) words[H1697] in the book[H5612] of the law[H8451] of God,[H430] and took[H3947] a great[H1419] stone,[H68] and set it up[H6965] there[H8033] under[H8478] an oak,[H427] that[H834] was by the sanctuary[H4720] of the LORD.[H3068]

**ஆங்கிலத்தில் பொருள்:**

**'allah (Strong's Number: H427, noun): oak.**

இந்த தொடுப்பை இஸ்லாமியர்கள் கட்டாயமாக சொடுக்கி பார்க்கவேண்டும், மற்றும் உச்சரிப்பு என்ன என்பதை தங்கள் காதுகளினால் தங்கள் இறைவனின் பெயரை கேட்கவேண்டும்.

Link: **'allah (H427)** - **www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm**;

5) 'elah என்றாலோ, alah என்றாலோ இரண்டும் ஒன்றுதானாம்.

இப்போது ஜியா சகோதரர் எழுதியதை இன்னொரு முறை படிப்போம்:

//Do you have any concern in pronouncing "elah" as "alah" even though they sound same? When you don't have concern in calling "Isah" as "Jesus" which he never heard on his life time? Does it make any sense when "Elah" can be spelled as "Alah" which both sounds same?//

ஒரே மாதிரியாக உச்சரிப்பு இருக்கும் வார்த்தைகளாகிய "Elah" மற்றும் "Alah" என்ற வார்த்தைகளில், அல்லாஹ்வை குறிக்க எதை வேண்டுமானாலும் கூறலாமாம்.

இலாஹ் என்ற எபிரேய வார்த்தைக்கு என்ன பொருள்?

அல்லாஹ் என்ற அரபி வார்த்தைக்கு என்ன பொருள்?

இவ்விரண்டு வார்த்தைகளின் மூல வார்த்தை என்ன?

ஒரு மொழியில் இருக்கும் ஒரு குறிப்பிட்ட வார்த்தையின் உச்சரிப்பு போலவே, இன்னொரு மொழியில் ஒரு வார்த்தை இருந்தால், இவ்விரண்டிற்கும் ஒரே பொருள் என்று கூறமுடியுமா?

இப்படியெல்லாம் சிந்திக்க இஸ்லாமியர்களுக்கு நேரமில்லை, எனவே தான் மேற்கண்ட விதமாக அறியாமையில் (அல்லது) ஏமாற்ற வேண்டும் என்ற நோக்கத்தில் தெரிந்தே வஞ்சிக்கிறார்கள்.

சரி, இலாஹ் என்ற எபிரேய வார்த்தையின் பொருள் என்னவென்று இப்போது காண்போம். இவ்வார்த்தையின் பொருள் "கர்வாலி மரம் அல்லது பெரிய மரம்" என்பதாகும்.

**இவ்வார்த்தை கீழ்கண்ட வசனங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.**

ஆதியாகமம் 35:4

நியாயாதிபதிகள் 6:11

நியாயாதிபதிகள் 6:19

2 சாமுவேல் 18:9

2 சாமுவேல் 18:10

2 சாமுவேல் 18:14

1 இராஜாக்கள் 13:14

1 நாளாகமம் 10:12

ஏசாயா 1:30

ஏசாயா 6:13

எசேக்கியேல் 6:13

ஓசியா 4:13

**ஆங்கிலத்தில் பொருள்:**

**'elah (H424)**

1) terebinth, terebinth tree

2) valley where David killed Goliath

இவ்வார்த்தையின் எபிரேய விளக்கத்திற்கான தொடுப்பு:

Link: 'Elah - H424 - http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?strongs=H424&t=KJV

இதே பெயரில்(Elah - ஏலா - H425) ஒரு பள்ளத்தாக்கு இருந்தது. இந்த இடத்தில் தான் தாவீது கோலியாத்தை கொன்றார்.

1 சாமுவேல் 17:2 சவுலும் இஸ்ரவேல் மனுஷரும் ஒருமித்துக் கூடி, **ஏலா** பள்ளத்தாக்கிலே பாளயமிறங்கி, பெலிஸ்தருக்கு எதிராக யுத்தத்திற்கு அணிவகுத்து நின்றார்கள்.

1 Samuel 17:2 And Saul[H7586] and the men[H376] of Israel[H3478] were gathered together,[H622] and pitched[H2583] by the valley[H6010] of Elah,[H425] and set the battle[H4421] in array[H6186] against[H7125] the Philistines.[H6430]

இதுவரை நாம் பார்த்த விவரங்களின் சுருக்கம் கீழே உள்ள படத்தில் காணலாம். இந்த வார்த்தைகளில் எங்கும் "அலாஹ் (alah)" (அ) "அல்லாஹ்(allah)" என்றால் "தேவன்/இறைவன்" என்ற பொருள் இல்லை. எனவே, அல்லாஹ்வை பைபிளில் கண்டுபிடிப்பவர்களுக்கு ஏமாற்றம் தான் மிஞ்சம் ஏனென்றால், அறியாத மக்களிடம் "பைபிளில் அல்லாஹ் இருக்கிறார் அல்லது அல்லாஹ் என்ற வார்த்தை உள்ளது" என்று ஏமாற்றியவர்களுக்கு ஏமாற்றம் தானே மிஞ்சும்.

| Sl.no | Hebrew No | Hebrew Word | Transliteration | Meaning | பொருள் |
|---|---|---|---|---|---|
| 1 | H421 | אָלָה | 'alah | to lament, wail | புலம்பல்-ஒப்பாரி |
| 2 | H422 | אָלָה | 'alah | to swear, curse | சத்தியம் செய்தல், சபித்தல் (சாபம்) |
| 3 | H423 | אָלָה | 'alah | curse, cursing, execration, oath, swearing | சத்தியம் செய்தல், சபித்தல் (சாபம்) |
| 4 | H424 | אֵלָה | 'elah | Oak, terebinth tree & valley where David killed Goliath | கர்வாலி மரம், பெரிய மரம் |
| 5 | H427 | אַלָּה | 'allah | oak, terebinth | கர்வாலி மரம், பெரிய மரம் |

இதுவரை நாம் அல்லாஹ் என்ற வார்த்தை அல்லது உச்சரிப்பில் "அல்லாஹ்" என்று வரும் வார்த்தைகளை பழைய ஏற்பாட்டிலிருந்து கண்டோம். இனி புதிய ஏற்பாட்டில் அல்லாஹ் என்ற வார்த்தையின் பொருள் என்ன, இவ்வார்த்தை எங்கேங்கே வருகிறது என்பதை காண்போம்.

இனி எந்த கிறிஸ்தவரானாலும் சரி, பைபிளில் "அல்லாஹ்" என்ற வார்த்தை இல்லை என்று சொல்லக்கூடாது. ஏனென்றால், அல்லாஹ் பைபிளில் இருக்கிறார் ஆனால், அதன் அர்த்தம் "சத்தியம் செய்தல், சபித்தல், கர்வாலி மரம், ஒப்பாறி வைத்தல், புலம்புதல்" என்பதாகும். தமிழில் எப்படி ஒரே வார்த்தைக்கு அனேக அர்த்தங்கள் இருக்கிறதோ அதே போல, எபிரேய மொழியில் "அலாஹ்/அல்லாஹ்" என்ற வார்த்தைக்கு அனேக அர்த்தங்கள் உள்ளது (தமிழில் நாணயம் என்றால், நேர்மையையும் குறிக்கும், காசு என்ற பணத்தையும் குறிக்கும்).

## புதிய ஏற்பாட்டில் 'அல்லாஹ்'

பழைய ஏற்பாட்டின் எபிரேய மொழியில் மட்டுமல்ல, புதிய ஏற்பாட்டின் கிரேக்க மொழியிலும் அல்லாஹ் வருகிறார். கிரேக்க மொழியில் "அல்லாஹ்" அல்லது "**அல்லா**" என்றால் "**ஆனால்**" என்று பொருள்.

இவ்வார்த்தையின் கிரேக்க மொழி எண் G235 ஆகும்.

**alla (ἀλλά):**

**1) but**

a) nevertheless, notwithstanding

b) an objection

c) an exception

d) a restriction

e) nay, rather, yea, moreover

f) forms a transition to the cardinal matter

Source: http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=G235&t=KJV

**அல்லாஹ் என்ற கிரேக்க வார்த்தை (**”ஆனால்” என்ற வார்த்தை) **புதிய ஏற்பாட்டின் அனைத்து புத்தகங்களிலும் வருகிறது.**

(நான் இப்படி எழுதினேன் என்பதற்காக, இஸ்லாமியர்களில் சிலர் ஒன்றும் அறியாத மக்களிடம் சென்று பைபிளில் உள்ள புதிய ஏற்பாட்டின் அனைத்து புத்தகங்களிலும் அல்லாஹ் வருகிறார் என்று அப்படியே பிளேட்டை மாற்றி கதை விடப்போகிறீர்கள்! கிறிஸ்தவர்களே! எச்சரிக்கையாக இருங்கள், இஸ்லாமியர்கள் இப்படி கதை விட்டாலும் விடுவார்கள்)

- **மத்தேயு** (Matthew) 4:4; 5:15, 17, 39; 6:13, 18; 7:21; 8:4, 8; 9:12, 13, 17, 18, 24; 10:20, 34; 11:8, 9; 13:21; 15:11; 16:12, 17, 23; 17:12; 18:30; 19:6, 11; 20:23, 26, 28; 21:21; 22:30, 32; 24:6; 26:39; 27:24

- **மாற்கு** (Mark) 1:44, 45; 2:17, 22; 3:26, 29; 4:17, 22; 5:19, 26, 39; 6:9; 7:5, 15, 19; 8:33; 9:8, 13, 22, 37; 10:8, 27, 40, 43, 45; 11:23, 32; 12:14, 25, 27; 13:7, 11, 20, 24; 14:28, 29, 36, 49; 16:7
- **லூக்கா** (Luke) 1:60; 4:4; 5:14, 31, 32, 38; 6:27; 7:7, 25, 26; 8:16, 27, 52; 9:56; 11:4, 33, 42; 12:7, 51; 13:3, 5; 14:10, 13; 16:21, 30; 17:8; 18:13; 20:21, 38; 21:9; 22:26, 36, 42, 53; 23:15; 24:6, 21, 22
- **யோவான்** (John) 1:8, 13, 31, 33; 3:8, 15, 16, 17, 28, 36; 4:2, 14, 23; 5:18, 22, 24, 30, 34, 42; 6:9, 22, 26, 27, 32, 36, 38, 39, 64; 7:10, 12, 16, 22, 24, 27, 28, 44, 49; 8:12, 16, 26, 28, 37, 42, 49, 55; 9:3, 31; 10:1, 5, 8, 18, 26, 33; 11:4, 11, 15, 22, 30, 42, 51, 52, 54; 12:6, 9, 16, 27, 30, 42, 44, 47, 49; 13:9, 10, 18; 14:24, 31; 15:16, 19, 21, 25; 16:2, 4, 6, 7, 12, 13, 20, 25, 33; 17:9, 15, 20; 18:28, 40; 19:21, 24, 34; 20:7, 27; 21:8, 23
- **அப்போஸ்தலர் நடபடிகள்** (Acts) 1:4, 8; 2:16; 4:17, 32; 5:4, 13; 7:39, 48; 10:20, 35, 41; 13:25; 15:11, 20; 16:37; 18:9, 21; 19:2, 26, 27; 20:24; 21:13, 24; 26:16, 20, 25, 29; 27:10
- **ரோமர்** (Romans) 1:21, 32; 2:13, 29; 3:27, 31; 4:2, 4, 10, 12, 13, 16, 20, 24; 5:3, 11, 14, 15; 6:5, 13, 14, 15; 7:7, 13, 15, 17, 19, 20; 8:1, 4, 9, 15, 20, 23, 26, 32, 37; 9:7, 8, 10, 11, 16, 24, 32; 10:2, 8, 16, 18, 19; 11:4, 11, 18, 20; 12:2, 3, 16, 19, 21; 13:3, 5, 14; 14:13, 17, 20; 15:3, 21; 16:4, 18
- **1 கொரிந்தியர்** (1 Corinthians) 1:17, 27; 2:4, 5, 7, 9, 12, 13; 3:1, 2, 5, 6, 7; 4:3, 4, 14, 15, 19, 20; 5:8; 6:6, 8, 11, 12, 13; 7:4, 7, 10, 19, 21, 35; 8:6, 7; 9:2, 12, 21, 27; 10:5, 13, 20, 23, 24, 29, 33; 11:8, 9, 17; 12:14, 22, 24, 25; 14:2, 17, 19, 20, 22, 33, 34; 15:10, 35, 37, 39, 40, 46
- **2 கொரிந்தியர்** (2 Corinthians) 1:9, 12, 13, 19, 24; 2:4, 5, 13, 17; 3:3, 5, 6, 14, 15; 4:2, 5, 8, 9, 16, 18; 5:4, 12, 15, 16; 6:4; 7:5, 6, 7, 9, 11, 12, 14; 8:5, 7, 8, 10, 14, 19, 21; 9:12; 10:4, 12, 13, 18; 11:1, 6, 17; 12:14, 16; 13:3, 4, 7, 8
- **கலாத்தியர்** (Galatians) 1:1, 8, 12, 17; 2:3, 7, 14; 3:12, 16, 22; 4:2, 7, 8, 14, 17, 23, 29, 30, 31; 5:6, 13; 6:13, 15
- **எபேசியர்** (Ephesians) 1:21; 2:19; 4:29; 5:4, 15, 17, 18, 24, 27, 29; 6:4, 6, 12
- **பிலிப்பியர்** (Philippians) 1:18, 20, 29; 2:3, 4, 7, 12, 17, 27; 3:7, 8, 9; 4:6, 17
- **கொலோசெயர்** (Colossians) 2:5; 3:11, 22
- **1 தெசலோனிக்கேயர்** (1 Thessalonians) 1:5, 8; 2:2, 4, 7, 8, 13; 4:7, 8; 5:6, 9, 15
- **2 தெசலோனிக்கேயர்** (2 Thessalonians) 2:12; 3:8, 9, 11, 15
- **1 தீமோத்தேயு** (1 Timothy) 1:13, 16; 2:10, 12; 3:3; 4:12; 5:1, 13, 23; 6:2, 4, 17
- **2 தீமோத்தேயு** (2 Timothy) 1:7, 8, 9, 12, 17; 2:9, 20, 24; 3:9; 4:3, 8, 16
- **தீத்து** (Titus) 1:8, 15; 2:10; 3:5
- **பிலேமோன்** (Philemon) 1:14, 16
- **எபிரேயர்** (Hebrews) 2:16; 3:13, 16; 4:2; 5:4, 5; 7:16; 9:24; 10:3, 25, 39; 11:13; 12:11, 22, 26; 13:14
- **யாக்கோபு** (James) 1:25, 26; 2:18; 3:15; 4:11
- **1 பேதுரு** (1 Peter) 1:15, 19, 23; 2:16, 18, 20, 25; 3:4, 14, 21; 4:2, 13; 5:2, 3
- **2 பேதுரு** (2 Peter) 1:16, 21; 2:4, 5; 3:9
- **1 யோவான்** (1 John) 2:2, 7, 16, 19, 21, 27; 3:18; 4:1, 10, 18; 5:6, 18
- **2 யோவான்** (2 John) 1:1, 5, 8, 12
- **3 யோவான்** (3 John) 1:9, 11, 13
- **யூதா** (Jude) 1:6, 9
- **வெளிப்படுத்தின விசேஷம்** (Revelation) 2:4, 6, 9, 14, 20; 3:9; 9:5; 10:7, 9; 17:12; 20:6

உதாரணத்திற்கு, ஒரு வசனத்தை கிரேக்க எண்களோடு காண்போம், "but G235" என்ற வார்த்தையை கவனிக்கவும்.

Matthew 4:4 But[G1161] he[G3588] answered[G611] and said,[G2036] It is written,[G1125] Man[G444] shall not[G3756] live[G2198] by[G1909] bread[G740] alone,[G3441] **but[G235]** by[G1909] every[G3956] word[G4487] that proceedeth[G1607] out of[G1223] the mouth[G4750] of God.[G2316]

**முடிவுரை:** இதுவரை நாம் இஸ்லாமியர்கள் தங்கள் இறைவனின் பெயர் (அல்லாஹ்) பைபிளில் உள்ளது, அதனை கிறிஸ்தவர்கள் மற்றும் யூதர்கள் மறைத்துவிட்டார்கள் என்று சொல்லி வரும் செய்தி பொய்யானது என்பதைக் கண்டோம். அதாவது, அல்லாஹ் என்ற வார்த்தை பைபிளில் உண்டு, ஆனால், அதன் அர்த்தம் "இறைவன் என்றோ, தேவன் என்றோ, கடவுள் என்றோ" அல்லாமல், சாபம் என்றும், சத்தியம் செய்தல் என்றும், கர்வாலி மரம் என்றும் புலம்பல் என்றும், ஒப்பாறி என்றும் உள்ளது என்பதை கண்டோம்.

இதுவரை கண்ட விவரங்களின் சுருக்கம் கீழே உள்ள படத்தில் காணலாம்.

| பழைய ஏற்பாடு | | | | | |
|---|---|---|---|---|---|
| Sl.no | Hebrew No | Hebrew Word | Transliteration | Meaning | பொருள் |
| 1 | H421 | אָלָה | *'alah* | to lament, wail | புலம்பல்-ஒப்பாறி |
| 2 | H422 | אָלָה | *'alah* | to swear, curse | சத்தியம் செய்தல், சபித்தல் (சாபம்) |
| 3 | H423 | אָלָה | *'alah* | curse, cursing, execration, oath, swearing | சத்தியம் செய்தல், சபித்தல் (சாபம்) |
| 4 | H424 | אֵלָה | *'elah* | Oak, terebinth tree & valley where David killed Goliath. | கர்வாலி மரம், பெரிய மரம் |
| 5 | H427 | אַלָּה | *'allah* | oak, terebinth | கர்வாலி மரம், பெரிய மரம் |
| புதிய ஏற்பாடு | | | | | |
| Sl.no | Greek No | Greek Word | Transliteration | Meaning | பொருள் |
| 1 | G235 | ἀλλά | *alla* | but, nevertheless, notwithstanding, an objection, an exception, a restriction, nay, rather, yea, moreover, forms a transition to the cardinal matter | ஆனால், இல்லை... |

இக்கட்டுரை சகோதரர் ஜியா அவர்களின் கட்டுரைக்கு கொடுத்த முதல் மறுப்பிற்கு மேலதிக விவரங்களுக்காக எழுதப்பட்டுள்ளது, இதன் தொடர்ச்சியாக இன்னொரு கட்டுரையும் எழுதப்படுகின்றது, அதாவது, எலோஹிம் என்ற எபிரேய வார்த்தைக்கு இவர் எழுதிய விவரத்திற்கு மறுப்பாக எழுதப்படும். அதன் பிறகு, "அல்லேலூயாவும், அல்லாஹ் படும் அல்லல்களும் பாகம் - 2" என்ற மறுப்புக் கட்டுரை வெளியிடப்படும், கர்த்தருக்கு சித்தமானால்.

இக்கட்டுரைக்கு உதவிய கட்டுரைகள்/தொடுப்புக்கள்:

1) http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=H421&t=KJV

2) http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=H422&t=KJV

3) http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=H423&t=KJV

4) http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=H424&t=KJV

5) http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=H427&t=KJV

6) http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=G235&t=KJV

7) The Name of God in the Bible and the Quran - Part Three: Allah the Oak?

மூலம்: http://isakoran.blogspot.in/2011/02/answering-ziya.html

**ஜியாவிற்கு பதில்கள்**

**உமரின் இதர மறுப்புக்கள்/கட்டுரைகள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/answer_jiya/allah_oak_tree.html

# 41. ஜியாவிற்கு பதில் - குர்ஆனின் இறைவனின் பெயர் என்ன? அல்லாஹ்வா? அல்லது எலோஹிமா?

**முன்னுரை:** ஜியா என்ற சகோதரர் அல்லேலூயா என்ற வார்த்தைக்கு பொருள் கூறுகிறேன் என்றுச் சொல்லி அனேக தவறுகளை அல்லது பொய்களை கூறியுள்ளார், இதனை அவர் அஹமத் தீதத் அவர்களின் எழுத்துக்களிலிருந்து எடுத்து எழுதியுள்ளார்.

**இந்த தலைப்பு சம்மந்தப்பட்டு இதுவரை கீழ்கண்ட மறுப்புக்கள் தரப்பட்டுள்ளது.**

1) **ஜியாவிற்கு பதில் - அல்லேலூ "யா" வும் "அல்லாஹ்" படும் அல்லல்களும் - பாகம் 1**

2) **ஜியாவிற்கு பதில் - "அல்லாஹ்" என்றால் "கர்வாலி மரம்" என்று பொருள்**

(இஸ்லாமியர்களின் அறியாமைக்கு வானமே எல்லை. இஸ்லாமியர்களின் ஏமாற்று வேலைக்கு எல்லையே இல்லை)

3) **அஹமத் தீதத்திற்கு பதில் - பைபிளில் "அல்லாஹ்", அஹமத் தீதத் கொடுத்த "அல்வா"**

(இது அஹமத் தீதத் அவர்களின் அறியாமையா? அல்லது மக்களை ஏமாற்றும் யுக்தியா?)

இதன் தொடர்ச்சியாக, ஜியா சகோதரர் "எலோஹிம்" என்ற வார்த்தைக்கு கொடுத்த விளக்கத்திற்கு மறுப்பாக, இந்த தற்போதையை கட்டுரை எழுதப்படுகின்றது.

இப்போது சகோதரர் ஜியா எழுதியதை படிப்போம்:

**Ziya Said:**

What does "He is" means? Who is that "He is" ? What is his name?

In the bible it was 156 times the word exists as "Y.H.W.H Elohim" (Example :Genesis 2:7) meaning "Oh! he is Elohim" or "Oh! he is Elahim" the god calling him as "Elohim" or "Elahim"

Lets analyze what does "**Elohim**" or "**Elahim**" means? "Elohim" is not a one word, it is a combination of two words, "Eloh" + "IM". "Eloh" or "Elah" refers name of the god and "IM" refers plural of number as well as plural of respect, similar to the one we have in Tamil and Arabic (plural of respect). In this case "Eloh" + "IM" refers "**Eloh**" with a plural of respect.

…….

So "**Ya-huwa eloh**" or "**Ya-huwa elah**" means "Oh he is Eloh" or "Oh he is elah". If the "Ya" (Oh) exclamatory is separated then it will sounds "Huwa elah" sounds similar to "Hu wallah" (he is allah)

"Hu walla hu ullazee la ilaha illa hu" (holy quran 59:22)

He is allah, besides whom there is no other god. (holy quran 59:22)

According to this "**Halleluyah**" means "Praise oh! He is Eloh" or "Praise oh! He is Elah" or "Praise oh! He is Alah". மூலம்

**மேலே உள்ள ஜியா கூறிய விவரங்களின்படி:**

- "பைபிளின் தேவன் தன் பெயர் "எலோஹிம்" என்று கூறினாராம் " … the god calling him as "Elohim" or "Elahim"
- மற்றும் Eloh அல்லது Elah என்பது தேவனின் பெயராம். ("Eloh" or "Elah" refers name of the god)

இதன்மூலம் இஸ்லாமியர்கள் என்ன சொல்லவருகிறார்கள் என்று ஆராய்ந்தால், "பைபிளின் தேவனின் பெயர் எலோஹிம்/எலாஹ் என்று சொல்லிவிட்டால், இந்த வார்த்தை கிட்டத்தட்ட இஸ்லாமியர்களின் இறைவனாகிய "அல்லாஹ்" என்ற வார்த்தையின் உச்சரிப்பிற்கு சமீபமாக இருப்பதால், எலோஹிம் என்றால், "அல்லாஹ்" என்று சொல்லிவிடலாம் என்று மனப்பால் குடிக்கிறார்கள்.

**இந்த கட்டுரையில் கீழ்கண்ட இரண்டு விவரங்களை தெளிவாக்க விரும்புகிறேன்.**

1. பைபிளின் தேவன் தன் பெயர் "எல் / எலாஹ் / எலோஹிம்…" என்று கூறவில்லை, தன் பெயர் "**யேகோவா**" என்று தான் கூறியுள்ளார்.
2. இஸ்லாமிய இறைவனாகிய "அல்லாஹ்வின்" பெயர் பைபிளில் வரும் "எல் / எலாஹ் / எலோஹிம்" என்ற வார்த்தைகளின் உச்சரிப்பிற்கு ஒத்துப்போவது போல காணப்படுகிறது. உச்சரிப்பை மட்டும் ஆதாரமாக வைத்துக் கொண்டு, இஸ்லாமியர்கள் "எலோஹிம்" என்ற வார்த்தையும் "அல்லாஹ்" என்ற வார்த்தையும் ஒன்று தான் என்று சொல்லிக்கொண்டு வருகிறார்கள். இது தவறானது என்பதை இக்கட்டுரை விளக்கும். **"அல்லாஹ்"வை இஸ்லாமியர்கள் "எல்/எலாஹ்/எலோஹிம்" என்று**

**அழைக்கமுடியாது. இக்கட்டுரையை முழுவதுமாக படித்தபிறகு இதனை இஸ்லாமியர்கள் அங்கீகரிப்பார்கள்.**

## பொதுப் பெயர் Vs தனிப்பட்ட பெயர் வித்தியாசம் என்ன?

"இறைவன், கடவுள், ஆண்டவர், தேவன்" போன்ற வார்த்தைகள் பொதுப்பெயர்களா அல்லது தனிப்பட்ட பெயர்களா?

இவைகள் பொதுப்பெயர்களாகும் அல்லது வருணனைப்பெயர்களாகும் அல்லது பட்டப்பெயர்களாகும் (Titles or Descriptive Names).

ஒரு மனிதன் "என் இறைவனை நான் வணங்குகிறேன்" என்று எழுதினால், அம்மனிதனின் பின்னணியை அறிந்துக்கொள்ளாமல், அவன் குறிப்பிட்ட "அந்த இறைவன்" யார் என்று நம்மால் கூறமுடியுமா? அந்த நபர் குறிப்பிட்டது, அல்லாஹ்வையா? சிவனையா? அல்லது "இயேசுவையா"?

நம்மால் இதற்கு பதில் சொல்லமுடியாது. ஏனென்றால், "இறைவன்" என்ற வார்த்தை ஒரு குறிப்பிட்ட இறைவனை குறிக்காது, இதோடு சேர்த்து அந்த நபர் "என் இறைவனாம் அல்லாஹ்வை நான் வணங்குகிறேன்" என்றுச் சொன்னால் நமக்கு அப்போது தெரியவரும், இவர் இஸ்லாமியர்கள் வணங்கும் "அல்லாஹ்வை" குறிப்பிடுகிறான் என்று.

ஆக, "இறைவன்" என்ற வார்த்தை "பொதுப்பெயராகும்". இதே போலத் தான் "தேவன், ஆண்டவர், கடவுள்" போன்ற வார்த்தைகளும் பொதுப்பெயர்களாகும், மற்றும் ஜனாதிபதி, ஆசிரியர், மருத்துவர், பொறியாளர் போன்றவைகள் எல்லாம் ஒரு குறிப்பிட்ட நபரை குறிக்காது, இவைகள் பொதுப்பெயர்களாகும்.

**இறைவன் என்பது பொதுப் பெயர் (Descriptive name or Title), "அல்லாஹ்" என்பது தனிப்பட்ட பெயர் (Personal Name).**

**இறைவன் என்பது பொதுப் பெயர் (Descriptive name or Title), "யேகோவா" என்பது தனிப்பட்ட பெயர் (Personal Name).**

வெறுமனே "இறைவன்" என்று எழுதினால், அது அல்லாஹ்வையோ, யேகோவாவையோ குறிக்காது, அதன் பிறகு "ஒரு தனிப்பட்ட பெயரை எழுதினால் தான்" சரியான இறைவனை குறிப்பிடுவதாக இருக்கும்.

இஸ்லாமியர்கள் ஒரு வார்த்தையை எடுத்துக்கொண்டு, அதன் விவரத்தை அல்லது பொருளை அறிந்துக்கொள்ளாமல், அவ்வார்த்தை "அல்லாஹ்" என்ற வார்த்தையின் உச்சரிப்பிற்கு ஏற்றாற்போல இருப்பதைக் கண்டு, விளக்கம் கொடுக்கவும், கட்டுரை எழுதவும் ஆரம்பித்துவிடுகின்றனர். ஒரு பொதுப் பெயரை எடுத்துக்கொண்டு அப்பெயர் அல்லாஹ்வை குறிக்கும் என்றுச் சொல்வது அறியாமையாகும். இதனை இஸ்லாமியர்கள் தங்கள் சக்திக்கு ஏற்றாற்போல செய்துக்கொண்டு வருகிறார்கள்.

**மேற்கண்ட விவரங்கள் இக்கட்டுரையை புரிந்துக்கொள்ள உதவும்..**

இனி "எல்/எலோஹ்/எலோஹிம்" போன்ற வார்த்தைகளின் பொருள் என்ன என்பதை காண்போம். இஸ்லாமியர்கள் கொடுக்கும் விவரங்கள் உண்மைக்கு புறம்பாக இருப்பதை காணுங்கள்:

## 1) எபிரேய வார்த்தை "எல் (El)" மற்றும் அதன் பயன்பாடும்:

வருணனைப் பெயராகிய "எல்" என்ற வார்த்தையின் பொருள் "இறைவன்", வலிமையுள்ள, சக்திவாய்ந்த…. என்பதாகும்.

1) god, god-like one, mighty one

a) mighty men, men of rank, mighty heroes

b) angels

c) god, false god, (demons, imaginations)

d) God, the one true God, Jehovah

2) mighty things in nature

3) strength, power

மூலம்: www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm;

இப்போது, இவ்வார்த்தை பழைய ஏற்பாட்டில் யார் யாருக்கு பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை ஒரு சில எடுத்துக்காட்டு வசன ஆதாரங்களோடு காண்போம்.

### A) யேகோவாவை குறிக்க "எல்" வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது:

அதற்கு, ஆபிராம் சோதோமின் ராஜாவைப் பார்த்து: ஆபிராமை ஐசுவரியவானாக்கினேன் என்று நீர் சொல்லாதபடிக்கு நான் ஒரு சரட்டையாகிலும் பாதரட்சையின் வாரையாகிலும், உமக்கு உண்டானவைகளில் யாதொன்றையாகிலும் எடுத்துக்கொள்ளேன் என்று, (ஆதியாகமம் 14:22)

வானத்தையும் பூமியையும் உடையவராகிய உன்னதமான **தேவனாகிய** கர்த்தருக்கு நேராக என் கையை உயர்த்துகிறேன். (ஆதியாகமம் 14:23)

And Abram said to the king of Sodom, I have lift up mine hand unto the LORD, the most high God,[H410] the possessor of heaven and earth, (Genesis 14:22)

### B) அந்நிய தெய்வங்களை குறிக்க "எல்" வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது:

கர்த்தாவே, **தேவர்களில்** உமக்கு ஒப்பானவர் யார்? பரிசுத்தத்தில் மகத்துவமுள்ளவரும், துதிகளில் பயப்படத்தக்கவரும், அற்புதங்களைச் செய்கிறவருமாகிய உமக்கு ஒப்பானவர் யார்? (யாத்திராகமம் 15:11)

Who is like unto thee, O LORD, among **the gods?**[H410] who is like thee,glorious in holiness, fearful in praises, doing wonders? (Exodus 15:11)

### C) மனிதர்களை குறிக்க "எல்" வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது:

அது எழும்பும்போது **பலசாலிகள்** அஞ்சி பயத்தினால் மயங்கித் திகைப்பார்கள். (யோபு 41:25)

When he raiseth up himself, **the mighty**[H410] are afraid: by reason of breakings they purify themselves. (Job 41:25)

**பராக்கிரமசாலிகளில்** வல்லவர்களும், அவனுக்குத் துணைநின்றவர்களும், பாதாளத்தின் நடுவிலிருந்து அவனோடே பேசுவார்கள்; அவர்கள் விருத்தசேதனமில்லாதவர்களாய்ப் பட்டயத்தால் வெட்டுண்டு, இறங்கி, அங்கே கிடக்கிறார்கள். (எசேக்கியேல் 32:21)

**The strong**[H410] among the mighty shall speak to him out of the midst of hell with them that help him: they are gone down, they lie uncircumcised, slain by the sword. (Ezekiel 32:21)

ஆக, "எல்" என்பது தேவனின் பெயர் அல்ல, அது ஒரு வருணனைப்பெயர் (பட்டப்பெயர்), இது உண்மையான தேவனுக்கும், பொய்யான தெய்வங்களுக்கும் மற்றும் மனிதர்களுக்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இப்போது "எல்" என்று அல்லாஹ்வை அழைக்க இஸ்லாமியர்கள் விரும்புவார்களா? பொய்யான தெய்வங்களுக்கும், மனிதர்களுக்கும் பயன்படுத்தப்பட்ட பொதுப்பெயரை (Title) "அல்லாஹ்" என்ற தனிப்பட்ட பெயர் (Personal Name) உள்ள இடத்தில் பயன்படுத்த இஸ்லாமியர்கள் விரும்புவார்களா?

## 2) "எலோஹிம் (Elohim)" வார்த்தையின் பயன்பாடு

பழைய ஏற்பாட்டில் பயன்படுத்தப்பட்ட இன்னொரு "பொதுப் பெயர்" எலோஹிம் என்பதாகும். எலோஹிம் என்ற வார்த்தை வெறும் இறைவனுக்கு மட்டும் பட்டப்பெயராக பயன்படுத்தப்படவில்லை, இது பொய்யான தெய்வங்களுக்கும், தேவ தூதர்களை குறிப்பிடவும், உயர்ந்த பதவியில் இருப்பவர்களை குறிக்கவும் பயன்படுத்தப்பட்டது. காரணம் என்னவென்றால், இது ஒரு பட்டப்பெயர் அல்லது பொதுப்பெயராகும், இது யேகோவா தேவனின் தனிப்பட்ட பெயரல்ல.

1) (plural)

   a) rulers, judges

   b) divine ones

   c) angels

   d) gods

2) (plural intensive - singular meaning)

   a) god, goddess

   b) godlike one

c) works or special possessions of God

d) the (true) God

e) God

மூலம்: www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm

**A) பேகன் மற்றும் பொய் கடவுள்களை (விக்கிரகங்களை) குறிக்க "எலோஹிம்" வார்த்தையின் பயன்பாடு:**

ஆதியாகமம் (Genesis) 3:5; 31:30, 32; 35:2, 4

யாத்திராகமம் (Exodus) 12:12; 18:11; 20:3, 23; 22:28; 23:13, 24, 32, 33; 32:1, 4, 8, 23, 31; 34:15, 16, 17

லேவியராகமம் (Leviticus) 19:4

எண்ணாகமம் (Numbers) 25:2; 33:4

உபாகமம் (Deuteronomy) 4:28; 5:7; 6:14; 7:4, 16, 25; 8:19; 10:17; 11:16, 28; 12:2, 3, 30, 31; 13:2, 6, 7, 13; 17:3; 18:20; 20:18; 28:14, 36, 64; 29:18, 26; 30:17; 31:16, 18, 20; 32:17, 37

யோசுவா (Joshua) 22:22; 23:7, 16; 24:2, 14, 15, 16, 20, 23

நியாயாதிபதிகள் (Judges) 2:3, 12, 17, 19; 3:6; 5:8; 6:10; 10:6, 13, 14, 16; 17:5; 18:24

ரூத் (Ruth) 1:15

1 சாமுவேல் (1 Samuel) 4:8; 6:5; 7:3; 8:8; 17:43; 26:19; 28:13

2 சாமுவேல் (2 Samuel) 7:23

1 இராஜாக்கள் (1 Kings) 9:6, 9; 11:2, 4, 8, 10; 12:28; 14:9; 18:24, 25; 19:2; 20:10, 23

2 இராஜாக்கள் (2 Kings) 5:17; 17:7, 29, 31, 33, 35, 37, 38; 18:33, 34, 35; 19:12, 18; 22:17

1 நாளாகமம் (1 Chronicles) 5:25; 10:10; 14:12; 16:25, 26

2 நாளாகமம் (2 Chronicles) 2:5; 7:19, 22; 13:8, 9; 25:14, 15, 20; 28:23, 25; 32:13, 14, 17, 19; 33:15; 34:25

எஸ்றா (Ezra) 1:7

சங்கீதம் (Psalms) 82:1, 6; 86:8; 95:3; 96:4, 5; 97:7, 9; 135:5; 136:2; 138:1

ஏசாயா (Isaiah) 21:9; 36:18, 19, 20; 37:12, 19; 41:23; 42:17

எரேமியா (Jeremiah) 1:16; 2:11, 28; 5:7, 19; 7:6, 9, 18; 11:10, 12, 13; 13:10; 16:11, 13, 20; 19:4, 13; 22:9; 25:6; 32:29; 35:15; 43:12, 13; 44:3, 5, 8, 15; 46:25; 48:35

தானியேல் (Daniel) 11:8

ஓசியா (Hosea) 3:1; 14:3

நாகூம் (Nahum) 1:14

செப்பனியா (Zephaniah) 2:11

**B) இந்த வார்த்தை "தேவ தூதர்களை" குறிக்கவும் பயன்படுத்தப்பட்டுள்ளது:**

For thou hast made him a little lower than the **angels,**H430 and hast crowned him with glory and honour. (Psalms 8:5)

நீர் அவனைத் **தேவதூதரிலும்** சற்று சிறியவனாக்கினீர்; மகிமையினாலும் கனத்தினாலும் அவனை முடிசூட்டினீர் (சங்கீதம் 8:5)

**C) யேகோவாவிற்கும் பயன்படுத்தப்பட்ட "எலோஹிம்"**

அனேக வசனங்களில் "எலோஹிம்" என்ற பட்டப்பெயர் யேகோவாவிற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது. சகோதரர் ஜியா அவர்கள், இந்த வார்த்தை யேகோவாவிற்கு பயன்படுத்தப்பட்ட விவரங்களை கருத்தில் கொண்டார், ஆனால், விக்கிரகங்களுக்கும் இதே வார்த்தை பயன்படுத்தப்பட்டதை கவனிக்காமல் விட்டுவிட்டார்.

And Isaac said unto his son, How is it that thou hast found it so quickly, my son? And he said, Because the LORD thy **God**H430 brought it to me. (Genesis 27:20)

அப்பொழுது ஈசாக்குத் தன் குமாரனை நோக்கி: என் மகனே, இது உனக்கு இத்தனை சீக்கிரமாய் எப்படி அகப்பட்டது என்றான். அவன்: உம்முடைய **தேவனாகிய** கர்த்தர் எனக்கு நேரிடப்பண்ணினார் என்றான். (ஆதியாகமம் 27:20)

Regard not them that have familiar spirits, neither seek after wizards, to be defiled by them: I am the LORD your **God.**H430 (Leviticus 19:31)

அஞ்சனம் பார்க்கிறவர்களை நாடி, குறிசொல்லுகிறவர்களைத் தேடாதிருங்கள்; அவர்களாலே தீட்டுப்படவேண்டாம்; நான் உங்கள் **தேவனாகிய** கர்த்தர். (லேவி 19:31)

1. விக்கிரகங்களுக்கும் எலோஹிம் பயன்படுத்தப்பட்டுள்ளது,
2. தேவதூதர்களுக்கும் எலோஹிம் பயன்படுத்தப்பட்டுள்ளது,
3. யேகோவாவிற்கும் எலோஹிம் (இறைவன்) பயன்படுத்தப்பட்டுள்ளது.

இதன் மூலம் அறிவது என்னவென்றால், "எலோஹிம்" என்பது பெயரல்ல, இது ஒரு பட்டப்பெயர் இறைவன் என்பது பட்டப்பெயராகும்.

## இஸ்லாமியர்களுக்கு:

- அருமையான இஸ்லாமியர்களே, தேவதூதர்களை குறிக்க பயன்படுத்தப்பட்ட பெயரை உங்கள் அல்லாஹ்விற்கு பயன்படுத்த உங்களுக்கு சம்மதமா?
- விக்கிரகங்களுக்கு பயன்படுத்தப்பட்ட பட்டப்பெயரை உங்கள் "அல்லாஹ்விற்கு" தனிப்பட்ட பெயராக சூட்ட நீங்கள் விரும்புவீர்களா?
- எலோஹிம் என்றாலும், அல்லாஹ் என்றாலும் ஒன்று தான் என்று கூறும் இஸ்லாமியர்களே.. இனி "அல்லாஹ்" என்றால் எலோஹிம் என்று கூறமுடியுமா? அல்லாஹ் என்பது ஒரு தனித்தன்மை வாய்ந்த பெயர், அதற்கு பன்மை இல்லை, ஆண்பால் பெண் பால் இல்லை என்று மேடையில் பேசும் இஸ்லாமியர்களே, ஒரு பொதுப்பெயரை அல்லாஹ்விற்கு சூட்ட உங்களுக்கு விருப்பமா?

உதாரணத்திற்கு கீழ்கண்ட வசனத்தில், விக்கிரகங்களை (அந்நிய தெய்வங்களை) குறிக்க "எலோஹிம்" என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது. இப்போது இஸ்லாமியர்கள் "எலோஹிம்" என்றாலும், "அல்லாஹ்" என்றாலும் ஒன்று தான், இந்த வசனத்தில் தேவர்கள் (எலோஹிம்) என்ற வார்த்தை அல்லாஹ்வை குறிக்கும் என்றுச் சொல்லமுடியுமா?

Numbers 25:2 And they called the people unto the sacrifices of their **gods:**[H430] and the people did eat, and bowed down to their **gods.**[H430]

எண்ணாகமம் 25:2 அவர்கள் தங்கள் **தேவர்களுக்கு** இட்ட பலிகளை விருந்துண்ணும்படி ஜனங்களை அழைத்தார்கள்; ஜனங்கள் போய்ப் புசித்து, அவர்கள் **தேவர்களைப்** பணிந்துகொண்டார்கள்.

எலோஹிம் என்பது யேகோவாவின் பெயர் அல்ல, இது "இறைவன்/தேவன்/தேவர்கள்" என்று பொருள் படும் பொதுப்படையான வார்த்தையாகும். இதனை எந்த தெய்வத்திற்கு முன்பாகவும் பயன்படுத்தலாம். இது ஒரு குறிப்பிட்ட தெய்வத்தின் பெயர் அல்ல (இஸ்லாமியர்கள் விரும்பினால், இனி "அல்லாஹ்" என்று தங்கள் இறைவனை அழைப்பதை விட்டுவிட்டு, "எலோஹிம்" என்று அழைத்துக்கொள்ளட்டும்).

### 3) "எலோஹ் (Eloah)" என்ற வார்த்தையின் பயன்பாடு

"எலோஹ்" என்ற வார்த்தை "எல்" மற்றும் "எலோஹிம்" என்ற வார்த்தைகளைப் போலவே பயன்படுத்தப்படுகிறது. எலோஹ் என்பது ஒருமை, எலோஹிம் என்பது பன்மை. இவ்வார்த்தை உண்மை மற்றும் பொய்யான தெய்வங்களை குறிக்க பயன்படுத்தப்பட்டுள்ளது.

1) God

2) false god

மூலம்: http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=H433&t=KJV

இவ்வார்த்தை பயன்படுத்தப்பட்ட ஒரு சில வசனங்களை இங்கு தருகிறோம்.

Now therefore let not Hezekiah deceive you, nor persuade you on this manner, neither yet believe him: for no **god**[H433] of any nation or kingdom was able to deliver his people out of mine hand, and out of the hand of my fathers: how much less shall your God deliver you out of mine hand? (2 Chronicles 32:15 )

இப்போதும் எசேக்கியா உங்களை வஞ்சிக்கவும், இப்படி உங்களைப் போதிக்கவும் இடங்கொடுக்கவேண்டாம்; நீங்கள் அவனை நம்பவும் வேண்டாம்; ஏனென்றால் எந்த ஜாதியின் **தேவனும்**, எந்த ராஜ்யத்தின் தேவனும் தன் ஜனத்தை என் கைக்கும் என் பிதாக்களின் கைக்கும் தப்புவிக்கக்கூடாதிருந்ததே; உங்கள் தேவன் உங்களை என் கைக்குத் தப்புவிப்பது எப்படி என்கிறார் என்று சொல்லி, (2 நாளாகமம் 32:15)

Thus shall he do in the most strong holds with a strange **god,**[H433] whom he shall acknowledge and increase with glory: and he shall cause them to rule over many, and shall divide the land for gain. [Daniel 11:39]

அவன் அரணிப்பான கோட்டைகளுக்காகவும், அந்நிய **தேவனுக்காகவும்** செய்வது என்னவென்றால், அவைகளை மதிக்கிறவர்களுக்கு மகா கனமுண்டாக்கி, அவர்கள் அநேகரை ஆளும்படிச் செய்து, அவர்களுக்குத் தேசத்தைக் கிரயத்துக்காகப் பங்கிடுவான். (தானியேல் 11:39)

மேற்கண்ட வசனங்களில், பொய் தெய்வங்களை குறிக்க "எலோஹ்" என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்த எலோஹ் என்ற வார்த்தை உண்மையாகவே ஒரு தனிப்பட்ட பெயராக இருந்திருக்குமானால், இந்த பெயர் பொய் தெய்வங்களை குறிக்க பயன்படுத்தப்பட்டு இருக்காது. ஆக, இது "தெய்வம்/கடவுள்" என்பதைக் குறிக்கும் பொதுவான சொல்லாகும், இது பைபிளின் தேவனின் தனிப்பட்ட பெயர் அல்ல.

இஸ்லாமியர்கள் இந்த வார்த்தையை அல்லாவிற்கு பயன்படுத்த விரும்புவார்களா? இனி ஜியா போன்ற சகோதரர் ஆராயாமல் எழுதுவாரா?

#### 4) "எலாஹ் (Elah)" வார்த்தையின் பயன்பாடு

"எலாஹ்" என்பது ஒரு அராமிக் மொழி வார்த்தையாகும். இது எபிரேய வார்த்தைகளாகிய "எல்" மற்றும் "எலோஹ்" என்ற வார்த்தைகளுக்கு இணையான வார்த்தையாகும். இந்த வார்த்தை முக்கியமாக, எஸ்றா, நெகேமியா, எரேமியா மற்றும் தானியேல் புத்தகங்களில் காணப்படுகிறது: (அராமிக் மொழி பிரபலமாக இருந்த கால கட்டத்தில் இப்புத்தகங்கள் எழுதப்பட்டன என்பது குறிப்பிடத் தக்கது)

1) god, God

  a) god, heathen deity

  b) God (of Israel)

மூலம்: http://www.blueletterbible.org/lang/lexicon/lexicon.cfm?Strongs=H426&t=KJV

இவ்வார்த்தை கீழ்கண்ட வசனங்களில் வருகிறது. இந்த வார்த்தை உள்ள இடத்தில் "அல்லாஹ்" என்று உச்சரிக்கவும், இவ்வார்த்தை அல்லாஹ்வையே குறிக்கிறது என்றுச் சொல்லவும் இஸ்லாமியர்களுக்கு விருப்பமா?

Thus shall ye say unto them, The **gods**H426 that have not made the heavens and the earth, even they shall perish from the earth, and from under these heavens. (Jeremiah 10:11)

வானத்தையும் பூமியையும் உண்டாக்காத **தெய்வங்கள்**, பூமியிலும் இந்த வானத்தின்கீழும் இராதபடிக்கு அழிந்துபோகும் என்பதை அவர்களுக்குச் சொல்லுங்கள். (எரேமியா 10:11)

There are certain Jews whom thou hast set over the affairs of the province of Babylon, Shadrach, Meshach, and Abednego; these men, O king, have not regarded thee: they serve not thy **gods,**H426 nor worship the golden image which thou hast set up. (Daniel 3:12)

பாபிலோன் மாகாணத்தின் காரியங்களை விசாரிக்கும்படி நீர் ஏற்படுத்தின சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்னும் யூதரான மனுஷர் இருக்கிறார்களே; அவர்கள் ராஜாவாகிய உம்மை மதிக்கவில்லை; அவர்கள் உம்முடைய **தேவர்களுக்கு** ஆராதனை செய்யாமலும், நீர் நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொள்ளாமலும் இருக்கிறார்கள் என்றார்கள். (தானியேல் 3:12)

But if not, be it known unto thee, O king, that we will not serve thy **gods,**H426 nor worship the golden image which thou hast set up. (Daniel 3:18)

விடுவிக்காமற்போனாலும், நாங்கள் உம்முடைய **தேவர்களுக்கு** ஆராதனை செய்வதுமில்லை, நீர் நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொள்வதுமில்லை என்கிறது ராஜாவாகிய உமக்குத் தெரிந்திருக்கக்கடவது என்றார்கள். (தானியேல் 3:18)

இந்த வார்த்தையை பார்க்கும் போது, பொய்யான தெய்வங்களுக்கும், விக்கிரகங்களை குறிக்கவும் இவ்வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது.

மறுபடியும் இப்போது சகோதரர் ஜியா எழுதியதை படிப்போம்:

**Ziya Said:**

What does "He is" means? Who is that "He is" ? What is his name?

In the bible it was 156 times the word exists as "Y.H.W.H Elohim" (Example :Genesis 2:7) meaning "Oh! he is Elohim" or "Oh! he is Elahim" the god calling him as "Elohim" or "Elahim"

Lets analyze what does "**Elohim**" or "**Elahim**" means? "Elohim" is not a one word, it is a combination of two words, "Eloh" + "IM". "Eloh" or "Elah" refers name of the god and "IM" refers plural of number as well as plural of respect, similar to the one we have in Tamil and Arabic (plural of respect). In this case "Eloh" + "IM" refers "**Eloh**" with a plural of respect.

…….

So "**Ya-huwa eloh**" or "**Ya-huwa elah**" means "Oh he is Eloh" or "Oh he is elah". If the "Ya" (Oh) exclamatory is separated then it will sounds "Huwa elah" sounds similar to "Hu wallah" (he is allah)

"Hu walla hu ullazee la ilaha illa hu" (holy quran 59:22)

He is allah, besides whom there is no other god. (holy quran 59:22)

According to this "**Halleluyah**" means "Praise oh! He is Eloh" or "Praise oh! He is Elah" or "Praise oh! He is Alah". மூலம்

பைபிளின் இறைவனின் பெயர் "யேகோவா" என்பதாகும். அதே போல, இஸ்லாமிய இறைவனின் பெயர் "அல்லாஹ்" என்பதாகும். இவைகள் அவரவருக்கு இருக்கும் தனிப்பட்ட பெயர்கள். "எல்", "எலோஹிம்", "எலாஹ்" மற்றும் "எலோஹ்" என்ற வார்த்தைகள் "இறைவன்" என்ற பொதுவாக பயன்படுத்தும் தமிழ் வார்த்தைக்கு இணையான வார்த்தைகளாகும். இவ்வார்த்தையை எந்த இறைவனுக்கு முன்பாகவும் பயன்படுத்தலாம்.விக்கிரகங்களுக்கும், தேவதூதர்களுக்கும், மனிதர்களுக்கும் பயன்படுத்தும் வார்த்தையை "தங்கள் அல்லாஹ்வின் பெயர் என்றும், அல்லது இப்பெயரைக் கொண்டு அல்லாஹ்வை அழைக்கலாம்" என்றும், இஸ்லாமியர்கள் கூறுவதினால், "அல்லாஹ்விற்கு" எதிராக இணைவைக்கும் பாவத்தை செய்கின்றவர்களாகிறார்கள்.

எனவே, இனி எந்த இஸ்லாமியராவது, "அல்லாஹ்வை" "எலோஹ்/எலோஹிம்" என்று அழைத்தாலும் வித்தியாசம் வந்துவிடாது என்று கூறுவாரானால், அவர் அல்லாஹ் மன்னிக்கமுடியாத பாவம் செய்தவராவார் என்பது திண்ணம்.

**முடிவுரை:** திரு அஹமத் தீதத் அவர்களின் எழுத்துக்களை ஆராயாமல், உண்மையை தெரிந்துக்கொள்ளாமல் அப்படியே இஸ்லாமியர்கள் பயன்படுத்தினால், இப்படித் தான் வேதனை அடையவேண்டி வரும். திரு ஜியா அவர்களே, அல்லாஹ்விற்கு இணை வைத்த பாவத்தை நீங்களும், உங்களை நம்பி உங்கள் கட்டுரையை படித்து நீங்கள் சொல்வது உண்மை என்று நம்பும் இஸ்லாமியர்களும் செய்துள்ளீர்கள்.

இனி இதனை திருத்திக்கொள்வீர்களோ அல்லது அப்படியே இருந்துவிடுவீர்களோ அது உங்கள் விருப்பம். சொல்லவேண்டியதை சொல்லிவிட்டேன். இனி ஏதாவது எழுதும் போது, சிறிது ஆராய்ந்து எழுதினால் நல்லது.

ஜியா அவர்களே, "எலோஹிமுக்கு" அல்ல, "எல்லுக்கு" அல்ல, "எலோஹ்விற்கு" அல்ல, "யேகோவா" விற்கு சித்தமானால் உங்களின் அல்லேலூயா கட்டுரைக்கு என்னுடைய இரண்டாம் பாக மறுப்பை அடுத்தபடியாக தருவேன்.

இக்கட்டுரைக்கு உதவிய கட்டுரைகள்:

**The Name of God in the Bible and the Quran**

1) Part One: Names and Titles

2) Part Two: The Name of Allah

3) Part Three: Allah the Oak?

4) One Last Note

மூலம்: **http://isakoran.blogspot.in/2011/02/answering-ziya_27.html**

**ஜியாவிற்கு கொடுத்த இதர பதில்கள்**

**உமரின் இதர கட்டுரைகள்/மறுப்புக்கள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/answer_jiya/god_name_allah_elohim.html

# 42. நிலமெல்லாம் இரத்தம் (10) – எத்தனை நபிகளை அல்லாஹ் அனுப்பினான்? (25 vs. 124000)

(அத்தியாயம் 13. நபியாக நியமிக்கப்படல்)

[முந்தைய விமர்சன கட்டுரைகளை படிக்க **இங்கு** சொடுக்கவும்.]

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

நீங்கள் 13ம் அத்தியாயத்தில் "நபிகள்" பற்றி எழுதியவைகள் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றது.

**பாரா அவர்கள் எழுதியது:**

//முகம்மதுக்கு முன்பு இறைத் தூதர்களாக இவ்வுலகில் அறியப்பட்டவர்கள் மொத்தம் இருபத்தைந்து பேர்.//

அருமையான பாரா அவர்களே, முஹம்மதுவிற்கு முன்பு உலகில் நபிகளாக அறியப்பட்டவர்கள் வெறும் 25 பேர் தானா? உங்களுக்கு யாரோ தவறான விவரங்களை கொடுத்துள்ளார்கள் அல்லது அரைகுறை விவரங்கள் அடங்கிய ஏதோ ஒரு புத்தகத்தை நீங்கள் படித்திருக்கவேண்டும்.

இஸ்லாமின் படி, குர்-ஆனில் பெயர் குறிப்பிடப்பட்டவர்கள் 25 நபிகள் ஆவார்கள். ஆனால், குர்-ஆன் முன்மொழியும் யூத கிறிஸ்தவ வேதங்களில் எத்தனை நபிகளின் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன என்று உங்களுக்குத் தெரியுமா? உங்கள் தொடர் கட்டுரைகளுக்காக நீங்கள் குர்-ஆனை மட்டும் ஆதாரமாக எடுத்துக்கொண்டீர்களா? அல்லது இதர யூத கிறிஸ்தவ வேதங்களையும் எடுத்துக்கொண்டீர்களா? மூன்று வேதங்களில் உள்ள விவரங்களை ஒன்று திரட்டி எழுதியிருக்கிறீர்கள் என்று தெரிகின்றது. ஆனால், நபிகளின் எண்ணிக்கையை குறிப்பிடும் போது மட்டும் அரைகுறை விவரங்களை ஏன் எழுதுகிறீர்கள்?

**இஸ்லாமின்படி மொத்தம் எத்தனை இறைத்தூதர்கள்?**

இஸ்லாமின் படி, அல்லாஹ் உலகம் உண்டானது முதற்கொண்டு, எல்லா நாடுகளுக்கும், அவரவர் மொழிகளில் தனித்தனியே இறைத்தூதர்களை அனுப்பியிருக்கிறாராம். அதுவும் எல்லா காலக்கட்டத்துக்கும் இறைத்தூதர்களை அனுப்பியிருக்கிறாராம், பார்க்க குர்-ஆன் 16:36.

குர்-ஆன் 16:36. **மெய்யாகவே நாம் ஒவ்வொரு சமூகத்தாரிடத்திலும்**, “அல்லாஹ்வையே நீங்கள் வணங்குங்கள்; ஷைத்தான்களை விட்டும் நீங்கள் விலகிச் செல்லுங்கள்” என்று (போதிக்குமாறு) நம் தூதர்களை அனுப்பி வைத்தோம்; எனவே அ(ந்த சமூகத்த)வர்களில் அல்லாஹ் நேர்வழி காட்டியோரும் இருக்கிறார்கள்; வழிகேடே விதிக்கப்பெற்றோரும் அவர்களில் இருக்கிறார்கள்; ஆகவே நீங்கள் பூமியில் சுற்றுப்பயணம் செய்து, பொய்யர்களின் முடிவு என்ன ஆயிற்று என்பதைக் கவனியுங்கள். ( முஹம்மது ஜான் தமிழாக்கம்)

சில முஸ்லிம்களின் கருத்துபடி ஆதாம் முதற்கொண்டு முஹம்மதுவரை அல்லாஹ் 1,24,000 இறைத்தூதர்களை அனுப்பினாராம் (இது பலவீனமான ஹதீஸின் விவரம் என்று சிலர் சொல்கிறார்கள்). ஒவ்வொரு காலக்கட்டத்திற்கும், ஒவ்வொரு மக்கள் குழுவிற்கும் (நாடுகளுக்கும்) ஒரு தூதரை அல்லாஹ் அனுப்பியிருக்கிறார். அப்படியானால், எத்தனை ஆயிர தூதர்களை அல்லாஹ் அனுப்பியிருக்கவேண்டும் பாருங்கள். இந்தியாவிற்கும் அல்லாஹ் இறைத்தூதர்களை அனுப்பியிருக்கிறார்! (அப்படியா! ஆமாம், குர்-ஆன் அப்படித்தான் சொல்கிறது. இதனை நம்பாதவர்கள் பூமியில் சுற்றுப்பயணம் செய்துப் பாருங்கள் என்றும் சொல்கிறது. முஹம்மது காலத்துக்கு முன்பிலிருந்து மக்கள் இந்தியாவில் வாழ்ந்திருக்கிறார்களே! அப்படியானால், நிச்சயமாக இறைத்தூதர்கள் வந்திருக்கவேண்டுமே!).

**குர்-அனின் படி, மொத்த நபிகள் 25 பேர் மட்டுமல்ல, பார்க்க குர்-ஆன் 40:78, 23:44 & 28:59**

குர்-ஆன் 40:78. திட்டமாக நாம் **உமக்கு முன்னர் தூதர்களை அனுப்பியிருக்கின்றோம்**; அவர்களில் சிலருடைய வரலாற்றை உமக்குக் கூறியுள்ளோம்; **இன்னும் எவர்களுடைய வரலாற்றை உமக்குக் கூறவில்லையோ** (அவர்களும்) அத்தூதர்களில் இருக்கின்றனர்; (இவ்விருசாராரில்) எந்தத் தூதரும் அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்த அத்தாட்சியையும் கொண்டு வருவதற்கு (அதிகாரமும்) இல்லை; ஆகவே அல்லாஹ்வுடைய கட்டளைவரும் போது, (அனைவருக்கும்) நியாயமாகத் தீர்ப்பளிக்கப்படும்; அன்றியும், அந்த இடத்தில் பொய்யர்கள் தாம் நஷ்டமடைவார்கள்.

23:44. பின்னரும் நாம் நம்முடைய தூதர்களைத் **தொடர்ச்சியாக அனுப்பி வைத்தோம். ஒரு சமுதாயத்திடம் அதன் தூதர் வந்த போதெல்லாம்**, அவர்கள் அவரைப் பொய்யாக்கவே முற்பட்டார்கள்; ஆகவே நாம் அச்சமூகத்தாரையும் (அழிவில்) ஒருவருக்குப் பின் ஒருவராக்கி நாம் அவர்களை(ப் பின் வருவோர் பேசும் பழங்)கதைகளாகச் செய்தோம். எனவே, நம்பிக்கை கொள்ளாத மக்களுக்கு (அல்லாஹ்வின் ரஹ்மத்) நெடுந்தொலைவேயாகும்.

28:59. (நபியே!) நம் வசனங்களை அவர்களுக்கு ஓதிக் காண்பிக்கும் தூதர் ஒருவரை **அவர்களுடைய தலைநகருக்கு அனுப்பி வைக்காத வரையில் எந்த ஊர்களையும்** உம்முடைய இறைவன் அழிப்பவனாக இல்லை; மேலும் ,எந்த ஊரையும் அதன் மக்கள் அக்கிரமக் காரர்களாக இல்லாத வரையில் நாம் அழிப்போராகவும் இல்லை.

சில நபிகளின் விவரங்களை மட்டுமே அல்லாஹ் குர்-ஆனில் சொல்லியுள்ளாராம், இன்னும் சிலருடையதை சொல்லவில்லையாம். இஸ்லாமின் படி, பல நூறு இறைத்தூதர்களாவது இருந்திருக்கவேண்டுமில்லையா?

அப்படியானால், ஏன் வெறும் 25 இறைத்தூதர்களைப் பற்றி மட்டுமே குர்-ஆன் பேசுகின்றது? (இதற்கான பதிலை அடுத்த பாகத்தில் எழுதுகிறேன்).

ஆக, இஸ்லாமின் படி, பல ஆயிர இறைத்தூதர்களை அல்லாஹ் அனுப்பியிருக்கிறான்.

**யூத/கிறிஸ்தவ மார்க்கத்தின் படி எத்தனை இறைத்தூதர்கள்?**

முஹம்மதுவிற்கு முன்பு வரை 25 இறைத்தூதர்கள் உலகத்தில் அறியப்பட்டுள்ளார்கள் என்று நீங்கள் சொன்னது எதன் அடிப்படையில்? "இஸ்லாமின் படி" 25 இறைத்தூதர்களின் பெயர் அறியப்பட்டிருக்கின்றன என்று நீங்கள் எழுதியிருக்கவேண்டும். இஸ்லாம் சொல்லும் கோட்பாட்டை மற்ற மார்க்கங்கள் மீது திணிக்க முயலாதீர்கள். இதில் இன்னொரு சிக்கல் என்னவென்றால், இஸ்லாமின் கோட்பாட்டையும் புரிந்துக்கொள்வதிலும் நீங்கள் தவறு செய்திருக்கிறீர்கள்.

யூத மார்க்கத்தின் படி 48 தீர்க்கதரிசிகளை அவர்கள் அடையாளம் காணுகிறார்கள் [1]. இன்னும் கிறிஸ்தவர்களின் எண்ணிக்கையை கணக்கிட்டால், யோவான் ஸ்நானகன் போன்றவர்கள் கூட தீர்க்கதரிசிகளின் பட்டியலில் சேரும் போது எண்ணிக்கை அதிகமாகும். மேலும் "நபிகள் என்றால் யார்?" என்ற வரையறையிலும் இஸ்லாமோடு, கிறிஸ்தவர்கள், யூதர்கள் வேறுபடுகிறார்கள், தேவைப்படும் போது அதனை விளக்குவேன்.

**நபிகள் பற்றிய சுருக்கத்தை இங்கு பாருங்கள்:**

| | |
|---|---|
| **இஸ்லாம்** | யூத நபிகள் + கிறிஸ்தவ நபிகள் + உலகத்தில் அல்லாஹ் அனுப்பிய இதர அனைத்து நபிகள் + முஹம்மது |
| **கிறிஸ்தவம்** | யூத நபிகள் + கிறிஸ்தவ நபிகள் – முஹம்மது |
| **யூத மதம்** | யூத நபிகள் – கிறிஸ்தவ நபிகள்<br><br>(கிறிஸ்தவத்தை ஏற்காத யூதர்கள் கிறிஸ்தவ நபிகளை நம்புவதில்லை.) |

ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்லும்போது, "இஸ்லாமின் நம்பிக்கைப்படி, யூத/கிறிஸ்தவ நம்பிக்கைப் படி இத்தனை பேர்" என்று தெளிவாகச் சொல்லவேண்டும், அரைகுறையாகச் சொல்லக்கூடாது.

**பாரா அவர்கள் எழுதியது:**

// அவர்களுள், முதல் மனிதர் ஆதாம் தொடங்கி, இயேசு வரையிலான பதினேழு பேரைப் பற்றிய விரிவான அறிமுகங்கள் இன்று நமக்குக் கிடைக்கின்றன.//

இந்த 17 பேருடைய விரிவான அறிமுகங்கள் குர்-ஆனில் கிடைக்குமா? நிச்சயமாக கிடைக்காது. அப்படியானால், எவைகளை ஆதாரமாக வைத்துக்கொண்டு, 17 நபர்களின் விரிவான அறிமுகங்கள் கிடைத்துள்ளன என்று எழுதியுள்ளீர்கள்? நிச்சயமாக நீங்கள் யூத கிறிஸ்தவ வேதங்களின்படித் தான் இதை எழுதியிருப்பீர்கள். அப்படியானால், ஏன் வெறும் 25 நபிகள் அறியப்பட்டுள்ளார்கள் என்று முதலாவது

எழுதவேண்டும்? நீங்கள் குர்ஆனிலிருந்து மட்டும் எடுத்து ஏதாவது எழுதினீர்கள் என்றுச் சொன்னால், உங்களுக்கு குழப்பங்கள் தான் மிஞ்சும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

**பாரா அவர்கள் எழுதியது:**

//இறைவனுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டு பேசியவர்கள், இறைவனாலேயே நல்வழி காட்டப்பட்டவர்கள் ஒருவகை. இறைவனிடமிருந்து மக்களுக்கு வேதத்தைப் பெற்று அளித்தவர்கள் இன்னொரு வகை.முகம்மதுக்கு முன்னர் இப்படி வேதம் அருளப்பட்ட சம்பவம் மட்டும் மூன்றுமுறை நடந்திருக்கிறது. முதலாவது, மோஸஸுக்கு அருளப்பட்ட "தோரா" (குர்ஆன் இதனை "தவ்ராத்" என்று அழைக்கிறது. யூதர்களின் வேதமாக இருப்பது.) அடுத்தது, தாவீத் என்கிற டேவிடுக்கு அருளப்பட்ட சங்கீதம். (Psalm என்று ஆங்கிலத்திலும் ஸபூர் என்று குர்ஆனிலும் குறிக்கப்படுவது. பைபிளின் பழைய ஏற்பாட்டில் இதனைப் பார்க்கமுடியும்.) மூன்றாவதாக, இயேசுவுக்கு அருளப்பட்ட "இன்ஜீல்" எனப்படும் Gospel). //

**முஸ்லிம்களும் ஏற்காத வாதம்:**

மறுபடியும் இன்னொரு தவறு. முஹம்மதுவிற்கு முன்பு மூன்று முறைத்தான் வேதங்கள் அருளப்பட்டுள்ளது என்று நீங்கள் எழுதியதை முஸ்லிம்கள் கூட ஒப்புக்கொள்ளமாட்டார்கள். தோரா, ஸபூர், இன்சில் மட்டுமல்ல, இஸ்லாமின்படி இன்னும் அனேக வேதங்களை அல்லாஹ் இறக்கியிருக்கின்றான்.

கீழ்கண்ட வசனங்களில், ஆப்ரஹாமுக்கும் வேதம் (சின்ன புத்தகம்) கொடுத்ததாக குர்-ஆன் சொல்கிறது. ஆனால், பாவம் அந்த வேதத்தையும் ஆபிரகாமும், அவரது பிள்ளைகளும், பிள்ளைகளின் பிள்ளைகளும் பாதுகாக்கவில்லை. சில இஸ்லாமியர்களின் கருத்துப்படி, சின்ன வேதம் என்றுச் சொன்னால், விரல்விட்டு எண்ணக்கூடிய அளவிற்கு பக்கங்கள் கொண்ட சுருள் போல இருக்குமாம்.

**குர்-ஆன் 87:18-19, 53:36-37**

87:18. நிச்சயமாக இது முந்திய ஆகமங்களிலும்-

87:19. இப்ராஹீம், மூஸாவினுடைய ஆகமங்களிலும் (இவ்வாறே அறிவிப்பு) இருக்கிறது.

53:36. அல்லது, மூஸாவின் ஸுஹுஃபில் - வேதத்தில் இருப்பது அவனுக்கு அறிவிக்கப்படவில்லையா?

53:37. (அல்லாஹ்வின் ஆணையைப் பூரணமாக) நிறைவேற்றிய இப்ராஹீமுடைய (ஆகமங்களிலிருந்து அவனுக்கு அறிவிக்கப்படவில்லையா?)

சில முஸ்லிம்கள் கீழ்கண்ட வசனத்தின் அடிப்படையில், நபி (Prophet) என்றால் அவருக்கு வேதமும் ஞானமும் கொடுக்கப்பட்டு இருக்கும், இறைத்தூதர் (Messenger) என்றால் அவர் முந்தைய வேதங்களை மெய்ப்பிப்பார் என்று பொருள் கொடுக்கிறார்கள். இதற்கு ஆதாரமாக குர்-ஆன் 3:81ஐ குறிப்பிடுவார்கள்.

3:81. (நினைவு கூருங்கள்:) **நபிமார்**(கள் மூலமாக அல்லாஹ் உங்கள் முன்னோர்)களிடம் உறுதிமொழி வாங்கியபோது, "**நான் உங்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கொடுத்திருக்கின்றேன்.** பின்னர் உங்களிடம் இருப்பதை மெய்ப்பிக்கும் **ரஸூல்** (இறைதூதர்) வருவார். நீங்கள் அவர்மீது திடமாக ஈமான் கொண்டு அவருக்கு உறுதியாக உதவி செய்வீர்களாக" (எனக் கூறினான்). "நீங்கள் (இதை) உறுதிப்படுத்துகிறீர்களா? என்னுடைய இந்த உடன்படிக்கைக்குக் கட்டுப்படுகிறீர்களா?" என்றும் கேட்டான்;

"நாங்கள் (அதனை ஏற்று) உறுதிப்படுத்துகிறோம்" என்று கூறினார்கள்; (அதற்கு அல்லாஹ்) "நீங்கள் சாட்சியாக இருங்கள்; நானும் உங்களுடன் சாட்சியாளர்களில் (ஒருவனாக) இருக்கிறேன்" என்று கூறினான்.

இதன் படி பார்த்தால், ஆதாம் முதற்கொண்டு, அல்லாஹ் அனுப்பிய ஒவ்வொரு நபிக்கும் ஒரு வேதம் என்று கணக்கிட்டால், பல நூறு வேதங்கள் ஆகிவிடும். நீங்கள் வெறும் குர்-ஆனை மட்டும் மேலோட்டமாக படித்து எழுதியிருக்கிறீர்கள், இனிமேல் நபிகள் பற்றி எழுதும்போது, மேற்கண்ட விவரங்களை கவனத்தில் வைத்துக்கொண்டு எழுதுங்கள்.

**பாரா அவர்கள் எழுதியது:**

//இயேசுவுக்குச் சுமார் அறுநூறு ஆண்டுகளுக்குப் பிறகு "இறைத்தூதர்" (நபி) என்று அடையாளம் காட்டப்பட்டவர், முகம்மது.//

எங்கு அடையாளம் காட்டப்பட்டார்? குர்-ஆனில் மட்டும் தான், யூத கிறிஸ்தவ வேதங்களில் அல்ல. முஹம்மதுவை நபி என்று நீங்கள் எழுதும் போது, "இஸ்லாமின் படி" என்று சேர்த்துக்கொள்ளுங்கள். பைபிளின் படி முஹம்மது ஒரு கள்ளத் தீர்க்கதரிசியாவார். அவர் பைபிளின் தேவன் அனுப்பிய நபி அல்ல. முஹம்மது ஒரு கள்ள நபி என்று கிறிஸ்தவர்கள் ஏன் கருதுகிறார்கள் என்பதை அறிய இக்கட்டுரையை படிக்கவும்: **முஹம்மது ஒரு கள்ளத்தீர்க்கதரிசி என்று கிறிஸ்தவர்கள் கருதுவது ஏன்? - 101 காரணங்கள்**. இக்கட்டுரைகள் இஸ்லாம் பற்றிய தெளிவு அடைவதற்கு உங்களுக்கு அனேக விவரங்கள் உள்ளன, படிக்க மறவாதீர்கள்.

**பாரா அவர்கள் எழுதியது:**

//முகம்மதுக்கும் மற்ற இறைத்தூதர்களுக்குமான வித்தியாசங்கள் பல. வேதம் அருளப்பட்ட விதத்தால் மட்டுமல்ல. தாம் ஓர் இறைத்தூதர் என்பதை உணர்ந்த வகையிலேயே முகம்மது மிகவும் வித்தியாசமானவர். மற்ற தூதர்கள் அனைவரும் எதிர்பாராத ஒரு கணத்தில் ஆசீர்வதிக்கப்பட்டதன்பேரில் தம்மைத்தாமே இனம் கண்டுகொண்டுவிட்டார்கள். முகம்மது மட்டும், வருடக்கணக்கில் போராடி, உள்ளும் புறமும் ஏராளமான வேதனைகளை அனுபவித்து, ஆன்மிகச் சாதனை முயற்சிகளின் விளைவாக எத்தனையோ உடல் மற்றும் மன உபாதைகளை அனுபவித்து, போராடிப் போராடி, இறுதியில்தான் தாம் "அனுப்பப்பட்டிருப்பதன்" காரணத்தைக் கண்டறிந்தார்.//

நீங்கள் ஒரு முக்கியமான விஷயத்தை சொல்லி இருக்கிறீர்கள். மற்ற தீர்க்கதரிசிகள் ஒருவகையாக தெரிவு செய்யப்பட்டார்கள், முஹம்மது மட்டும் வேறு வகையில் தெரிவு செய்யப்பட்டார் என்று நீங்கள் கண்டுபிடித்தது உண்மை தான்.

### முஹம்மதுவிற்கு பிசாசு பிடித்ததா?

பைபிளில் காணப்படும் தீர்க்கதரிசிகளை கவனியுங்கள். அவர்கள் முதலாவது தேவனை சந்தித்த போது (அ) தேவ தூதரை சந்தித்தபோது, அவர்கள் பயப்பட்டார்கள். ஏனென்றால், கண்ணுக்கு யாரும் தெரியாத போது திடீரென்று ஒரு பெரிய சத்தம் கேட்கப்பட்டாலோ, ஒரு அற்புதத்தைக் கண்டாலோ (மோசே எரியும் புதரை பார்த்ததுபோல), மனிதர்களுக்கு முதலாவது பயமுண்டாகும். மேலும் சிலர் தேவனுடைய மகிமையை கண்ட போது செத்தவர்களை போல பயந்து முகங்குப்புற விழுந்துவிட்டார்கள். ஆனால், தேவன் தன்னை அறிமுகம் செய்துவிட்ட பிறகு, உடனே அவர்கள் தெளிவு அடைந்துவிட்டார்கள். அவர்கள் தொடர்ந்து குழப்பத்தில்

இருக்க தேவன் அனுமதிக்கவில்லை. இதனால் அவர்கள் பிசாசு பிடித்தவர்கள் போல நடந்துக்கொள்ளவில்லை. இப்படித் தான் எல்லா நபிகளும் தேவனை சந்தித்தபோது முதலாவது பயந்து, உடனே தெளிவடைந்தார்கள். தற்கொலைக்கு நேராக தேவன் அவர்களை நடத்தவில்லை, அவர்கள் குழப்பத்திலேயே பல நாட்கள்/மாதங்கள் மனச்சோர்வோடு வாழும் படி தேவன் விடவில்லை.

ஆனால், முஹம்மது முதலாவது காபிரியேல் தூதனை சந்தித்த போது என்ன நடந்தது? பாரா அவர்களே, நீங்களை அதனை விளக்கியுள்ளீர்கள். முஹம்மதுவை கட்டிப்பிடித்து, அவரை ஆட்டி குளுக்கி ஒரு வழி செய்துவிட்டார். முஹம்மது தனக்கு பேய் பிடித்துவிட்டது என்று நினைக்கும் அளவிற்கு அந்த சந்திப்பு இருந்தது? அதன் பிறகு, அவரின் மனைவி கதிஜா அவர்களும், வராகா என்பவரும் முஹம்மதுவை கொஞ்சம் தேற்றினார்கள். ஆனாலும், பல மாதங்கள் (2 ஆண்டுகளுக்கு மேலாக) முஹம்மது குழப்பத்தில் இருந்தார், இதனால் தற்கொலை முயற்சிகளையும் செய்தார். இப்படியெல்லாம் பைபிளின் நபிகளுக்கு நேரிடவில்லை. முஹம்மதுவிற்கு நடந்தவைகளை பார்க்கும் போது ஒரு பிசாசு பிடித்தவன் போலவே நடந்துக்கொண்டார். தற்கொலை முயற்சி செய்யும் அளவிற்கு மன அழுத்தத்தை, மன நோயை ஒருபோதும் தன் நபிகளுக்கு தேவன் கொடுக்கமாட்டார். ஆனால், முஹம்மதுவின் வாழ்வில் இது நடந்தது. கிறிஸ்தவர்களும், யுதர்களும் முஹம்மதுவை ஒரு நபி என்று நம்பாமல் இருப்பதற்கு இதுவும் ஒரு காரணமாகும். பிசாசு பிடித்தவர்கள் எப்படி நடந்துக்கொள்வார்கள் என்பதை அறிய படிக்கவும்: மத்தேயு 8:30-33, 17:14-18.

**இதைப் பற்றி மேலும் அறிய கீழ்கண்ட ஆய்வுக் கட்டுரைகளை படிக்கவும்:**

1. முஹம்மது தற்கொலை முயற்சி செய்தாரா?
2. "முஹம்மதுவின் வாழ்க்கை வரலாறு" கருத்தரங்கு - பாகம் 2
3. Muhammad’s Condition in light of the Biblical Description of Demonic Possession
4. MUHAMMAD'S SUICIDE ATTEMPTS
5. Muhammad and the Arab Criteria of Demon Possession
6. Examining Some More Evidence for Muhammad Being Deceived -
7. MUHAMMAD AND THE DEMONS

**பாரா அவர்கள் எழுதியது:**

*//இந்த ஆன்மிகக் காரணங்கள் மட்டுமல்ல; மற்ற இறைத்தூதர்கள் அனைவரும் ஆன்மிகவாதிகளாக மட்டுமே அடையாளம் காணப்பட்ட நிலையில், முகம்மது ஒருவர்தாம் மக்கள் தலைவராகவும், மத்திய ஆசியாவின் தன்னிகரற்ற அரசியல் வடிவமைப்பாளராகவும் இருந்திருக்கிறார். //*

இன்னொரு திருத்தம் பாரா அவர்களே. எல்லா நபிகளும் வெறும் ஆன்மிக தலைவர்களாகவே இருந்தார்கள், முஹம்மது மட்டும் ஆன்மீக தலைவராகவும், மக்கள் (நாட்டு) தலைவராகவும் இருந்தார்கள் என்று எழுதி இன்னொரு தவறை உங்கள் பாக்கெட்டில் போட்டுக்கொண்டுள்ளீர்கள். முஸ்லிம்கள் சொன்னதை அப்படியே கிளிப் பிள்ளைப்போல எழுதியிருக்கிறீர்கள்.

**உங்கள் இஸ்லாமிய நண்பர்களிடம் கீழ்கண்ட கேள்விகளை கேட்டுப்பாருங்கள்:**

**1) மோசே வெறும் ஆன்மீகத் தலைவரா** அல்லது மக்கள் தலைவரா? பல இலட்ச மக்களை எகிப்திலிருந்து விடுதலை செய்வித்து, 40 ஆண்டுகள் அவர்களை வழி நடத்தி வந்த மக்கள் தலைவர் அவர். அவர்களுக்கு ஆன்மீக சட்டங்களையும், நாட்டுக்கு தேவையான சட்டங்களையும் கொடுத்தவர். அவருக்கு பிறகு யோசுவா

கூட மக்கள் தலைவராக இருந்தார். யூதர்களுக்கு ஒவ்வொரு வம்சத்திற்கு தேவையான இடங்களை ஒதுக்கிக்கொடுத்தவர்.

**2) தாவீது வெறும் ஆன்மீகத்தை மட்டும்** போதித்த நபியா அல்லது அதோடுகூட ஒரு நாட்டையும் ஆண்டு, போர்கள்புரிந்த மக்கள் தலைவாரா?

**3) தாவீதின் குமாரன் சாலொமோன் யார்?** வெறும் ஆன்மீகமா? அவர் மக்கள் தலைவராகவும் இருந்து நாட்டை ஆளவில்லையா?

இன்னும் பழைய ஏற்பாட்டில் அனேக நியாயாதிபதிகள் இருந்தார்கள், மேலும் சாமுவேல் போன்ற தீர்க்கதரிசிகளும் இருந்தார்கள், இவர்கள் ஆன்மீகவாதிகளாகவும், மக்கள் தலைவர்களாகவும் இருந்தார்கள்.

பாரா அவர்களே, உங்கள் வரிகளை முஸ்லிம்களே ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்பது தான் கசப்பான உண்மை. ஆனால், அதே முஸ்லிம்கள் சொன்னதைத்தான் நீங்கள் எழுதி இப்படி மாட்டிக்கொண்டீர்கள் என்பது இன்னொரு கசப்பான உண்மை. (இப்படி எடக்கு மடக்கா இஸ்லாம் பற்றிய விவரங்கள் இருந்தால், பாரா போன்ற எழுத்தாளர்களால் என்ன செய்யமுடியும்?)

**முடிவுரை:** நீங்கள் தொடர்களை எழுதும் போது கொஞ்சம் கவனம் செலுத்தி இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். இஸ்லாமோடு கூட, யூத கிறிஸ்தவ புத்தகங்களையும் படித்து இருந்திருக்கலாம். உங்கள் தொடர்களுக்கு உதவிய புத்தக பட்டியலைக் கண்டேன், அதில் முதலாவது புத்தகமாக “1. பரிசுத்த வேதாகமம் (பைபிள் சொஸைடி ஆஃப் இந்தியா வெளியீடு)” என்று எழுதியிருக்கிறீர்கள். இப்படி தொடரின் கடைசி பக்கத்தில், முதலாவதாக ”பைபிள்” என்று எழுதி என்ன பயன் சொல்லுங்கள்? அதனை நீங்கள் படிக்கவில்லையே! இப்படி இருக்க எப்படி தவறு இல்லாமல் உங்களால் எழுதமுடியும். பானையில் இருந்தால் தானே அகப்பையில் வரும். ”இல்லை..இல்லை பானையில் இருந்தபடியினால் தானே நான் அகப்பையில் எடுத்து எழுதினேன் என்று சொல்வீர்களானால்”, ஆனால் பானையில் குர்-ஆனின் ஞானம் அல்லாவோ இருந்தது, அகப்பையில் அது தானே வரும், அதைத் தானே நீங்கள் எழுதமுடியும்! முட்செடிகளில் அத்திப்பழங்களை தேடினால் கிடைக்குமா?

உங்களை அடுத்த பதிவில் சந்திக்கிறேன்.

**அடிக்குறிப்புக்கள்:**

[1] https://en.wikipedia.org/wiki/Prophets_in_Judaism

[2] https://en.wikipedia.org/wiki/Prophets_and_messengers_in_Islam

---

2016 ரமளான் - நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்திற்கு பதில்கள்

**உமரின் இதர ரமளான் தொடர் கட்டுரைகள்**

**உமரின் கட்டுரைகள்/மறுப்புக்கள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/2016ramalan/2016_paragavan10.html

# 43. நிலமெல்லாம் இரத்தம் (16) – புராணக்கதையின் குகைவாசிகளும் அல்லாஹ்வும்

(நிலமெல்லாம் இரத்தத்திற்கு கொடுத்த முந்தைய பதில்களை **இங்கு** படிக்கவும்)

**மதிப்பிற்குரிய பாரா அவர்களுக்கு,**

உங்களுடைய நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்தின் 15 மற்றும் 16வது அத்தியாயத்தில், முஹம்மதுவின் நபித்துவத்தை சோதிப்பதற்காக குறைஷிகள் கேட்ட மூன்று கேள்விகள் பற்றி எழுதியுள்ளீர்கள். அவைகள் பற்றிய அறிமுகத்தை என் முந்தைய இரண்டு கட்டுரைகளில் (14, 15) எழுதியிருந்தேன்.

இந்த கட்டுரையில், அல்லாஹ் கொடுத்த பதில்கள் எப்படி குர்-ஆனின் நம்பகத்தன்மையை கெடுத்துப்போடுகின்றது என்பதை சுருக்கமாக காண்போம்.

**முதல் கேள்வி பற்றி பாரா அவர்கள் எழுதியது:**

ஆதிகாலத்தில் தமது சமூகத்தினரை விட்டுத் தனியே பிரிந்துபோன இளைஞர்கள் யார்? அவர்களின் பின்னணி என்ன? . . .மேலோட்டமாகப் பார்த்தால் முதல் இரு வினாக்களும் வெறும் சொற்களால் இட்டு நிரப்பப்பட்டவை போலத் தெரிகிறதல்லவா? உள்ளர்த்தங்கள் ஏதுமின்றி, வெறுமனே வம்புக்குக் கேட்கப்பட்டதுபோல! உண்மையில் யூத மதகுருமார்களுக்கு வம்பு நோக்கம் ஏதுமில்லை. அர்த்தங்கள் பொருந்திய இந்த வினாக்களுக்கான விடைகளை அவர்கள் நிச்சயம் அறிவார்கள்.

. . .

அதன்பிறகு யூத ரபிக்கள் எழுப்பிய மூன்று வினாக்களுக்கும் விடைகள் வெளிவந்தன.முதலாவது, தமது சமூகத்தினரை விட்டுத் தனியே பிரிந்துபோன இளைஞர்களின் கதை. மத்திய ஆசியாவின் பிரசித்திபெற்ற புராணக் கதைகளுள் ஒன்று இது.அவர்கள் "இபேஸஸ் நித்திரையாளர்கள்" என்று அழைக்கப்பட்டவர்கள். கி.பி. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள். அந்தக் காலத்திலேயே உருவமற்ற ஒரே பரம்பொருளை வணங்கிவந்த அந்த இளைஞர்களுக்கு, அவர்களது சமூகத்தினராலேயே பெரும் பிரச்னை உண்டானது. உலகமே சிலை வழிபாட்டில் மூழ்கியிருக்க, இவர்கள் மட்டும் ஒரே இறைவன், உருவமற்ற இறைவன் என்று சொல்வதைப் பொறுக்காத மக்கள், அவர்களுக்குப் பல சங்கடங்களை விளைவிக்கத் தொடங்கினார்கள்.ஆகவே, தமது மக்களை விட்டு விலகி அவர்கள் ஒரு மலைக் குகைக்குள் சென்று வசிக்கத் தொடங்கினார்கள். (மொத்தம் எத்தனைபேர் என்று தெரியவில்லை.) அவர்களை அஸ்ஹாபுல்கஹ்ஃப் (குகைத் தோழர்கள் என்று அர்த்தம்) என்று அழைப்பார்கள். குகைக்குள்ளே போனவர்கள், தம்மை மறந்து உறங்கவும்

ஆரம்பித்தார்கள். (குகைக்குள் சென்றவர்களை இறைவனே காதுகளைத் தட்டிக்கொடுத்து உறங்கச் செய்ததாக குர்ஆன் கூறுகிறது. ஆதாரம்: அல் கஹ்ஃப் 18:11) சுமார் முந்நூறு வருட உறக்கம்! பிறகு அவர்களது கண்விழிப்பை, அறியாமையில் மூழ்கிக் கிடந்த மக்களின் விழிப்புணர்வுக்கு உருவகமாக வைத்து நிறைவடையும் கதை அது.

**பாராவின் படி குர்-ஆனில் புராணக்கதை (கட்டுக்கதை) உள்ளது:**

பாரா அவர்களே, உங்களின் கீழ்கண்ட வரிகள் என் வேலையை சுலபமாக்கிவிட்டது:

- யூதர்கள் கேட்ட அந்த வினாக்களுக்கு விடை அவர்களுக்கு தெரிந்திருந்தது.
- மத்திய ஆசியாவின் பிரசித்திபெற்ற புராணக் கதைகளுள் ஒன்று இது.
- அவர்கள் "இபேஸஸ் நித்திரையாளர்கள்" என்று அழைக்கப்பட்டவர்கள். கி.பி. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள்.
- துன்புறுத்தல்களுக்கு பயந்து குகையில் பதுங்கியவர்கள் 300 ஆண்டுகளுக்கு மேல் தூங்கினார்கள்.

நீங்கள் இந்த கதை ஒரு புராணக்கதை என்று சுட்டிக்காட்டியுள்ளீர்கள். ஒரு கட்டுக்கதையை உண்மையான சரித்திர நிகழ்ச்சியாக குர்-ஆன் சொல்லியுள்ளதை மறைமுகமாக நீங்கள் சுட்டிக்காட்டியுள்ளீர்கள். இதிலிருந்து குர்-ஆன் ஒரு இறைவேதமல்ல என்பதை சொல்லிவிட்டீர்கள்.

குர்-ஆனில் காணப்படும் அனேக கட்டுக்கதைகளில் 'இந்த குகைவாசிகள்' பற்றிய கதையும் ஒன்று.

இந்த நிகழ்ச்சிப் பற்றி குர்-ஆன் 18:9-22, 25-26ல் சொல்லப்பட்டுள்ளது. இந்த வசனங்களை அடிக்குறிப்பு [1]ல் கொடுத்துள்ளேன். இப்போது இந்த கதை குர்-ஆனில் இருப்பதினால் அல்லாஹ்விற்கு உண்டாகும் பிரச்சனைகள் என்னவென்பதை சுருக்கமாக காண்போம்:

## 1) குகையில் ஒதுங்கியவர்கள் எத்தனைப் பேர் என்று அல்லாஹ்விற்கு தெரியவில்லை

ஒரு கட்டுக்கதையை உண்மையான சரித்திரம் என்று அல்லாஹ் பதிவு செய்து இருப்பது குர்-ஆனின் நம்பகத்தன்மையை சிதைக்கும் முதலாவது துப்பாகும். இரண்டாவதாக, அந்த குகையில் ஒதுங்கியவர்கள் எத்தனைப்பேர் என்று அல்லாஹ் சொல்லாமல் விட்டது, குர்-ஆன் மீதான சந்தேகத்தை உறுதிப்படுத்துகிறது. குர்-ஆன் 18:22ம் வசனத்தில் அல்லாஹ் குழப்பும் விதத்தை பாருங்கள்:

18:22. (அவர்கள்) மூன்று பேர் தாம்; அவர்களில் நான்காவது அவர்களுடைய நாய் என்று (சிலர்) கூறுகின்றனர், (இல்லை) அவர்கள் ஐந்து பேர் தாம்; - அவர்களில் ஆறாவது அவர்களுடைய நாய்" என்று மறைவானதை ஊகம் செய்து (சிலர்) கூறுகிறார்கள்; இன்னும் (சிலர்) "ஏழுபேர் - அவர்களில் எட்டாவது அவர்களுடைய நாய்" என்று சொல்கிறார்கள் – (நபியே!) அவர்களுடைய எண்ணிக்கையை என்னுடைய இறைவன் தான் நன்கறிவான்; சிலரைத் தவிர, மற்றெவரும் அவர்களைப் பற்றி அறிய மாட்டார்கள்" என்று கூறுவீராக! ஆகவே, அவர்களைப் பற்றி வெளிரங்கமான விஷயம் தவிர (வேறெது பற்றியும்) நீர் தர்க்கம் செய்ய வேண்டாம்; இன்னும் அவர்களைக் குறித்து இவர்களில் எவரிடமும் நீர் தீர்ப்புக் கேட்கவும் வேண்டாம்.

அந்த குகையில் ஒதுங்கியவர்கள் எத்தனைப் பேர்? என்ற கேள்விக்கு அல்லாஹ் தரும் பதில் இது தான் (இது பதிலா!?). சிலர் மூன்று பேர் என்றுச் சொல்கிறார்களாம், சிலர் ஐந்து பேர் என்றுச் சொல்கிறார்களாம், வேறு

சிலர் ஏழு பேர் என்றுச் சொல்கிறார்களாம். கடைசி வரையிலும், எத்தனைப்பேர் என்று அல்லாஹ் கூட சொல்லவே இல்லை!

இதனை, பாரா அவர்கள் சரியாக சுட்டிக்காட்டினார், அதாவது இந்த கதை ஒரு புராணக்கதையாகும் அதாவது கட்டுக்கதையாகும். வாய்வழியாக கதைகள் உலாவும் போது, இப்படி ஒவ்வொரு இடத்திலும் வெவ்வேறான எண்ணிக்கைத் தான் வெளிப்படும்.

அல்லாஹ் இந்த கதையை சரித்திரக்கதை என்றுச் சொல்வதாக இருந்தால், ஏன் அவர் எண்ணிக்கையை சரியாகச் சொல்லவில்லை? மேலும், அந்த வசனத்தில் அல்லாஹ்வோடு சேர்த்து, இன்னும் சிலருக்குத் தான் அந்த எண்ணிக்கைத் தெரியும் என்று அல்லாஹ் சுட்டிக்காட்டுகின்றான். ஆனால், அது என்ன எண்ணிக்கை என்று சொல்ல மறுத்துவிட்டான். அல்லாஹ்வின் இந்த அரைகுறையான பதில், கேட்ட கேள்விக்கு எப்படி சரியான பதிலாக அமையும்?

//(நபியே!) அவர்களுடைய எண்ணிக்கையை என்னுடைய இறைவன் தான் நன்கறிவான்; சிலரைத் தவிர, மற்றெவரும் அவர்களைப் பற்றி அறிய மாட்டார்கள்" என்று கூறுவீராக!//

அல்லாஹ் சொன்ன இதே பதிலைத் தான், அக்கால பாமர மக்கள் கூட வாய்வழியாக கேட்டு அறிந்து வைத்திருப்பார்கள். முஹம்மதுவைப் போன்ற ஒரு வியாபாரியிடம் சென்று, 'நீ பல நாடுகளுக்குச் சென்று வியாபாரம் செய்து இருக்கிறாய். குகையில் ஒதுங்கிய அந்த வாலிபர்கள் பற்றிய கதையை நீ கேட்டு இருந்திருந்தால் அதைப் பற்றி சிறிது விளக்கமுடியுமா? என்று கேட்கும் போது, அவர் அல்லாஹ் சொன்னது போலத்தான் பதில் சொல்வார், 'சிலர் குகையில் ஒதுங்கியது 3 பேர் என்கிறார்கள், சிலர் 5 அல்லது 7 என்று சொல்பவர்கள் உண்டு, ஆனால், உண்மையான எண்ணிக்கை எனக்குத் தெரியாது என்றுச் சொல்வார்'.

இப்படிப்பட்ட அரைகுறை பதிலைச் சொன்ன அல்லாஹ் எப்படி சர்வ ஞானியாக இருக்கமுடியும்?

ஏதோ தவறான எண்ணிக்கையைச் சொல்லி ஏன் வீணாக மாட்டிக்கொள்ளவேண்டும்? எனவே, சிலர் இப்படிச் சொல்கிறார்கள்! சிலர் அப்படிச் சொல்கிறார்கள்! என்று சொல்லிவிட்டு எண்ணிக்கையைச் சொல்லாமல் அமைதியாக இருந்துவிட்டால் தப்பித்துக்கொள்ளலாம் என்ற தோரணையில் பதிலை கொடுத்துள்ளார் அல்லாஹ். இந்த தவறை சரியாக புரிந்துக்கொண்ட பாரா அவர்கள் கூட, கழுவுற மீனில் நழுவுற மீன் போல, நாஜூக்காக அடைப்பிற்குள் அல்லாஹ்வின் மானத்தை காப்பாற்ற முயன்றுள்ளார். பாரா அவர்களின் அந்த வரிகளை கீழே படியுங்கள்:

// ஆகவே, தமது மக்களை விட்டு விலகி அவர்கள் ஒரு மலைக் குகைக்குள் சென்று வசிக்கத் தொடங்கினார்கள். (மொத்தம் எத்தனைபேர் என்று தெரியவில்லை.) அவர்களை அஸ்ஹாபுல்கஹ்ஃப் (குகைத் தோழர்கள் என்று அர்த்தம்) என்று அழைப்பார்கள்.//

அடைப்பிற்குள் "**(மொத்தம் எத்தனைபேர் என்று தெரியவில்லை.)**" என்று எழுதிய பாரா அவர்கள் "யாருக்கு தெரியவில்லை?" என்று தெளிவாகச் சொல்லவில்லை. பாரா அவர்களுக்கு அந்த எண்ணிக்கை தெரியாது என்று எடுத்துக்கொள்வதா? அல்லது அல்லாஹ்விற்கே அதன் பதில் தெரியவில்லை என்று எடுத்துக்கொள்வதா?

முடிவாக, குகை தோழர்கள் பற்றிய குர்-ஆனின் விவரங்களை படிக்கும் போது, சரியான பதில் தெரியாமல் பல நாட்கள் தவித்த முஹம்மது, கடைசியாக இட்டுக்கட்டிய வசனங்கள் தான் இவைகள் என்பதை

புரிந்துக்கொள்ளலாம். இதனை மறுப்பவர்கள், அந்த காலத்தில், வேறு யாருக்கும் தெரியாத ஒரு புதிய விவரம் இந்த வசனங்களில் என்ன இருக்கிறது? என்பதை சுட்டிக்காட்டட்டும்.

## 2) "இபேஸஸ் நித்திரையாளர்கள்"(Seven Sleepers of Ephesus):

குகை வாசிகள் பற்றிய விவரம், புகழ் பெற்ற புராணக்கதையாகும், முஹம்மதுவிற்கு வானத்திலிருந்து இறங்கிய அல்லாஹ்விற்கு மட்டும் தெரிந்த விவரமல்ல. பாரா அவர்களின் வரிகளை பாருங்கள்:

அ) யூதர்கள் கேட்ட அந்த வினாக்களுக்கு விடை அவர்களுக்கு (மதினா யூதர்களுக்கு) தெரிந்திருந்தது.

ஆ) மத்திய ஆசியாவின் பிரசித்திபெற்ற புராணக் கதைகளுள் ஒன்று இது.

இ) அவர்கள் "இபேஸஸ் நித்திரையாளர்கள்" என்று அழைக்கப்பட்டவர்கள். கி.பி. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள்.

யூதர்கள் ஒரு "பொதுஅறிவுக்" கேள்வியைத்தான் முஹம்மதுவிடம் கேட்கச் சொல்லியுள்ளார்கள். அதுவும், யூதர்கள் எதிரிகளாக கருதும் கிறிஸ்தவர்கள் பற்றிய புராணக்கதையைப் பற்றி கேட்கச்சொல்லியுள்ளார்கள். இந்த கதைக்கும் யூதர்களுக்கும் எந்த ஒரு சம்மந்தமுமில்லை. முஹம்மதுவின் காலத்தில் பாமர மக்கள் முதல், படித்தவர்கள் வரை பெரும்பான்மையானவர்களின் வாயில் உலாவிய கதையை முஹம்மது அரைகுறையாக அறிந்திருப்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. ஆனால், பாரா போன்றவர்கள் தான், ஒன்றுமில்லாதவற்றை பிடித்துக்கொண்டு, 'இந்த பதிலின் மூலமாக முஹம்மதுவின் நபித்துவம் நிருபிக்கப்பட்டது' என்று தம் தொடர் கட்டுரையில் எழுதுகிறார்கள் (பாரா அவர்கள் என்ன செய்யமுடியும்! முஸ்லிம்கள் சொன்னதைத் தானே அவரும் எழுதமுடியும்!).

இதைப் பற்றிய பொதுவான விவரங்களை அறிய இந்த தொடுப்பை சொடுக்கவும்: https://en.wikipedia.org/wiki/Seven_Sleepers

### முடிவுரை:

ஒரு கட்டுக்கதையை அல்லாஹ் குர்-ஆனில் புகுத்தியுள்ளான், மேலும் அவன் கொடுத்த பதில் கூட அரைகுறையானதாக இருக்கிறது. குகையில் பதுங்கியவர்களின் எண்ணிக்கை எனக்குத் தெரியும் என்று அல்லாஹ் சொல்கிறான், ஆனால் உண்மையான எண்ணிக்கை என்னவென்று அல்லாஹ் கடைசி வரை சொல்லவில்லை. இதிலிருந்து என்ன தெரிகிறது? குகை பற்றிய வசனங்கள் முஹம்மதுவின் சொந்த சரக்கு ஆகும், அவைகள் சொர்க்கத்திலிருந்து இறங்கிய சரக்கு அல்ல. முஹம்மது இந்த பதிலை அளித்தால், நிச்சயமாக மக்கள், "தூங்கியவர்கள் எத்தனை பேர்?" என்று கேட்பார்கள், அப்போது நீ அவர்களோடு அதிகமாக தர்க்கம் செய்யவேண்டாம் என்று அல்லாஹ் முஹம்மதுவிற்கு கட்டளையிடுகின்றான்.

(நபியே!) அவர்களுடைய எண்ணிக்கையை என்னுடைய இறைவன் தான் நன்கறிவான்; சிலரைத் தவிர, மற்றெவரும் அவர்களைப் பற்றி அறிய மாட்டார்கள்" என்று கூறுவீராக! ஆகவே, அவர்களைப் பற்றி வெளிரங்கமான விஷயம் தவிர (வேறெது பற்றியும்) நீர் தர்க்கம் செய்ய வேண்டாம்; இன்னும் அவர்களைக் குறித்து இவர்களில் எவரிடமும் நீர் தீர்ப்புக் கேட்கவும் வேண்டாம்.

சர்வத்தையும் அறிந்த ஞானியாக அல்லாஹ் இருந்திருந்தால், தூங்கியவர்களின் சரியான எண்ணிக்கையை சொல்லியிருக்கலாம் அல்லவா? மற்றவர்கள் சொல்வதெல்லாம் பொய்யாகும், "நான் சொல்லும் எண்ணிக்கைத் தான் சரியானது" என்று சொல்லியிருக்கலாம். ஆனால், அவன் சொல்லவில்லை, ஏனென்றால், முஹம்மதுவிற்கு சரியான எண்ணிக்கை தெரியாது, எனவே, அல்லாஹ்வினால் சொல்லமுடியவில்லை.

இந்த அரைகுறை விவரத்திற்கு சில இஸ்லாமிய அறிஞர்கள் "எண்ணிக்கை முக்கியமல்ல, அந்த கதையிலிருந்து கற்றுக்கொள்ளும் பாடம் தான் முக்கியம், அதற்காகத் தான் அல்லாஹ் எண்ணிக்கையைச் சொல்லவில்லை" என்று ஒரு சப்பைக் கட்டுக் கட்டுவார்கள். அல்லாஹ் இப்படி அரைகுறை விவரம் சொன்னால் அது எப்படி முழுமையான பதிலாக அமையும்? இதிலிருந்து முஹம்மதுவின் நபித்துவம் எப்படி நிருபிக்கப்படும்?

அடுத்த கட்டுரையில், மீதமுள்ள இரண்டு பதில்களைப் பற்றி காண்போம்.

**அடிக்குறிப்புக்கள்:**

**[1] குர்-ஆன் 18:9-22, 25-26 (முஹம்மது ஜான் தமிழாக்கம்)**

18:9. (அஸ்ஹாபுல் கஹ்ஃபு என்ற குகையிலிருந்தோரைப் பற்றி) அந்த குகையிலிருந்தோரும், சாஸனத்தையுடையோரும் நம்முடைய ஆச்சரியமான அத்தாட்சிகளில் நின்றும் உள்ளவர்கள் என எண்ணுகிறீரோ?

18:10. அந்த இளைஞர்கள் குகையினுள் தஞ்சம் புகுந்த போது அவர்கள் "எங்கள் இறைவா! நீ உன்னிடமிருந்து எங்களுக்கு ரஹ்மத்தை அருள்வாயாக! இன்னும் நீ எங்களுக்கு எங்கள் காரியத்தை(ப் பலனுள்ள தாக)ச் சீர்திருத்தித் தருவாயாக!" என்று கூறினார்கள்.

18:11. ஆகவே நாம் அவர்களை எண்ணப்பட்ட பல ஆண்டுகள் வரை அக்குகையில் (தூங்குமாறு) அவர்களுடைய காதுகளின் மீது (திரையிட்டுத்) தடையேற்படுத்தினோம்.

18:12. பின்பு, (அக்குகையில் தங்கியிருந்த) இருபிரிவினர்களில் எப்பிரிவினர், தாங்கள் (குகையில்) தங்கியிருந்த கால அளவை நன்கு அறிந்திருந்தார்கள் என்பதைச் சோதிப்பதற்காக அவர்களை நாம் எழுப்பினோம்.

18:13. (நபியே!) நாம் உமக்கு அவர்களுடைய வரலாற்றை உண்மையைக் கொண்டு அறிவிக்கிறோம்; நிச்சயமாக அவர்கள் இளைஞர்கள் - தங்கள் இறைவன் மீது ஈமான் கொண்டார்கள்; இன்னும் நாம் அவர்களை நேர் வழியில் அதிகப்படுத்தினோம்.

18:14. அவர்கள் (கொடுமைக்கார அரசன் முன்னிலையில்) எழுந்து நின்று "வானங்களுக்கும், பூமிக்கும் இறைவனாகிய அவனே, எங்களுடைய இறைவன்; எக்காலத்தும் அவனையன்றி வேறு எவரையும் நாயனென்று அழைக்க மாட்டோம்; (அப்படிச் செய்தால் குஃப்ரில் கொண்டு சேர்க்கும்) - வரம்பு மீறியதைச் சொன்னவர்கள் ஆவோம்" என்று அவர்கள் உறுதியாகக் கூறிய நிலையில் அவர்கள் இதயங்களை நாம் வலுப்படுத்தினோம்.

18:15. எங்கள் சமூகத்தாராகிய அவர்கள் அவனையன்றி வேறு நாயனை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்; அவர்கள் அவற்றின் மீது தெளிவான அத்தாட்சியைக் கொண்டு வரவேண்டாமா? ஆகவே அல்லாஹ்வின் மீது பொய்யாக இட்டுக் கட்டுபவனை விட அநியாயக்காரன் யார்? (என்றும் கூறினார்கள்).

18:16. அவர்களையும், அவர்கள் வணங்கும் அல்லாஹ் அல்லாதவற்றையும் விட்டு விலகி நீங்கள், குகையின்பால் ஒதுங்கிக் கொள்ளுங்கள், உங்களுடைய இறைவன் தன்னுடைய ரஹ்மத்திலிருந்து உங்களுக்கு விசாலமாகக் கொடுத்து, உங்கள் காரியத்தில் உணவு பிரச்சனையை உங்களுக்கு எளிதாக்கித் தருவான் (என்று அவர்களில் ஓர் இளைஞர் சொன்னார்).

18:17. சூரியன் உதயமாகும் போது (அவர்கள் மீது படாமல்) அது அவர்களுடைய குகையின் வலப்புறம் சாய்வதையும், அது அஸ்தமிக்கும் போது அது அவர்களுடைய இடப்புறம் செல்வதையும் நீர் பார்ப்பீர்; அவர்கள் அதில் ஒரு விசாலமான இடத்தில் இருக்கின்றனர் - இது அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ளதாகும், எவரை அல்லாஹ் நேர்வழியில் செலுத்துகிறானோ, அவரே நேர் வழிப்பட்டவராவார்; இன்னும், எவனை அவன் வழிகேட்டில் விடுகிறானோ, அவனுக்கு நேர் வழிகாட்டும் உதவியாளர் எவரையும் நீர் காணவே மாட்டீர்.

18:18. மேலும், அவர்கள் தூங்கிக் கொண்டிருந்தபோதிலும், நீர் அவர்களை விழித்துக் கொண்டிருப்பவர்களாகவே எண்ணுவீர்; அவர்களை நாம் வலப்புறமும் இடப்புறமுமாக புரட்டுகிறோம்; தவிர, அவர்களுடைய நாய் தன் இரு முன்னங்கால்களையும் வாசற்படியில் விரித்(துப் படுத்)திருக்கிறது; அவர்களை நீர் உற்றுப்பார்த்தால், அவர்களை விட்டும் வெருண்டு ஓடிப் பின்வாங்குவீர்; அவர்களில் நின்றும் உண்டாகும் பயத்தைக் கொண்டு நிரம்பிவிடுவீர்,

18:19. இன்னும் அவர்களிடையே ஒருவரையொருவர் கேட்டுக் கொள்வதற்காக நாம் அவர்களை இவ்வாறு எழுப்பினோம்; அவர்களிலிருந்து சொல்பவர் (ஒருவர்) "நீங்கள் எவ்வளவு நேரம் (நித்திரையில்) இருந்தீர்கள்?" எனக் கேட்டார்; "ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறிது பாகம் தங்கியிருந்தோம்" எனக் கூறினார்கள்; (மற்றவர்கள்) "நீங்கள் (நித்திரையில்) இருந்த காலத்தை உங்கள் இறைவன்தான் நன்கு அறிந்தவன்; ஆகவே, உங்களில் ஒருவரை இந்த வெள்ளிக் காசுடன் பட்டணத்திற்கு அனுப்புங்கள்; அவர்கள் சுத்தமான ஆகாரம் எது என்பதை நன்கு கவனித்து, அதிலிருந்து ஆகாரத்தை உங்களுக்காகக் கொண்டு வரட்டும்; மேலும் அவர் எச்சரிக்கையாக இருக்கட்டும்; உங்களைப் பற்றி எவருக்கும் அவர் அறிவித்து விட வேண்டாம் (என்றனர்).

18:20. ஏனென்றால், நிச்சயமாக அவர்கள் உங்களை அறிந்து கொண்டால், உங்களைக் கல்லாலடித்துக் கொன்றுவிடுவார்கள்; அல்லது தங்களுடைய மார்க்கத்தில் உங்களை மீட்டி விடுவார்கள்; அப்புறம், நீங்கள் ஒருபோதும் வெற்றியடைய மாட்டீர்கள்" (என்றும் கூறினர்).

18:21. இன்னும், நிச்சயமாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது என்றும், நிச்சயமாக கியாம நாளிலும் சந்தேகமில்லை என்றும் அப்பட்டணவாசிகள் அறிந்து கொள்வதற்காகவே, இவ்வாறு அவர்களைப் பற்றிய (விஷயத்)தை வெளியாக்கினோம்; (அப்பட்டணவாசிகளோ) "இவர்கள் யார் என்பதை பற்றி தர்க்கித்துக் கொண்டதை (நபியே! நினைவு கூறும்) "இவர்கள் (இருந்த இடத்தின்) மீது ஒரு கட்டடத்தைக் கட்டுங்கள்; இவர்களை(ப் பற்றி) இறைவனே நன்கறிவான் என்றனர்; இ(வ்விவாதத்)தில் எவர்களுடைய கருத்து மிகைத்ததோ அவர்கள்: "நிச்சயமாக அவர்கள் மீது ஒரு மஸ்ஜிதை அமைப்போம்" என்று கூறினார்கள்.

18:22. (அவர்கள்) மூன்று பேர் தாம்; அவர்களில் நான்காவது அவர்களுடைய நாய் என்று (சிலர்) கூறுகின்றனர்(இல்லை) அவர்கள் ஐந்து பேர் தாம்; - அவர்களில் ஆறாவது அவர்களுடைய நாய்" என்று

மறைவானதை ஊகம் செய்து (சிலர்) கூறுகிறார்கள்; இன்னும் (சிலர்) “ஏழுபேர் - அவர்களில் எட்டாவது அவர்களுடைய நாய்” என்று சொல்கிறார்கள் - (நபியே!) அவர்களுடைய எண்ணிக்கையை என்னுடைய இறைவன் தான் நன்கறிவான்; சிலரைத் தவிர, மற்றெவரும் அவர்களைப் பற்றி அறிய மாட்டார்கள்” என்று கூறுவீராக! ஆகவே, அவர்களைப் பற்றி வெளிரங்கமான விஷயம் தவிர (வேறெது பற்றியும்) நீர் தர்க்கம் செய்ய வேண்டாம்; இன்னும் அவர்களைக் குறித்து இவர்களில் எவரிடமும் நீர் தீர்ப்புக் கேட்கவும் வேண்டாம்.

18:25. அவர்கள் தங்கள் குகையில் முன்னூறு வருடங்களுடன் மேலும் ஒன்பது அதிகமாக்கி (முன்னூற்றி ஒன்பது வருடங்கள்) தங்கினார்கள்.

18:26. “அவர்கள் (அதில்) தரிப்பட்டிருந்த (காலத்)தை அல்லாஹ்வே நன்கறிந்தவன்; வானங்களிலும் பூமியிலும் மறைவாய் இருப்பவை அவனுக்கே உரியனவாகும்; அவற்றை அவனே நன்றாக பார்ப்பவன்; தெளிவாய்க் கேட்பவன் - அவனையன்றி அவர்களுக்கு உதவி செய்வோர் எவருமில்லை, அவன் தன்னுடைய அதிகாரத்தில் வேறு எவரையும் கூட்டாக்கிக் கொள்வதுமில்லை” என்று (நபியே!) நீர் கூறும்.

---

**நிலமெல்லாம் இரத்தம் புத்தகத்திற்கு பதில்கள்**

**உமரின் இதர ரமளான் தொடர் கட்டுரைகள்**

**உமரின் கட்டுரைகள்/மறுப்புக்கள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/2016ramalan/2016_paragavan16.html

# 44. சொர்க்கவாசிகளும் (அஷரத்துல் முபஷ்ஷரா) அல்லாஹ்வின் இறையியல் தவறுகளும்

[2015 ரமளான் மாத முந்தைய கடிதங்களை படிக்க **இங்கு சொடுக்கவும்**. ]

இவ்வாண்டு ரமளான் மாதத்தில் கலிஃபாக்களை விமர்சித்து உமர் சில கடிதங்களை தம் தம்பிக்கு எழுதியுள்ளார். இக்கடிதத்தில், உமரின் தம்பி, உமருக்கு ஒரு விஷயத்தை தெளிவுபடுத்துகிறார். அதாவது முஹம்மது பத்து பெயர்களை குறிப்பிட்டு இவர்கள் சொர்க்கத்தில் இருப்பார்கள் என்று நற்செய்தி சொல்லியுள்ளார். அல்லாஹ்வினாலும், முஹம்மதுவினாலும், சொர்க்கவாசிகள் (அஷரத்துல் முபஷ்ஷரா) என்று முன்குறிக்கப்பட்டவர்கள் மீது எந்த குற்றத்தையும் நீங்கள் சாட்டமுடியாது என்று உமரின் தம்பி இக்கடிதத்தில் குறிப்பிடுகிறார். இதற்கு உமர் எழுதிய பதிலையும் இதே கடிதத்தில் காணலாம். இந்த அஷ்ரத்துல் முஹஷ்ஷரா என்ற ஒரு விஷயத்தைச் சுற்றியுள்ள இஸ்லாமிய இறையியல் பிரச்சனைகளை உமர் இக்கடிதத்தில் அலசுகிறார்.]

**அல்லாஹ்வின் சொர்க்கவாசிகள் - அஷரத்துல் முபஷ்ஷரா**

அன்பான உமரண்ணாவிற்கு,

அஸ்ஸலாமு அலைக்கும்.

நீங்கள் கலிஃபாக்களை விமர்சித்து எழுதிய கடிதத்தை படித்தவுடன் ஒரு முக்கியமான விஷயத்தை உங்களோடு பகிர்ந்துக் கொள்ளவேண்டும் என்று விரும்பினேன், ஆனால் மறந்தே போய்விட்டேன். உங்களுடைய நேற்றைய கடிதத்தை படித்தவுடன், அந்த முக்கியமான விஷயம் நினைவுக்கு வந்தது. அதனை உங்களுக்கு இப்போது நான் எழுதுகிறேன், கவனமாக படிக்கவும், இந்த விஷயத்தைப் பற்றி நீங்கள் கொடுக்கப்போகும் பதிலுக்கு முன்பாக நூறு முறை சிந்திக்கவும். இது உங்களுக்கே (கிறிஸ்தவத்திற்கு) தலைவலியாக மாறக்கூடும் என்பதை மனதில் வைத்துக் கொள்ளவும்.

நீங்கள் எங்கள் கலிஃபாக்கள் நால்வரைப் பற்றி தரக்குறைவாக விமர்சிக்க ஆரம்பித்துள்ளீர்கள். அவர்கள் பற்றி மேலும் நீங்கள் எழுதுவதற்கு முன்பாக, அவர்களின் மேன்மையை உங்களுக்கு தெரிவிக்க விரும்புகிறேன்.

**இறைநம்பிக்கையுள்ள ஒவ்வொருவரின் அதிமுக்கியமான ஆசை:**

எந்த இறைவனை நம்புபவனாக இருந்தாலும், அவனுடைய முதல் இலட்சியம், அவன் சொர்க்கம் செல்லவேண்டும் என்பதாகும். இஸ்லாம், கிறிஸ்தவம், இந்துத்துவம் என்று எந்த மார்க்கத்தை எடுத்துக் கொண்டாலும், சொர்க்கம் செல்லவேண்டும் அல்லது முக்தி அடையவேண்டும் என்ற நோக்கத்தை மனதில் வைத்தவர்களாகவே அவர்கள் அனைத்து காரியங்களையும் செய்கிறார்கள். இதனை நீங்களும் அறிந்துள்ளீர்கள்.

எங்கள் இறைத்தூதர் சஹாபாக்களில் பத்து பெயர்களை குறிப்பிட்டு, இவர்கள் சொர்க்கம் செல்வார்கள் என்று நற்செய்தி கூறியுள்ளார். ஒரு மனிதன் உயிரோடு இருக்கும்போது, இப்படிப்பட்ட நற்செய்தியைப் பெறுவது பாக்கியங்களிலெல்லாம் மிகப்பெரிய பாக்கியம். இந்த பத்து பெயர்களில், கீழ்கண்ட நான்கு பெயர்கள் முதலாவது வருகிறது, நீங்கள் கலிஃபாக்களை விமர்சித்தபடியினால், அவர்களை மட்டுமே இங்கு குறிப்பிடுகிறேன்.

1) அபூபக்கர் (ரலி) – முதல் கலிஃபா

2) உமர் (ரலி) – இரண்டாம் கலிஃபா

3) உத்மான் (ரலி) – மூன்றாம் கலிஃபா

4) அலி (ரலி) – நான்காம் கலிஃபா

இவர்களின் மேன்மை எவ்வளவு உயர்ந்துள்ளது என்பதை நீங்கள் கவனத்தில் கொள்ளவேண்டும். மனிதன் உயிரோடு இருக்கும் போதே அவனுக்கு சொர்க்கம் கிடைக்கும் என்று நற்செய்திச் சொல்வதை வேறு எந்த மதத்திலாவது நீங்கள் பார்த்தது உண்டா? குறைந்தபட்சம் கிறிஸ்தவத்திலாவது இதனை நீங்கள் பார்த்து இருக்கிறீர்களா?

இறைத்துதர் முஹம்மதுவிற்கு அடுத்தபடியாக இவர்கள் இஸ்லாமிலே மிகவும் மேன்மையுள்ளவர்கள். இவர்களை அல்லாஹ்விற்கு சமமாக நீங்கள் கருதுங்கள் என்று நான் சொல்லவில்லை, ஆனால், இவர்களின் மேன்மையை எப்படி அல்லாஹ் உயர்த்தியுள்ளான் என்பதை கவனத்தில் கொள்ளவும். எனவே இவர்களைப் பற்றி நீங்கள் எழுதப்போகும் ஒவ்வொரு வரியையும் பல முறை சிந்தித்து எழுதவும்.

**எச்சரிக்கை:** இஸ்லாமிய இறையியலை நீங்கள் தொட்டால், இவ்விஷயத்தைப் பற்றி கிறிஸ்தவ இறையியல் தொடப்படும் என்பதை மனதில் வைக்கவும்.

இந்த கடிதத்தைக் கண்டவுடன், இனி கடிதம் எழுதுவதை நிறுத்திக் கொள்ளவேண்டாம்.

உங்கள் பதிலுக்காக ஆவலாக எதிர்ப்பார்த்துக் கொண்டு இருப்பேன்.

**இப்படிக்கு**

உங்கள் தம்பி

சௌதி அரேபியா

---

**உமரின் பதில் கடிதம்:**

### சொர்க்கவாசிகளும் (அஷரத்துல் முபஷ்ஷரா) அல்லாஹ்வின் இறையியல் தவறுகளும்

அன்புள்ள தம்பிக்கு,

உனக்கு கர்த்தரின் கிருபையும், சாந்தியும் உண்டாவதாக.

உன் உச்சக்கட்ட விசுவாசத்தை உன் கடிதம் பிரதிபலிக்கிறது. இஸ்லாமின் மீது உனக்கு நம்பிக்கை இருக்கலாம், ஆனால் மித மிஞ்சிய நம்பிக்கை இருக்கக்கூடாது.

மணலைக் கொண்டு அனேக நல்ல பயனுள்ள காரியங்களைச் செய்யலாம், ஆனால், மணலின் மீது மாளிகையை எழுப்பக்கூடாது. நீ மணலின் மீது மாளிகையை எழுப்ப முடிவு செய்துள்ளாய், அந்த மாளிகை நிற்காது, சீக்கிரத்தில் தரைமட்டமாகும் என்பதை கவனத்தில் கொள்ளவும்.

பொதுவாக நான் தான் உனக்கு எச்சரிக்கை தருவேன், ஆனால், இந்த முறை நீ என்னை எச்சரித்துள்ளாய். இஸ்லாமிய இறையியலை நான் தொட்டு எழுதினால், கிறிஸ்தவத்தின் இறையியல் உன்னால் ஆய்வு செய்யப்படும் என்ற தோரணையில் நீ எழுதியது, எனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. இது தான் சரியான போட்டி, உனக்கு என் வாழ்த்துக்கள். உன் இஸ்லாமிய இறையியலின் இரண்டு கண்களிலும் என் விரல்களை விட்டு, ஆட்டோ ஆட்டு என்று ஆட்டாமல் நான் விடப்போவதில்லை. கிறிஸ்தவத்தின் இறையியலை தட்டிப்பார்க்கவும், தொட்டுப்பார்க்கவும், தழுவிப்பார்க்கவும் உன்னை அன்புடன் வரவேற்கிறேன். நீ எதைச் செய்தாலும், கிறிஸ்தவர்கள் உன்னை தட்டிவிடமாட்டார்கள், தைரியமாக நீ ஆய்வு செய்யலாம்.

முதலில், சொர்க்கவாசிகள் பற்றிய உன் கேள்விகளுக்கு விடையை கொடுத்துவிட்டு, அதன் பிறகு "முதல் கலிஃபா மற்றும் சொர்க்கவாசி அபூ பக்கர் அவர்களின் ஆட்சி பற்றி" ஆய்வு செய்வோம்.

**உபதலைப்புக்கள்**

1. **சொர்க்கவாசிகள் பத்து பேர் - ஹதீஸ்களின் சாட்சியும் முரண்பாடுகளும்**
2. **இந்த பத்து பேருக்கு "தாங்கள் சொர்க்கவாசிகள்" என்ற விஷயம் முஹம்மது உயிரோடு இருந்த போதே தெரியுமா?**
3. **சொர்க்கவாசிகளும், இஸ்லாமிய இறையியலின் பிரச்சனைகளும்.**
4. **முடிவுரை**

-----------------------------------

## 1) சொர்க்கவாசிகள் பத்து பேர் - ஹதீஸ்களின் சாட்சியும் முரண்பாடுகளும்

சொர்க்கவாசிகள் இவர்கள் தான் என்று பெயர் குறிப்பிட்டு குர்-ஆன் சொல்வதில்லை, அவைகளை நாம் ஹதீஸ்களில் காணலாம், அதுவும் ஸஹீஹ் புகாரி, முஸ்லிம் ஹதீஸ்களில் இவைகளை காணமுடியாது. இதர ஹதீஸ் தொகுப்புகளாகிய அபூ தாவுத் மற்றும் திர்மிதியில் இவைகளை காணமுடியும்:

**சுனன் அபூ தாவூத் ஹதீஸ்**

Dawud :: Book 40 : Hadith 4632

Narrated Sa'id ibn Zayd:

AbdurRahman ibn al-Akhnas said that when he was in the mosque, a man mentioned Ali (may Allah be pleased with him). So Sa'id ibn Zayd got up and said: I bear witness to the Apostle of Allah (peace_be_upon_him) that I heard him say: Ten persons will go to Paradise: The Prophet (peace_be_upon_him) will go to Paradise, AbuBakr will go to Paradise, Umar will go to Paradise, Uthman will go to Paradise, Ali will go to Paradise, Talhah will go to Paradise: az-Zubayr ibn al-Awwam will go to paradise, Sa'd ibn Malik will go to Paradise, and AbdurRahman ibn Awf will go to Paradise. If I wish, I can mention the tenth. The People asked: Who is he: So he kept silence. The again asked: Who is he: He replied: He is Sa'id ibn Zayd.

**திர்மிதி**

Narrated Abdur Rahman bin Awf:

that the Messenger of Allah (sallallahu 'alayhi wa sallam) said: "Abu Bakr is in Paradise, 'Umar is in Paradise, 'Uthman is in Paradise, 'Ali is in Paradise, Talhah is in Paradise, Az-Zubair is in Paradise, 'Abdur Rahman bin Awf is in Paradise, Sa'd bin Abi Waqqas is in Paradise, Sa'id ibn Zayd is in Paradise, and Abu 'Ubaidah bin Al-Jarrah is in Paradise."

https://en.wikipedia.org/wiki/Hadith_of_the_ten_promised_paradise

**இந்த ஹதீஸில் குறிப்பிடப்படும் பெயர்கள்:**

| **எண்** | **அபூ தாவுத் ஹதீஸ் தொகுப்பு** | **திர்மிதி ஹதீஸ் தொகுப்பு** |
|---|---|---|
| 1 | முஹம்மது | **அபூ பக்கர்** |
| 2 | **அபூ பக்கர்** | **உமர்** |
| 3 | **உமர்** | **உஸ்மான்** |
| 4 | **உஸ்மான்** | **அலி** |
| 5 | **அலி** | **தல்ஹா** |
| 6 | **தல்ஹா** | **ஜுபைர்** |
| 7 | **ஜுபைர் இப்னு அவாம்** | **அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்** |
| 8 | ஸைத் இப்னு மாலிக் | ஸஃது இப்னு அபீ வக்காஸ் |
| 9 | **அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்** | **ஸயீது இப்னு ஸைது** |
| 10 | **ஸயீது இப்னு ஸைது** | அபூ உபைதா ஆமிர் இப்னுல் ஜர்ராஹ் |

மேலே கொடுக்கப்பட்ட இரண்டு பட்டியல்களையும், நாம் பார்த்தால், பல முரண்பாடுகளை காணமுடியும்.

**திர்மிதி ஹதீஸில்:**

- முஹம்மதுவின் பெயர் காணப்படவில்லை.
- ”ஸைத் இப்னு மாலிக்” என்பவரும் காணவில்லை.

**அபூ தாவுத் ஹதீஸில்:**

- ”ஸஃது இப்னு அபீ வக்காஸ்” என்பவர் காணப்படவில்லை.
- ”அபூ உதைபா ஆமிர் இப்னுல் ஜர்ராஹ்” என்பவர் காணப்படவில்லை.

இந்த இரண்டு பட்டியலை நாம் ஒன்று சேர்த்தால், நமக்கு 12 நபர்களின் பெயர்கள் வருகின்றன. இதில் எந்த பட்டியலில் கொடுக்கப்பட்டதை சரியானதாக கருதுவது?

| **எண்** | **அபூ தாவுத் / திர்மிதி** |
|---|---|
| 1 | முஹம்மது |

| | |
|---|---|
| 2 | அபூ பக்கர் |
| 3 | உமர் |
| 4 | உஸ்மான் |
| 5 | அலி |
| 6 | தல்ஹா |
| 7 | ஜுபைர் இப்னு அவாம் |
| 8 | ஸைத் இப்னு மாலிக் |
| 9 | அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் |
| 10 | ஸயீது இப்னு ஸைது |
| 11 | ஸஃது இப்னு அபீ வக்காஸ் |
| 12 | அபூ உபைதா ஆமிர் இப்னுல் ஜர்ராஹ் |

**புகாரி மற்றும் முஸ்லிமில் இது ஏன் காணப்படவில்லை?**

சுன்னி முஸ்லிம்களின் ஆறு ஹதீஸ் தொகுப்புகளில், முதல் இரண்டு தொகுப்புகளாகிய புகாரி மற்றும் முஸ்லிம் 100% ஆதாரமானவை என்று கருதப்படுகின்றது. ஆனால், இந்த சொர்க்கவாசிகள் பற்றிய ஹதீஸ் இந்த இரண்டு தொகுப்புக்களில் வராமல் விடப்பட்டதற்கு ஏதாவது காரணம் இருக்குமா? புகாரி, முஸ்லிம் ஹதீஸ் தொகுப்பாளர்கள், "சொர்க்கவாசிகள் பற்றிய ஹதீஸ் ஒரு பொய்யான ஹதீஸ்" என்று அருதி தங்கள் தொகுப்பில் சேர்க்காமல் விட்டிருப்பார்களா? இது ஒரு முக்கியமில்லாத சாதாரண விஷயம் அல்ல. சஹாபாக்களின் மேன்மையை எடுத்துக் காட்டக்கூடிய ஒரு ஹதீஸ் இவர்களின் கண்களில் படாமல் விடப்பட்டதா? அல்லது பட்டதை இவர்கள் பொய் என்றுச் சொல்ல வருகிறார்களா? முதல் நான்கு கலிஃபாக்களின் காலம் முடிந்த பிறகு வந்த முஸ்லிம்கள், இந்த பத்து சஹாபாக்களின் மேன்மையை உயர்த்துவதற்கு இட்டுக் கட்டியதா இந்த ஹதீஸ்? புகாரி முஸ்லிம் ஹதீஸ்களில் கட்டாயமாக எல்லா ஹதீஸ்களும் இருக்கவேண்டும் என்ற கட்டாயம் இல்லை, ஆனால், இவ்வளவு முக்கியமான ஹதீஸ் விடப்பட்டது சந்தேகத்தை எழுப்புகிறது. ஷியா முஸ்லிம்கள் இந்த ஹதீஸ் இட்டுக்கட்டியது என்று நம்புகிறார்கள்.

இந்த ஹதீஸ் உண்மை என்று கருதினால் வரும் இறையியல் பிரச்சனைகளை நான் இந்த கடிதத்தில் எழுதுகிறேன்.

**2) இந்த பத்து பேருக்கு "தாங்கள் சொர்க்கவாசிகள்" என்ற விஷயம் முஹம்மது உயிரோடு இருந்த போதே தெரியுமா?**

தம்பி, நாம் இதுவரை முதல் நான்கு கலிஃபாக்களின் செயல்களை முழுவதுமாக பார்க்கவில்லை. அபூ பக்கர் ஆட்சி தொடங்கி, அலி அவர்கள் மரணிக்கும் வரைக்கும் நாம் ஆய்வு செய்தால், நமக்கு கீழ்கண்ட கேள்விகள் எழும்:

- இவர்களா சொர்க்கவாசிகள்?
- தாங்கள் சொர்க்கவாசிகள் என்று அவர்களுக்கு தெரிந்திருந்ததா?
- ஒருவருக்கு இன்னொருவர் சொர்க்கவாசி என்று தெரிந்து இருந்ததா? அபூ பக்கர் சொர்க்கவாசி என்று அலிக்கு தெரியுமா?
- இவர்களின் நடத்தைகள், சொர்க்கத்திற்கு தகுதியானவர்களின் செயல்களாக காணப்படவில்லையே? அல்லாஹ் இவர்களின் செயல்களை அங்கீகரித்தானா?
- இவர்கள் சொர்க்கவாசிகள் என்று அல்லாஹ் சொல்லி தவறு செய்துவிட்டானா?

அலியின் அதிகார ஆசைப் பற்றியும், ஃபாத்திமாவிற்கு கிடைக்கவேண்டிய ஆஸ்தி கிடைக்கவில்லையே என்ற கோபத்தினால், முதல் கலிஃபாவிற்கு ஒத்துழைப்புத் தராமல் இருந்ததைப் பற்றியும் நாம் சுருக்கமாக பார்த்துள்ளோம். இவர்களைப் பற்றி அடுத்தடுத்த கடிதங்களில் நாம் அதிகமாக தெரிந்துக் கொள்வோம்.

இந்த கடிதத்தில், "சொர்க்கவாசிகள் பற்றிய வஹியை அல்லது செய்தியை" முஹம்மதுவிற்கு இறக்கிய அல்லாஹ்வின் செயலினால், உண்டாகும் இறையியல் பிரச்சனையை மட்டும் பார்ப்போம்.

## 3) சொர்க்கவாசிகளும், இஸ்லாமிய இறையியலின் பிரச்சனைகளும்

தம்பி, இஸ்லாமிய இறையியலின் படி, இந்த பூமியிலே முஸ்லிமாக வாழும் ஒரு நபர் "நான் மரித்தால் நிச்சயமாக சொர்க்கம் செல்வேன், அல்லாஹ் அதை கொடுப்பான், இதில் எந்த ஒரு சந்தேகமும் இல்லை" என்றுச் சொல்லக்கூடாது. ஏனென்றால், தீர்ப்பு நாளில், இந்த முடிவை எடுப்பவன் அல்லாஹ், எனவே, மனிதர்கள் தங்கள் தரப்பிலிருந்து செய்யவேண்டியவைகளைச் செய்யவேண்டுமே ஒழிய, "எனக்கு சொர்க்கத்துக்கு டிக்கெட் கட்டாயம் கிடைக்கும்" என மரிப்பதற்கு முன்பு சொல்லக்கூடாது.

இது ஒரு புறமிருக்க, பத்து நபர்களுக்கு சொர்க்கம் நிச்சயம் என்று முஹம்மது சொல்லியுள்ளார். மறுபடியும் இஸ்லாமிய இறையியலின் படி, முஹம்மதுவின் இந்த வார்த்தைகள் கூட ஒரு வகையான வஹி தான். இதனையும் அல்லாஹ்விடமிருந்து பெற்றுத் தான் முஹம்மது சொல்லியிருக்கிறார், ஆக, இதனை அல்லாஹ்வின் வார்த்தையாகவே கொள்ளவேண்டும்.

சஹாபாக்களில் சிலர் மரிப்பதற்கு பல ஆண்டுகளுக்கு முன்பே, முஹம்மது இதனை சொல்லியுள்ளதால், இதனை முஸ்லிம்கள் நம்புவதினால், இஸ்லாமிய இறையியல் (அல்லாஹ்) **கீழ்கண்ட பிரச்சனைகளை/கேள்விகளை சந்திக்கிறது:**

அ) சொர்க்கவாசிகள் என அறிவிக்கப்பட்ட நாள் முதல் அவர்கள் மரிக்கும் நாள் வரை சொர்க்கவாசிகள் பாவங்களை செய்யமாட்டார்கள், அவர்கள் அல்லாஹ்வைப் போல (இனி) பாவமே செய்யாதவர்கள் என்பதால் அல்லாஹ் வாக்கு கொடுத்தானா?

ஆ) ஒருவேளை, அவர்கள் எவ்வளவு பெரிய பாவங்கள் செய்தாலும், அதனை கண்டுக் கொள்ளமாட்டேன் என்று அல்லாஹ் முடிவு செய்துவிட்டு, இப்படி வாக்கு கொடுத்தானா?

இ) அல்லது அவர்கள் செய்யும் பாவங்களுக்கு ஏற்றபடி, முதலாவது நரகத்தில் அவர்களை தண்டித்து, அதன் பிறகு சொர்க்கத்துக்கு அனுப்பலாம் என்று அல்லாஹ் கருதினானா?

ஈ) அவர்கள் எந்த பாவம் செய்தாலும் சரி, ”நேரடி சொர்க்கம் தான்“ என்று முடிவு செய்து, அல்லாஹ் சொர்க்கவாசி ஹதீஸை இறக்கினானா?

உ) இப்படி செய்தால், அல்லாஹ்வின் இறையான்மைக்கு என்ன மதிப்பு இருக்கிறது? இதர சஹாபாக்களும் பாவங்கள் செய்தபோதும்,நேரடியாக சொர்க்கத்துக்கு அனுப்பாதது ஏன்?

ஊ) ஒரு சொர்க்கவாசி, இன்னொரு சொர்க்கவாசியோடு போர் புரிந்தாரே (அலியும், தல்ஹாவும், ஜுபைரும்), இப்படி இருக்கும் போது இவர்களை எப்படி ஒரே சொர்க்கத்தில் அல்லாஹ் அனுமதிப்பான்?

எ) ஒரு முஸ்லிமுக்கு எதிராக இன்னொரு முஸ்லிம் போர் செய்தால் அவர்கள் இருவரும், காஃபிர்கள் என்று சொல்லப்படுவதற்கு இணங்க, தல்ஹா மற்றும் ஜுபைர் அவர்கள் அலிக்கு எதிராக போர் செய்தார்களே இவர்களில் யார் காஃபிர்? அல்லது இவர்களுக்கு எதிராக போர் செய்த அலி காஃபிரா? இஸ்லாமின் படி என்ன பதில்?

ஏ) சண்டையிடும் இரண்டு முஸ்லிம்களும் காஃபிர்கள் என்றால், அவர்கள் நரகத்துக்குச் செல்வார்கள். இதன்படி இந்த மூன்றுபேரும் நரகம் செல்வார்களா? அப்படியானால், சொர்க்கவாசிகள் என்ற ஹதீஸ் இட்டுக்கட்டப்பட்டதா?

ஐ) இப்படி இவர்கள் ஜமல் போரில் ஒருவரோடு ஒருவர் சண்டையிடுவார்கள் என்ற எதிர்கால நிகழ்வை அல்லாஹ் அறியாமல் வாக்கு கொடுத்துவிட்டானா?

ஒ) அல்லாஹ்விற்கு எல்லாமே தெரியும் என்றால், இவர்கள் தவறு செய்திருந்தாலும், இவர்களை சும்மாவே மன்னித்துவிடலாம் என்று அல்லாஹ் நினைத்தானா? இப்படி செய்தால், சஹாபாக்களிடையே பாகுபாடு உண்டாக்குவது போல ஆகுமல்லவா?

ஓ) நாம் ஏற்கனவே சொர்க்கத்தின் பிரஜையாகிவிட்டதால், இனி நல்ல அமல்கள் அதிகமாகச் செய்யத்தேவையில்லை என்று அவர்களில் ஒருவர் நினைத்திருந்தால்? மனிதர்கள் என்ற முறையில் இப்படிப்பட்ட எண்ணங்கள் வர வாய்ப்பு அதிகம் உள்ளது.

### 4) முடிவுரை:

தம்பி, சொர்க்கவாசிகள் என்ற ஹதீஸ் அல்லாஹ்வின் இறையான்மையை கேள்விக்குரியாக்குகிறது. இஸ்லாமின் இறையியலை சந்தேகிக்கிறது. மேற்கண்ட கேள்விகள் அனைத்தும், இந்த ஹதீஸ் ஒரு பொய்யான ஹதீஸ் என்று சொல்வதாக உள்ளது. குர்-ஆனின் இறையியல் சொல்வதற்கு எதிராக இந்த சொர்க்கவாசிகள் ஹதீஸ் இருப்பதினால், பீஜே போன்ற இஸ்லாமியர்கள் இதனை பொய்யான ஹதீஸ் என்று எதிர்காலத்தில் தள்ளக்கூடும்.

### உன்னிடம் கடைசியாக கேட்கவிரும்பும் கேள்விகள்:

1) சொர்க்கவாசிகள் என்பதால் அவர்கள் விமர்சனத்திற்கு அப்பாற்பட்டவர்களா?

2) இவர்களின் கடைசி கால வாழ்க்கையை பார்த்தால், மிகவும் படுகேவலமாக இருக்கிறது. பதவிக்காக, பணத்திற்காக ஒருவரை ஒருவர் கொல்வது இவர்கள் மத்தியிலே சாதாரணமாக காணப்படும் ஒரு செயலாக உள்ளது. இவர்களை யார் சொர்க்கவாசிகள் என்று ஏற்றுக்கொள்வார்கள்?

3) இவர்கள் மரிப்பதற்கு இன்னும் 20 ஆண்டுகளுக்கு மேலாக இருக்கும் போது, இவர்கள் சொர்க்கவாசிகள் என்று வாக்கு செய்வது சரியானதா? இது இஸ்லாமிய இறையியலுக்கும், குர்-ஆனுக்கும் எதிரானது அல்லவா?

தம்பி, நீ என்னை எச்சரிக்காதே, முதலாவது கலிஃபாக்களின், சஹாபாக்களின் நடபடிகளை அறிந்துக் கொள்.

உன்னை அடுத்த கடிதத்தில் சந்திக்கிறேன்,

இப்படிக்கு

உன் அண்ணன்

உமர்

தேதி: **11 ஜூலை 2015**

---

**உமரின் ரமளான் கட்டுரைகள்**

**உமரின் இதர கட்டுரைகள்/மறுப்புக்கள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ramalan/ramalan2015day12.html

# 45. அல்லாஹ்வைவிடவும், முஹம்மதுவைவிடவும் பவுலடியார் எப்படி மேன்மையானவராக இருக்கிறார்?

### அத்தியாயம் 1 - பவுலடியாரின் இரத்தின சுருக்கம் – அன்பு, அல்லாஹ்வின் நிலைப்பாடு என்ன?

ஆசிரியர்:உமர்

முஸ்லிம்களின் மனசாட்சிக்கு ஒரு சவால். உரை கல்லில் தங்கத்தை உரசி உண்மையை கண்டறிவது போன்று, இஸ்லாமிய இறையியல் கோட்பாடுகளின் உண்மை நிலையை அறிய முதலாவது நாம் அவைகளை அன்பு என்னும் சக்தியோடு உரசிப்பார்க்கவேண்டும். குறைந்த பட்சம் அன்பு பற்றி அல்லாஹ் என்ன சொல்கின்றான்

என்பதை கவனிக்கவேண்டும். உலகில் உள்ள மதங்கள் எல்லாம் அன்பை போதிக்கின்றது என்ற பொதுவான நம்பிக்கை மக்களுக்கு உண்டு. இந்த பொதுவான நம்பிக்கை இஸ்லாமுக்கு பொருந்துமா?

முஸ்லிம்கள் குற்றப்படுத்தும் பவுலடியாரின் போதனையையும், அதே முஸ்லிம்களின் இறைவனாக இருக்கும் அல்லாஹ்வின் போதனையையும் "அன்பு" என்ற நற்பண்புடன் ஒப்பிட்டுப் பார்ப்போமா!

கிறிஸ்தவர்களால் "பவுலடியார்" என்றும், "அப்போஸ்தலர்" என்றும் அன்புடன் அழைக்கப்படும் பவுல் அவர்கள் அன்பு பற்றி என்ன சொல்கிறார் என்பதை இப்போது படிப்போம்:

**1 கொரிந்தியர் 13ம் அத்தியாயம்:**

நான் மனுஷர் பாஷைகளையும் தூதர் பாஷைகளையும் பேசினாலும், அன்பு எனக்கிராவிட்டால், சத்தமிடுகிற வெண்கலம்போலவும், ஓசையிடுகிற கைத்தாளம்போலவும் இருப்பேன்.

நான் தீர்க்கதரிசன வரத்தை உடையவனாயிருந்து, சகல இரகசியங்களையும், சகல அறிவையும் அறிந்தாலும், மலைகளைப் பேர்க்கத்தக்கதாகச் சகல விசுவாசமுள்ளவனாயிருந்தாலும், அன்பு எனக்கிராவிட்டால் நான் ஒன்றுமில்லை.

எனக்கு உண்டான யாவற்றையும் நான் அன்னதானம்பண்ணினாலும், என் சரீரத்தைச் சுட்டெரிக்கப்படுவதற்குக் கொடுத்தாலும், அன்பு எனக்கிராவிட்டால் எனக்குப் பிரயோஜனம் ஒன்றுமில்லை.

அன்பு நீடிய சாந்தமும் தயவுமுள்ளது; அன்புக்குப் பொறாமையில்லை; அன்பு தன்னைப் புகழாது, இறுமாப்பாயிராது,

அயோக்கியமானதைச் செய்யாது, தற்பொழிவை நாடாது, சினமடையாது, தீங்கு நினையாது,

அநியாயத்தில் சந்தோஷப்படாமல், சத்தியத்தில் சந்தோஷப்படும்.

சகலத்தையும் தாங்கும், சகலத்தையும் விசுவாசிக்கும், சகலத்தையும் நம்பும், சகலத்தையும் சகிக்கும்.

அன்பு ஒருக்காலும் ஒழியாது. தீர்க்கதரிசனங்களானாலும் ஒழிந்துபோம், அந்நிய பாஷைகளானாலும் ஓய்ந்துபோம், அறிவானாலும் ஒழிந்துபோம்.

நம்முடைய அறிவு குறைவுள்ளது, நாம் தீர்க்கதரிசனஞ் சொல்லுதலும் குறைவுள்ளது.

நிறைவானது வரும்போது குறைவானது ஒழிந்துபோம்.

நான் குழந்தையாயிருந்தபோது குழந்தையைப்போலப் பேசினேன், குழந்தையைப்போலச் சிந்தித்தேன், குழந்தையைப்போல யோசித்தேன்; நான் புருஷனானபோதோ குழந்தைக்கேற்றவைகளை ஒழித்துவிட்டேன்.

இப்பொழுது கண்ணாடியிலே நிழலாட்டமாய்ப் பார்க்கிறோம், அப்பொழுது முகமுகமாய்ப் பார்ப்போம்; இப்பொழுது நான் குறைந்த அறிவுள்ளவன், அப்பொழுது நான் அறியப்பட்டிருக்கிறபடியே அறிந்துகொள்ளுவேன்.

இப்பொழுது விசுவாசம், நம்பிக்கை, அன்பு இம்மூன்றும் நிலைத்திருக்கிறது; **இவைகளில் அன்பே பெரியது.**

முஸ்லிம்களே, மேற்கண்ட வசனங்களை ஒருமுறையல்ல, பலமுறை படித்துப்பாருங்கள். அதன் பிறகு, இவைகளுக்கு இணையான அல்லது மேலான வசனங்களை குர்-ஆனில் உண்டா என்று தேடிப்பாருங்கள்.

குர்-ஆனை அரபியில் படித்தால் தான் அதிக நன்மையென்று அறியாமையில் முஸ்லிம்கள் நம்பிக்கொண்டு இருக்கிறார்கள். அல்லாஹ் குர்-ஆன் வசனங்களில் என்ன சொல்ல வருகிறார்? என்பதை புரிந்து கொள்ள முயற்சி எடுக்காமல், புரியாவிட்டாலும் பிரச்சனையில்லை, கண்களை திறந்து கொண்டு, மனதை மூடிக்கொண்டு, கண்மூடித்தனமாக படிக்கும் ஒவ்வொரு அரபி எழுத்துக்கும் அல்லாஹ் பல நன்மைகளைத் தருவான் என்று நம்பி குர்-ஆனை படிக்கும் முஸ்லிம்களே, மேற்கண்ட பவுலடியாரின் வசனங்களை தமிழில் கொடுத்துள்ளேன் அவைகளை படியுங்கள்.

இவ்வசனங்கள் ஒவ்வொன்றிற்கும் நான் விளக்கத்தை எழுத ஆரம்பித்தால், அதுவே ஒரு புத்தகமாக ஆகிவிடும், எனவே, அதனை நான் இப்போது செய்ய விரும்பவில்லை.

- பவுலடியாரின் மேற்கண்ட வசனங்கள், குர்-ஆனின் வசனங்களைக் காட்டிலும் மேன்மையானதாக உங்களுக்குத் தெரியவில்லையா?
- பெற்றோர் பிள்ளைகளுக்கு இடையில் காணப்படும் அன்பு, கணவன் மனைவிக்கு இடையில் காணப்படும் அன்பு, நண்பர்களுக்கு இடையில் காணப்படும் அன்பு, சகோதர சகோதரிகளின் மத்தியில் காணப்படும் அன்பு என்று பலவாறு அன்பு காணப்படுகின்றது. "இப்படிப்பட்ட உண்மையான அன்பு என்ன செய்யும்?" என்பதை சுருக்கமாக பவுலடியார் மேற்கண்ட வசனங்களில் சொல்லியுள்ளார். முஸ்லிம்களே! இவைகளா மனித வார்த்தைகள்? இவைகளா ஒரு கள்ள அப்போஸ்தலரின் வார்த்தைகள்? அப்படியானால், அன்பு பற்றி இவைகளை காட்டிலும் மேலான குர்-ஆன் வசனங்களைக் காட்டுங்கள்.
- உண்மையாகவே குர்-ஆன் இறைவனின் வார்த்தை என்றுச் சொன்னால், பவுலடியாரின் வார்த்தைகள் மனித வார்த்தைகள் என்றுச் சொன்னால், குர்-ஆனில் உள்ள 6236 வசனங்களில் ஒரு வசனமும் பவுலடியாரின் வசனங்களைக் காட்டிலும் அற்பமானதாகக் காணப்படக்கூடாது. குர்-ஆனின் அனைத்து வசனங்களும், பவுலடியாரின் மேற்கண்ட வசனங்களைக் காட்டிலும் சிறப்பானதாக இருக்கவேண்டும். முஸ்லிம்கள் இந்த சவாலை ஏற்க தயாரா?
- அன்பு என்ன செய்யும், அது என்ன செய்யாது என்பதை இரத்தினச் சுருக்கமாக பவுலடியார் வடித்துள்ளார், உங்கள் குர்-ஆனில் அன்பு என்னச் செய்யும்? அன்பு என்னச் செய்யாது? என்பதைப் பற்றி குர்-ஆன் என்ன சொல்கிறது என்று உங்களால் குர்-ஆன் வசனங்களை மேற்கோள் காட்டமுடியுமா?

இப்போது குர்-ஆனில் அல்லாஹ் இறக்கிய சில வசனங்களைப் பார்ப்போமா?

**குர்-ஆன் அத்தியாயம் 111ஐ படிப்போம்:**

அபூலஹபின் இரண்டு கைகளும் நாசமடைக; அவனும் நாசமாகட்டும்.

அவனுடைய பொருளும், அவன் சம்பாதித்தவையும் அவனுக்குப் பயன்படவில்லை.

விரைவில் அவன் கொழுந்து விட்டெரியும் நெருப்பில் புகுவான்.

விறகு சுமப்பவளான அவனுடைய மனைவியோ,

அவளுடைய கழுத்தில் முறுக்கேறிய ஈச்சங் கயிறுதான் (அதனால் அவளும் அழிவாள்). (முஹம்மது ஜான் தமிழாக்கம்)

மேற்கண்ட வசனங்கள் "அபூ லஹப்" என்பவரை அல்லாஹ் சபித்த சாப வசனங்கள் ஆகும். முஸ்லிம்களே, பவுலடியாரின் வசனங்களோடு உங்கள் குர்-ஆனின் வசனங்களை ஒப்பிட்டுப் பார்ப்பீர்களா? பவுலடியார் எப்படி அல்லாஹ்வை விட மேன்மையுள்ளவராக இருக்கிறார் என்பதை இப்போது உங்களால் கவனிக்கமுடிகின்றதா?

[குர்-ஆனின் இந்த வசனங்களை மட்டும் ஏன் எடுத்து ஒப்பிடுகிறீர்கள் என்று கேள்வி கேட்க முஸ்லிம்களுக்கு உரிமையில்லை, ஏனென்றால், குர்-ஆனின் அனைத்து வசனங்களும் அல்லாஹ் இறக்கியது தானே! அவைகள் அனைத்தும் மனித வார்த்தைகளைக் காட்டிலும் சிறப்பானது தானே! பவுலடியார் ஒரு மனிதர் தானே! எப்படி ஒரு மனிதரின் வார்த்தைகள், சர்வ ஞானியாகிய அல்லாஹ்வின் வார்த்தைகளைக் காட்டிலும் சிறப்பானதாக இருக்கமுடியும்? எனவே, அல்லாஹ்வின் அனைத்து வசனங்களையும் ஒப்பிட மற்றவர்களுக்கு உரிமையுண்டு]

**பவுலடியாரின் இன்னொரு வசனம்: ரோமர் 13:8**

ஒருவரிடத்திலொருவர் அன்புகூருகிற கடனேயல்லாமல், மற்றொன்றிலும் ஒருவனுக்கும் கடன்படாதிருங்கள்; பிறனிடத்தில் அன்புகூருகிறவன் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறான்.

ஒருவன் மற்றொருவனிடம் அன்பு கூறும் போது, அவன் பழைய ஏற்பாட்டின் கட்டளைகள் அனைத்தையும் நிறைவேற்றுகிறான். எக்காலத்துக்கும் பொருந்தக்கூடிய விதமாக, மோசே மூலமாக தேவன் பத்து கட்டளைகளைக் கொடுத்தார். அவைகளைப் பற்றி இயேசு கீழ்கண்டவாறு கூறினார்:

**மத்தேயு 22:37- 40**

இயேசு அவனை நோக்கி: உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும் உன் முழு மனதோடும் அன்புகூருவாயாக; இது முதலாம் பிரதான கற்பனை.

இதற்கு ஒப்பாயிருக்கிற இரண்டாம் கற்பனை என்னவென்றால், உன்னிடத்தில் நீ அன்புகூருவதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூருவாயாக என்பதே. இவ்விரண்டு கற்பனைகளிலும் நியாயப்பிரமாணம் முழுமையும் தீர்க்கதரிசனங்களும் அடங்கியிருக்கிறது என்றார்.

இதையே பவுலடியாரும் விளக்கி கூறுகின்றார், இயேசு சொன்னவைகளின்ன் விளக்கவுரையாக பவுலடியாரின் வார்த்தைகள் காணப்படுகின்றது என்பதை கவனியுங்கள், ரோமர் 13:9

எப்படியென்றால், விபசாரம் செய்யாதிருப்பாயாக, கொலை செய்யாதிருப்பாயாக, களவு செய்யாதிருப்பாயாக, பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக, இச்சியாதிருப்பாயாக என்கிற இந்தக் கற்பனைகளும், வேறே எந்தக் கற்பனையும், உன்னிடத்தில் நீ அன்புகூருகிறதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூருவாயாக என்கிற ஒரே வார்த்தையிலே தொகையாய் அடங்கியிருக்கிறது.

மோசே மூலமாக தரப்பட்ட 10 கட்டளைகளில், முதல் 4 கட்டளைகள் மனிதனுக்கும் தேவனுக்கும் சம்மந்தப்பட்டது. ஐந்தாம் கட்டளை முதல் பத்தாம் கட்டளை வரையுள்ளது ஒரு மனிதனுக்கும் இன்னொரு

மனிதனுக்கும் சம்மந்தப்பட்டது. இந்த இரண்டாம் பாகத்தில் உள்ளதைப் பற்றிய விளக்கத்தை சுருக்கமாக பவுலடியார் மேற்கண்ட வசனங்களில் விவரிக்கிறார். இந்த ஆறு கட்டளைகளை எப்படி நிறைவேற்றுவது என்று பவுலடியாரிடம் கேட்டுப்பாருங்கள்? அவர் சொல்லுவார் "பிறனிடம் அன்பு செலுத்து, அப்போது அவைகள் அனைத்தும் தானாக நிறைவேறும்".

**"பிறன்" என்பவன் யார்?**

முஸ்லிம்களே! ஒரு முக்கியமான விஷயத்தை இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

உன்னை நேசிப்பது போல பிறனையும் நேசிக்கவேண்டும் என்பதில் "பிறன்" என்பது இன்னொரு கிறிஸ்தவனை மட்டும் குறிக்காது, அது எல்லோரையும் குறிக்கும். அவன் யாராக இருந்தாலும் சரி, அவன் ஒரு முஸ்லிமாக இருக்கலாம், ஒரு இந்துவாக இருக்கலாம், அவ்வளவு ஏன் அவன் இறை நம்பிக்கை இல்லாத ஒரு நாத்தீகனாகவும் இருக்கலாம், அவனிடம் அன்பு செலுத்தும் படி பவுலடியார் கட்டளையிடுகிறார்.

**முஸ்லிம்களுக்கு ஒரு கேள்வி:** ஒரு முஸ்லிம் இன்னொரு முஸ்லிமை நேசிப்பான், இதில் முஸ்லிம்கள் சிறப்பாக செய்வது ஒன்றுமில்லை. இயேசு இதைப் பற்றிச் சொல்லும் பொது இவ்வாறு கூறினார்:

உங்களிடத்தில் அன்பு செலுத்துவோரிடமே நீங்கள் அன்பு செலுத்துவீர்களானால் உங்களுக்கு என்ன கைம்மாறு கிடைக்கும்? வரி தண்டுவோரும் இவ்வாறு செய்வதில்லையா? நீங்கள் உங்கள் சகோதரர் சகோதரிகளுக்கு மட்டும் வாழ்த்துக் கூறுவீர்களானால் நீங்கள் மற்றவருக்கும் மேலாகச் செய்துவிடுவதென்ன? பிற இனத்தவரும் இவ்வாறு செய்வதில்லையா? (மத்தேயு 5:46,47 பொது தமிழாக்கம்)

முஸ்லிமல்லாத இனத்தவரை முஸ்லிம்கள் நேசிக்கவேண்டும் என்று குர்-ஆன் எங்கேயாவது சொல்கிறதா? யூதர்களை முஸ்லிம்கள் நேசிக்கவேண்டும், அவர்களுக்காக ஜெபம் (துவா) செய்யவேண்டும் என்று குர்-ஆன் சொல்கிறதா? ஆனால் எல்லோரையும் நேசிக்கவேண்டும் என்று பவுலடியார் சொல்கிறார். இப்போது சொல்லுங்கள், யார் மேன்மையானவர்? பவுலடியாரா அல்லது அல்லாஹ்வா?

இப்படிப்பட்ட வார்த்தைகளை பவுலடியாரின் மூலமாக எழுதவைத்து, கிறிஸ்தவர்களின் கையில் ஒரு வேதமாக தவழும்படி செய்த எங்கள் தேவனுக்கு கிறிஸ்தவர்கள் கோடி கோடி நன்றிகளைச் சொன்னாலும் அது போதாது என்பது எங்கள் கருத்து. இப்படிப்பட்ட வசனங்களை நாங்கள் படிக்கும் ஒவ்வொரு வேளையும், எங்கள் போதகர்கள் மற்றும் ஊழியர்கள் அவைகளை விளக்கி பிரசங்கம் செய்யும் போதெல்லாம், நாங்கள் அன்பு என்ற விஷயத்தில் குறைவுள்ளவர்களாகவே காண்கிறோம், இன்னும் எப்படி அன்பில் முழுமை அடைய முடியும் என்று சிந்திக்கிறோம், செயல்படுகிறோம். இப்படிப்பட்ட வசனங்களே கிறிஸ்தவர்களின் நித்திய வாழ்க்கைக்கான வெற்றிக்கு வழி வகுக்கிறது.

இயேசு போட்டு வைத்திருந்த அஸ்திபாரத்தின் மீது சீடர்களும், பவுலடியாரும் அழகான மாளிகையை கட்டி எழுப்பினார்கள். ஆனால், இயேசுவின் வழியில் வந்தவன் நான் என்றுச் சொல்லிக்கொண்ட முஹம்மதுவோ, இயேசு போட்டு வைத்திருந்த அஸ்திபாரத்தை நாசமாக்கும் செயலைச் செய்தார். பைபிளின் தேவன் என்று தன்னை அடையாளம் காட்டிக்கொண்ட அல்லாஹ், அந்த பைபிளின் தேவன் அமைத்திருந்த அழகான தோட்டத்தை அழிக்கும் செயலைச் செய்தார்.

பவுலடியாரை குற்றப்படுத்தும் முஸ்லிம்கள், அவரின் வசனங்களை குர்-ஆன் வசனங்களோடு ஒப்பிடுவார்களா? அந்த தைரியமும், உண்மையும் முஸ்லிம்களிடம் உண்டா? உண்டென்றுச் சொல்பவர்கள் இந்த சவாலை ஏற்றுக்கொள்ளட்டும்.

இயேசுவின் சீடர்கள் மற்றும் பவுலடியார் மூலமாக தேவன் எழுதி வைத்த வார்த்தைகள் தான் புதிய ஏற்பாட்டில் கணப்படுகின்றது. 1 கொரிந்தியர் 13ம் அத்தியாயத்திற்கு இணையான ஒரு அத்தியாயத்தை முஸ்லிம்கள் குர்-ஆனிலிருந்து எடுத்துக் காட்டமுடியுமா?

பிற இனத்தவர்களையும், பாவம் செய்பவர்களையும் நேசிக்கும் விதமாக பைபிளின் தேவனும், இயேசுவும் பவுலடியாரும் போதித்தார்கள். பாவத்தை தேவன் வெறுக்கின்றார், ஆனால், பாவியை நேசிக்கிறார், அவன் தன் தீய வழியை விட்டு வரவேண்டும் என்று விரும்புகிறார், அவன் நேர் வழியில் வரும்வரை அவனுக்கு நேராக தன் கரங்களை நீட்டி அவர் காத்துக்கொண்டு இருக்கிறார். ஆனால், அல்லாஹ்வோ, பாவிகளை நேசிப்பதில்லை, அவர்கள் திருந்தி வந்தால் மட்டுமே நேசிப்பேன் என்று நிபந்தனை விடுக்கிறார்:

குர்-ஆன் 2:276. அல்லாஹ் வட்டியை (அதில் எந்த பரக்கத்தும் இல்லாமல்) அழித்து விடுவான்; இன்னும் தான தர்மங்களை (பரக்கத்துகளைக் கொண்டு) பெருகச் செய்வான்; (தன் கட்டளையை) நிராகரித்துக் கொண்டிருக்கும் பாவிகள் எவரையும் அல்லாஹ் நேசிப்பதில்லை.

குர்-ஆன் 22:38. நிச்சயமாக, அல்லாஹ் ஈமான் கொண்டவர்களை (முஷ்ரிக்குகளின் தீமைகளிலிருந்து) பாதுகாத்துக் கொள்கிறான் - நம்பிக்கை மோசம் செய்பவர்களையும், நன்றி கெட்ட மோசக்காரர் எவரையும் நிச்சயமாக அல்லாஹ் நேசிப்பதில்லை.

இயேசு சொன்னது போல, நல்லவர்களை மட்டுமே அல்லாஹ் நேசித்தால், அவர் விசேஷித்துச் செய்வது என்ன? திருடன் கூட தன்னை நேசிப்பவனை நேசிக்கிறான், தனக்கு விரோதியாக இருப்பவனை நேசிப்பதில்லை. திருடனுக்கும் அல்லாஹ்விற்கும் வித்தியாசமில்லையா?

1 கொரிந்தியர் 13ம் அத்தியாயத்தில் சொல்லப்பட்ட பவுலடியாரின் போதனையை ஒரு மனிதன் பின்பற்றினால், அவன் முழு மனிதனாக மாறுவான், ஒருவனுக்கும் அவன் தீங்கு இழைக்கமாட்டான், மற்றவர்கள் நஷ்டமடையச் செய்யமாட்டான்.

**முடிவுரை:**

இதுவரை பவுலடியாரின் போதனைகளிலிருந்து ஒரு சில வசனங்களை ஒப்பிட்டுப் பார்த்தோம். அன்பு பற்றி பவுலடியார் சொல்வது போலவோ அல்லது அதை விட மேன்மையான வசனங்களையோ அல்லாஹ் குர்-ஆனில் சொல்லவில்லை என்பதை கண்டுக்கொண்டோம். இது முஸ்லிம்களுக்கு ஆச்சரியமாகவும், தர்மசங்கடமாகவும் இருக்கக்கூடும். பவுலடியாரின் வார்த்தைகள் இரத்தினச் சுருக்கமாக உள்ளது. பழைய ஏற்பாட்டு கட்டளைகள் அனைத்தையும், அன்பு என்ற ஒன்றை பரிபூரணமாக பின் பற்றுவதினால் நிறைவேற்ற முடியும் என்பதை விளக்கினார். ஒரு மனிதன் பவுலடியாரின் வார்த்தைகளை பின் பற்றினால், அவனும், அவன் சார்ந்த சமுதாயமும் மேன்மையடையும். அல்லாஹ்வின் வார்த்தைகள் பவுலடியாரின் வார்த்தைகளுக்கு முன்பு தோற்றுப் போகிறது. இஸ்லாமியரல்லாதவர்களையும் நேசிக்கவேண்டும் என்ற கருத்துடைய வசனங்களை குர்-ஆனிலிருந்து முஸ்லிம்கள் காட்டுவார்களா?

அடுத்த அத்தியாயத்தில், பவுலடியாரின் இதர வசனங்களை எடுத்துக் கொண்டு, அவைகள் எப்படி குர்-ஆன் வசனங்களைக் காட்டிலும் மேன்மையுள்ளதாக இருக்கிறது என்பதைக் காண்போம்.

முஸ்லிம்களே, பைபிளை படிக்க ஆரம்பியுங்கள், மேன்மை அடைவீர்கள்.

**இப்புத்தகத்தின் பொருளடக்கம்**

**உமரின் கட்டுரைகள்/மறுப்புக்கள்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/paul_and_islam/chapter_1_paul_on_love.html

# 46. அன்புள்ள அப்பா(அல்லா)விற்கு, ஆயிஷா எழுதும் கடிதம்-1

### சாட்சி சொல்வதில் ஒரு பெண் சரிபாதியாக மதிக்கப்படவேண்டும் - குர்-ஆன் 2:282

[ஆயிஷா பி.எஸ்.சி முடித்துவிட்டு ஒரு தனியார் நிறுவனத்தில் வேலை செய்கிறாள். குடும்பத்தில் மொத்தம் 5 பேர், இரண்டு சகோதரிகள், ஒரு சகோதரன் மற்றும் தாய். தந்தை கடந்த ஆண்டுதான் காலமானார். குடும்பத்தின் முத்தமகள் என்பதால் குடும்ப பாரம் சுமக்கும் பொறுப்பு ஆயிஷாவின் மீது விழுந்தது . ஒரு சொந்த வீடு தவிர, வேறு சொத்து ஒன்றுமில்லை. தனக்கு வயது 24ஐ தாண்டிவிட்டது. தம்பிக்கு இப்போது வயது 7 ஆகிறது. இரண்டு சகோதரிகளும் படித்துக் கொண்டிருக்கிறார்கள். குர்-ஆனை அரபியில் பலமுறை படித்தாகிவிட்டது. முதல் முறை குர்-ஆனை படித்துமுடிக்கும் போது, அப்பா ஒரு விருந்து செய்து சொல்லிக்கொடுத்த ஆசிரியைக்கு மரியாதை செய்தது இன்னும் மனதைவிட்டு மறையவில்லை. ஒரு நாள் ஆயிஷாவிற்கு ஒரு யோசனை வந்தது, இன்றிலிருந்து குர்-ஆனை தமிழில் படிக்கலாம் என்று, தமிழ் குர்-ஆனை வாங்கினாள், படித்தாள், இதோ தன் சந்தேகங்களை கடிதமாக அல்லாவிற்கே எழுதுகிறாள்.]

**அன்புள்ள அப்பா(அல்லாஹ்)விற்கு,**

ஆயிஷா எழுதும் கடிதம். நலம் நலமறிய ஆவல். உங்களிடம் நலம் விசாரிப்பது கொஞ்சம் ஓவர் தான். நீங்கள் எப்போதும் நலமாகவே இருப்பீர்கள்.

நீர் கொடுத்த வேதத்தை(குர்-ஆன்) நான் அரபியில் பல முறைபடித்துள்ளேன். ஒவ்வொரு முறை படிக்கும்போதும் நான் அதிக பக்தியுடையவளாக என் உள்ளத்தில் உணர்ந்துள்ளேன். என்னுடைய தந்தை எங்களை விட்டு போனபிறகு நாங்கள் தனிமையையும், பாதுகாப்பின்மையையும் உணருகிறோம். இதை போக்கிக்கொள்ளவும், இன்னும் நீர் குர்-ஆனில் என்ன சொல்லியிருக்கிறீர் என்று அறிந்து ஆறுதல் அடைய ஆவலுள்ளவளாய், நான் குர்-ஆனை தமிழில் படிக்க ஆரம்பித்தேன். எப்போதும் போல நான் சுத்தமாக

குளித்துவிட்டு, அரபி குர்-ஆனை எவ்வித கண்ணியத்தோடு படிக்கிறேனோ, அதே கண்ணியத்தோடு தமிழ் குர்-ஆனையும் படிக்க ஆரம்பித்தேன்.

இப்படி படிக்கும்போது எனக்கு பல சந்தேகங்கள் வருகிறது. என் மனது சிலவற்றை ஏற்க மறுக்கிறது. அதை யாரிடம் கேட்பேன், எங்கள் அப்பா எங்களோடு இல்லை, எனவே உமக்கு நான் கடிதம் எழுதுகிறேன். எல்லா அனாதைகளுக்கும் தகப்பன் நீர் ஒருவர் தானே. இக்கடிதத்தை நான் என் டைரியில் எழுதிவைக்கிறேன், நீர் படித்து எனக்கு எப்படியாவது பதிலை தரவேண்டும். இறைவன் மனதின் எண்ணங்களை அறிபவன் என்றுச் சொல்வார்கள், எனவே என் டைரியை படிப்பதற்கு உமக்கு சிரமமிருக்காது.

### 1. சாட்சி சொல்வதில் ஒரு பெண் சரிபாதியாக மதிக்கப்படவேண்டும், குர்-ஆன் 2:282

அல்லா, நான் குர்-ஆன் இரண்டாம் அதிகாரம் படிக்கும்போது 282ம் வசனத்தை பார்த்தவுடன் மிகவும் ஆச்சரியப்பட்டேன். ஒரு பெண் சாட்சி சொல்லும்போது பாதியாக மதிக்கப்படுவாள் என்று நீர் சொல்லியிருக்கிறீர்.

#### குர்-ஆன் 2:282

...(நீங்கள் சாட்சியாக ஏற்கக்கூடிய) உங்கள் ஆண்களில் இருவரை சாட்சியாக்கிக் கொள்ளுங்கள்; ஆண்கள் இருவர் கிடைக்காவிட்டால், சாட்சியங்களில் நீங்கள் பொருந்தக்கூடியவர்களிலிருந்து **ஆடவர் ஒருவரையும், பெண்கள் இருவரையும் சாட்சிகளாக எடுத்துக்கொள்ளுங்கள்;** (பெண்கள் இருவர்) ஏனென்றால் அவ்விருவரில் ஒருத்தி தவறினால், இருவரில் மற்றவள் நினைவூட்டும் பொருட்டேயாகும்;...

Quran 2:282 YUSUFALI: ... and get two witnesses, out of your own men, **and if there are not two men, then a man and two women, such as ye choose, for witnesses, so that if one of them errs, the other can remind her....**

ஹதீஸ்களை பார்க்கும் போது, முஹம்மது பெண்கள் அறிவில் குறைவுள்ளவர்கள், பக்தியில் குறைவுள்ளவர்கள் என்றுச் சொல்கிறார். நரகத்தில் அதிகமாக காணப்படுவது பெண்கள் தான் என்றுச் சொல்கிறார்.

புகாரி 304. 'ஹஜ்ஜுப் பெருநாளன்றோ நோன்புப் பெருநாளன்றோ தொழும் திடலிற்கு நபி(ஸல்) அவர்கள் சென்று கொண்டிருந்தபோது சில பெண்களுக்கு அருகே அவர்கள் சென்று, 'பெண்கள் சமூகமே! தர்மம் செய்யுங்கள்! ஏனெனில், நரக வாசிகளில் அதிகமாக இருப்பது நீங்களே என எனக்குக் காட்டப்பட்டது' என்று கூறினார்கள். 'இறைத்தூதர் அவர்களே! ஏன்' என்று அப்பெண்கள் கேட்டதற்கு, 'நீங்கள் அதிகமாகச் சாபமிடுகிறீர்கள்; கணவனுக்கு நன்றி கெட்டவர்களாக இருக்கிறீர்கள்; மார்க்கக் கடமையும் அறிவும் குறைந்தவர்களாக இருந்து கொண்டு மன உறுதியான கணவனின் புத்தியை மாற்றி விடக்கூடியவர்களாக உங்களை விட வேறு யாரையும் நான் காணவில்லை' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியபோது 'இறைத்தூதர் அவர்களே! எங்களுடைய மார்க்கக் கடமையும் எங்களுடைய அறிவும் எந்த அடிப்படையில் குறைவாக உள்ளன' என்று பெண்கள் கேட்டனர். '**ஒரு பெண்ணின் சாட்சி ஓர் ஆணின் சாட்சியில் பாதியாகக் கருதப்படவில்லையா?**' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டததற்கு, 'ஆம்' என அப்பெண்கள் பதில் கூறினர். '**அதுதான் அவர்கள் அறிவு குன்றியவர்கள் என்பதைக் காட்டுகிறது**; ஒரு பெண்ணிற்கு மாதவிடாய் ஏற்பட்டால் அவள் தொழுகையையும் நோன்பையும்விட்டு விடுவதில்லையா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டதற்கும் 'ஆம்!' எனப் பெண்கள் பதில் கூறினர். 'அதுதான் பெண்கள் மார்க்கக் கடமையில் குறைவானவர்களாக

இருக்கின்றனர் என்பதற்கு ஆதாரமாகும்" என்று நபி(ஸல்) கூறினார்கள்" என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) அறிவித்தார். Volume :1 Book :6

சாட்சியாக கருதுவதற்கு ஒரு ஆணுக்கு இரு பெண்கள் சமம் என்று எப்படி நீர் சொல்கிறீர்? இதற்கு காரணம் கேட்டாள் "அறிவில் பெண்கள்"

குறைபாடு உள்ளவர்கள் என்று முஹம்மது சொல்கிறார். உம்முடைய தூதரிடம் இதைப்பற்றி கேள்வி கேட்டால், இப்படியிருக்கும் என்று ஒரு வெப்தளத்தில் படித்தேன்.

**கேள்வி:** "ஓ முஹம்மது, ஏன் நரகத்தில் அதிகமாக பெண்கள் இருக்கிறார்கள்?"

**முஹம்மது:** "ஏனென்றால், அவர்களுக்கு பொது அறிவு (அ) பகுத்தறிவு (Common-Sense) குறைவு"

**கேள்வி:** "அவர்களுக்கு பகுத்தறிவு குறைவு என்று உமக்கு எப்படி தெரியும்?"

**முஹம்மது:** "ஒரு பெண்ணின் சாட்சி ஒரு ஆணின் சாட்சியில் பாதியாக இருப்பதினால், அவர்களுக்கு அறிவு குறைவு என்று அறிந்துக்கொள்ளலாம்"

**கேள்வி:** "ஆனால், ஏன் அவர்களின் சாட்சி ஒரு ஆணின் சாட்சியில் பாதியாக உள்ளது?"

**முஹம்மது:** "ஏனென்றால், அவர்கள் அறிவில் குறைபாடு இருப்பதனால்".

**கேள்வி:** "அவர்கள் அறிவில் குறைபாடு இருப்பது உமக்கு எப்படி தெரியும்?"

**முஹம்மது:** "அவர்கள் அறிவு குறைபாடு இருப்பதை, அவர்களின் சாட்சி ஒரு ஆணின் சாட்சியில் பாதியாக இருப்பதினால், நாம் அறிந்துக்கொள்ளலாம்".

**கேள்வி:** "மறுபடியும், ஏன் அவர்கள் சாட்சி ஒரு ஆணின் சாட்சியில் பாதியாக உள்ளது?"

**முஹம்மது:** "ஏனென்றால், அவர்கள் மூளையறிவு குறைவு".

**கேள்வி:** "குறைபாடு அவர்களில்லை, உம்முடைய வாதத்தில் உள்ளது".

**1) ஒரு பெண்ணின் சாட்சி ஒரு ஆணின் சாட்சியில் பாதி என்று குர்-ஆன் 2:282ல் சொன்னதால், பெண்கள் அறிவில் குறைவுள்ளவர்களா?** அல்லது

**2) பெண்கள் (பிறப்பிலிருந்தே) அறிவில் குறைவுள்ளவர்கள் என்று நீரும், உம் தூதரும் சொல்வதால், ஒரு பெண்ணின் சாட்சி ஒரு ஆணின் சாட்சியில் பாதியா?**

இதில் எது உண்மை. இது ஒரு தவறான, நடைமுறைக்கு ஒவ்வாத ஒரு வசனமாகும்.

இதை உலகத்தில் யார் சொல்லியிருந்தாலும், போகட்டும் நாக்கிலே எலும்பு இல்லை என்பதால் மனிதன் எதையானாலும் பேசுவான் என்று நான் விட்டுவிட்டுயிருப்பேன். ஆனால், எல்லாம் அறிந்த இறைவனாகிய "நீர் (அல்லா)" சொன்னது தான் என்னால் ஜீரணிக்கமுடியவில்லை.

## 2. மூளை அல்லது அறிவு என்பது பயிற்றுவிக்கவேண்டியது:

அல்லா, பிறக்கும்போது யாரும் புத்திசாலியாக பிறப்பதில்லை, மற்றும் முட்டாளாக பிறப்பதில்லை. நாம் அந்த மூளைக்குத்தரும் பயிற்சி, படிப்பு, சூழ்நிலை மற்றும் நண்பர்கள் முலமாக மனிதன் (ஆண், பெண்), அறிவாளியாகவோ அல்லது சிறிது அறிவில் குறைவுள்ளவனாகவோ மாறுகிறான். இதில் ஆண்கள் அறிவில் எப்போதும் சிறந்து விளங்குவார்கள், பெண்கள் முட்டாள்களாக இருப்பார்கள் என்றுச் சொல்வது மிகப்பெரிய தவறாகும். பிறக்குப்போது மூளைவளர்ச்சி குன்றியவர்களை நாம் இதில் செர்த்துக்கொள்ளக்கூடாது. அப்படி சேர்த்துக்கொண்டாலும் இதிலும் இருவர் ஆண் பெண் உண்டு.

என் மனைவி, அல்லது சகோதரி அறிவில் சிறிது குறைவுள்ளவள், பக்தியில் அதிக ஈடுபாடு காட்டுவதில்லை என்றுச் சொல்ல முஹம்மதுவிற்கு உரிமை உண்டே தவிர, உலக மொத்த பெண்ணினமே, அறிவில் குறைவுள்ளவர்களாக இருப்பார்கள், எனவே அவர்களின் சாட்சி ஆணின் சாட்சியில் பாதி என்றுச் சொல்ல அவருக்கு உரிமையில்லை.

பகுத்தறிவு, நேர்மை, நீதி, நியாயம், உண்மை, பொய், கடமை இவைகளின் இனம் (Sex) என்ன அல்லா? ஆணா அல்லது பெண்ணா? ஆண்கள் எப்போதும் நேர்மையாகவே இருப்பார்கள், பெண்கள் நேர்மை தவறுவார்கள் என்றுச் சொல்லி, இவைகளுக்கு ஒரு இனத்தை(Sex) கொடுத்த பெருமை இஸ்லாமையேச் சாரும்.

பெண்களை தலைவர்களாக நியமித்தால், அந்த நாடு அல்லது நிறுவனம் முன்னேறாது என்று முஹம்மது சொல்லியிருப்பது இப்போதுள்ள மனிதனுக்குத் தெரிந்தால், அவன் எவ்வித கஷ்டத்தில் இருந்தாலும், ஒரு நிமிடம் தன்னை மறந்து சிரித்துவிடுவான் அல்லா!....

புகாரி 4425. அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்

ஜமல் போர் சமயத்தில், அதில் ஈடுபட்டவர்களுடன் நானும் சேர்ந்துகொண்டு (ஆயிஷா(ரலி) அவர்களுக்கு ஆதரவாகப்) போரிட முனைந்தபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்றிருந்த ஒரு சொல் எனக்குப் பயனளித்தது. பாரசீகர்கள் கிஸ்ராவின் மகளைத் தங்களுக்கு அரசியாக்கிவிட்டார்கள் எனும் செய்தி இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, அவர்கள் '**தம் ஆட்சியதிகாரத்தை ஒரு பெண்ணிடம் ஒப்படைத்த சமுதாயம் ஒருபோதும் உருப்படாது**" என்று கூறினார்கள். (இதுதான் எனக்குப் பயனளித்த நபி(ஸல்) அவர்களின் சொல்.) Volume :5 Book :64"

### இதோ உலகத்தின் சரித்திரத்தில் நீங்கா இடம்பிடித்த சில பெண் முத்துக்கள்:

1. 1901 லிருந்து இன்றுவரை 33 பெண்கள் நோபல் பரிசுகள் பெற்றுயிருக்கின்றனர்.

2. மேரி கியுரி இரண்டு முறை நோபல் பரிசு வென்றவர் (1903, 1911)பொலோனியம் மற்றும் ரேடியம் கண்டுபிடித்ததற்காக (உலகத்தின் பெண் தலைவர்களின் பட்டியல் புகைப்படத்துடன் - WORLDWIDE GUIDE TO WOMEN IN LEADERSHIP)

3. சரோஜினி நாயுடு, அன்னை தெரேசா, இந்திய பிரதம மந்திரியாக இருந்த இந்திரா காந்தி, இலங்கை பிரதமர் பண்டாரநாயகே, தமிழ்நாட்டின் முன்னால் உயர்நிதீ மன்றத்தின் நீதிபதி பாத்திமா பீவி அவர்கள்,

இந்தியாவின் முதல் ஐ.பி.எஸ் கிரன் பேடி அவர்கள், இமயமலை சிகரத்தை அடைந்த முதல் ஜப்பானிய பெண் "ஜுன்கோ டெபை - ஆண்டு 1975" இன்னும் பலர்.

4. உம்முடைய சட்டம் நடைபெறும் சவுதி அரேபியாவில் பெண்கள், கார் ஓட்டுவதற்கு முன்பாகவே , காபிர் நாடாகிய (என் அருமை தாய் நாடு) இந்தியாவின் அருமை புதல்வி "கல்பனா சாவ்லா" வின்னிற்கு ராக்கெட்டில் சென்று விட்டாள். உம்முடைய சட்டம் நடைபெறும் நாட்டின் பெண்கள் தேர்தலில் ஓட்டுரிமை பெறுவதற்குள், காபிர் நாடுகளில் பெண்கள் முதலமைச்சர்கள், பிரதமமந்திரிகள் ஆகிவிடுகின்றனர்.

இவர்களின் அறிவு குறைபாடுள்ளதா? அல்லது நீங்கள் சொன்னது இஸ்லாமிய பெண்களுக்கு மட்டும் தானா? அல்லா, இஸ்லாமிய பெண்களையும் படிக்க வையுங்கள், "ஷீரின் எபாடி" போன்ற பல பெண்கள் நொபல் பரிசுகளை வெல்வார்கள்.

5. சரித்திரத்தில் முதன்முறையாக ஒரு இஸ்லாமிய பெண்ணிற்கு "2003 அமைதி நோபல் பரிசு" கிடைத்தது. அவர் தான் "ஷீரின் எபாடி". நான் ஒன்று சொல்லட்டுமா அல்லா? இந்த பரிசு இப்பெண்மனிக்கு எதற்காகத் கிடைத்தது தெரியுமா? இவர் ஈரானில் உள்ள பெண்களுக்கு எதிராக நடக்கும் இழி செயல்களிலிருந்தும், கொடுமைகளிலிருந்தும் காப்பாற்றும்படியாக அதிகமாக உழைத்ததால் தான்.

இவர் வழக்கறிஞராக பல ஆண்டுகள் பெண்களுக்கு சேவைசெய்தார். இவருக்கு நீதிபதியாக பதவி உயர்வு கிடைக்கும்போது, ஈரானின் இமாமகள், இது இஸ்லாமிற்கு எதிரானது, ஒரு பெண்ணின் அறிவுரையை ஆண்கள் கேட்கக்கூடாது என்றும், பெண்களை ஆளுகை செய்கிறவர்களாக நியமிக்கக்கூடாது என்றும் ஹதீஸில் முஹம்மது சொல்லியிருக்கிறார், எனவே இது செல்லாது என்றுச் சொல்லி, இவரை நீதிபதி பதவியிலிருந்து நீக்கிவிட்டார்கள்.

இவர் தன் முயற்சியை விடாது போராடிக்கொண்டிருந்தார். 15 ஆண்டுகளுக்கு பிறகு இதே இமாம்கள், இதே இஸ்லாம், இது செல்லும் என்றுச் சொல்லி மறுபடியும், இவரை நீதிபதி செய்தார்கள்.இவருடைய 15 ஆண்டுகளின் சேவை இஸ்லாம் சட்டத்தால் வீணாக்கப்பட்டது. எத்தனை பெண்களின் வாழ்க்கை மலர்ந்திருக்குமோ, தெரியாது. இதற்கெல்லாம் நீர் தான் காரணம். உம்முடைய பதில் என்ன அல்லா?

Because of this, we all spent a lot of time investigating whether this was really true. We read, researched, and wrote articles about it. Finally, after 15 years, I'm happy to say that they have accepted that women can be judges. At the moment, we have two female judges in the Appeal Courts. So you see, when they said women couldn't be judges, they said it was because Islam had said so. But now they say Islam allows female judges, so my point is that with time, interpretations differ. Source: Shirin Ebadi Interview

### 3. இந்த வசனத்தினால் பெண்களுக்கு என்ன தீமை நடந்துவிடுகிறது என்று கேட்கிறீர்களா?

பாகிஸ்தானில் "ஹுதூத் சட்டம்" என்று ஒரு இஸ்லாமிய சட்டம் இருந்தது. குர்-ஆன் படியும், ஹதிஸ்படியும் தண்டனை (ஷரியா) கொடுப்பது தான் இதன் நோக்கம். இது 1979ல் கொண்டுவரப்பட்டது, 2006ல் ரத்துசெய்யப்பட்டது. இச்சட்டத்தின் கீழ் இன்னும் ஆயிரக்கணக்கான வழக்குகள் நிலுவையில் உள்ளது. இதன்படி,ஒரு பெண்ணை ஒருவன் கற்பழித்துவிட்டால், அந்தப் பெண், நான்கு ஆண்களை சாட்சியாக் கொண்டுவர வேண்டும், கொண்டுவரமுடியவில்லையானால் அவளுக்கு வேசி என்று பெயர் சூட்டி, தண்டனை அளிக்கப்படும், சில நேரங்களில் கல்லெரிந்தும், ஊரின் நடுவில் தூக்கிலிடப்பட்டும் கொல்லப்படுவாள். இப்படி பல பெண்கள், ஒவ்வொரு இஸ்லாமிய நாட்டிலும் அழிந்துக்கொண்டுவருகிறார்கள்.

மூலம்:Wikipedia

In Pakistan, rape is dealt with under Islamic laws known as the Hudood Ordinances. These criminalise all sex outside marriage. So, under Hudood, if a rape victim fails to present four male witnesses to the crime, she herself could face punishment. This has made it almost impossible to prosecute rape cases. According to the country's independent Human Rights Commission, a woman is raped every two hours and gang-raped every eight hours in Pakistan. These figures are probably an under-estimation as many rapes are not reported. மூலம்: BBC

[19 வயது ஈரானின் நாஜினைன், நிலையை இங்கு படிக்கவும்]

அல்லாஹ், இதற்கு பதில் சொல்லும்

1. எந்த ஒரு சண்டாளனாவது, நான்கு சாட்சிகளை வைத்துக்கொண்டு இப்படிப்பட்ட காரியத்தைச் செய்வானா?

2. இப்படிப்பட்ட சட்டம் நாட்டில் இருந்தால், சில விஷமிகளுக்கு இப்படிப்பட்ட் வேலைகளைச் செய்ய அதிக தைரியம் வருமல்லவா?

3. இப்படிப்பட்ட வழக்குகள் பகிஸ்தானில் 2,10,000 நிலுவையில் உள்ளதே!, இந்த பெண்களின் நிலை என்ன?

4. இதற்கெல்லாம் காரணம் நீரல்லவோ அல்லா?

5. பெண்களின் அறிவு குறைவு என்று தெரிந்த உமக்கு, ஆண்களின் எண்ணங்கள் எப்படியிருக்கும் என்று தெரியாமல் போனதென்ன?

முடிவாக அல்லா, என் கேள்விகளை எல்லாம், உமக்கு தெரிவித்துள்ளேன். இன்னும் பல கேள்விகள் உள்ளது. அடுத்த கடிதத்தில் எழுதுகிறேன். ஒன்று மட்டும் நிச்சயம், "எந்த சமுதாயத்தில் பெண்கள் முன்னேறவில்லையோ, அந்த சமுதாயம் முன்னேறமுடியாது.".

இப்படிக்கு

ஆயிஷா

இந்தியா

---

ஆயிஷாவின் இதர கட்டுரைகள்
உமரின் இதர கட்டுரைகள்/மறுப்புக்கள்

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/ayeshaletters/ayeshaletter1.html

# 47. இஸ்லாமியர்களின் குற்றச்சாட்டு 1: ஏவாளும் தேவனின் சாபமும்

பைபிளில் பெண்கள் பாகம் 2

சில எதிர்வாதங்களுக்கு பதில்கள்

சாம் ஷமான்

பரிசுத்த வேதாகமத்தில் பெண்களின் நிலையைப் பற்றிய ஆராய்ச்சியை நாம் தொடர்வோம். தேவனுடைய வார்த்தையாகிய பைபிள் பெண்களை மட்டுப்படுத்துகிறது என்று நிருபிப்பதற்காக இஸ்லாமியர்கள் முன்வைக்கும் குற்றச்சாட்டிற்கு பதிலை நாம் இக்கட்டுரையில் காண்போம். ஏன் அவர்கள் இப்படி குற்றம்சாட்டுகிறார்கள் என்றால், பைபிள் தேவனின் வார்த்தை இல்லை அல்லது பைபிளில் சொல்லப்பட்ட அனைத்தும் தேவனிடமிருந்து வரவில்லை என்பதை நிருபிப்பதற்குத் தான் அவர்கள் இப்படி கேள்வியை எழுப்புகிறார்கள். கர்த்தராகிய இயேசுக் கிறிஸ்து அனுமதித்தது போல, ஏதாவது புதுவகையான குற்றச்சாட்டு எழும்புமானால், அதனை நாம் நேர்த்தியாக பகுத்து, ஆராய்ந்து நம்முடைய பதிலை இக்கட்டுரையில் தருவோம். இப்போது நாம் எட்டு முக்கியமான குற்றச்சாட்டுகளை நம் பதிலுக்காக எடுத்துக் கொள்வோம். மற்றும் நாம் கொடுத்த முதல் மறுப்புப்போல இந்த பதிலும் பரிசுத்த வேதம் பெண்களை கவுரவப்படுத்துகிறது, மற்றும் அவர்களை கண்ணியப்படுத்துகிறது என்பதை ஆதாரத்தோடு நிருபிக்கிறது.

**இஸ்லாமியர்களின் குற்றச்சாட்டு 1**

ஆதியாகமம் 3ம் அதிகாரத்தின் அர்த்தத்தை முஸ்லீம்கள் திருத்தி, ஏவாள் தடுக்கப்பட்ட மரத்தின் கனியை புசித்து, அவள் தான் முழு உலகத்தையும் பாவத்தில் தள்ளினாள் மற்றும் ஆதாமையும் பாவம் செய்ய தூண்டினாள் என்ற பொருள் வரும் படி, முஸ்லீம்கள் பொருள் கூறுகிறார்கள். இதனால் தான் பெண் சபிக்கப்பட்டாள் மற்றும் பிரசவ நேரத்தில் வரும் வேதனைக்கும், கஷ்டத்திற்கும் இது தான் காரணம் என்று இவர்கள் திருத்தி பொருள் கூறுகிறார்கள். பிறகு இதே முஸ்லீம்கள் "பைபிளைப் போல மொத்த குற்றச்சாட்டை ஏவாள் மீது சுமத்தாமல், குர்ஆன் இந்த பாவத்திற்கு இருவரும் சமமாக பொறுப்பு வகிக்கிறார்கள் என்றுச் சொல்கிறது என்று" சொல்கிறார்கள். ஆனால், ஏவாள் அந்த மரத்தின் கனியை புசித்தாள் என்று குர்ஆன் சொல்வதுமில்லை அல்லது இவர்கள் சொல்லும் குற்றச்சாட்டையும் பைபிள் மீது சுமத்துவதுமில்லை.

முதல் முதலாக நாம் அறியவேண்டியது என்னவென்றால், "தேவன் சபித்ததால் தான் பெண்கள் கர்ப்பமாகிறார்கள், மற்றும் பிள்ளை பெறுகிறார்கள்" என்று பரிசுத்த பைபிள் சொல்வதில்லை. ஆனால், இதற்கு எதிர்மறையாக இருப்பது தான் உண்மையானது. அதாவது, பெண்கள் பிள்ளைகளை பெறுவதும் அதன் மூலம் மனித இனம் பெருகவேண்டும் என்பது தான் ஆரம்பமுதலே தேவன் நியமித்த சட்டம் அல்லது நியதியாகும். இந்த நியதியை அவர் இவர்களின் வீழ்ச்சிக்கு முன்பே திட்டமிட்டுள்ளார்:

“பின்பு தேவன் அவர்களை நோக்கி: நீங்கள் பலுகிப் பெருகி, பூமியை நிரப்பி, அதைக் கீழ்ப்படுத்தி, ( ‘Be fruitful and multiply, and fill the earth and subdue it;) சமுத்திரத்தின் மச்சங்களையும் ஆகாயத்துப் பறவைகளையும், பூமியின்மேல் நடமாடுகிற சகல ஜீவ ஜந்துக்களையும் ஆண்டுகொள்ளுங்கள் என்று சொல்லி, தேவன்

அவர்களை ஆசீர்வதித்தார். பின்னும் தேவன்: இதோ, பூமியின் மேல் எங்கும் விதைதரும் சகலவிதப் பூண்டுகளையும், விதைதரும் கனிமரங்களாகிய சகலவித விருட்சங்களையும் உங்களுக்குக் கொடுத்தேன், அவைகள் உங்களுக்கு ஆகாரமாயிருக்கக் கடவது; பூமியிலுள்ள சகல மிருக ஜீவன்களுக்கும், ஆகாயத்திலுள்ள சகல பறவைகளுக்கும், பூமியின்மேல் ஊரும் பிராணிகள் எல்லாவற்றிற்கும் பசுமையான சகல பூண்டுகளையும் ஆகாரமாகக் கொடுத்தேன் என்றார்; அது அப்படியே ஆயிற்று. அப்பொழுது தேவன் தாம் உண்டாக்கின எல்லாவற்றையும் பார்த்தார், அது மிகவும் நன்றாயிருந்தது; சாயங்காலமும் விடியற் காலமுமாகி ஆறாம் நாள் ஆயிற்று. ஆதியாகமம்." 1:28-31

வேத வசனங்கள் சொல்கின்றன, அதாவது பிள்ளைகள் கர்த்தரால் கிடைத்த ஆசீர்வாதங்கள், இதனால் பெண்கள் இரட்சிப்பை பெறுவார்கள்.

"இதோ, பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்தரம், கர்ப்பத்தின் கனி அவரால் கிடைக்கும் பலன். வாலவயதின் குமாரர் பலவான் கையிலுள்ள அம்புகளுக்கு ஒப்பாயிருக்கிறார்கள். அவைகளால் தன் அம்பறாத்தூணியை நிரப்பின புருஷன் பாக்கியவான்; அவர்கள் நாணமடையாமல் ஒலிமுக வாசலில் சத்துருக்களோடே பேசுவார்கள்." சங்கீதம் 127:3-5

"கர்த்தருக்குப் பயந்து, அவர் வழிகளில் நடக்கிறவன் எவனோ, அவன் பாக்கியவான். உன் கைகளின் பிரயாசத்தை நீ சாப்பிடுவாய்; உனக்குப் பாக்கியமும் நன்மையும் உண்டாயிருக்கும். உன் மனைவி உன் வீட்டோரங்களில் கனிதரும் திராட்சக்கொடியைப்போல் இருப்பாள்; உன் பிள்ளைகள் உன் பந்தியைச் சுற்றிலும் ஒலிவமரக் கன்றுகளைப்போல் இருப்பார்கள். இதோ, கர்த்தருக்குப் பயப்படுகிற மனுஷன் இவ்விதமாய் ஆசீர்வதிக்கப்படுவான்." சங்கீதம் 128:1-4

"அப்படியிருந்தும், தெளிந்த புத்தியோடு விசுவாசத்திலும் அன்பிலும் பரிசுத்தத்திலும் நிலைகொண்டிருந்தால், பிள்ளைப்பேற்றினாலே இரட்சிக்கப்படுவாள்." 1 தீமோத்தேயு 2:15

இதுவரை நாம் பார்த்த விவரங்களின் படி பிள்ளைபேறு என்பது சாபத்தினால் வந்த ஒரு தண்டனை அல்ல என்பது தெளிவாகும். இதற்கு பதிலாக, அந்த சாபம் எப்படிப்பட்டது என்றால், ஏவாளின் இந்த பாவத்தினால், பெண்கள் பிள்ளைபெறுகின்ற நேரத்தில் கஷ்டப்படுவார்கள் என்பது தான் உண்மை. அதாவது கர்ப்பமாவது சாபமல்ல, பிள்ளைபெறுவது சாமபல்ல ஆனால், அந்த வலி மட்டும் தான் சாபத்தின் மூலம் வந்தது.

இரண்டாவதாக, ஆதியாகமம் 3ம் அதிகாராம் ஏவாளை மட்டுமல்ல, ஆதாமையும் குற்றப்படுத்துகிறது, அதனால் ஆதாமுக்கும் தண்டனை கொடுக்கப்பட்டது:

"பின்பு அவர் ஆதாமை நோக்கி: நீ உன் மனைவியின் வார்த்தைக்குச் செவிகொடுத்து, புசிக்கவேண்டாம் என்று நான் உனக்கு விலக்கின விருட்சத்தின் கனியைப் புசித்தபடியினாலே, பூமி உன் நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்; நீ உயிரோடிருக்கும் நாளெல்லாம் வருத்தத்தோடே அதின் பலனைப் புசிப்பாய். அது உனக்கு முள்ளும் குருக்கும் முளைப்பிக்கும்; வெளியின் பயிர்வகைகளைப் புசிப்பாய். நீ பூமியிலிருந்து எடுக்கப்பட்டபடியால், நீ பூமிக்குத் திரும்புமட்டும் உன் முகத்தின் வேர்வையால் ஆகாரம் புசிப்பாய்; நீ மண்ணாயிருக்கிறாய், மண்ணுக்குத் திரும்புவாய் என்றார்." ஆதியாகமம் 3:17-19

"To Adam he said, 'Because you listened to your wife and ate from the tree about which I commanded you, "You must not eat of it," Cursed is the ground BECAUSE OF YOU; through painful toil you will eat of it all the

days of your life. It will produce thorns and thistles for you, and you will eat the plants of the field. By the sweat of your brow you will eat your food until you return to the ground, since from it you were taken; for dust you are and to dust you will return.'" Genesis 3:17-19

மூல மொழியாகிய எபிரேய மொழியில் இந்த வசனங்கள் ஆதாம் மற்றும் ஏவாள் இருவரும் சரி சமமாக தங்கள் செயல்களுக்கு பொறுப்பு வகிக்கும் படி எழுதப்பட்டுள்ளது:

பிள்ளைப்பெறும் போது ஏற்படும் வலி, அதாவது ஏவாளுக்கு கொடுக்கப்பட்ட சாபம் என்றுச் சொல்லும் அந்த வலியானது, மூல மொழியிலும் அல்லது ஆரம்பகால யூத விவரங்களிலிருந்தும் சரியான முறையில் ஆராயப்படவில்லை. ஆதியாகமம் 3:16ஐ ஆதாரமாகக் கொண்டு அந்த வலியானது தவிர்க்க முடியாதது, அதை ஏவாளின் பாவத்திற்காக படைத்தவர் தண்டனையாக கொடுத்தார் என்றுச் சொல்கிறார்கள். எபிரேய மொழியில் உள்ள "etzev" என்ற வார்த்தைக்குத் தான் மொழிபெயர்ப்புகளில் "வலி" என்றும் "வேதனை" என்றும் மொழிபெயர்த்துள்ளார்கள். எபிரேய வார்த்தையாகிய "etzev" என்ற வார்த்தை ஆதியாகமம் 3:17ல் ஆதாமுக்காகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்த உண்மையைத் தான் பல மொழி பெயர்ப்பாளர்கள் கண்டுக் கொள்ளாமல் விட்டுவிட்டார்கள்! எபிரேய பைபிள் ஆங்கில மொழிபெயர்ப்பில் கீழ் கண்டவாறு இருக்கிறது:

"Unto the woman he said, I will greatly multiply thy sorrow (etzev) and thy pregnancy: in pain (etzev) thou shall bear children… And unto Adam he said,… cursed is the ground for thy sake; in toil (etzev) shalt thou eat of it all the days of thy life." (Hebrew Bible, 1965)

அவர் ஸ்திரீயை நோக்கி: நீ கர்ப்பவதியாயிருக்கும்போது உன் வேதனையை (etzev) மிகவும் பெருகப்பண்ணுவேன்; வேதனையோடே (etzev) பிள்ளை பெறுவாய்; …….. பின்பு அவர் ஆதாமை நோக்கி: …… பூமி உன் நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்; நீ உயிரோடிருக்கும் நாளெல்லாம் வருத்தத்தோடே (etzev) அதின் பலனைப் புசிப்பாய். ஆதியாகமம் 3:16-17

இந்த வார்த்தை பெண்ணுக்கு (ஏவாளுக்கு) பயன்படுத்தும்போது, பைபிள் மொழிப்பெயர்ப்பாளர்கள் "வேதனை – Pain " என்றும், அதே வார்த்தை ஆணுக்கு (ஆதாமுக்கு) பயன்படுத்தும் போது "வருத்தம் - Toil" என்றும் மொழிபெயர்த்துள்ளார்கள். இப்படிப்பட்ட மொழிபெயர்ப்பிலிருந்து நாம் ஒன்றை தெளிவாக புரிந்துக்கொள்ள முடியும், மொழிபெயர்ப்பாளர் தன் சமூக கலாச்சார நம்பிக்கையின் படி மொழிப்பெயர்த்துள்ளார். மிகவும் சரியான பொருள் கூறவேண்டுமானால், குழந்தை பெறும் போது ஏற்படுவது வருத்தம் (Toil) அல்லது வேலை (Labour) என்று நாம் நிதானிக்கலாம் (The best description of giving birth is toil, or labor). ஏவாளுக்கு முதல் குழந்தையாகிய காயின் பிறந்த போது, எந்த வேதனையும், மற்ற எந்த பிரச்சனையையும் பற்றிச் சொல்லாமல், ஒரு மகிழ்ச்சியான வாசகமே குறிப்பிடப்பட்டுள்ளது, "...காயீனைப் பெற்று, கர்த்தரால் ஒரு மனுஷனைப் பெற்றேன் என்றாள்" (ஆதியாகமம் 4:1). "தல்மத் (Talmud)" தில் ஏவாளின் "சாபத்தை" 10 பாகங்களாக ஒரு பெண்ணின் வாழ்க்கை முழுவதும் தொடர்வது போல பிரிக்கப்பட்டுள்ளது, அதே போல, ஆதாமின் "சாபத்தையும்", ஏவாளுக்காக பிரிக்கப்பட்டது போலவே 10 பாகங்களாக பிரிக்கப்பட்டுள்ளது. (Helen Wessel, "Biblical and Talmudic Images of Childbirth", in "The Encyclopedia of Childbearing", ed. Barbara Katz Rothman, 1993, p. 29)

எபிரேய பைபிளின் கிரேக்க மொழிப்பெயர்ப்பை 70 வேத பண்டிதர்கள் ஒன்றாக சேர்ந்து இயேசுவிற்கு 300 ஆண்டுகளுக்கு முன்பாகவே கிரேக்க மொழியில் மொழிபெயர்த்தார்கள். இந்த பண்டிதர்கள், ஆதியாகமம் 3:16ல் வரும் "etzev" என்ற வார்த்தைக்கு, கிரேக்க வார்த்தையாக "lupe" என்ற வார்த்தையை பயன்படுத்தி

மொழிபெயர்த்துள்ளார்கள். Lupe என்ற கிரேக்க வார்த்தையின் பொருள் "மனவெழுச்சி or உணர்ச்சிவேகம் – Emotion " என்பதாகும். “chul” , “yalad” என்ற எபிரேய வார்த்தைகளை கிரேக்க மொழியில் மொழிபெயர்க்க மூன்று வார்த்தைகளை பயன்படுத்தியுள்ளனர். இந்த மூன்று வார்த்தைகள் gennao, tikto மற்றும் odino என்பவைகளாகும். “Gennao” என்ற வார்த்தைக்கு பொருள் "பிள்ளையை பெற்று இருப்பதாகும்", இந்த வார்த்தை பெற்றோர் இருவருக்கும் பயன்படுத்துவர். Tikto என்ற வார்த்தைக்கு பொருள் "பிள்ளையை பெறுவது (To Give Birth)" என்பதாகும். Odino என்ற வார்த்தைக்கு பொருள், குழந்தை பெறும் போது ஏற்படும் கஷ்டமாகும் (Labor in Birth). இந்த மூன்று சாதாரண வார்த்தைகள் கிரேக்க புதிய ஏற்பாட்டில் காணப்படுகிறது. ஆனால் மறுபடியும், பிள்ளை பெறுவது என்பது ஒரு பெண்ணின் வாழ்க்கையில் மிகவும் சந்தோஷமான ஒரு அனுபவம் என்று பைபிள் கூறினாலும், மொழிபெயர்ப்பாளர்கள், பிள்ளை பெறும் போது ஏற்படும் வலியாக நினைத்துக்கொண்டே மொழி பெயர்க்கின்றனர். (Source)

ஏவாள் தான் முதன் முதலாக பழத்தை சாப்பிட்டாள் என்றும், அல்லது ஆதாமை ஏவாள் தான் சாப்பிடும் படி ஏவினாள் என்றும் குர்ஆன் சொல்லாவிட்டாலும், இது குர்ஆன் சரியாகச் சொன்னது என்று அர்த்தமாகாது. உண்மையில், முஸ்லீம்கள் நினைப்பது போல "குர்ஆன் ஒரு முழுமையான வழிகாட்டி" என்பதற்கு எதிராக இது உள்ளது.

உதாரணத்திற்கு சொல்லவேண்டுமானால், பைபிளைப் போல அல்லாமல் குர்ஆன் பல முக்கியமான விவரங்களைச் சொல்வதில்லை. அதனால் பல குளறுபடிகள் ஏற்படுகின்றன, புரியாமல் போகின்றன. அதாவது, யார் முதலாவது பழத்தை உண்டார்கள் என்ற மிக முக்கியமான விவரத்தை குர்ஆன் சொல்லவில்லை, அதனால் குழப்பம் நீடிக்கிறது. யார் முதலில் சாப்பிட்டார்கள் என்று சொல்லாமல் விட்டதோடு மட்டுமல்லாமல், ஏவாளின் பெயரையும் குர்ஆன் சொல்லவில்லை!

இப்படி குர்ஆன் சொல்லும் விவரங்களில் ஒரு தெளிவு இல்லாமல், விவரங்கள் முழுமை பெறாமல் இருப்பதினால், இஸ்லாமியர்கள் எந்த ஒரு விவரத்திற்கும் பைபிளை சார்ந்து இருக்கவேண்டிய நிலையில் உள்ளார்கள் அல்லது தள்ளப்படுகிறார்கள். அப்போது தான் அவர்களுக்கு குர்ஆன் சொல்லும் விவரங்களை புரிந்துக்கொள்ள முடிகிறது. குர்ஆன் என்பது தெளிவாக இல்லை என்றும் அது குழப்பம் தரக்கூடியதாக உள்ளது என்றும் முஸ்லீம்களும் உணர்ந்துள்ளார்கள். இப்படிப்பட்ட பிரச்சனை குர்ஆனில் உள்ளது என்று உணர்ந்து மற்றும் அதை வெளிப்படையாக ஒத்துக்கொண்டும் உள்ள நபர் முஹமத் எம். அய்யூப் (Mahmoud M Ayoub) என்பவர் ஆவார். இவரது குர்ஆன் உரை 2:30-38 இவ்விதமாக கூறுகிறது.

முந்தைய சூராக்களில் சொல்லப்பட்ட ஆதாமின் கதை (30-38), மக்காவின் பிந்தைய காலத்திற்கு சம்மந்தப்பட்டவைகளாகும். ஆதாமை உண்டாக்கிய விவரங்கள், தேவதூதர்கள் அவருக்கு தலைவணங்கியது, ஆதாம் தோட்டத்தில் வாழ்ந்தது, மற்றும் அடுத்தபடியாக அவரை தோட்டத்தை விட்டு வெளியே அனுப்பிய விவரங்கள் அனைத்தும் சிறிது விவரமாக சொல்லப்பட்டுள்ளது. ஏற்கனவே நன்றாக தெரிந்த கதைக்கு இந்த வசனங்கள் உரையாக உள்ளன, ஏனென்றால், அவைகள் புதிய பிரச்சனைகளை உருவாக்குகின்றன, மற்றும் அவைகள் மற்ற வசனங்களுக்கு முன்பாக வருகின்றன, மற்றும் இவைகள் வெளிப்படையாக பொருள் கூறும் வசனங்களாகும். இந்த ஒன்பது வசனங்கள் பல கேள்விகளையும் மற்றும் கருத்து வேறுபாட்டிற்கு இடமான பிரச்சனைகளையும் எழுப்பியுள்ளது. ஏன் இறைவன் தான் ஒரு பிரதிநிதியை பூமியில் உருவாக்கும் திட்டம் பற்றி தேவதூதர்களிடம் சொல்லவேண்டும்? ஆதாமின் முதல் சந்ததி ஒரு தீமையான வேலையை செய்வான் என்று தேவதூதர்களுக்கு எப்படி தெரிந்தது? தேவதூதர்கள் இறைவனின் சித்தம் மற்றும் ஞானம் பற்றி எப்படி கேள்வி கேட்க முடிந்தது? எப்படி இறைவனின் இந்த பிரதிநிதி உருவாக்கப்பட்டான், மற்றும் அவ்வளவு சீக்கிரத்தில் ஏன் அவன் இறைவனின் கட்டளையை மீறி தடை செய்யப்பட்ட பழத்தை சாப்பிட்டான்? அந்த

தடைசெய்யப்பட்ட மரம் எப்படிப்பட்ட பழத்தை தந்தது? அந்த சாத்தான் (இப்லீஷ்) என்பவர் யார்? எப்படி அவன் அந்த தோட்டத்தில் நுழைந்து, களங்கமில்லாத ஆதாம் மற்றும் அவன் மனைவியை இறைவனின் கட்டளையை மீறச்செய்தான்? ஆதாம் எவ்வளவு காலம் பரதீசில் இருந்தார்? அவரது துணையான ஏவாள் எப்போது உருவானாள், மற்றும் அவர்களது பாவம் மற்றும் அவர்கள் தோட்டத்தை விட்டு வெளியேறிய விவரங்கள் அனைத்தும் மிகவும் சுருக்கமாக குர்ஆனில் சொல்லப்பட்டுள்ளது. குர்ஆன் பல கோள்விகளுக்கு பதிலே சொல்லாமல் அப்படியே விட்டுள்ளது . **உதாரணத்திற்கு சொல்லவேண்டுமானால், ஏவாளின் பெயரையும் குர்ஆன் சொல்வதில்லை, மற்றும் ஏவாள் எப்படி உருவாக்கப்பட்டாள் என்றும் குர்ஆன் சொல்வதில்லை. இந்த எல்லா கேள்விகளுக்கு பதில்கள் மற்றும் இதர கேள்விகளுக்கு பதில் தேவையானால், குர்ஆனுக்கு உரை எழுதுபவர்கள் "வேதம் கொடுக்கப்பட்டவர்களிடம் சென்று தெரிந்துக்கொள்ளவேண்டும்"... The Qur'an leaves many other questions UNANSWERED. It does not, for example, MENTION EVE BY NAME, or the manner in which she was created. For the answers to these and other questions, commentators HAD TO RESORT TO THE PEOPLE OF THE BOOK...** (Ayoub, The Qur'an and Its Interpreters - Volume 1 [State University of New York Press, Albany 1984], p. 73; bold and capital emphasis ours)

ஒருவர் ஆதாம் மற்றும் ஏவாளின் கதைப் பற்றி இஸ்லாமிய அறிஞர்களை அணுகினால், அவர்கள் அனைவரும் பைபிள் சொல்லும் நிகழ்ச்சி விவரங்களை பெரும்பான்மையாக ஏற்றுக் கொள்கின்றனர்:

(35) டபரி என்பவர் தன் தஃப்சீருக்காக ஆரம்பகாலத்தில் அதிகாரபூர்வமாக சொன்னவர்கள் வரை சென்று தன் விவரங்களை சேகரித்துள்ளார். நபியின் தோழர்களாகிய இபின் அப்பாஸ் இபின் மசூத் மற்றும் இதர தோழர்களின் அதிகாரபூர்வமாக சொல்லப்பட்ட ஹதீஸாக கீழ்கண்டவாறு கூறுகிறார், "பரதீசில் ஆதாம் தனிமையில் இருந்தார், அவருக்கு துணையாக யாரும் அவருக்கு இல்லாமல் இருந்தது. அவர் தூங்கச்சென்றார் மற்றும் அவர் விழித்து பார்க்கும் போது ஒரு பெண் தன் பக்கத்தில் இருப்பதைக் கண்டார், அந்த பெண்ணை இறைவன் ஆதாமின் விலா எலும்பினால் உருவாக்கியிருந்தார்". ஆதாம், ஏவாளை நோக்கி, "நீ யார்?" என்றார், அதற்கு ஏவாள் "நான் ஒரு பெண்" என்றார். "நீ ஏன் உருவாக்கப்பட்டாய்?" என்று ஆதாம் கேட்டார். "உங்களுக்கு ஒரு துணையாக இருக்கும் படியாக நான் உருவாக்கப்பட்டேன்" என்று ஏவாள் கூறினார் (Tabari, I, p. 513). இபின் அப்பாஸ் சொன்னதாக பல ஹதீஸ்கள் உண்டு, அதாவது, 'இறைவன் ஏவாளை ஆதாமின் இடது விலா எலும்பினால் உருவாக்கினார்' என்று இபின் அப்பாஸ் சொன்னார். இந்த விவரம் அவர்களுக்கு வேதத்திற்கு உரியவர்களிடமிருந்து கிடைத்ததாகவும், முக்கியமாக யூதர்களிடமிருந்து கிடைத்ததாக அவர்கள் கூறினார்கள். ஆதாம் பரதீசில் (தோட்டத்தில்) வாழ்வதற்கு முன்பாக ஏவாள் உருவாக்கப்பட்டாரா அல்லது அதற்கு பின்பு உருவாக்கபப்ட்டாரா என்று அவர்களுக்குள் பல கருத்துக்கள் உடையவர்களாக இருந்தனர். ஆதாமின் மனைவியின் விவரம் பற்றி டபரி சொல்லும் போது, "தேவதூதர்கள், ஆதாமின் அறிவை சோதித்து அறிய விரும்பினர், அதனால், ஆதாமிடம் தேவதூதர்கள் 'ஓ ஆதாமே, உன் மனைவியின் (அவளின்) பெயர் என்ன?' என்றனர். அதற்கு ஆதாம், 'இவள் ஏவாள் (ஹவா)' என்றார். அவர்கள் 'ஏன் அவளை ஏவாள் (ஹவா) என்று அழைக்கிறாய்?' என்று கேட்டனர், அதற்கு ஆதாம், 'ஏனென்றால், அவள் உயிருள்ளவளாக இருப்பதினால்' என்று பதில் அளித்தார்" Because she was created of a living thing'" (Tabari, I, p. 518). (Ayoub, p. 82; bold emphasis ours)

ஏவாளுக்கு பெயர் வந்த முறைப் பற்றி ஆதாம் சொன்னதற்கும், இதைப்பற்றி பைபிள் சொன்னதற்கும் இடையே உள்ள வித்தியாசத்தை நாம் கவனிக்கவேண்டும். இந்த இடத்திலே, ஏவாள் என்று ஏன் அவளுக்கு பெயர் வந்தது என்றால், அவள் "உயிருள்ளவள் ஆவாள்" என்பதாக சொல்லப்பட்டுள்ளது. (ஆதாம் தன்னை ஏவாளை விட ஒரு படி அதிகமாக எண்ணி, தான் ஒரு மூலம் என்றும், தன் மூலமாக அவள் வந்தாள் என்றும்

கூறுகிறார்). ஆனால், பரிசுத்த பைபிள் சொல்கிறது, ஏவாளுக்கு அந்தப் பெயர் வந்ததற்கு காரணம், அவள் "உயிருள்ளவர்கள் அனைவருக்கும் தாயாக இருக்கிறாள்" என்பதாக.

“ஆதாம் தன் மனைவிக்கு ஏவாள் என்று பேரிட்டான்; ஏனெனில், **அவள் ஜீவனுள்ளோருக் கெல்லாம் தாயானவள்.**” ஆதியாகமம் 3:20

"The man called his wife's name Eve, **BECAUSE she was the mother of all living.**" Genesis 3:20

பரிசுத்த பைபிளில் ஏவாளுக்கு கொடுத்த மேன்மை மற்றும் கௌரவம், இஸ்லாமில் ஏவாளுக்கு கொடுத்ததை விட பலமடங்கு அதிகமாகவே உள்ளது என்பதை மிகவும் தெளிவாக புரிந்துக்கொள்ளலாம்.

சுன்னி சரித்திர ஆசிரியரும் மற்றும் உரையாளருமான அல் டபரி இன்னும் சிறிது முன்னுக்குச் சென்று, **'ஏவாளின் பாவத்தின் காரணமாக அல்லா பெண்களை முட்டாள்களாக ஆக்கினார்!'** என்றுச் சொல்கிறார்.

யூனுஸ் இபின் வஹப் இபின் ஜைத் என்பவரின் படி (இறைவனின் வார்த்தையின் உரையின்படி: "மற்றும் அவன் மெல்லியதாக பேசினான்"): சாத்தான் அந்த மரத்தைப் பற்றி ஏவாளிடம் மெல்லியதாகச் சொன்னான் மற்றும் ஏவாளை அந்த மரத்தினிடம் கொண்டுவருவதில் வெற்றிப்பெற்றான்; மேலும் ஆதாமுக்கு அம்மரம் நல்லதாக தென்படவைத்தான். அவர் தொடர்ந்தார். ஆதாமுக்கு ஏவாளிடம் ஒரு தேவை ஏற்பட்டப்போது, அவளை அழைத்தான், அவள் சொன்னாள்: நீங்கள் அந்த இடத்தில் போகாதவரையில் என்னால் முடியாது என்றாள். ஆதாம் அந்த இடத்தில் சென்ற போது, அவள் மறுபடியும் அவள்:"இல்லை, நீங்கள் அந்த மரத்தின் கனியை சாப்பிடாதவரையில் என்னால் முடியாது என்றாள்". அவர் தொடர்ந்தார். அவர்கள் இருவரும் அந்த மரத்தின் கனியை புசித்தார்கள், மற்றும் அவர்கள் அந்தரங்க உறுப்புக்கள் பற்றிய உணர்வை பெற்றார்கள் (வெட்கமடைந்தார்கள்). அவர் தொடர்ந்தார். ஆதாம், வெகுசீக்கிரமாக பரதீசுக்கு (தோட்டத்திற்கு)ச் சென்றார். அவரது இறைவன் அவரை அழைத்தார்: ஆதாமே! நீ என்னைவிட்டா ஓடப்பார்க்கிறாய்? ஆதாம் மறுமொழி அளித்தார்: இல்லை இறைவனே, ஆனால், உங்கள் முன்பாக நிற்பதற்கு நான் வெட்கப்படுகிறேன். இறைவன் ஆதாமை நோக்கி, இப்படி உனக்கு ஆவதற்கு என்ன காரணம் என்று கேட்டபோது, ஆதாம் சொன்னார்: 'ஏவாள் தான் காரணம் என் இறைவனே'. பின்பு இறைவன் சொன்னார்: 'அவள் செய்த செயலுக்காக, இனி அவ ளுக்கு ஒவ்வொரு மாதமும் உதிரப்போக்கு உண்டாகும்படி செய்வது என் கடமையாகும்'. நான் அவளை அறிவுள்ளவளாக (halimah) உருவாக்கியிருந்தாலும், இப்போது அவளை ஒரு முட்டாளாக ஆக்குகிறேன். மற்றும் அவள் கர்ப்பமாவதும், பிள்ளைபெறுவதும் மிகவும் சுலபமாக இருந்தாலும், இனி அவள் கர்ப்பமாகும் போது கஷ்டப்படும்படிச் செய்வேன், பிள்ளை பெறும்போது வேதனை அடையும்படிச் செய்வேன். இபின் ஜையத் கூறினார்: ஏவாளை தாக்கிய இந்த வேதனை தான் உலகத்தில் உள்ள பெண்களையும் தாக்கியது (Ibn Zayd said: Were it not for the affliction that affected Eve, the women of this world would not menstruate, **AND THEY WOULD BE INTELLIGENT** and, when pregnant, give birth easily) .

ஆகையால், மறுபடியும் குர்ஆனை விட பரிசுத்த பைபிள் மிகவும் தெளிவாகவும், மேன்மையாகவும் விவரங்களைச் சொல்கிறது. ஏனென்றால், குர்ஆன் முக்கியமான விவரங்களைச் சொல்ல தவறியது, அதே நேர த்தில் அந்த விவரங்களை பைபிள் விளக்கித்தருகிறது.

ஆங்கில மூலம்: Women in the Bible - Part 2 (Some Objections Considered)

---

# 48. மீட்பர் அவசியம் கடவுளாகத் தான் இருக்க வேண்டுமா?

## Is the Savior Necessarily God?

பொதுவான கேள்விகளுக்கு தொடர் பதில்கள்

சாம் ஷமான்

**கேள்வி:**

இயேசுவை "மீட்பர் – Saviour" எனச் சொல்லப்பட்டுள்ளதினால், கிறிஸ்துவர்கள் அவரைக் “கடவுள்” என வாதிடுகின்றனர். ஆனால், பழைய ஏற்பாட்டில் யேகோவா தேவன் ஒருவரே “மீட்பர்” எனச் சொல்லப்பட்டுள்ளது (ஏசாயா 43:11, 45:21, ஓசியா 13:4). இந்த வாதம், யேகோவா தேவன் ஒருவரே மீட்பராக இருப்பினும் அவர் தம் சித்தத்தை நிறைவேற்றுகையில் தமது பிரதிநிதியாக இன்னொருவரை நியமித்து அனுப்புகிறார் என்கின்ற விவரத்தை காணத் தவறுகிறது. உதாரணமாக, பழைய ஏற்பாட்டில், ஒத்னியேல் என்கின்ற ஒரு இஸ்ரவேலரை, இஸ்ரவேல் மக்களை மீட்க யேகோவா தேவன் பயன்படுத்தினார் எனப் பார்க்கிறோம். அவரும் கூட “மீட்பர்” என்றே அழைக்கப்படுகிறார்! (நியாயாதிபதிகள் 3:9, ஓபதியா 1:21). யேகோவா தேவன் ஒருவரே மீட்பர் எனச் சொல்லும் போது, அது, அவர் ஒருவரே மீட்பின் பிறப்பிடமாய் இருக்கிறார் என்றே உண்மையில் அர்த்தமாகின்றது. வேறு எவரையும் மீட்பினைக் கொண்டுவர தேவன் பயன்படுத்த முடியாது என இதனைப் பொருள் கொள்ளலாகாது. இதன் அடிப்படையில், இயேசு, தேவனின் பிரதிநிதியாக தேவனால் “மீட்பர்” எனப் அழைப்பட்டிருந்தால், அவரைக் “கடவுள்” என அழைப்பது எவ்விதத்தில் நிரூபணமாகும்?

**பதில்:**

யேகோவா தேவனுக்கு இணையாக வேறு எந்த இரட்சகரும் இல்லை எனச் சொல்லும் வேத வசனங்கள் இவைகளே:

“நானே அவரென்று நீங்கள் உணர்ந்து, என்னை அறிந்து விசுவாசிக்கும்படிக்கு நீங்களும் நான் தெரிந்து கொண்ட என் தாசனும் எனக்குச் சாட்சிகளாயிருக்கிறீர்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்; எனக்கு முன் ஏற்பட்ட தேவன் இல்லை, எனக்குப் பின் இருப்பதும் இல்லை. நான், நானே **கர்த்தர்; என்னையல்லாமல் ரட்சகர் இல்லை**” (ஏசாயா 43:10-11).

“நான் உன்னை எகிப்து தேசத்திலிருந்து அழைத்து வந்தது முதல் **உன் தேவனாகிய கர்த்தராயிருக்கிறேன்;**

ஆகையால் நீ என்னையன்றி வேறே தேவனை அறிய வேண்டாம்; **என்னையன்றி இரட்சகர் ஒருவரும் இல்லை**" (ஓசியா 13:4).

ஆனால் இந்தக் கேள்வியிலேயே உள்ளபடி "**இரட்சகர்/ மீட்பர்**" என அழைக்கப்படும் வேறு நபர்களும் உண்டு எனவும் இது அவர்களை கடவுளாகவோ அல்லது தெய்வீகத் தன்மை உள்ளவர்களாகவோ ஆக்கவில்லை எனவும் காண்கிறோம்.

"கர்த்தர் இஸ்ரவேலின் மேல் கோப மூண்டவராகி, அவர்களை மெசொப்பொத்தாமியாவின் ராஜாவாகிய கூசான்ரிஷதாயீமின் கையிலே விற்றுப் போட்டார்; இப்படியே இஸ்ரவேல் புத்திரர் கூசான்ரிஷதாயீமை எட்டு வருஷம் சேவித்தார்கள். இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்ட போது, **கர்த்தர் இஸ்ரவேல் புத்திரரை இரட்சிக்கும் படி காலேபின் தம்பியான கேனாசுடைய குமாரனாகிய ஒத்னியேல் என்னும் ஒரு ரட்சகனை அவர்களுக்கு எழும்பப் பண்ணினார்**" (நியாயாதிபதிகள் 3:8-9).

"ஏசாவின் பர்வதத்தை நியாயந் தீர்ப்பதற்காக இரட்சகர்கள் சீயோன் பர்வதத்தில் வந்தேறுவார்கள்; அப்பொழுது ராஜ்யம் **கர்த்தருடையதாய் இருக்கும்**" (ஒபதியா 1:21).

இவ்வாறு ஒப்பிடுவதில் பிரச்சினை என்னவென்றால், இயேசுவை இரட்சகர் என்று அழைப்பதற்கும் ஏனையோரை அவ்வாறு அழைப்பதற்கும் உள்ள வித்தியாசம் தான். **முதலாவதாக,** தேவன் இந்த மனிதர்களை "இஸ்ரவேலை அதன் பகைவர்களிடமிருந்து மீட்பதற்காக" பயன்படுத்தினார். அவர்கள் இஸ்ரவேலின் நெருக்கத்தினின்று அதைக் காப்பாற்ற அனுப்பப்பட்டனர். அவர்களின் பாவத்தினின்று அவர்களை மீட்பதற்காகவோ அல்லது அவர்களுக்கு நித்திய வாழ்வினை வழங்கவோ அவர்கள் அனுப்பப்படவில்லை. **அது தேவனால் மட்டுமே முடியும்.**

**இரண்டாவதாக,** இந்தக் கேள்வியிலேயே அமைந்துள்ளபடி, இரட்சிப்பு யேகோவா தேவனிடமிருந்து மட்டுமே வர முடியும்; அது அவருக்கே உரியது என பழைய ஏற்பாடு வேத வசனங்கள் போதிக்கிறது.

"**இரட்சிப்பு கர்த்தருடையது**; தேவரீருடைய ஆசீர்வாதம் உம்முடைய ஜனத்தின் மேல் இருப்பதாக" (சங்கீதம் 3:8).

"நானோவெனில் துதியின் சத்தத்தோடே உமக்குப் பலியிடுவேன்; நான் பண்ணின பொருத்தனையைச் செலுத்துவேன்; **இரட்சிப்பு கர்த்தருடையது** என்றான்" (யோனா 2:9).

இங்கு தான் இயேசுவின் தெய்வீகத் தன்மைக்கான நிரூபணம் வெளிப்படுகிறது. இரட்சிப்பு ஆண்டவராகிய இயேசுவுக்கே உரியதாகி அவரிடமிருந்தே புறப்படுகிறது என புதிய ஏற்பாடு கூறுகிறது.

"அவர்கள் மகா சத்தமிட்டு: **இரட்சிப்பின் மகிமை** சிங்காசனத்தின் மேல் வீற்றிருக்கிற எங்கள் தேவனுக்கும் **ஆட்டுக் குட்டியானவருக்கும் உண்டாவதாக** என்று ஆர்ப்பரித்தார்கள்" (வெளி 7:10).

மேலும், யேகோவா தேவன் அவர் தம்மக்களை அவருக்கே உரியவர்களாக்கும் பொருட்டு அவர்களை பாவத்தினின்று மீட்டுக் கொண்டாரென எபிரேய வேதமாகிய பைபிள் தெரிவிக்கின்றது.

"இப்பொழுது நீங்கள் என் வாக்கை உள்ளபடி கேட்டு, என் உடன்படிக்கையைக் கைக் கொள்வீர்களானால்,**சகல ஜனங்களிலும் நீங்களே எனக்குச் சொந்த சம்பத்தாயிருப்பீர்கள்;** பூமியெல்லாம்

என்னுடையது" (யாத்திராகமம் 19:5).

"நீ உன் தேவனாகிய **கர்த்தருக்குப் பரிசுத்த ஜனம்**, பூச்சக்கரத்திலுள்ள எல்லா ஜனங்களிலும் உன் தேவனாகிய **கர்த்தர் உன்னைத் தமக்குச் சொந்தமாயிருக்கும்படி** தெரிந்து கொண்டார்" (உபாகமம் 7:6).

"நீங்கள் உங்கள் தேவனாகிய **கர்த்தருக்குப் பரிசுத்தமான ஜனங்கள்**; பூமியின்மீதெங்குமுள்ள எல்லா ஜனங்களிலும் **உங்களையே கர்த்தர் தமக்குச் சொந்த ஜனங்களாயிருக்கத்** தெரிந்து கொண்டார்" (உபாகமம் 14:2).

"**கர்த்தரும்** உனக்கு வாக்குக் கொடுத்து உனக்குச் சொல்லியிருக்கிறபடி: நீ என்னுடைய கட்டளைகளையெல்லாம் கைக் கொண்டால், **எனக்குச் சொந்த ஜனமாயிருப்பாய்** என்றும்.." (உபாகமம் 26:18).

"இஸ்ரவேல் **கர்த்தரை** நம்பியிருப்பதாக; **கர்த்தரிடத்தில்** கிருபையும், அவரிடத்தில் திரளான மீட்பும் உண்டு. அவர் இஸ்ரவேலை **அதின் சகல அக்கிரமங்களினின்றும் மீட்டுக் கொள்வார்**" (சங்கீதம் 130:7-8).

"அவர்கள் இனித் தங்கள் நரகலான விக்கிரகங்களினாலும் தங்கள் அருவருப்புகளினாலும் தங்களுடைய சகல மீறுதல்களினாலும் தங்களைத் தீட்டுப் படுத்துவதுமில்லை; அவர்கள் குடியிருந்து பாவஞ் செய்த எல்லா இடங்களிலிருந்தும் **நான் அவர்களை நீங்கலாக்கி இரட்சித்து, அவர்களைச் சுத்தம் பண்ணுவேன்; அப்பொழுது அவர்கள் என் ஜனமாயிருப்பார்கள், நான் அவர்கள் தேவனாயிருப்பேன்** " (எசேக்கியேல் 37: 23).

எனினும், ஆண்டவராகிய இயேசு, யேகோவா தேவன் செய்தது போன்றே செய்தார் என புதிய ஏற்பாடு போதிக்கிறது. சான்றாக, அவர் பாவிகளை அவர்களது பாவங்களினின்று மீட்டு அவர்களை அவரது சொந்த ஜனமாக்கிக் கொள்ளவே இவ்வுலகிற்கு வந்தார் என வாசிக்கிறோம்.

"அவள் ஒரு குமாரனைப் பெறுவாள், அவருக்கு இயேசு என்று பேரிடுவாயாக; ஏனெனில் **அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிப்பார்** என்றான்.." (மத்தேயு 1:21).

"நாம் நம்பியிருக்கிற ஆனந்த பாக்கியத்துக்கும், **மகா தேவனும் நமது இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவினுடைய** மகிமையின் பிரசன்னமாகுதலுக்கும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்படி நமக்குப் போதிக்கிறது. அவர் நம்மைச் சகல அக்கிரமங்களினின்று மீட்டுக்கொண்டு, **தமக்குரிய சொந்த ஜனங்களாகவும்,** நற்கிரியைகளைச் செய்ய பக்தி வைராக்கிய முள்ளவர்களாகவும் நம்மைச் சுத்திகரிக்கும்படி, நமக்காகத் தம்மைத் தாமே ஒப்புக் கொடுத்தார்." (தீத்து 2:13-14).

இறுதியாக, விசுவாசிப்போர் தங்களது அடைக்கலத்தையும் பரிசுத்தமாகுதலையும் சகல முழங்கால்களும் முடங்கும் யேகோவா தேவனிடம் மட்டுமே பெற்றுக் கொள்ள முடியும் என தீர்க்கதரிசிகள் அறிவித்தார்கள்.

"நீங்கள் தெரிவிக்கும்படி சேர்ந்து, ஏகமாய் யோசனை பண்ணுங்கள்; இதைப் பூர்வகால முதற் கொண்டு விளங்கப் பண்ணி அந்நாள் துவக்கி இதை அறிவித்தவர் யார்? **கர்த்தராகிய** நான் அல்லவோ? **நீதிபரரும் இரட்சகருமாகிய என்னையல்லாமல் வேறே தேவன் இல்லை; என்னைத் தவிர வேறொருவரும் இல்லை. பூமியின் எல்லையெங்குமுள்ளவர்களே, என்னை நோக்கிப் பாருங்கள்; அப்பொழுது இரட்சிக்கப்படுவீர்கள்; நானே தேவன், வேறொருவரும் இல்லை. முழங்கால் யாவும் எனக்கு முன்பாக முடங்கும்,** நாவு யாவும் என்னை

முன்னிட்டு ஆணையிடும் என்று நான் என்னைக் கொண்டே ஆணையிட்டிருக்கிறேன்; இந்த நீதியான வார்த்தை என் வாயிலிருந்து புறப்பட்டது; இது மாறுவது இல்லையென்கிறார். **கர்த்தரிடத்தில் மாத்திரம் நீதியும் வல்லமையுமுண்டென்று** அவனவன் சொல்லி அவரிடத்தில் வந்து சேருவான்; அவருக்கு விரோதமாய் எரிச்சல்கொண்டிருக்கிற யாவரும் வெட்கப்படுவார்கள். இஸ்ரவேலின் சந்ததியாகிய யாவரும் **கர்த்தருக்குள் நீதிமான்களாக்கப்பட்டு மேன்மைபாராட்டுவார்கள்**" (ஏசாயா 45: 21-25).

மேலும், பழைய ஏற்பாட்டின் படி யேகோவா தேவனுக்கே உரித்தான குறிப்பிடப்பட்ட காரியங்கள் இயேசுவுக்கும் குறிப்பிடப்பட்டன என புதிய ஏற்பாட்டில் காண்கிறோம்.

"நீங்கள் அவராலே **கிறிஸ்து இயேசுவுக்குட்பட்டிருக்கிறீர்கள்.** எழுதியிருக்கிறபடி, மேன்மை பாராட்டுகிறவன் கர்த்தரைக் குறித்தே மேன்மை பாராட்டத்தக்கதாக, **அவரே தேவனால் நமக்கு ஞானமும் நீதியும் பரிசுத்தமும் மீட்புமானார்.**" (I கொரிந்தியர் 1:30-31).

"ஆதலால் தேவன் எல்லாவற்றிற்கும் மேலாக அவரை உயர்த்தி, **இயேசுவின் நாமத்தில்** வானோர் பூதலத்தோர் பூமியின் கீழானோருடைய **முழங்கால் யாவும் முடங்கும் படிக்கும்,** பிதாவாகிய அவருக்கு மகிமையாக இயேசு கிறிஸ்து கர்த்தரென்று நாவுகள் யாவும் அறிக்கை பண்ணும் படிக்கும், எல்லா நாமத்திற்கும் **மேலான நாமத்தை** அவருக்குத் தந்தருளினார்" (பிலிப்பியர் 2:9-11).

மேலே சொன்னவைகள் ஒரு விவரத்தை தெளிவாக்குகிறது. இயேசுவை, ஒத்னியேல் போன்றவர்களின் வரிசையில் இரட்சகராகக் கருதப்படலாகாது. ஏனெனில், அவர் இஸ்ரவேல் மக்களை அவர்களின் பகைவர்களினின்று இரட்சிக்க அனுப்பப்பட்ட பிரத்தியோகமான மனிதத் தூதர் அல்லர். **மாறாக, அவர் தேவன் மட்டுமே செய்யக் கூடிய காரியத்தை செய்யும் படிக்கு பிதாவினால் அனுப்பப்பட்டு இரட்சிப்பின் ஊற்றாகச் செயல்பட்டார்.** அதாவது அவரை விசுவாசிக்கும் சகல மனிதரையும் அவர் தம் பாவக்கறை நீங்க அவரது மாசற்ற தூய இரத்தத்தினால் கழுவி சுத்திகரித்து நித்திய மீட்பை அவர்களுக்கு அவரது கீழ்படிதலாலும் தியாகத்தினாலும் பெற்றுக் கொடுத்தார்.

"கிறிஸ்துவானவர் வரப் போகிற நன்மைகளுக்குரிய பிரதான ஆசாரியராய் வெளிப்பட்டு, கையினால் செய்யப்பட்டதாகிய இந்தச் சிருஷ்டி சம்பந்தமான கூடாரத்தின் வழியாக அல்ல, பெரிதும் உத்தமமுமான கூடாரத்தின் வழியாகவும், வெள்ளாட்டுக்கடா, இளங்காளை இவைகளுடைய இரத்தத்தினாலே அல்ல, **தம்முடைய சொந்த இரத்தத்தினாலும்** ஒரே தரம் மகா பரிசுத்த ஸ்தலத்திலே பிரவேசித்து, **நித்திய மீட்பை உண்டு பண்ணினார்.** அதெப்படியெனில், காளை வெள்ளாட்டுக்கடா இவைகளின் இரத்தமும், தீட்டுப்பட்டவர்கள் மேல் தெளிக்கப்பட்ட கடாரியின் சாம்பலும், சரீர சுத்தியுண்டாகும்படி பரிசுத்தப்படுத்துமானால், நித்திய ஆவியினாலே தம்மைத் தாமே பழுதற்ற பலியாக தேவனுக்கு ஒப்புக் கொடுத்த **கிறிஸ்துவினுடைய இரத்தம்** ஜீவனுள்ள தேவனுக்கு ஊழியஞ் செய்வதற்கு உங்கள் மனச் சாட்சியைச் செத்தக் கிரியைகளறச் சுத்திகரிப்பது எவ்வளவு நிச்சயம்! ஆகையால் முதலாம் உடன்படிக்கையின் காலத்திலே நடந்த அக்கிரமங்களை நிவிர்த்தி செய்யும் பொருட்டு அவர் மரண மடைந்து, அழைக்கப்பட்டவர்கள் வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட **நித்திய சுதந்தரத்தை** அடைந்து கொள்வதற்காக, **புது உடன்படிக்கையின் மத்தியஸ்தராயிருக்கிறார்**" (எபிரெயர் 9:11-15).

"தம்முடைய ஒரே பேறான குமாரனாலே **நாம் பிழைக்கும் படிக்கு** தேவன் அவரை இவ்வுலகத்திலே அனுப்பினதினால் தேவன் **நம்மேல் வைத்த அன்பு** வெளிப்பட்டது. நாம் தேவனிடத்தில் அன்பு கூர்ந்ததினால் அல்ல, அவர் நம்மிடத்தில் அன்பு கூர்ந்து, **நம்முடைய பாவங்களை நிவிர்த்தி செய்கிற கிருபாதார பலியாகத்**

தம்முடைய குமாரனை அனுப்பினதினாலே அன்பு உண்டாயிருக்கிறது. **பிதாவானவர் குமாரனை உலகரட்சகராக அனுப்பினாரென்று** நாங்கள் கண்டு சாட்சியிடுகிறோம்" (I யோவான் 4:9,10,14).

மேலே சொன்னவைகளின் அடிப்படையில், புதிய ஏற்பாட்டின் வேத வசனங்கள் இயேசுவே ஜீவனை உண்டாக்குபவர், அவரே நித்திய மீட்பின் ஊற்றுக்கண், அவரே நமது தேவன் மற்றும் நமது மீட்பர் என புதிய ஏற்பாடு அழுத்தமாக வெளிப்படுத்துகிறது என்பதைக் கண்டுகொள்வதில் சற்றும் வியப்பில்லை. (In light of the above it is not surprising to discover that the NT documents emphatically proclaim that the Lord Jesus is the Author of life, the very Source of eternal salvation, our great God and Savior: )

"அவருக்குள் **ஜீவன்** இருந்தது, அந்த **ஜீவன்** மனுஷருக்கு ஒளியாயிருந்தது" (யோவான் 1:4).

"பிதாவானவர் எனக்குக் கொடுக்கிற யாவும் என்னிடத்தில் வரும், என்னிடத்தில் வருகிறவனை நான் புறம்பே தள்ளுவதில்லை. என் சித்தத்தின்படியல்ல, என்னை அனுப்பினவருடைய சித்தத்தின்படி செய்யவே நான் வானத்திலிருந்திறங்கி வந்தேன். அவர் எனக்குத் தந்தவைகளில் **ஒன்றையும் நான் இழந்து போகாமல், கடைசி நாளில் அவைகளை எழுப்புவதே** என்னை அனுப்பின பிதாவின் சித்தமாயிருக்கிறது. குமாரனைக் கண்டு, அவரிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் எவனோ அவன், நித்திய ஜீவனை அடைவதும், **நான் அவனைக் கடைசி நாளில் எழுப்புவதும்,** என்னை அனுப்பினவருடைய சித்தமாயிருக்கிறது என்றார்" (யோவான் 6:37-40).

"இயேசு அவளை நோக்கி: உன் சகோதரன் உயிர்த் தெழுந்திருப்பான் என்றார். அதற்கு மார்த்தாள்: உயிர்த்தெழுதல் நடக்கும் கடைசி நாளிலே அவனும் உயிர்த்தெழுந்திருப்பான் என்று அறிந்திருக்கிறேன் என்றாள். இயேசு அவளை நோக்கி: **நானே உயிர்த்தெழுதலும் ஜீவனுமாயிருக்கிறேன்,** என்னை விசுவாசிக்கிறவன் மரித்தாலும் பிழைப்பான்; உயிரோடிருந்து என்னை விசுவாசிக்கிறவனெவனும் என்றென்றைக்கும் மரியாமலும் இருப்பான்; இதை விசுவாசிக்கிறாயா என்றார். அதற்கு அவள்: ஆம், ஆண்டவரே, நீர் உலகத்தில் வருகிறவரான தேவகுமாரனாகிய கிறிஸ்து என்று நான் விசுவாசிக்கிறேன் என்றாள்" (யோவான் 11:23-27).

"பரிசுத்தமும் நீதியுமுள்ளவரை நீங்கள் மறுதலித்து, கொலை பாதகனை உங்களுக்காக விடுதலை பண்ணவேண்டுமென்று கேட்டு, **ஜீவாதிபதியைக் கொலை செய்தீர்கள்;** அவரை தேவன் மரித்தோரிலிருந்தெழுப்பினார்; அதற்கு நாங்கள் சாட்சிகளாயிருக்கிறோம்" (அப்போஸ்தலர் 3:14,15).

"ஏனென்றால் தமக்காகவும் தம்மாலேயும் சகலத்தையும் உண்டாக்கினவர், அநேகம் பிள்ளைகளை மகிமையில் கொண்டு வந்து சேர்க்கையில் அவர்களுடைய **இரட்சிப்பின் அதிபதியை உபவத்திரவங்களினாலே பூரணப்படுத்துகிறது** அவருக்கேற்றதாயிருந்தது. எப்படியெனில், பரிசுத்தஞ் செய்கிறவரும் பரிசுத்தஞ் செய்யப்படுகிறவர்களுமாகிய யாவரும் ஒருவரால் உண்டாயிருக்கிறார்கள்; இதினிமித்தம் அவர்களைச் சகோதரரென்று சொல்ல அவர் வெட்கப்படாமல்" (எபிரெயர் 2:10,11).

"அவர் குமாரனாயிருந்தும் பட்டபாடுகளினாலே கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டு, தாம் பூரணரானபின்பு, தமக்குக் கீழ்ப்படிகிற யாவரும் **நித்திய இரட்சிப்பை அடைவதற்குக் காரணராகி,** மெல்கிசேதேக்கின் முறைமையின்படியான பிரதான ஆசாரியர் என்று தேவனாலே நாமம் தரிக்கப்பட்டார்" (எபிரெயர் 5:8-10).

"**...விசுவாசத்தைத் துவக்குகிறவரும் முடிக்கிறவருமாயிருக்கிற** இயேசுவை நோக்கி... அவர் தமக்குமுன் வைத்திருந்த சந்தோஷத்தின் பொருட்டு, அவமானத்தை எண்ணாமல், சிலுவையைச் சகித்து, தேவனுடைய

சிங்காசனத்தின் வலதுபாரிசத்தில் வீற்றிருக்கிறார்" (எபிரெயர் 12:1-2).

"**நம்முடைய தேவனும் இரட்சகருமாயிருக்கிற இயேசுகிறிஸ்துவினுடைய** நீதியால் எங்களைப் போல அருமையான விசுவாசத்தைப் பெற்றவர்களுக்கு, இயேசு கிறிஸ்துவின் ஊழியக்காரனும் அப்போஸ்தலனுமாகிய சீமோன் பேதுரு எழுதுகிறதாவது:" (II பேதுரு 1:1).

தர்க்க சாஸ்திரத்தின் (syllogism) அடிப்படையில் பார்ப்போமானால்:

1. **யேகோவா தேவன் ஒருவரே இரட்சிப்பின் ஊற்றும் ஜீவனுமாய் இருக்கிறார்** (Yahweh God alone is the Source of salvation and life).

2. **இயேசு இரட்சிப்பின் ஊற்றும் ஜீவனுமாய் இருக்கிறார்** (Jesus is the Source of salvation and life).

3. **எனவே இயேசுவே யேகோவா தேவனாவார்** (Therefore, Jesus is Yahweh God).

ஆங்கில மூலம்: **Is the Savior necessarily God?**

---

**பொதுவான கேள்விகளுக்கு தொடர் பதில்கள்**

முகப்புப் பக்கம் **ஆன்சரிங் இஸ்லாம் தமிழ்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/sam-shamoun/q_jesus_savior.html

# 49. தலாக் 3 – முஸ்லிம்களின் அன்னையர்களை மிரட்டிய (blackmail) அல்லாஹ்

தலாக் தொடரின் **முந்தைய கட்டுரையில்**, ஒரு முஸ்லிம் ஆண் தலாக் கொடுப்பதற்கான சரியான காரணங்களை குர்-ஆன் கட்டளையிடவில்லை என்பதை எடுத்துக்காட்டினேன். இந்த கட்டுரையில், ஒரு குறிப்பிட்ட காரணத்தை முன்வைத்து, அல்லாஹ் முஹம்மதுவின் மனைவியர்களை பயமுறுத்திய வசனத்தைக் காண்போம். தலாக் கொடுப்பதற்கு இது ஒரு பலமான காரணமாக இருக்குமா என்பதை வாசகர்கள் முடிவு செய்யட்டும்.

### 1) "குடும்ப செலவிற்கு" அதிகம் கேட்டதால் "பிளாக்மெயில்" செய்யப்பட்ட அன்னையர்கள்

ஒரு முஸ்லிம் ஆண், தன் மனைவியை விவாகரத்து (தலாக்) செய்வதற்கான நியாயமான காரணங்களை அல்லாஹ் குர்-ஆனில் சொல்லியுள்ளானா? என்பதை தேடும் போது, குர்-ஆன் 33:28-29 வசனங்கள் கண்களில் பட்டது.

**குர்-ஆன் 33:28-29:**

33:28. நபியே! உம்முடைய மனைவிகளிடம்: "நீங்கள் இவ்வுலக வாழ்க்கையையும், இதன் அலங்காரத்தையும் நாடுவீர்களானால், வாருங்கள்! நான் உங்களுக்கு வாழ்க்கைக்கு உரியதைக் கொடுத்து **அழகிய முறையில் உங்களை விடுதலை செய்கிறேன்.**

33:29. "ஆனால், நீங்கள் அல்லாஹ்வையும், அவன் தூதரையும், மறுமையின் வீட்டையும் விரும்புவீர்களானால், அப்பொழுது உங்களில் நன்மையாளர்களுக்காக அல்லாஹ் மகத்தான நற்கூலி நிச்சயமாக சித்தம் செய்திருக்கிறான்" என்றும் கூறுவீராக! (முஹம்மது ஜான் தமிழாக்கம்)

இவ்விரு வசனங்களில் அல்லாஹ் முஹம்மதுவின் மனைவிமார்களை பிளாக்மெயில் செய்வதை (பயமுறுத்துவதை) காணமுடியும். அதாவது, உங்களுக்கு செல்வம் அதிகமாக தேவையா? சரி, கொடுத்துவிடுகிறோம், ஆனால், அந்த செல்வத்தோடு கூட, உங்களை முஹம்மது விவாகரத்தும் செய்துவிடுவார். "**அழகிய முறையில் உங்களை விடுதலை செய்கிறேன்" என்பதன் அர்த்தம், தலாக் கொடுத்துவிடுகிறேன் என்பதாகும்.** எனவே, நீங்கள் இப்போது ஒரு முடிவை எடுக்கவேண்டும்:

**முடிவு 1:** செல்வம் தரப்படும் அதோடு கூட தலாக்கும் இலவசமாக தரப்படும் (Buy 1 Get 1 free).

**முடிவு 2:** செல்வம் வேண்டாம், முஹம்மது தான் வேண்டும் என்றால் மகத்தான கூலி கொடுக்கப்படும்

## 2) இவ்வசனங்களின் பின்னணி – ஹதீஸ்களிலிருந்து

மேற்கண்ட வசனங்களின் பின்னணி என்னவென்பதை விளக்கும் ஸஹி ஹதீஸ்கள் உள்ளன.

**முஸ்லிம் எண் 2946**

**2946. ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:**

(ஒரு முறை) அபூபக்ர் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (அவர்களது வீட்டுக்கு) வந்து, உள்ளே வர அனுமதி கேட்டார்கள். அப்போது மக்கள் பலர், தங்களில் எவருக்கும் உள்ளே செல்ல அனுமதி கிடைக்காமல் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களது வீட்டு வாசலிலேயே அமர்ந்திருப்பதைக் கண்டார்கள். அனுமதி கிடைத்ததும் அபூபக்ர் (ரலி) அவர்கள் உள்ளே நுழைந்தார்கள். பிறகு உமர் (ரலி) அவர்கள் வந்து உள்ளே நுழைய அனுமதி கேட்டார்கள். அவர்களுக்கும் அனுமதி கிடைத்தது. (அவர்களும் உள்ளே நுழைந்தார்கள்.) அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம்மைச் சுற்றி தம் துணைவியர் இருக்க, பேச முடியாத அளவிற்குத் துக்கம் மேலிட்டவர்களாக மௌனமாக அமர்ந்திருப்பதைக் கண்டார்கள்.

அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் "நபி (ஸல்) அவர்களைச் சிரிக்க வைக்க எதையேனும் நான் சொல்லப்போகிறேன்" என்று (மனதிற்குள்) சொல்லிக்கொண்டு, "அல்லாஹ்வின் தூதரே! என் மனைவி (ஹபீபா) பின்த் காரிஜா என்னிடத்தில் குடும்பச் செலவுத் தொகையை (உயர்த்தித் தருமாறு) கேட்க, நான்

அவரை நோக்கி எழுந்து அவரது கழுத்தில் அடித்து விட்டேன் என்றால், நீங்கள் என்ன சொல்வீர்கள்?" என்று கேட்டார்கள். (இதைக் கேட்டு) **அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிரித்தார்கள்.** "இதோ நீங்கள் காண்கிறீர்களே இவர்களும் என்னிடம் செலவுத் தொகையை (உயர்த்தித் தருமாறு) கோரியே என்னைச் சுற்றிக் குழுமியுள்ளனர்" என்று கூறினார்கள். உடனே அபூபக்ர் (ரலி) அவர்கள் (தம்முடைய புதல்வி) ஆயிஷா (ரலி) அவர்களை நோக்கி, அவர்களது கழுத்தில் அடிக்க எழுந்தார்கள். அடுத்து உமர் (ரலி) அவர்கள் (தம் புதல்வி) ஹஃப்ஸாவை நோக்கி, அவர்களது கழுத்தில் அடிப்பதற்காக எழுந்தார்கள். "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இல்லாததை நீங்கள் கேட்கிறீர்களா?" என்று அவர்களிருவருமே கூறினர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியர், "**அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இல்லாத எதையும் ஒருபோதும் நாங்கள் கேட்கமாட்டோம்**" என்று கூறினர்.

பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு மாதம் அல்லது இருபத்தொன்பது நாட்கள் தம் துணைவியரிடமிருந்து விலகியிருந்தார்கள். **பிறகு "நபியே! உங்கள் துணைவியரிடம் கூறுங்கள்" என்று தொடங்கி, "உங்களிலுள்ள நல்லவர்களுக்காக மகத்தான நற்பலனை அல்லாஹ் தயார் செய்துள்ளான்" என்று முடியும் (33:28,29)இந்த வசனங்கள் அவர்களுக்கு அருளப்பெற்றன.**

இதையடுத்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆரம்பமாக ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று, "ஆயிஷா! நான் உன்னிடம் ஒரு விஷயத்தை முன்வைக்க விரும்புகிறேன். அது தொடர்பாக நீ உன் பெற்றோரிடம் ஆலோசனை கேட்காத வரை அவசரப்பட்டு (எந்த முடிவுக்கும் வந்து)விடக் கூடாது என விரும்புகிறேன்" என்று கூறினார்கள்.

அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், "அது என்ன, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்த (33:28ஆவது) வசனத்தை ஓதிக் காட்டினார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் தூதரே! உங்கள் (உறவைத் துண்டிக்கும்) விஷயத்திலா நான் என் பெற்றோரிடம் ஆலோசனை கேட்க வேண்டும்? **இல்லை! நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறு உலகத்தையுமே தேர்ந்தெடுக்கிறேன்**"என்று சொல்லிவிட்டு, "நான் கூறியதைத் தாங்கள் மற்றத் துணைவியரில் எவரிடமும் தெரிவிக்க வேண்டாமென உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்" என்றார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவர்களில் எவரேனும் என்னிடம் (நீ சொன்னதைப் பற்றிக்) கேட்டால் நான் அவர்களிடம் அதைத் தெரிவிக்காமல் இருக்கமாட்டேன். அல்லாஹ் என்னைக் கடினமான போக்கு உள்ளவனாகவோ, எவரையும் வழிதவறச் செய்பவனாகவோ அனுப்பவில்லை. மாறாக, (இறைநெறியை) எளிதாக்கிச் சொல்லும் ஆசானாகவே என்னை அனுப்பியுள்ளான்"என்றார்கள். (மேலும் பார்க்க ஸஹி புகாரி எண் 4786, முஸ்லிம் எண் 2939)

### 3) பணம் அதிகம் கேட்டதால், தலாக் கிடைக்கும் என்று பயமுறுத்துவது அல்லாஹ்விற்கு அடுக்குமா?

மேற்கண்ட குர்-ஆன் வசனங்களையும், அதைச் சுற்றியுள்ள பின்னணியையும் நாம் இதுவரை கண்டோம்.

மனைவி வீட்டுச்செலவிற்கு பணத்தை உயர்த்திக் கொடுங்கள் என்று கேட்பது பாவமா? விவாகரத்துக்குச் செல்லும் அளவிற்கு மிகப்பெரிய குற்றமா? மனைவிக்கு மென்மையாக எடுத்துச் சொல்லி, புரியவைப்பதை விட்டுவிட்டு, விவாகரத்து கொடுத்துவிடுவேன் என்று பயமுறுத்துவதில் என்ன நியாயம் இருக்கிறது? முஹம்மதுவின் மனைவிகளுக்கே அல்லாஹ் உருவாக்கிய இஸ்லாமிய சமுதாயத்தில் இந்த நிலையென்றால்,

இதர முஸ்லிம்களின் குடும்ப பெண்களின் நிலை எப்படியிருக்கும் என்பதை சிந்தித்துப் பார்க்கவே பயமாக இருக்கிறது.

முஹம்மதுவின் குடும்ப பிரச்சனையை தீர்க்க குர்-ஆன் வசனத்தை கொண்டு வர ஜிப்ரீல் தூதனை அனுப்புவது கொஞ்சம் அதிகமாகத் தோன்றவில்லை? வெளி உலகிற்கு அதாவது முஸ்லிமல்லாதவர்கள் இவ்வசனங்களை அல்லாஹ் இறக்கியதாக கருதமாட்டார்கள், தன் சுய லாபத்திற்காக முஹம்மதுவே இட்டுக்கட்டியது என்று கருதுவார்கள்.

இரண்டு மனைவிகளிடம் மென்மையாகப் பேசி, முஹம்மது தம் ஏழ்மை நிலையை! எடுத்துச் சொல்லி, அவர்களை சமாதானப்படுத்துவதை அறியாதவர் எப்படி ஒரு நபியாக 23 ஆண்டுகள் நீடித்தார்? தன் சொந்த குடும்பத்தின் சின்னச்சின்ன பிரச்சனைகளை தீர்க்கமுடியாதவர் எப்படி நாட்டை ஆண்டார்?

### 4) இவ்வசனத்தின் பாதிப்பு இஸ்லாமிய சமுதாயத்தில் எப்படி இருக்கும்?

இப்படிப்பட்ட வசனங்களும், ஹதிஸ்களும் முஸ்லிம் பெண்களுக்கு ஆபத்தானவைகளாகும்.

அ) குடும்ப பெண்கள் குடும்ப செலவிற்கு அதிகமாக பணம் கேட்டால் அவர்களை தலாக் செய்வதாக முஸ்லிம் ஆண்கள் பயமுறுத்துவதற்கு குர்-ஆனின் இவ்வசனம் காரணமாக அமைந்துவிட்டது.

ஆ) என் மனைவி குடும்ப செலவிற்கு பணத்தை உயர்த்திக் கொடுங்கள் என்று கேட்டார், நான் அடித்துவிட்டேன் என்று அபூ பக்கர் சொல்வது ஒரு காட்டுமிராண்டித் தனமான செயலாகும். இக்காலத்தில் ஒருவர் நம்மிடம் இப்படிச் சொன்னால், அவரை நாம் எப்படி பார்ப்போம்?

இ) அபூ பக்கரின் செயலை கண்டிக்காமல் முஹம்மது சிரித்தது, சின்ன சின்ன நியாயமான விஷயங்களுக்கு முஸ்லிம் ஆண்கள் தங்கள் மனைவிகளை அடிப்பதை அவர் அங்கீகரிப்பதாக தெரிகின்றது. இப்படிப்பட்ட முஹம்மதுவின் செயல்களினால் முஸ்லிம் குடும்பங்களில் பெண்களுக்கு எதிராக நடக்கும் கொடூரங்களுக்கு வழிவகுக்கிறது.

ஈ) "இல்லை, நாங்கள் எங்கள் மனைவிமார்களை, அபூ பக்கரைப்போல, உமரைப்போல முஹம்மதுவைப்போல அடிக்கமாட்டோம்" என்று முஸ்லிம்கள் சொல்வார்களானால், இம்மூவர் செய்தது தவறு என்று முஸ்லிம்கள் சொல்லமுடியுமா?

உ) மேற்கண்ட முஸ்லிம் ஹதீஸில் அபூ பக்கரும், உமரும் முஹம்மதுவின் கண்களுக்கு முன்பாக எழுந்துச் சென்று, ஆயிஷாவையும், ஹஃப்ஸாவையும் (தங்கள் மகள்களை) அடித்துள்ளார்கள். ஆனால், தமிழில் மொழியாக்கம் செய்த நம் தமிழ் முஸ்லிம் அறிஞர்கள், அபூபக்கரும், உமரும் அடிக்க எழுந்தார்கள் என்றுச் சொல்லி மொழியாக்கம் செய்துள்ளார்கள், அவர்கள் அடித்தார்கள் என்று சொல்லவில்லை.

. . . .உடனே அபூபக்ர் (ரலி) அவர்கள் (தம்முடைய புதல்வி) ஆயிஷா (ரலி) அவர்களை நோக்கி, அவர்களது கழுத்தில் அடிக்க எழுந்தார்கள். அடுத்து உமர் (ரலி) அவர்கள் (தம் புதல்வி) ஹஃப்ஸாவை நோக்கி, அவர்களது கழுத்தில் அடிப்பதற்காக எழுந்தார்கள் . . .

ஆனால், ஆங்கில ஹதிஸில் இவ்விருவரும் அடித்தார்கள் என்று தான் மொழியாக்கம் செய்துள்ளார்கள். தமிழ் முஸ்லிம் அறிஞர்களுக்கு "அடித்தார்கள்" என்று மொழியாக்கம் செய்ய வெட்கமாக இருக்கின்றதா? அரபியில்

எப்படி உள்ளது? எழுந்தார்கள் என்றுள்ளதா? எழுந்து அடித்தார்கள் என்று உள்ளதா? முஸ்லிம் அறிஞர்கள் அரபி ஹதீஸை படித்து சிறிது விளக்குவார்களா? (உண்மையைச் சொல்லவேண்டும், பொய்யைச் சொல்லி என்னை ஏமாற்ற முயலாதீர்கள், மாட்டிக்கொள்வீர்கள்).

ஊ) கடைசியாக, அவ்விரு பெண்களும், நாங்கள் இல்லாத ஒன்றை கேட்கவில்லை, இருப்பதைத் தான் கேட்கிறோம் என்று அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு கூறினார்கள்.

. . . .அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் துணைவியர், "அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இல்லாத எதையும் ஒருபோதும் நாங்கள் கேட்கமாட்டோம்" என்று கூறினர். . . .

முஸ்லிம்களே! உங்கள் அன்னைகள் பொய் சொல்கிறார்கள் என்று சொல்லவருகின்றீர்களா? உங்கள் அன்னைகள் அல்லாஹ்வின் மீதாணையாக என்றுச் சொல்கிறார்கள், அவர்கள் கூற்றை நம்பவேண்டுமா இல்லையா?

## 5) விலைவாசி எப்படி இருக்கின்றது?

நாம் வாழும் இந்த காலத்தை எடுத்துக்கொண்டாலும், குடும்ப செலவிற்கு நாம் மாதம் 5000 ரூபாய் நம் குடும்ப பெண்களுக்கு கொடுக்கிறோம் என்று வைத்துக் கொள்வோம். இதே தொகையை பல மாதங்கள் அல்லது ஆண்டுகள் கொடுக்கமுடியுமா? விலைவாசிகள் உயரவில்லையா? கொஞ்சம் பணத்தை உயர்த்திக்கொடுங்கள், விலைவாசிகள் உயர்ந்துவிட்டது என்று ஒரு முஸ்லிமின் மனைவி கேட்டால், உடனே அவளை அடித்துவிட்டு, தலாக் கொடுத்துவிடுவேன் என்று அந்த முஸ்லிம் சொன்னால், அவனை என்னவென்று நினைப்பீர்கள்? ஓ.. இவர் முஹம்மதுவைப்போலவும், நபித்தொழர்கள் அபூ பக்கர் மற்றும் உமரைப்போலவும் நடந்துக்கொண்டார் என்று மெச்சிக்கொள்வீர்களா?

முஸ்லிம் பெண்களின் நிலை எங்கே சென்றுக்கொண்டு இருக்கிறது?

## 6) கடைசியாக, உங்கள் அன்னைகள் எடுத்த முடிவு என்ன?

முஹம்மதுவின் மனைவிகள் அதிக பணத்தைக் கேட்டார்கள், அபூ பக்கரும், உமரும் வந்து மகள்களை அடித்து திட்டினார்கள். நாங்கள் அல்லாஹ்வின் மீது ஆணையாக, இல்லாதவற்றை கேட்கவில்லையென்று மகள்கள் சொன்னார்கள், அதாவது முஹம்மதுவிடம் பணமிருக்கிறது என்று அவர்கள் சாட்சி கூறினார்கள். பிறகு முஹம்மது 29 நாட்கள் தனியாகச் சென்றுவிட்டார், அதன் பிறகு அல்லாஹ் குர்-ஆன் 33:28-29ம் வசனங்களை இறக்கினான்.

முஹம்மது ஆயிஷாவிடம் வந்து, அல்லாஹ் இறக்கிய வசனங்கள் இவைகள், உன் முடிவு என்ன என்று கேட்டார். ஆயிஷா எனக்கு நீங்க தான் வேண்டும் பணமும் வேண்டாம், தலாக்கும் வேண்டாம் என்று முடிவு செய்தார். இதே போல, இதர மனைவிகளும் முடிவு செய்ததாக ஹதீஸ் கூறுகிறது.

**ஏன் ஆயிஷாவும், ஹஃப்ஸாவும் மற்றும் இதர மனைவிகளும் இந்த முடிவிற்கு வந்தார்கள்? இவர்களுக்கு வேறு வாய்ப்பு இருக்கின்றதா?**

அ) முஹம்மது ஒரு நபி என்று எல்லோரும் நம்புகிறார்கள்.

ஆ) முஹம்மதுவிடம் தலாக் பெற்று அப்பா வீட்டில் உட்கார்ந்தால், அப்பா கோபப்படுவார், திட்டுவார் அடித்தே கொன்றுபோட்டுவிடுவார்.

இ) முஹம்மதுவை எதிர்த்துக்கொண்டு, அப்பாவையும் விட்டுவிட்டு வெளியே சென்று வாழுவதற்கு இவர்களுக்கு ஏதாவது வாய்ப்பு இருக்கின்றதா? நிச்சயமாக இல்லை.

உ) அப்படியே தலாக் பெற்று முஹம்மதுவை விட்டு வந்துவிட்டாலும், இன்னொருவருக்கு இரண்டாம் தாரமாக, மூன்றாம் தாரமாக, அல்லது நான்காம் தாரமாக முந்தானையை விரிக்கவேண்டியது தான். வெளியே சென்று கௌரவத்தை இழந்து வாழ்வதை விட, இங்கேயே அதனை இழந்து வாழலாமே. குறைந்தபட்சம், இறைத்தூதரின் மனைவி என்ற பட்டமாவது கிடைக்கும்.

ஊ) சாதாரணமாக ஒரு முஸ்லிமின் மனைவி தலாக் பெற்றால், இன்னொருவன் திருமணம் செய்துக்கொள்வான், ஆனால் முஹம்மதுவின் மனைவி தலாக் பெற்றால், யாரும் திருமணம் செய்யமுடியாது, ஏனென்றால், அவர்கள் முஸ்லிம் சமுதாயத்திற்கே தாய்மார்கள். ஆனால், முஹம்மது முஸ்லிம் சமுதாயத்திற்கு தந்தைமார்த இல்லை, எனவே அவர் யாரைவேண்டுமானலும் திருமணம் செய்யலாம்.

எ) இது மட்டுமா, முஹம்மதுவோடு இருந்தால், அல்லாஹ் நல்ல கூலியை கொடுப்பான், சொர்க்கத்தில் இடம் கிடைக்கும். முஹம்மது வேண்டாம், தலாக் வேண்டும் என்றுச் சொல்லி வெளியே வந்துவிட்டால், யாருக்குத் தெரியும்? இவர்களைப் பற்றி குர்-ஆன் வசனம் எப்படியாவது வெளிப்படலாம். இவர்கள் என் இறைத்தூதரை துக்கப்படுத்திவிட்டார்கள், இவர்களை கொன்றுவிடுங்கள் என்று குர்-ஆன் வசனம் இறங்கினாலும், ஆச்சரியப்படுவதற்கு இல்லை. இதில் இன்னொரு வினோதம் என்னவென்றால், அப்படி ஒரு குர்-ஆன் வசனம் இறங்கினால், முதலாவது வாளை எடுத்துக்கொண்டு கொலை செய்ய புறப்படுபவர்களாக அபூ பக்கரும், உமரும் இருப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை (மகள்களைக் கொல்ல). நமக்கு எதற்கு வம்பு என்று முஹம்மதுவின் மனைவிமார்கள் அனைவரும் முஹம்மதுவையே கோரினார்கள், கடைசி வரை அவரது மனைவிகளாகவே, அவர் மரித்த பிறகு விதவைகளாகவே வாழ்ந்து மரித்தார்கள், பரிதாபத்துக்கு உரிய அன்பு அன்னைகள்.

இப்படிப்பட்ட காரணங்களினால் தான் புத்திசாலியான முஸ்லிம்களின் அன்னைகள் சரியான முடிவை தெரிவு செய்தார்கள்.

**தலாக் 3 – முடிவுரை:**

குடும்ப செலவிற்கு பணத்தை உயர்த்திக்கொடுங்கள் என்று கேட்பது விவாகரத்து கொடுக்கும் அளவிற்கு பெரிய பாவமா? சிந்தித்துப் பாருங்கள்.

- அல்லாஹ் ஏன் இப்படி பிளாக்மெயில் செய்யவேண்டும்?
- முஹம்மது உருவாக்கிய சமுதாயம் ஆணாதிக்க சமுதாயமா?
- திருமணமான பெண்களை கணவன் அல்லது தகப்பன்மார்கள் அடிக்கும் போது, சிரித்த முஹம்மது எப்படிப்பட்டவர்?
- குடும்ப செலவிற்கு பணம் கேட்ட குடும்ப தலைவியை அடித்த அபூ பக்கர் எப்படிப்பட்டவர்?
- முஹம்மது மற்றும் முதல் கலிஃபாவாக பதவி வகித்த அபூ பக்கர், இரண்டாம் கலிஃபாவாக பதவி வகுத்த உமர் - இம்மூவரின் பார்வையில் பெண்கள் என்றால் யார்?

தலாக் 4ல் சந்திப்போம், அது வரை வாசகர்கள் இவர்கள் பற்றி சிந்தித்துப்பாருங்கள்.

---

**தலாக் பற்றிய இதர கட்டுரைகள்**

**உமரின் கட்டுரைகள்/மறுப்புக்கள் பக்கம்**

**Source:** http://www.answering-islam.org/tamil/authors/umar/talaq/talaq3.html

# 50. தலாக் 4 – இஸ்லாமிய அன்னையர்களுக்கு இரண்டாம் (தலாக்) மிரட்டல் விடுத்த அல்லாஹ்

தலைப்பைப் பார்த்தால், அல்லாஹ் மீது அவதூறு சொல்வதைப் போலத் தெரிகிறதே! என்ற சந்தேகம் வருகிறதா? இந்த விவரம் குர்-ஆனில் இருப்பதால் நாம் ஒன்றும் செய்வதற்கில்லை, அது வேதவாக்கு, அதாவது குர்-ஆன் இறைவாக்கு முஸ்லிம்களுக்கு. அதில் சொல்லப்பட்டதை அப்படியே நம்புவது தானே சரி.

முந்தைய கட்டுரையில், முஹம்மதுவின் மனைவிமார்களுக்கு அல்லாஹ் விடுத்த முதல் மிரட்டலை ஆய்வு செய்தோம். அதாவது, வீட்டு செலவிற்கு கொஞ்சம் பணத்தை அதிகப்படுத்தி கொடுங்கள் என்று முஹம்மதுவிடம் கேட்டது பெரும்பாவமாகிவிட்டது. வானத்திலிருந்து புர்ரென்று ஜிப்ரீல் தூதன் இறங்கி, முதல் மிரட்டலை வஹியாக முஹம்மதுவின் செவிகளில் போட்டுவிட்டுச் சென்றார். இந்த தற்போதைய கட்டுரையில், அந்த பரிதாபமான அன்னையர்களுக்கு இரண்டாவது முறையாக அல்லாஹ் தலாக் மிரட்டல் விடுத்ததை ஆய்வு செய்வோம். இக்கட்டுரையின் ஆய்விற்காக நாம் குர்-ஆன், புகாரி, முஸ்லிம் ஹதீஸ்கள் மற்றும் மூன்று குர்-ஆன் விரிவுரையாளர்களின் விளக்கங்களை ஆதாரமாக பயன்படுத்தியுள்ளோம்.

### 1) குர்-ஆனில் இரண்டாவது தலாக் மிரட்டல் – வசனம் 66:5

முஹம்மதுவின் மனைவிமார்கள் அப்படி என்ன பெரிய பிழையைச் செய்துவிட்டார்கள்?

முஹம்மது உங்களை தலாக் சொல்லிவிட்டால், அவருக்கு எந்த நஷ்டமும் இல்லை, உங்களுக்குத்தான் நஷ்டம். அவருக்கு நான் பல மறுமணங்களை செய்விப்பேன். அவருக்கு கன்னிப்பெண்களையும், கன்னிமை கழிந்தவர்களையும் உங்களுக்கு பதிலாக முஹம்மதுவிற்கு மனைவிகளாக கொடுப்பேன் என்று அல்லஹ் இந்த வசனத்தில் அனல் கக்குகின்றான்.

குர்-ஆன் 66:5 **அவர் உங்களை ´தலாக்´ சொல்லி விட்டால்,** உங்களை விடச் சிறந்த - முஸ்லிம்களான, முஃமினான, (இறைவனுக்கு) வழிபட்டு நடப்பவர்களான, தவ்பா செய்பவர்களான, வணங்குபவர்களான, நோன்பு நோற்பவர்களான - **கன்னிமை கழிந்தவர், இன்னும் கன்னிப் பெண்டிர் - இத்தகையவரை அவருடைய இறைவன் அவருக்கு (உங்களுக்குப்) பகரமாக, மனைவியராய் கொடுக்கப் போதுமானவன்.** (முஹம்மது ஜான் தமிழாக்கம்)

## 2) அல்லாஹ்வின் இந்த கடுங்கோபத்துக்கு காரணம் என்ன?

அல்லாஹ் ஏன் இப்படி கோபமாக இருக்கிறான் என்ற விவரத்தை மூன்றாம் வசனத்தில் கூறுகின்றான்.

குர்-ஆன் 66:3 மேலும், நபி தம் மனைவியர் ஒருவரிடம் ஒரு செய்தியை **இரகசியமாக** ஆக்கிவைத்த போது அவர் (மற்றொருவருக்கு) **அதை அறிவித்ததும்**, அ(வ்விஷயத்)தை அல்லாஹ் அவருக்கு வெளியாக்கி வைத்தான், அவர் அதில் சிலதை தெரிவித்ததும், சிலதை(த் தெரிவிக்காது) புறக்கணித்தும் இருந்தார், (இவ்வாறு) அவர் அதைத் தெரிவித்த போது "உங்களுக்கு இதைத் தெரிவித்தவர் யார்?" என்று அப்பெண் கேட்டார். அதற்கு அவர் "(யாவற்றையும்) நன்கறிந்தோனும் உணர்ந்தோனும் (ஆகிய அல்லாஹ்) என்குத் தெரிவித்தான்" என்று (பதில்) கூறினார்.

முஹம்மதுவிற்கும் அவரது மனைவி ஒருவருக்கும் இடையே ஒரு இரகசியம் இருந்ததாம். அந்த இரகசியத்தை யாரிடமும் சொல்லவேண்டாம் என்று முஹம்மது சொல்லியுள்ளார் (சொன்னால் நபித்துவத்துக்கு என்ன கேடு வந்துவிடும்? ஏன் முஹம்மது பயப்பட்டார்?). அம்மனைவி முஹம்மதுவின் இன்னொரு மனைவியிடம் அதனைச் சொல்லிவிட்டார், இது தான் விஷயம். முஹம்மதுவின் ஒரு மனைவி ஒரு இரகசியத்தைக் கட்டிக்காக்கவில்லை. அல்லாஹ்விற்கு வந்தது பாருங்க கோபம், குர்-ஆன் அத்தியாயம் 66ன் முதல் ஐந்து வசனங்கள் முஹம்மதுவிற்கு கொரியர் ஆகிவிட்டன.

அல்லாஹ் வஹி மூலமாக வசனங்களை இறக்கி திட்டவேண்டிய அளவிற்கு அது எப்படிப்பட்ட இரகசியமாக இருந்தது? அந்த இரகசியம் வெளியே தெரிந்தவுடன், ஏன் முஹம்மதுவும் அல்லாஹ்வும் கோபத்தின் சிகரத்திற்கே சென்றுவிட்டார்கள்? போன்ற கேள்விகள் நமக்குத் தோன்றும்.

## 3) அது இரகசியம் மட்டுமல்ல, அது முஹம்மதுவின் சத்தியமாகும்

ஏதோ ஒரு விஷயத்துக்காக, தம்முடைய மனைவியிடம் முஹம்மது 'இனி நான் இதை செய்யமாட்டேன்' என்று சத்தியம் செய்தாராம்.

"ஏன் நீர் நான் அனுமதித்த (ஹலால்) காரியத்தை, ஹராம் என்று கருதி செய்யமாட்டேன் என்று சத்தியம் செய்துவிட்டீர்? போனால் போகட்டும், ஒரு பரிகாரத்தோடு அந்த சத்தியத்தை முறித்துக்கொள்ளும்" என்று அல்லாஹ்வே முஹம்மதுவிற்கு கட்டளைத் தருகின்றார். கீழ்கண்ட இரண்டு வசனங்களில் அல்லாஹ் முஹம்மதுவை கடிந்துக்கொள்கிறார்.

66:1. நபியே! நீங்கள் உங்களுடைய மனைவிகளின் திருப்தியைக் கருதி, அல்லாஹ் உங்களுக்கு **ஆகுமாக்கி வைத்த பொருள்களை** (உபயோகிப்பது இல்லை என்று) நீங்கள் ஏன் (சத்தியம் செய்து அதனை **ஹராம் என்று**) விலக்கிக்கொண்டீர்கள்? அல்லாஹ் மிக மன்னிப்பவனும் கிருபையுடையவனாகவும் இருக்கின்றான்.

66:2. ஆகவே, உங்களுடைய **அந்தச் சத்தியத்திற்கு** (நீங்கள் பரிகாரம் கொடுத்து) அதனை நீக்கிவிடுமாறு நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு கட்டளையிடுகின்றான். அல்லாஹ்தான் உங்களது எஜமானன். அவன் (அனைவரையும்) நன்கறிந்தவனும் ஞானமுடைய வனாகவும் இருக்கின்றான். (அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்)

## 4) அந்த என்ன இரகசியம்? அது எப்படிப்பட்ட சத்தியம்?

அல்லாஹ்வே ஜிப்ரீல் தூதனை அனுப்பினார் என்று பார்க்கும் போது, அது மிகவும் முக்கியமான இரகசியமாகத் தோன்றுகிறது. முஹம்மது சத்தியம் செய்தாரென்றால் அது சாதாரண விஷயமாக இருக்குமா? நிச்சயமாக மிகப்பெரிய விஷயமாக இருக்கவேண்டும். மேலும், அந்த இரகசியத்தை வெளியிட்டதற்காக அல்லாஹ் 'தலாக்' நிலைக்கு இறங்கி, முஹம்மதுவின் மனைவிமார்களை மிரட்டுகின்றார் என்று பார்க்கும் போது, இதில் ஏதோ மிகப்பெரிய விஷயம் அடங்கியிருக்கிறது என்பதை புரிந்துக்கொள்ளலாம்.

குர்-ஆன் 66ம் அத்தியாயம், 1-5 வசனங்களை இதுவரை நாம் படித்தோம். விஷயம் புரிந்தது போல நமக்குத் தெரிகிறது ஆனால் முழுவதுமாக புரியவில்லை. இவ்வசனங்கள் போட்ட முடிச்சை அவிழ்ப்பது எப்படி?

- முஹம்மதுவிற்கும் அவரது மனைவிக்கும் இடையே இருந்த அந்த இரகசியம் என்ன?
- அந்த இரகசியத்தை அம்மனைவி காப்பதற்காக, முஹம்மது போட்ட சத்தியம் என்ன?
- அல்லாஹ் கோபம் கொண்டு, தலாக் பற்றிய மிரட்டல் விடும் அளவிற்கு எப்படிப்பட்ட நிகழ்ச்சி அவ்விருவருக்கும் இடையே நடந்தது?

போன்ற கேள்விகளுக்கு பதில் சொல்ல அல்லாஹ்வின் வேதமாகிய குர்-ஆன் பயன்படாது. இதற்கான பதிலை அறிய நாம் ஹதிஸ்களையும், இஸ்லாமிய அறிஞர்களின் விளக்கவுரைகளையும் படிக்கவேண்டும்.

**இதன் பின்னணியை புரிந்துக்கொள்ள உதவும் இரண்டு நிகழ்ச்சிகள்**

### 4.1 கருவேலம் பிசினின் துர்வாடை:

இந்த நிகழ்ச்சியின் பின்னணி 'இது தான்' என்று புகாரி மற்றும் முஸ்லிம் ஹதீஸ்களில் ஆயிஷா அவர்களின் மூலமாக பதிவு செய்யப்பட்டுள்ளது (புகாரி எண்கள்: 4912, 5267, 5268, 6691, 6972; முஸ்லிம் எண்கள்: 2937, 2938).

புகாரி ஹதீஸ் எண் 6972ஐ இங்கு படிப்போம்.

ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு இனிப்பு **தேனும்** விருப்பமானவையாக இருந்தன. நபி(ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுகையை முடித்ததும் தம் துணைவியரிடம் வந்து பகல்பொழுதைக் கழிப்பார்கள்; அவர்களுடன் நெருக்கமாக இருப்பார்கள். இவ்வாறு (ஒரு நாள்) **ஹஃப்ஸா(ரலி)** அவர்களிடம் சென்ற நபியவர்கள் வழக்கத்திற்கு மாறாக அதிக நேரம் இருந்துவிட்டார்கள். அது குறித்து நான் விசாரித்தேன். அப்போது ஹஃப்ஸாவின் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண் அவருக்கு (தாயிஃப் நகர சுத்த)த் தேன் உள்ள ஒரு தோல்பையை அன்பளிப்பாக வழங்கினாள் என்றும், அதிலிருந்து தயாரித்த பானத்தை இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஹஃப்ஸா புகட்டினார் என்றும் என்னிடம் கூறப்பட்டது. உடனே நான் 'அல்லாஹ்வின் மீதாணையாக! இதை நிறுத்துவதற்காக இதோ ஒரு தந்திரம் செய்வோம்' என்று கூறிக்கொண்டு, **(நபியவர்களின் துணைவியரில் ஒருவரான) சவ்தா(ரலி)** அவர்களிடம் அதைப் பற்றிக் கூறி, 'நபி(ஸல்) அவர்கள் உங்களிடம் வரும்போது உங்களை நெருங்குவார்கள். **அப்போது, இறைத்தூதர் அவர்களே! கருவேலம் பிசின் சாப்பிட்டீர்களா?** என்று கேளுங்கள். 'இல்லை' என்று நபியவர்கள் கூறுவார்கள். உடனே இது என்ன வாடை? என்று அவர்களிடம் கேளுங்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம்மிடமிருந்து (துர்) வாடை வீசுவதைக் கடுமையாகக் கருதுவார்கள். எனவே, 'எனக்கு ஹஃப்ஸா தேன் பானம் புகட்டினார்' என்று கூறுவார்கள். உடனே நீங்கள் 'இதன் தேனீக்கள் கருவேல மரத்தில் அமர்ந்து (தேனை உறிஞ்சி)விட்டு வந்திருக்கலாம்.

(எனவே தான் வாடை வருகிறது)' என்று சொல்லுங்கள். நானும் இவ்வாறே சொல்வேன். **ஸஃபிய்யாவே!** நீங்களும் இவ்வாறே சொல்லுங்கள் என்று (மற்றொரு துணைவியாரான ஸஃபிய்யாவிடமும்) சொன்னேன்.

நபி(ஸல்) அவர்கள் சவ்தா(ரலி) அவர்களிடம் சென்றபோது (நான் சொன்னபடி செய்துவிட்டு) சவ்தா (என்னிடம்) கூறினார்கள்: எவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறெவனுமில்லையோ அத்தகைய (இறை)வன் மீதாணையாக! நபி(ஸல்) அவர்கள் என் வீட்டு வாசலில் இருந்தபோது உங்களுக்கு பயந்து நீங்கள் என்னிடம் சொன்னபடி நபியவர்களிடம் சொல்ல விரைந்தேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என்னை) நெருங்கியதும் அவர்களிடம், 'இறைத்தூதர் அவர்களே! தாங்கள் கருவேலம் பிசினைச் சாப்பிட்டீர்களா?' என்று கேட்டேன். அவர்கள் 'இல்லை' என்று பதிலளித்தார்கள். 'அப்படியானால், (இது என்ன வாடை?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், 'ஹஃப்ஸா எனக்குத் தேன் பானம் புகட்டினார்' என்றார்கள். நான், 'அதன் தேனீக்கள் கருவேல மரத்தில் அமர்ந்து (தேன் உறிஞ்சி)விட்டு வந்திருக்கலாம் (எனவேதான் தேனில் வாடை ஏற்பட்டுவிட்டது போலும்)' என்று சொன்னேன்.

(தொடர்ந்து ஆயிஷா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:) என்னிடம் நபி(ஸல்) அவர்கள் வந்தபோது அதைப் போன்றே நானும் சொன்னேன். ஸஃபிய்யாவிடம் நபி(ஸல்) அவர்கள் சென்றபோது அவரும் அதைப் போன்றே தெரிவித்தார். பிறகு (மறுநாள்) நபி(ஸல்) அவர்கள் ஹஃப்ஸாவிடம் சென்றபோது நபியவர்களிடம் அவர், 'இறைத்தூதர் அவர்களே! அருந்துவதற்கு தங்களுக்குச் சிறிது தேன் தரட்டுமா?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், '**அது எனக்குத் தேவையில்லை**' என்று கூறினார்கள்.

(இது குறித்து) சவ்தா(ரலி) அவர்கள், 'அல்லாஹ் தூயவன்! நபி(ஸல்) அவர்களை அதை அருந்தவிடாமல் நாம் தடுத்து விட்டோமே!' என்று (வருத்தத்துடன்) கூறுவார்கள். நான் அவரிடம், 'சும்மா இருங்கள்! (விஷயம் பரவிவிடப்போகிறது)' என்று சொல்வேன்.

இதைப் பற்றி பி.ஜைனுல் ஆபீதின் அவர்கள் தம்முடைய குர்-ஆன் தமிழாக்கத்தின் விளக்கம் 272ல் குறிப்பிட்டுள்ளார் ("272. இறைவன் அனுமதித்ததைத் தடை செய்யக் கூடாது"). இந்த ஹதீஸில் சொல்லப்பட்ட இந்த பின்னணி சரியானதா இல்லையா என்பதை இன்னொரு கட்டுரையில் ஆய்வு செய்வோம்.

அடுத்தபடியாக, மேற்கண்ட பின்னணி தவறானது, இது சரியானதல்ல என்றுச் சொல்லும் இதர பின்னணி நிகழ்ச்சியை இப்போது பார்ப்போம்.

### 4.2 ஹஃப்ஸாவின் படுக்கையில் மரியாளிடம் புரிந்த களியாட்டத்தின் துர்வாடை:

குர்-ஆன் 66:1-5 வரையிலான வசனங்களின் பின்னணி "இது தான் என்று" சில இஸ்லாமிய அறிஞர்கள் தங்கள் விளக்கவுரைகளில் கூறியுள்ளனர். இவர்களின் தஃப்ஸீர்கள் (குர்-ஆன் விளக்கவுரைகளை இந்த தொடுப்பில் படிக்கலாம் www.altafsir.com). நான் இங்கு இம்மூவர்களின் முதல் வசனத்தின் விளக்கவுரையைத் தருகிறேன் (முழு விளக்கவுரையை மேற்கண்ட தளத்தில் படிக்கலாம், அல்லது 5 வசனங்களின் விளக்கவுரைகளை இக்கட்டுரையின் அடிக்குறிப்பில் படிக்கலாம்).

### தஃப்ஸீர் ஜலலைன்:

**வசனம் 66:1:**

O Prophet! Why do you prohibit what God has made lawful for you in terms of your Coptic handmaiden Māriya — when he lay with her in the house of Hafsa who had been away but who upon returning and finding out became upset by the fact that this had taken place in her own house and on her own bed — by saying ‘She is unlawful for me!’ seeking by making her unlawful for you to please your wives? And God is Forgiving Merciful having forgiven you this prohibition.

### தஃப்ஸீர் இப்னு அப்பாஸ்:

**வசனம் 66:1**

And from his narration on the authority of Ibn 'Abbas that he said regarding the interpretation of Allah's saying (O Prophet!): '(O Prophet!) i.e. Muhammad (pbuh). (Why bannest thou that which Allah hath made lawful for thee) i.e. marrying Maria the Copt, the Mother of Ibrahim; that is because he had forbidden himself from marrying her, (seeking to please thy wives) seeking the pleasure of your wives 'A'ishah and Hafsah by forbidding yourself from marrying Maria the Copt? (And Allah is Forgiving) He forgives you, (Merciful) about that oath.

### தஃப்ஸீர் வஹிதி:

**வசனம் 66:1, 2 & 3**

(O Prophet! Why bannest thou that which Allah hath made lawful for thee…) [66:1]. . . . . Ibn 'Abbas> 'Umar who said: “The Messenger of Allah, Allah bless him and give him peace, entered the house of Hafsah along with the mother of his son, Mariyah. When Hafsah found him with her [in an intimate moment], she said: 'Why did you bring her in my house? You did this to me, to the exception of all your wives, only because I am too insignificant to you'. He said to her: 'Do not mention this to 'A'ishah; she is forbidden for me [i.e. Mariyah] if I ever touch her'. Hafsah said: 'How could she be forbidden for you when she is your slave girl?' He swore to her that he will not touch her and then said: 'Do not mention this incident to anyone'. But she went ahead and informed 'A'ishah. The Prophet, Allah bless him and give him peace, decided not to go to his wives for a month. He stayed away from them twenty nine days when Allah, glorious and exalted is He, revealed . . . . .

மேற்கண்ட விளக்கவுரைகளின் சுருக்கம் இது தான். முஹம்மதுவிற்கு மரியாள் என்ற பெயர் கொண்ட ஒரு காப்டிக் கிறிஸ்தவப்பெண் அடிமையாக இருந்தாள். (எகிப்தின் அரசன் கொடுத்திருந்தான்) அவள் மனைவியல்ல, அவள் முஹம்மதுவின் வைப்பாட்டி, குர்-ஆனின் படி ‘முஹம்மதுவின் வலக்கரத்துக்கு சொந்தமானவள்’. ஒரு முறை முஹம்மதுவின் மனைவி ஹஃப்ஸா தம் தந்தையாகிய உமரின் வீட்டிக்குச் சென்று திரும்பி தம் வீட்டிற்குள் நுழையும் போது, முஹம்மது ஹஃப்ஸாவின் படுக்கையில் மரியாளோடு நெருக்கமாக இருப்பதைக் கண்டுவிட்டார்கள். இது என் நாள் அல்லவா? என் வீடு அல்லவா? என் கட்டில் அல்லவா? அப்படியிருக்க, உம்முடைய அடிமைப்பெண்ணிடம் என் நாளில் உடலுறவு கொள்வது எப்படி என்று கேட்டுயிருக்கிறார் (முஹம்மது தம்முடைய ஒவ்வொரு மனைவிக்கும் ஒருநாள் ஒதுக்கியிருந்தார். ஆனால், தம்முடைய அடிமைப்பெண்களுக்கு அவர் நாட்கள் ஒதுக்கவில்லை, எனவே, மற்றவர்கள் அசைந்த நேரம் பார்த்து காரியத்தை நடத்தவேண்டியது தான்). ஹஃப்ஸா சீக்கிரமாக வீடு திரும்புவார் என்று எதிர்ப்பார்க்காத முஹம்மதுவிற்கு தர்ம சங்கடமாக ஆகிவிட்டது (என்ன தான் இறைத்தூதராக இருந்தாலும், மனைவியிடம் நீதி

நியாயம் தவறும் போது, கொஞ்சம் அடக்கிவாசிக்கத்தான் வேண்டுமல்லவா?). நிலைமையை சமாளிக்க, 'இனி மரியாளோடு நான் உடலுறவு கொள்வதில்லை' என்று முஹம்மது சொன்னார். அது எப்படி, அல்லாஹ்வின் வார்த்தையின் படி, அடிமைப்பெண்களோடு உடலுறவு கொள்வது ஹலால் அல்லவா? என்று திருப்பிக்கேட்டார் ஹஃப்ஸா. இது என்னடா தலைவலியாகப் போச்சு என நினைத்த முஹம்மது 'சத்தியம் செய்துவிட்டார், அல்லாஹ் குர்-ஆனில் அனுமதித்து இருந்தாலும் நான் மரியாளோடு (அடிமைப்பெண்ணோடு) உடலுறவு கொள்ளமாட்டேன், நீயும் இதை யாரிடம் சொல்லவேண்டாம், முக்கியமாக ஆயிஷாவிடம் சொல்லவேண்டாம் என்றுச் சொல்ல, ஹஃப்ஸா அப்போது அமைதியானார்.

ஆனால், ஹஃப்ஸாவினால் இதனை ஜீரணித்துக் கொள்ளமுடியவில்லை. முஹம்மதுவின் மனைவிகளுக்கு "என் புருஷன் தான் எனக்கு மட்டும் தான்" என்றுச் சொல்லும் பாக்கியம் இல்லையென்றாலும், "எனக்கு ஒதுக்கிய நாளில் என் புருஷன் எனக்கு மட்டும் தான்" என்று சொல்லிக்கொள்ளும் வாய்ப்பு கூட ஹப்ஸாவிற்கு கிடைக்கவில்லை என்பதால், அவர் மிகவும் நொந்துபோய்விட்டார். எனவே, யாரிடம் சொல்லக்கூடாது என்று முஹம்மது சொன்னாரோ, அதே நபரிடம் அதாவது ஆயிஷாவிடம் சொல்லிவிட்டார். இந்த குழப்பங்களுக்கெல்லாம் மூலகாரணம் தாம் தான் என்பதை உணர்ந்த முஹம்மது, எந்த மனைவியிடமும் நான் செல்வதில்லை என்றுச் சொல்லி, ஒரு மாதம் (29 நாட்கள்) தனியாக வாழ்ந்துக்கொண்டு இருந்தார். அல்லாஹ்வினால் தன் நபி இப்படி தனிமையில் வாழ்வது பிடிக்கவில்லை, எனவே அல்லாஹ் வசனங்களை இறக்கினார். அதாவது, குர்-ஆன் 66வது அத்தியாயத்தின் முதல் ஐந்து வசனங்கள் மற்றும் கடைசி மூன்று வசனங்களை (66:10-12) அல்லாஹ் இறக்கியுள்ளான். இவ்வசனங்களில் தான் அல்லாஹ் முஹம்மதுவின் மனைவிமார்களை தலாக் பற்றி மிரட்டியுள்ளான்.

## 5) பின்னணி எதுவானாலும் – அன்னையர்களை தலாக் பற்றி மிரட்டுவது சரியா?

குர்-ஆன் 66வது அத்தியாயத்திற்கு இரண்டு பின்னணிகளை முஸ்லிம் அறிஞர்கள் கூறுகிறார்கள் (இவைகளில் எது சரியாக இருக்கும் என்பதை இன்னொரு கட்டுரையில் பார்க்கலாம்). இந்த கட்டுரையைப் பொருத்தமட்டில், முஹம்மதுவின் அன்னையர்களிடம், முஹம்மது உங்களை தலாக் கொடுத்துவிட்டால், நான் அவருக்கு இன்னும் பல திருமணங்களை செய்விப்பேன் என்று அல்லாஹ் மிரட்டுவது 'இறைவன் என்ற நிலையில் இருக்கும் ஒருவருக்கு ஏற்புடையதாக தெரியவில்லை'.

மேலும், இப்படிப்பட்ட குர்-ஆன் வசனங்களும், ஹதீஸ்களும் முஸ்லிம் ஆண்களின் மனதில் எப்படிப்பட்ட தாக்கத்தை உண்டாக்கும்? பெண்களின் சின்னச்சின்ன பிழைகளுக்காக தலாக் வரைக்கும் செல்வது, அல்லது தலாக் கொடுத்துவிடுவேன் என்று மிரட்டுவது தவறு இல்லை என முஸ்லிம் ஆண்கள் தைரியம் கொள்வார்கள் அல்லவா? பெண்களை பயமுறுத்த இப்படிப்பட்ட குர்-ஆன் வசனங்களை முஸ்லிம் ஆண்கள் தங்களின் சுயலாபத்துக்காக பயன்படுத்துவார்கள் அல்லவா?

### தலாக் 4 – முடிவுரை:

இந்த கட்டுரையில், முஸ்லிம்களின் அன்னைகள் என்று மரியாதையோடு போற்றப்படும் பெண்களுக்கு நடந்த கொடுமையைப் பார்த்தோம். ஒரு இரகசியத்தை காக்கவில்லையென்பதால் தலாக் கொடுத்துவிடுவேன் என்று மிரட்டுவது காட்டுமிராண்டித்தனமாகும். ஒருவேளை 7ம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த அரேபிய பாலைவன நாடோடி மக்களின் மத்தியில் இப்படிப்பட்ட தலாக் மிரட்டல்கள் ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருக்கலாம், ஆனால் நாகரீகம் வளர்ந்த இந்நாட்களிலும் மேற்கண்ட குர்-ஆன் வசனங்கள் சொன்னது தவறு இல்லை முஸ்லிம்கள் சொல்வது அறிவுடமையாக தெரியவில்லை.

முஹம்மதுவின் மனைவிமார்களுக்கே இந்த நிலை என்றால், சாதாரண முஸ்லிம் குடும்ப பெண்களின் நிலை இன்னும் பரிதாபமாக இருக்கும். இதனால் தான் முஸ்லிம் சமுதாயங்களில் தலாக் (விவாகரத்துக்கள்) அதிகமாக நடைபெறுகின்றன, ஆனால் அவைகள் ஊடகம்வரைக்கும் வருவதில்லை, அந்தந்த பகுதி ஜாமாத்தின் பதிவேடுகளில் பதிக்கப்படுவதோடு நின்றுவிடுகின்றன. இதையும் தாண்டி வெளியே வருகின்ற ஓரிரு தலாக் கேஸுக்கள் இந்தியாவில் பிரேகிங் நியூஸ் ஆகிவிடுகின்றது.

இதுவரை இத்தொடர்கள் மூலமாக அறிந்துக்கொண்டவை.

1. முஸ்லிம் பெண்களை எக்காரணங்களைக் கொண்டு முஸ்லிம் ஆண்கள் தலாக் கொடுக்கலாம் என்பதை குர்-ஆன் தெளிவுபடுத்தவில்லை.
2. ஆனால், குடும்ப செலவிற்கு பணத்தை அதிகப்படுத்திக் கொடுங்கள் என்று கேட்டதற்காக, முஸ்லிம் சமுதாயத்திலேயே உயர்ந்தவர்கள் என்று கருதப்படும் முஹம்மதுவின் மனைவிமார்களுக்கு அல்லாஹ்வால் முதல் 'தலாக் மிரட்டல்' விடுக்கப்பட்டது.
3. இக்கட்டுரையில் கண்டது படி, ஒரு இரகசியத்தை காத்துக்கொள்ளவில்லை என்பதற்காக இரண்டாவது முறையாக அல்லாஹ் தலாக் மிரட்டல் அதே அன்னையர்களுக்கு விடுத்தார்.

அடுத்த கட்டுரையில், முஹம்மது தம்முடைய ஒரு மனைவிக்கு தலாக் கொடுக்க முடிவு செய்தார், ஆனால், கடைசியில் அதனை நிறைவேற்றவில்லை. என்ன காரணத்திற்காக முஹம்மது அப்பெண்மணியை விவாகரத்து செய்ய விரும்பினார்? அதன் பிறகு எந்த காரணங்களுக்காக தலாக் முடிவை வாபஸ் பெற்றுவிட்டார் என்பதை ஆய்வு செய்வோம்.

தலாக் தொடரின் அடுத்த கட்டுரையில் சந்திப்போம்.

**அடிக்குறிப்புக்கள்:**

**[1] Tafsir al-Jalalyn (தஃப்ஸீர் ஜலலைன்):**

வசனம் 1:

O Prophet! Why do you prohibit what God has made lawful for you in terms of your Coptic handmaiden Māriya — when he lay with her in the house of Hafsa who had been away but who upon returning and finding out became upset by the fact that this had taken place in her own house and on her own bed — by saying 'She is unlawful for me!' seeking by making her unlawful for you to please your wives? And God is Forgiving Merciful having forgiven you this prohibition.

வசனம் 2:

Verily God has prescribed He has made lawful for you when necessary the absolution of your oaths to absolve them by expiation as mentioned in the sūrat al-Mā'ida Q. 589 and the forbidding of sexual relations with a handmaiden counts as an oath so did the Prophet s expiate? Muqātil b. Sulaymān said 'He set free a slave in expiation for his prohibition of Māriya'; whereas al-Hasan al-Basrī said 'He never expiated because the Prophet s has been forgiven all errors'. And God is your Protector your Helper and He is the Knower the Wise.

வசனம் 3:

And mention when the Prophet confided to one of his wives namely Hafsa a certain matter which was his prohibition of Māriya telling her ‘Do not reveal it!’; but when she divulged it to ‘Ā’isha reckoning there to be no blame in doing such a thing and God apprised him He informed him of it of what had been divulged he announced part of it to Hafsa and passed over part out of graciousness on his part. So when he told her about it she said ‘Who told you this?’ He said ‘I was told by the Knower the Aware’ namely God.

வசனம் 4:

If the two of you namely Hafsa and ‘Ā’isha repent to God … for your hearts were certainly inclined towards the prohibition of Māriya that is to say your keeping this secret despite knowing the Prophet’s s dislike of it which is itself a sin the response to the conditional ‘if the two of you repent to God’ has been omitted to be understood as ‘it will be accepted of both of you’; the use of the plural qulūb ‘hearts’ instead of the dual qalbayn ‘both your hearts’ is on account of the cumbersomeness of putting two duals together in what is effectively the same word; and if you support one another tazzāharā the original second tā’ of tatazāharā has been assimilated with the zā’; a variant reading has it without this assimilation tazāharā against him that is the Prophet in what he is averse to then know that God He huwa a pronoun for separation is indeed his Protector His supporter and Gabriel and the righteous among the believers Abū Bakr and ‘Umar may God be pleased with both of them wa-Jibrīlu wa-sālihu’l-mu’minīna is a supplement to the syntactical locus of the subject of inna sc. ‘God’ who will also be his supporters and the angels furthermore further to the support of God and those mentioned are his supporters assistants of his in supporting him to prevail over both of you.

வசனம் 5

It may be that if he divorces you that is if the Prophet divorces his wives his Lord will give him in your stead read yubaddilahu or yubdilahu wives better than you azwājan khayran minkunna is the predicate of ‘asā ‘it may be’ the sentence being the response to the conditional — the replacement of his wives by God never took place because the condition of his divorcing them never arose — women submissive to God affirming Islam believing faithful obedient penitent devout given to fasting — or given to emigrating in God’s way — previously married and virgins. (Source)

**Tanwir al-Miqbas min Tafsir Ibn Abbas (தஃப்ஸீர் இப்னு அப்பாஸ்)**

வசனம் 1

And from his narration on the authority of Ibn 'Abbas that he said regarding the interpretation of Allah's saying (O Prophet!): '(O Prophet!) i.e. Muhammad (pbuh). (Why bannest thou that which Allah hath made lawful for thee) i.e. marrying Maria the Copt, the Mother of Ibrahim; that is because he had forbidden himself from marrying her, (seeking to please thy wives) seeking the pleasure of your wives 'A'ishah and Hafsah by forbidding yourself from marrying Maria the Copt? (And Allah is Forgiving) He forgives you, (Merciful) about that oath.

வசனம் 2

(Allah hath made lawful for you (Muslims) absolution from your oaths (of such a kind)) and so the Prophet (pbuh) absolved himself from his oath and married Maria the Copt, (and Allah is your Protector) and Helper. (He is the Knower) He knows that you forbade yourself Maria the Copt, (the Wise) in that which He enjoined about the expiation of oaths.

வசனம் 3

(When the Prophet confided a fact unto one of his wives) i.e. Hafsah (and when she afterward divulged it) Hafsah divulged to 'A'ishah what the Prophet (pbuh) told her in confidence (and Allah apprised him thereof) and Allah informed him that Hafsah informed 'A'ishah, (he made known (to her) part thereof) part of what she said to 'A'ishah regarding the leadership of Abu Bakr and 'Umar; and it is said: about seeing Maria the Copt on his own (and passed over part) he did not mention making forbidding Maria the Copt on himself nor what he told her concerning the leadership of Abu Bakr and 'Umar after him, for he did not reproach him for this. (And when he told it her) when the Prophet (pbuh) informed Hafsah about what she said to 'A'ishah (she said) Hafsah said: (Who hath told thee) that I informed 'A'ishah? (He said) the Prophet (pbuh) said: (The Knower, the Aware hath told me) what you divulged to 'A'ishah.

வசனம் 4

(If ye twain turn unto Allah repentant) if you two, i.e. Hafsah and 'A'ishah, repent of hurting and disobeying the Prophet (pbuh) ((ye have cause to do so) for your hearts desired (the ban)) for your hearts have deviated from the Truth; (and if ye aid one another against him (Muhammad)) but if you help one another to harm and disobey him (then lo! Allah, even He, is his protecting Friend) then Allah is his Protector and Helper against you, (and Gabriel) will help him against you (and the righteous among the believers) all true believers are helpers to him against you: Abu Bakr, 'Umar, 'Uthman, 'Ali, may Allah be well pleased with, and all other true believers; (and furthermore the angels are his helpers) and the angels are with all these his helpers against you.

வசனம் 5

(It may happen) and this will surely happen (that his Lord, if he divorce you, will give him in your stead wives better than you) in obedience, (submissive (to Allah)) by stating it openly, (believing) true in their faith both with their tongues and hearts, (pious) obedient to Allah and to their husband, (penitent) from their sins, (inclined to fasting, widows) like Asiyah Bint Muzahim, the wife of Pharaoh (and maids) like Mary daughter of Amran, the mother of Jesus. (Source)

**Asbab Al-Nuzul by Al-Wahidi (தஃப்ஸீர் வஹிதி:)**

வசனம் 1, 2 & 3

(O Prophet! Why bannest thou that which Allah hath made lawful for thee…) [66:1]. Muhammad ibn Mansur al-Tusi informed us> 'Ali ibn 'Umar ibn Mahdi> al-Husayn ibn Isma'il al-Mahamili> 'Abd Allah ibn Shabib> Ishaq ibn Muhammad> 'Abd Allah ibn 'Umar> Abu'l-Nadr, the client of 'Umar ibn 'Abd Allah> 'Ali ibn 'Abbas> Ibn 'Abbas> 'Umar who said: “The Messenger of Allah, Allah bless him and give him peace, entered the house of Hafsah along with the mother of his son, Mariyah. When Hafsah found him with her [in an intimate moment], she said: 'Why did you bring her in my house? You did this to me, to the exception of all your wives, only because I am too insignificant to you'. He said to her: 'Do not mention this to 'A'ishah; she is forbidden for me [i.e. Mariyah] if I ever touch her'. Hafsah said: 'How could she be forbidden for you when she is your slave girl?' He swore to her that he will not touch her and then said: 'Do not mention this incident to anyone'. But she went ahead and informed 'A'ishah. The Prophet, Allah bless him and give him peace, decided not to go to his wives for a month. He stayed away from them twenty nine days when Allah, glorious and exalted is He, revealed (O Prophet! Why bannest thou that which Allah hath made lawful for thee, seeking to please thy wives?)”. Abu Ibrahim Isma'il ibn Ibrahim al-Wa'iz informed us> Bishr ibn Ahmad ibn Bishr> Ja'far ibn al-Hasan al-Firyabi> Minjab ibn al-Harith> 'Ali ibn Mushir> Hisham ibn 'Urwah> his father> 'A'ishah who said: “The Messenger of Allah, Allah bless him and give him peace, used to like sweet and honey. It was also his habit to go to his wives after finishing the 'Asr prayer. In one occasion he went to Hafsah bint 'Umar and stayed with her more than he usually did. When I found out about this, I enquired about the reason and I was told that a woman from her clan gifted her with a pot of honey which she offered to the Prophet, Allah bless him and give him peace. I said to myself: by Allah I will spoil it for him. I said to Sawdah bint Zam'ah: 'When he comes to your apartment and draws closer to you, say: O Messenger of Allah, did you eat Maghafir?' When he says: 'Hafsah fed me some honey', say: 'The bees which produced it must have eaten the 'Urfut'.

வசனம் 4 & 5

(If ye twain turn unto Allah repentant, (ye have cause to do so) for your hearts desired (the ban)…) [66:4]. Abu Mansur al-Mansuri informed us> Abu'l-Hasan al-Daraqutni> al-Husayn ibn Isma'il> 'Abd Allah ibn Shabib> Ahmad ibn Muhammad ibn 'Abd al-'Aziz> his father> al-Zuhri> 'Ubayd Allah ibn 'Abd Allah> Ibn 'Abbas who said: “Hafsah found the Messenger of Allah, Allah bless him and give him peace, with Umm Ibrahim when it was 'A'ishah's turn. She said to him: 'I will definitely inform her!' The Messenger of Allah, Allah bless him and give him peace, said: 'She is forbidden for me if I touch her again'. Hafsah went ahead and informed 'A'ishah. Allah informed His Messenger of this and he let Hafsah know some of the things she said. She asked him: 'Who informed you of this?' He said: '(The Knower, the Aware hath told me) [66:3]'. The Messenger of Allah, Allah bless him and give him peace, stayed away from his wives for a month and then Allah, glorious and exalted is He, revealed: (If ye twain turn unto Allah repentant, (ye have cause to do so) for your hearts desired (the ban)…)”. (Source)

---

**தலாக் பற்றிய இதர கட்டுரைகள்**
**உமரின் கட்டுரைகள்/மறுப்புக்கள் பக்கம்**

Source: http://www.answering-islam.org/tamil/authors/umar/talaq/talaq4.html

**PDF தொகுத்த தேதி:** 15 ஏப்ரில் 2017